

# கிருஷ்ண எசுர்வேதம்

## தைத்திரீய சங்கிதை

சாயணபாடிக் கருத்து, பதவுரைகளுடன் கூடியது

முதற்பகுதி

## தரிசபூரனமாத வேள்விப் பிரகரணம்

---

**காசிவாசி வானந்த யதீந்திர சுவாமிகளால்**

மொழிபெயர்க்கப்பெற்று

---

சென்னை

திவொற்றியூரான் அடிமை என்னும்

**த. ப. இராமசாமிப் பிள்ளை யவர்களால்**

தமது சொந்தப் பொருட்செலவில் பதிப்பித்து

நன்கொடையாக அளிக்கப்பெற்றது.

---

வகுதான்யஹு தைத் திங்கள்

1939.

ரைட்]

[ரிஜிஸ்தர் செய்யப்பட்டது.

ருவொற்றியூரான்

# கிருஷ்ண எசுர்வேதம்

## தைத்திரீய சங்கிதை

முதலாங்காண்டம், முதற்பகுதி.

வே. மோ. பே. கா. வெளியீடு, நே. 5.

உ

திருவொற்றியூரான் துணை.

# பதிப்பாளர் உரை.

---

**தண்டமிழ் நாட்டுத் தனிப்பெரும் அன்பர்களே!**

நாம், எண்ணில் காலம் வேதம் வேதம் என்னுஞ் சொல்லை மாத்திரங் கேட்டு, அது இன்னதென்றுணர முடியாமல் அறியாமையிற் கட்டுண்டு கிடந்தோமல்லவா? அதையுணர்ந்த நமது திருவொற்றியூர் எழுத்தறியும் பெருமானார் தண்ணருள் சுரந்து எழுதாக்கிளவியாகிய வேதங்களையும் தமிழிலும் எழுதுமாறு பணித்தருள, அப்பணியைத் தலைமேற் கொண்டு, செயற்கரிய செய்யும் பெரியாரைக் கொண்டு தமிழில் மொழிபெயர்ப்பித்து முதலில் **சாமவேதத்தைப்** பதிப்பித்து உலகம் உய்புமாறு நன்கொடையாக அளித்தனம். இப்போது, **கிருஷ்ண எசுர் வேதத்தையும்** மொழி பெயர்ப்பித்து நன்கொடையாக அளிக்கின்றோம். மேலும் **அதர்வண வேத** முதலியவைகளையும் அளிக்க எண்ணியுள்ளோம். 'தானே வந்தது வீணே போனது' என்றபடி இதை வாங்கி வீணாக்காமல் அதன் பொருளை உணர்ந்துய்யுமாறு கேட்டுக் கொள்ளுகின்றோம். படித்துப் பொருளுணர்தல் வேட்கையுடையார்க்கு மாத்திரங் கொடுக்கப்படும்.

இங்ஙனம்:

திருவொற்றியூரான் அடிமை,

சென்னை, த. ப. இராமசாமிப் பிள்ளை,

# இப்புத்தகத்தில் அடங்கியவைகள்.





# முன்னுரை.

अन्नाद्भवन्ति भूतानि पर्जन्यादन्नसंभवः ।
यज्ञाद्भवति पर्जन्यो यज्ञकर्म समुद्भवः ॥
कर्मब्रह्मोद्भवं विद्धि ब्रह्माक्षर समुद्भवम् ।

ஈண்டு, யாகம் என்னும் தேவாராதனையானது, முடிவில் பரமேசுரனைக் குறித்துச் செய்யப்படும் வைதிக வழிபாடேயாகும். பரமேசுரனே, வேள்வியில் அளிக்கும் அவியை ஏற்பவனும் அதற்குரிய பயனை யளித்தருகின்றவனு மாகின்முன்.

இதை, சோமாசி நாயனாரின் யாக சரிதத்தாற் காண்க.

உணவுப் பொருளால், உயிர்கள் உண்டாகின்றன, மழையால் உணவுப் பொருள்கள் உண்டாகின்றன. இவ்வாறு செய்யப்படும் யாகத்தால் மழையுண்டாகின்றது, அந்த யாகம், வேட்போன், வேள்வித்தலைவன் என்பவர்களுடைய செயல்களால் உண்டாகின்றது. அச்செயல், வேதத்தால் உண்டாகின்றது. வேதம் நித்தியமாகிய பரமேசுரனிடத்திலிருந்து உண்டாகின்றது என்பது மேற்காட்டிய கண்ணபிரான் திருவாக்காம்.

உலகத் தோற்றத்திற்கு நிமித்தமாகிய இத்தகைய யாகத்தைக் கூறுவது எசுர்வேதமாம். மற்றைய வேதங்கள் இதற்கு உதவி புரிகின்றன. ஆதலின், எசுர்வேதமே முதலில் மொழிபெயர்க்க வேண்டியது முறையாம். அங்ஙனமாயினும், பரசிவனுடைய துதியாகிய சாமவேதமே அன்பு முறையில் மேம்படத்தக்கதா மென்பதுபற்றி, T. P. R. பிள்ளை யவர்களின் கருத்துப்படியும், எமது மனத் தோற்றப்படியும் முதலில் சாமவேதத்தை மொழி பெயர்த்தனம். பிறகு, சாமவேதத்தினுற் போற்றப்பெறும் பரமேசுரன் யாவன்? எத்தன்மையன்? என்பது முதலிய வினுக்கட்கு இடமிருத்தலின் அத்தகைய பரமேசுரனைக் கருத்தாற் கூறும் எசுர்வேதத்தை இப்போது மொழி பெயர்த்துள்ளேம். சாயணர், எசுர் வேதத்திற்கே முதலில் பாடிய மியற்றியுள்ளார். யாமும், எசுர் வேதத்தை முதலில் மொழிபெயர்க்காமை ஆராய்ச்சிக் குறைவாமெனினும் ஒவ்வும்.

அற்றேலஃதாகுக. எசுர்வேதத்தைத் தமிழில் மொழிபெயர்த்ததால் தமிழ் நாட்டிற் கென்ன பயன் எனின்? ஆரியமறை, பரமேசுரனைக் கூறு கின்றதில்லை, மற்றோ! இந்திரன், வாயு முதலிய சிறு தேவதைகளைக் கூறு கின்றது என்னும் மயக்கம் நீங்குவதும்,

"வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே"

என்னும் தமிழ்த் திருமறைவாக்கு உண்மை யென்னுந் துணிவுண்டாதலும், வேதமென்பது யாது? என்னும் அவா நீங்கலும், தமிழ் மக்கட்கு மறைகள் தெரியாதென்னும் குறைபோதலும், தமிழ்நாட்டிலும், யாகம் வேட்டம் பெரு வேற்கிள்ளி, என்பவன் முதலான தமிழ்மக்களும் மன்னரும் யாகஞ் செய் துள்ளார் என்பது இனிது புலப்படுதலும், எண்ணிறந்த தமிழ் நூல்களும், புராணங்களும் யாகத்தைப்பற்றி விரித்துக் கூறியிருக்கின்றது என்னும் உணர்வு எழுதலும், ஒரு வகுப்பார்க்கே இறைவன் வேதங்களை யுண்டாக்கி னான் என்னுங் கட்டுப்பாடு ஒழிதலும், மற்றும் பல பயன்களும் உள்ளன வென்பதை யுய்த்துணர்க.

எசுர்வேதம், பரமேசுரனைக் கூறுகின்றதென்பதை இவ்வேதத்திற்குள் மணிபோன்றுள்ள 'சதருத்திரீயம்' சமகம் என்பவற்றாற் காண்க.

அற்றேல், சாமவேதருத்திரி, இருக்குவேதருத்திரி, அதர்வணவேத ருத் திரி என்று ஒவ்வொரு வேதத்திலும் பரமேசுரனைக் கூறியிருக்க, இவ்வேத மாத்திரம் பரமேசுரனைக் கூறுகின்றதென்ப தென்னையோ வெனின்? அற் றன்று, அவ்வாறு, ஏனைய வேதங்களில் உருத்திரனைக் கூறும் பகுதிகளிருப் பினும், இவ்வேதத்திலுள்ள சதருத்திரீயம் போன்று பரசிவனை விரித்துக் கூறுதலும், எல்லாம் பரசிவனே யென்னும் பெருஞ் சிறப்புக் கூறுதலும் அவற்றுள், இத்துணை நலம்படக் காணவில்லை யாதலின் இதுவே பரசிவனைக் கூறும் வேதம் என்று உண்மையாகக் கூறுதல் கூடும்.

இதையே,

तस्मात्सर्वगतं ब्रह्म नित्यं यज्ञे प्रतिष्ठितम् ॥

அதாவது, எங்கும் நிறைந்த பரம்பொருள் இடையறாது யாகத்தில் நிலைத் திருக்கிறது என்று நூல்கள் கூறா நின்றன.

இதனால், யாகத்தைக்கூறும் வேதம், பரமசிவனைக் கூறுதல் யாங்ஙனம்? யாகமும் பரசிவ வழிபாடு என்பது எவ்வாறு? என்பது முதலிய ஐயப்பாடு கள் ஒழிவதோடு வேள்வியே பரசிவனது சிறந்த வழிபாடாம் என்பதுந் துணி யப்பட்டமை காண்க.

இப்பொருளையே,

'வேதமும், வேள்வியு மாயினார்க்கு'

எனவும்,

'வேதங்கள் வேள்வி வியந்தார்போலும்'

எனவும்,

தமிழ் வேதங்களும் இனிது விளக்குகின்றன.

எசுர்வேதத்தில், பல்வகைப்பட்ட தேவர்களைக் குறித்து வேள்விகள் செய்யுமாறு விதித்திருக்கு மிடத்து, பரமேசுரனே வேள்வியால் வழிபடப் பெறுகின்றான் என்பது என்னை யெனின்? இதற்கு விடை வருமாற்றை இதன் உபோற்காதத்திற் காண்க.

அற்றேல், உலகில், பெரியார்களும், பெருநூல்களும், ஞானத்தையே முத்திக்கு நெருங்கிய வழியென்று கூறி யிருக்க, இங்கு, வேள்வி முதலிய கிரியைகளை மிகச் சிறப்பித்துக் கூறுதல் எற்றுக்கு? இத்தகைய கருமங்கள் அனைத்தும் பந்தத்திற்குக் காரணமா மாதலின் என்னினோ? உண்மை, அங்ஙனமாயினும், யாகத்தில், பரமேசுரன் பிரீதியாதற் பொருட்டுச் செய்யுங் கருமங்கள் பந்தங்களாகா, மற்றோ, உலகிலுள்ள கருமங்களே பந்தகாரணங்களாம்.

இதை,

यज्ञार्थात्कर्मणोऽन्यत्र लोकोयं कर्मबन्धनः ।
तदर्थं कर्म कौन्तेय मुक्त सङ्ग समाचर ॥

என்று, கண்ணபிரான் திருவாய் மலர்ந்தருளிய திருவாக்காற் றெளிக.

இவ்வாறு, யாம், உள்ளவாறு, உலகிற்குப் பணிபுரிய எடுத்துக்கொண்ட முயற்சியை முற்றுவித்தருளிய வேதாகம ஞானவிநோதன் திருவருள் நீடூழி வாழ்க.

அங்ஙனமே த. ப. ராமசாமிப் பிள்ளை யவர்களும், தமிழ் நாட்டிற்கும், ஆசிரியர்கட்கும் பேருதவி செய்யுமாறு எண்ணியதை இதுகாறு முற்றும்படி திருவருள் புரிந்துவந்த திருவொற்றியூரான் திருவருளும் நீடூழி வாழ்க.

இதற்கு, உதவியாக பிரயோகத்தை மாத்திரம் எமக்குத் தெரிவித்துவந்த முனுசாமி அய்யா அவர்கட்கும் நன்றி பாராட்டுகிறேன்.

மற்றும், கையேடுகள் கொடுப்பதுடன் பல்வகைச் சீர்திருத்தங்கட்கும் உதவியாயிருந்த, அருகுத்துறை, சீதாராம சோமயாசிகளின் நன்றி என்றும் மறக்கத்தன்று.

இனி, அக்கினி யாதானத்தையும், அக்கினி ஹோத்திரத்தையும் முதலில் அநுபந்தமாக சேர்த்துள்ளேன். இது, பெரும்பாலும், வேள்விக்கிரியைக்கு ஒருவகையில் சோபானமா யிருக்குமென்று பெரியார் கொள்வாராக.

மற்றும், இந்தக் கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதைக்குள்ள சாயணபாடியம், பல்வேறு வகை சூத்திர விகற்பங்களையும், பிராமணத்தின் பொருள்களின் சிறப்பையும், மற்றும் பல சாஸ்திரார்த்தங்களையும் விரித்துக் கொண்டு கம்பீரமாய்ச் செல்வதாமாதலின், அது, எம்போன்ற மந்த மதியினருக்கு, இது பிரயோகம், இது மந்திரப்பொருள், இது சூத்திரக்கருத்து என்று வெளிப்படையாகக் கொள்வதற்கு இடங்கொடுக்காதெனக்கருதி, அப் பாடியத்தின் கருத்தைக்கொண்டு, மந்திரங்களின் பிரயோகங்களையே முக்கியமா மென்றெண்ணி பிரயோகத்தின் பாகுபாட்டை ஒருவாறு செப்பனிட்டு மிக முயன்று, பெரும்பாடுபட்டு என் அறிவுக்கெட்டியவாறு இதைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளேன்.

வேதத்திலுள்ள கருமகாண்டப்பகுதி யாண்டும் மிகக் கடுமையதா மாதலானும், தேசந்தோறும், கொள்கைகட்கு வேறுபாடு காணப்படுதலானும், ஒரு தேசத்திலேயே, வகுப்பு வாரியால் மாறுகொள்கை இருந்து வருவதாலும், எமது மொழிபெயர்ப்பில் சிறிது மாறுபாடுகள் இருத்தலுங் கூடும். அதைப் பிடித்துக்கொண்டு தமது உள்ளத்தின் தெளிவின்மையை வெளிப்படுத்துவதோடு எம்மையும் இகழ்தல் பெரியார்க்கு அழகல்ல வென்பது துணிபாம்.

அஃதன்றியும், தைத்திரீய சங்கிதை, முறை பிறழ்ந்து இருக்கின்றதென்பதும், முன் பின் மாறிக்கிடக்கின்றதென்பதும் வேள்வி செய்யுமுறையாய் இல்லை யென்பதும் வைதிகர் யாவரும் அறிந்த விஷயம். அவ்விஷயத்தில் எம்மை மாத்திரங் குற்றங் கூறப்புகில் அவர்கள் உள்ளம் உள்ளில் நாணும் என்பதை உள்ளச்சாட்சி யுணரும்.

மற்றும், வைதிகமும் வேதமார்க்கத்தை ஒரு சிறிதும் அறியாத யான் முருகக்கடவுளின் திருவருளால் சுரௌத நெறியுணரப் பெற்று வேத நெறி தெரியக் கற்று வைதிக முறை ஆராயப் பெற்று இதைத் தமிழில் ஒருவாறு முறைமைப்படுத்திச் செய்துள்ளேன். மேலும் சோமயாகம், சயன முதலியவைகளும் விரைவில் வெளிவருமாறு இறைவன் அருள் புரிவானாக.

மற்றும் இத்தகைய திருப்பணியில் வைத்த, த. ப. ராமசாமிப் பிள்ளையவர்களுக்கு மேலு மேலும் இதில் ஊக்கத்தை யளித்து விரைவில் எசுர்வேத முடியுமாறும், அதர்வண வேதம் அச்சாகுமாறும், மற்றும் ஏனைய வேதமும் தமிழில் வருமாறும் திருவொற்றியூரான் அருள்புரிவானாக. சோமயாகமும் அச்சாகி வருகின்றது விரைவில் வெளிவரும் திருவருள் வாழ்க.

சுப்ரமண்யோம். சுப்ரமண்யோம். சுப்ரமண்யோம்.

வேத மொழிபெயர்ப்பாசிரியர்,

காசிவாசி, சிவானந்த யதீந்திர சுவாமிகள்.



வேத மொழிபெயர்ப்பாசிரியர்
*ஸ்ரீ சிவானந்தயதீந்திர சுவாமிகள்*

**वेदानां द्राविडभाष्यकर्त्तारः वेदवेदाङ्गपारगाः**
**काशीनिवासि श्री १०८ शिवानन्दयतीन्द्रस्वामिनः**

சிவகுகமயம்.

சேந்திலையகன் துணை

சாமவேத மொழிபெயர்ப்பாசிரியரும், இவ்வேத மொழிபெயர்ப்பாசிரியருமாகிய

காசிவாசி - உயர்திரு

சிவானந்த யதீந்திர சுவாமிக ளவர்களின்

# சரித்திரச் சுருக்கம்.

இது, ஸ்ரீ, சு-அ. இராமசுவாமி அவர்களா லியற்றியது.

நமது தண்டமிழ் நாடு, எண்டிசை மன்னர்களும் போற்றும், பண்டைய மூவேந்தர்களால் அறவாழி கொண்டு மனுநீதி கண்டு ஆண்டு வந்த அரும் பெருநாடாம்.

அற்றாகலினன்றே,

‘வான்வழிவந்த மூன்று மன்னரும் பொன்னுடெய்தி’

என்றற்றொடக்கத்துச் செய்யுளால் திருவிளையாடலும் இதைத் தெளிவு படுத்துகின்றது.

மற்றும், சிவமணங்கமழும் தவநிறை பெரியாரின் வாழிடமாகிய இத் தமிழ் நாட்டு எல்லையோ, தென்றிசைக்கண் கன்னியாகுமரியும், வடதிசைக் கண் விந்தியமலையும், கீழ்த்திசை மேற்றிசைகளில் கடலுமாம்.

இதை,

“தென்குமரி வடபெருங்கற்
குணகுட கடலாவெல்லை”

என்றற்றொடக்கத்துப் புறநானூற்றுச் செய்யுளாற் காண்க.

இம் மூவேந்தர்கள் விந்தியமலை வரை அரசாட்சி செய்து வந்தாரென் பதும்,

“குலகிரியின் கொடுமுடிமேற் கொடிவேங்கைக் குறியெழுதி”

என்பது முதலிய பெரியபுராண யாப்பால் இனிது விளங்கப்படுகின்றது. மற்றும் வருவனவற்றாலு மறிக.

ஈண்டுக் கூறியவாற்றால், மேற்காட்டிய தமிழ் நாட்டெல்லைக்கு முரணாக

“குணகடல் குமரி குடகம் வேங்கடம்
எனு நான்கெல்லையினிருந்தமிழ்க் கடலுள்”

என்று, திருவேங்கடத்தை எல்லையாகக் கூறியது, அவர் காலத்தில் அத் துணை நாடே தமிழ்நாடா யிருந்தமையால் இழுக்கில்லை யென்க.

இனிய தமிழ்ப் பெருமையோ, நம்மனோரால் எடுத்துக்கூற முடியாததே யாம். என்னை ?

"யாரறிவார் தமிழருமை யென்கின்றேனென்
அறிவீன மன்றேவுன் மதுரைமூதூர்
நீரறியு நெருப்பறியும் மறிவுண்டாக்கி
நீ யறிவித்தா லறியு நிலமுந்தானே"

என்று, உன்னிப்புகன்ற மன்னை சிவக்கொழுந்தின் திருவாக்காலென்க.

அங்ஙனமாயினும், விருப்பு மிகுதியால் தமிழின் பெருமைகட்கு சில கூறுவாம். இத்தகைய செந்தமிழ், பரசிவன் திருவருளால் நிகழ்ந்ததாம். இது இன்புருவாதலின் பரசிவ வடிவென்றே கூறலாம். இதை அருட்பெருஞ்சோதி இராமலிங்க வள்ளலாரின் திருவருட்பாவிற் காண்க.

இப்பொருளையே,

'என்றுமுள தென்றமிழ் இயம்பி இசை கொண்டான்'

என்று, செந்தமிழ்க் கவிச்சுவை வந்து வந்தொழுகும் முந்தியராமன் கதை புகல் கம்பநாட்டாழ்வாரும் நன்கு விளக்கினர்.

மற்றும் இக்கருத்தையே,

'தமிழ்சிவம் இனிமையெனுந் தனிப்பொருளாம்'

என்னும், கழாரம்பரின் கனிந்தவாக்குங் காண்பிக்கின்றது.

இஃதன்றியும், தமிழ், பன்னிரண்டு உயிரெழுத்தாகிய கலைகளையுடைய தால், தந்தைமொழியாம், தந்தை = இரவி. வடவாரியம், பதினாறு உயிரெழுத் துக்களாகிய கலைகளை யுடையதால் தாய்மொழியாம். மதி = தாய். இவ்வாறே எண்ணிறந்த பெருமைகளை யுடையது தமிழ்நாடாம். அதைப் பழிக்கின்,

"ஆரியநன்று தமிழ் தீதெனவுரைத்த
காரியத்தாற் காலக்கோட்பட்டானை—சீரிய
அந்தண் பொதியி லகத்தியனு ராணையாற்
செந்தமிழே தீர்க்க சுவ:"

என்னும், சொற்பயன் மேற்கொண்ட நற்கீரன் வாக்கிற்கு இலக்காகுவ ரென்க.

இனி, இத்தகைய நந்தமிழ்நாடு, சேரன், சோழன், பாண்டிய என்னும் மூவேந்தர்களால் ஆளப்பெற்றதால், சேரமண்டலம், சோழமண்டலம், பாண்டி மண்டலமென முப்பகுதிகளை யுடையதாம் இவற்றின் இடைப்பட்ட பாகுபாடு கள் எண்ணிலாதன,

இம் மண்டலங்களின் எல்லைகளுள்,

சேரமண்டல எல்லை.

"வடக்குத்திசை பழனி வான்கீழ்த் தென்காசி
குடக்குத்திசை கோழிக் கோடாங்—கடற்கரையின்
ஓரமது தெற்காகும் ஓர் எண்பதின்காதம்
சேரநாட் டெல்லையெனச் செப்பு" எனவும்,

பாண்டிநாட்டெல்லை.

"வெள்ளாறது வடக்காம் மேற்குப் பெருவழியாம்
தெள்ளார் புனற்கன்னி தெற்காகும்—உள்ளார்வத்
தாண்டல் கடல்கிழக்காம் ஐம்பத் தறுகாதம்
பாண்டிநாட் டெல்லைப்பதி" எனவும்,

சோழநாட்டெல்லை.

"கடல்கிழக்குத் தெற்கு கரைபொரு வெள்ளாறு
குடதிசையிற் கோட்டைக் கரையாம்—வடதிசையில்
ஏணாட்டுப் பெண்ணை இருபத்து நாற்காதம்
சோணாட்டுக் கெல்லையெனச் சொல்" எனவும்,

கூறப்பட்டுள்ள வெண்பாக்களாற் கண்டு கொள்க.

மூன்று மண்டலங்களின் பெருமையை.

"வேழமுடைத்து மலைநாடு மேதக்க
சோழவளநாடு சோறுடைத்து—பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்துத் தெண்ணீர் வயற்றொண்டை
நன்னாடு சான்றோ ருடைத்து"

என்னும் ஔவைப் பிராட்டியாரின் அமுத வாக்கால் உணர்க.

இம் மூவேந்தர்களால், ஆயிரத்தெட்டுச் சிவாலயங்களும் நூற்றெட்டுத் திருப்பதிகளும் உண்டாக்கப் பெற்றன. அவற்றுள், இப்போது நிகழ்வன,

சோழமண்டலத்தில் 228-ம், பாண்டிமண்டலத்தில் 22-ம், சேரமண்டலத்தில் 16 மாம்.

இம் மூன்று மண்டலங்களுள், அகத்தியமா முனிவர் கமண்டலங் கவிழ்ந்ததால் பெருகி, கவேர முனிவர் எடுத்து வளர்த்ததால் காவேரி என்னும் சிறப்புப் பெயர்பெற்ற காவேரி மாதின் தெண்ணீர் விருந்துண்டு, வளர்ந்தோங்கும் எண்ணிறந்த பொழில்களையும், தெங்கு, கதலி, மா, பலா முதலிய மரங்களையும், பைங்கூழ்ப் பெருமைகளையும் மற்றும் பலம் வளங்களையுமுடையது சோழமண்டலமேயாம்.

இதன் பெருமையை, 47-ம் நூற்றாண்டில் இருந்த ஆன்மநாத தேசிகரியற்றிய 'சோழமண்டலச் சதகம்' என்னும் நூலிற் காண்க.

இவ்வாற்ருல் நிலவளம், நீர்வளம், நிழல்வள முதலானப் பல்வகை வளங் களையும் நிறையப் பெற்றிருப்பதோடு மாபெருஞ் சிவத்தலங்களால் சைவந் தழைத்தோங்கும் நாடும் சோழநாடேயாம்.

அத்துணைப்புகழ் மலிந்த சோழ நாட்டில், எல்லாச் சிவத்தலங்களுட் சிறந்ததும், தெய்வத் திருமறைகள் திருமேனி தாங்கிப் பூசித்ததால் திரு மறைக்காடு என்னுஞ் சிறப்புப் பெயர் வாய்ந்ததும், அகத்தியாம்பள்ளி, கோடிக்குழகர்கோவில் முதலான அரும்பெருந் தலங்களால் அணியுடைய தும், கடலெறியுந் திரையொலியும், உடல் முழுதும் உருக்கும் தமிழ் மறைப் பண்ணொலியும், தேவ அடியார்களின் சங்கீதவொலியும் இடையருது கேட்டுக் கொண்டிருக்கும் வேதநாயகப் பெருமான் திருமணக் கோலங்காட்டும் அருட் டிருமேனியுடனும், சிவலிங்கமாகிய அருவுருவத் திருமேனியுடனும் எழுந்தரு ளப்பெற்றதும், யாழைப்பழித்த அம்மையார் விளங்கப்பெற்றதும், சோழ மன் னர்களால் அரிய பெரிய திருக்கோபுரம் திருக்கோவில்களமைக்கப் பெற்றது மாகிய திருமறைக்காடென்னும் ஒரு சிவத்தலம் உண்டு, அத்தலம் திரு நாவுக்கரசு சுவாமிகளால், அநாதி காலத்திலிருந்து திருமறைகளால் அடைக் கப் பெற்றிருந்த கதவு திறக்கும்படி தெய்வத்தமிழ்த் திருமறையாகிய பாடல் பெற்றதும், வெம்பந்த மற்ற சம்பந்த சுவாமிகளால் பூசித்து மீண்டும் அக் கதவு அடைக்கும்படி பாடப் பெற்றதுமாம். இதனுல், திருமறைகள் பூசித்து திருக்கதவம் அடைபட்டிருந்தது, தமிழ்த் திருமறையின் அருள் வலியால் திறக்கப் பெற்றமையின், தமிழின் பெருமையும், தமிழ் மறையின் அருமை யும், நான்மறைச் செல்வர்களான நால்வர்களின் அருள்வன்மையுங் காணக் கிடக்கின்றன என்பதை யுணர்க. இது பற்றியே, வேதாரணிய புராணமும்,

"காசியிலிறக்க முத்தி கமலையிற் பிறக்க முத்தி
தேசுறு சிதம்பரத்தைத் தரிசிக்க முத்தியாகும்
மாசிலா மேன்மைபூண்ட மறைசையம் பதியோ கூறில்"

என்று கூறுகிறது.

இத்தகைய திருமறைக்காட்டிற் கருகில், ஆயக்காரம் புலம் என்னுந் திருப்பெயர் வாய்ந்ததும், அகமுடைவீரர்களின் குடிகளாற் சூழப்பெற்றதும், அகத்தியமா முனிவருண்டாக்கிய முள்ளியாற்றின் நீர் பாயப்பெற்றதும், காடாரம்பம் என்னும் பொதுப் பெயரை யுடையதுமாகிய ஒரு சிற்றூருண்டு. அவ்வூரில், மலைமண்டலம், கொங்குமண்டலம் எனவும், அக நாடு, மலை நாடு, சேர நாடு எனவும், குடதிசை எனவும், வழங்கப்பெறுஞ் சேரமண்டலத்தை யாண்ட சேரமன்னனின் குலத்தைச் சார்ந்த பழங்குடியாகிய அகம்முடைத் தேவர் குடிகள் சில உள. இச்சேரமன்னனையே, கொங்கர் கோ, எனச் சங்க நூல்களும் புல்கின்றன.

அற்றாகலினன்றே,

"பாகெழு கொங்கர் நாடகப்படுத்த
வேல்கெழுதானை வெருவழு தோன்றல்"

என்று பத்துச் செய்யுளில் கூறப்பட்டிருக்கின்றது.

இதை,

"திண்டோன் வலியாற் குடநாடர் செம்மறனையு மாறலங்கல்
வண்டோ லிடுதாரிரவிகுல மருமான்றனையு மலைந்துபுறங்
கண்டோர் குடைக்கீழ் நிலமூன்றுங் காவல்புரிந்து கோலோச்சிப்
புண்டோய் குருதி மறக்கன்னி புகழ் வேல்வழுதி திகழ்நாளில்"

என்னும் திருவிளையாடல், பாண்டியன் சுரந்தீர்த்த படலம் கவி. 4-ம் செய்யுளிற் கண்டு தெளிக.

மற்றும், சுந்தரமூர்த்தி நாயனாருடன், பரசிவனுடைய சந்நிதியில், ஆதியுலா அரங்கேற்றுதற்கு கைலாயத்திற் கெழுந்தருளிய சேர அரசனை சேரமான் பெருமாள் நாயனாரின் குலம் இக்குலமே யென்பதையுங் காண்க.

இங்குச் சேரமான் பெருமாள் நாயனார், பரசிவனுக்கு அகம்படித்தொண்டில் மிகச் சிறப்புற்றவராதலின் இக்குலத்தார்க்கு அகம்படியர் என்னும் மாபெருஞ் சிறப்புப் பெயரும் வந்ததா மென்க.

இதுபற்றியன்றே, எல்லாம் வல்ல இறைவன் தனது அகம்படியராகிய சேரமான் பெருமாள் நாயனாருக்கு, பாணபத்திரன் பொருட்டு தனது திருக்கரத்தால் சீட்டெழுதியது மென்க.

இதை,

"மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவு பானிற வரிச்சிற்
கன்னம் பயில் பொழி லாலவாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையி னுரிமையி னுதவி யொளிதிலைத்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் **சேரன் காண்க**"

என்னுஞ் சங்கச் செய்யுளாற் காண்க.

இத்துணைப் புகழையும், பரசிவனால் நேரே கூறப்பெற்ற அகம்படித் தொண்டராகிய சேரமான் பெருமாள் நாயனாரின் பெருமைதான் என்னே? என்னே?

மதுரைச் சுந்தரானந்தரும், மீனாட்சியும் அகம்படிச் சேரமன்னன் கிளையிற்றோன்றியவர்களே யாவர்.

சென்னையில் வசித்த சென்னியப்பன் என்னும் அகம்படித்தேவரே பச்சையப்ப முதலியாராவர். இவரின் மரபினர்களே, பொன்னேரி முதலியார், பூந்தமல்லி முதலியார். மற்றும், பிரபுட தேவர், வல்லாளன் என்பவர்களும் இம்மரபினர்களே. விரிக்கிற் பெருகும்.

இத்தகைய அகம்மடியார் குலத்தில், அப்பாவுத் தேவர் என ஒருவர் இருந்தனர். இவர், மந்திர சித்திகள் தந்திர சித்திகள் நிறையப் பெற்றவர். இவருக்கு, சாமித் தேவர் என்று ஒரு குலமரபு விளக்கக் காரணப் பெயர் பூண்ட ஒருவர் இருந்தனர். இவருடைய மனைவியார் மதுரம்மாள் எனப் பெயர் பெறுவர். இவர்கள் முறைப்படி இல்லறத்தை நடத்திக் கொண்டு வாழும் நாளில்; இவர்கள் வயிற்றில் பெண் மக்களும், ஆண் மக்களும் பிறந்தனர். முடிவில், கலியுகத் தெய்வமாகிய முருகக் கடவுளே உருப்பெற்று வந்தாற் போலும், சிவனுஞ் சத்தியுங்கூடி, ஆனந்தமாகிய ஒரு குழந்தையைப் பெற்றாற் போலும், திருமறைக்காடு வேதநாயகப் பெருமானின் திருவருளே ஒரு மகவாய் வந்தது போலும் ஒரு குழந்தையைப் பெற்றெடுத்தனர். இக்குழந்தை பிறக்குங்கால், தெய்வத் திருமறைகளைக் கனவிலுங் கேட்டறியாத தமிழ் மக்களின் உள்ளங் குளிர்ந்தன. உவகை பூத்தது, வேதங்கள் எவையோ? அவற்றின் பொருள் எதுவோ? என்பது முதலாக வெழுந்துள்ள தமிழ் மக்களின் கலக்கங்கள் நீங்கின. ஆரியர்களின் உள்ளமும் சிறிது குளிர்ந்தது. தமிழ் மக்கட்குண்டாகும் நலங்களின் குறிகளும், மற்றும் பல உண்டாயின.

இவ்வாறு சிவனருள் தழைக்க வந்த திருக்குழந்தை வளர்ந்து இளமைப் பருவம் எய்தியவுடனே, இக்குழந்தையின் பிதா, பிற்காலத்தில் இக்குழந்தை வேதப் பொருளை விளக்கும் அறிகுறி தோன்றவே இக்குழந்தை தகப்பன் சாமியாய் விடும் நாமிருக்கில் நமக்கு அதுபுகழன்று என்று கருதி, இவ்வுலகை நீத்துத் தன்னுலகாகிய சிவவாழ்வை யடைந்தனர்.

பின்னர், இச்சிறுவருக்கு, சுற்றத்தார்கள், இச்சிறுவருடைய நடை, உடை, அறிவு, செயல் முதலியவைகளை நோக்கி, இக் கலியுகத்தில் யாதேனுமோர் அரும்பெருங் காரியத்தைச் செய்வார் என்பது குறியாமாறு, இக்குழந்தைக்கு கலியப்பெருமாள் என்று திருநாமஞ் சூட்டினர்.

பிறகு, வேத மொழிபெயர்ப்பாசிரியாகிய இச்சிறுவர், பள்ளியில் வைத்தல் இன்றியே ஒரு ஆசிரியரை யடைந்து அவர் கற்பித்தது ஒரு பங்கும் தானே கற்றுக்கொண்டது இருபங்குமாக தமிழ்க் கல்வியை நிறையக் கற்றுக் கொண்டனர்.

இச்சிறுவர், இளம்பிராயத்திலேயே, தனது வீட்டுக்கு வரும் அடியார், இரப்போர், பெரியார் முதலானோர்களைக் கண்டால் அன்பு பாராட்டித் தொண்டு புரிதலைப் பெருங் குணமாகவே கொண்டுள்ளார். மற்றும், இளம்பருவத்தில், இல்லறம், துறவறம் என்னும் பாகுபாடு தெரியாதிருந்தும் பற்றின்றி யிருப்பதிலேயே விருப்பமுடையவரா யிருந்தனர்.

இவ்வாறு, இச்சிறுவர், இளம்பருவத்தில் நற்குணங்களையே பழகி வரும்போது, தனது ஊருக்கடுத்த ஒரு பெரியார் மடத்தில் நடந்த பஜனைக்கு, சில சிறுவர்களுடன் சென்றிருந்தனர். அங்குள்ள, இராமையச் சுவாமிகள் என்னும் ஒரு பெரியார், இச்சிறுவரை நோக்கி, இவன் கல்வி மிக்கான்போற் காணப்படுகின்றான் என்று கருதி, இச்சிறுவரை நோக்கி, மைந்த! ஒரு கடிதம் வரைந்து தருவாயாக என்று கேட்டனர். அதற்கு, இச்சிறுவர் ஐய? அவ்வாறே வரைவம் என்று களிப்புடன் ஒரு கடிதம் வரைந்து கொடுத்தனர். அதைப்பார்த்த இராமையச் சுவாமிகள், இவ்விளம் பருவத்தில் இவ்வாறு எழுதக் கற்றுக் கொண்ட இச்சிறுவன் யாவன்? எங்குள்ளான்? என்று பலவாறு வினவித் தெரிந்து கொண்ட பின், அவர், இச்சிறுவரை நோக்கி, அன்ப! உனது கையெழுத்து மிக நன்றாயிருக்கின்றது ஆனால் உன் தலையெழுத்து எப்படியோ? அறியேம் என்று கூறிக்கொண்டு, மைந்த! நீ, என்னிடமே இருந்து வருவாயாக என்று அன்பு பாராட்டிக் கூறினர். அதைக் கேட்ட இச்சிறுவர், முற்பிறப்பின் நற்கரும விளைவால் அவர் கூறியது தனக்கு நலமாமெனத் தோன்றி உடனே அந்த இராமையச் சுவாமிகளுடன் இருந்து, அவரையே தனக்கு ஆசிரியராய்க் கொண்டு சிலநாள் அவருக்கு வழிபாடு செய்து கொண்டு வந்தனர்.

'தொண்டரைத் தானேதூய கதியினிற் சேர்ப்பன்'

என்றபடி, பரசிவனாரே, இராமையச் சுவாமியாய் வந்தார் போலும், இன்றேல் அத்தருணத்தில் இச்சிறுவரை தாமே வலிந்து அழைத்துக் கொள்வரோ? கொள்ளார்.

இவ்வாறு, இராமைய சுவாமிகளிடத்தில், இவ்விளமைமாதவர் சில யோகப்பயிற்சிகளைக் கற்றுக்கொண்டு நியத உணவோடு அருந்தவமாற்றி வரும்போது, மனத் தூய்மை மிகவே முத்திவேட்கை யெழ, அவ்வூருக்கு வந்து சில அன்பர்கட்கு வேதாந்தப் பாட மோதுவிக்கும், ஞானப்பெரியா

ராகிய காசிசுவாமிகளென்னும் அருணாசல சுவாமிகளிடத்தில், சில அன்பருடன் சோணசைல மாலை முதலிய இலக்கியங்களைப் பயின்று வந்தனர். இவ்வாசிரியர், இப்பெரியாருக்கு, தமது இல்லத்தின் கண்ணேயே முன்னும் வழிபாடு செய்து வந்துள்ளார்.

அதன் பிறகு, வேதாந்த நூல்களை இனிது கற்கவேண்டுமென்னும் விருப்பால், செட்டிநாடுகளுக்குள் திலகமாய் விளங்கும் கோவிலூர் என்னும் திருப்பதியை யடைந்து, அங்குள்ள, முக்கியமாகிய உகந்தலிங்க ஞானதேசிகரின் திரு மடாலயத்தில் மடாதிபதித் தன்மைபெற்று ஞான சூரியராயும், தவவேந்தராயும் விளங்கிய வீரமாமுனிவரைக் கண்டு கண்களி கூர்ந்து மெய்யரும்பி, அட்டாங்கமுறைப்படி அவர் திருவடியிற்பணிந்து, கை கட்டி வாய்புதைத்து நின்றனர். அப்போது, வீரமாமுனிவர், தீட்சைப் பிரசாதமாகிய திருநீரளித்து திருக்கடைக்கண் பாலித்தருளினர்.

இவ்வாறு, கோவிலூர் வீரமாமுனிவரை ஞான குருவாய்க்கொண்டு வழிபட்டு, சில வேதாந்தத் தமிழ் நூல்களைக் கற்றனர். கற்கும்போது, இவர் இளம்பிராயந் தொட்டு உபாசித்து வந்த முருகக்கடவுளின் உபாசனையின் வலியால் எல்லா வேதாந்த நூல்களின் பொருள்களை இனி துணர்ந்ததோடு வடமொழி பயில வேண்டு மென்னும் விருப்பு மெழுந்தது. எழுந்தவுடன், தனது ஆசிரியரின் ஆணை பெற்றுக்கொண்டு வடமொழிக்கல்விக் களஞ்சியமாகிய காசியம்பதியை யடைந்து, விதிப்படி துறவு வேடந்தாங்கி, பத்து நாமமுடைய துறவிக்கூட்டங்களுள் புரி என்னுந் திருநாமமேற்று சிவானந்த புரி என்னுங் காரணப்பெயருடன் (தீட்சநாமமுடன்) வடமொழியில், இலக்கணம், இலக்கியம், தருக்கம், பூர்வ மீமாஞ்சை, உத்தர மீமாஞ்சை, சாங்கியம், யோகம் முதலான ஆறுசமய நூல்களையும் நன்குணர்ந்து, அங்குள்ள பரமாஞ்ச சந்நியாசிகட்கு வேதாந்தநூல் ஒதி வைத்துக்கொண்டு காசிமாநகரில் சுமார் ஆறு ஏழு வருடம் வாழ்ந்து வந்தனர்.

பிறகு, தமிழ்நாடுசெய்த தவப்பயனால், தமிழ் நாட்டையடைந்து, தமது ஞானசிரியராகிய வீரமாமுனிவர் விதேக கைவல்யமடைந்துவிட்டதைக் கேட்டு அம்மாதவர் சிவலிங்க வடிவாய்த் திருக்கோயில்கொண் டெழுந்தருளி யிருக்கும் திருக்களர் என்னும் சிவதலத்தை யடைந்து, அங்குத் தமது ஆசிரியர், சிவலிங்கமா யெழுந்தருளியதைக் கண்டு தரிசித்து மனநொந்து ஆசிரியரின் திருமேனியைக்கண்டு தரிசிக்கும் பாக்கியம் நமக்கில்லையென்று கருதி அவர்க்குச் செய்யவேண்டிய கைமாறு ஒன்று மில்லை, ஆனால், மாணவன், ஆசிரியரின் பெருமையை உலகறியச் செய்தலே பெரும்பணி யென்றுக்கருதி, திருக்களரில், அவருடைய சந்நிதியில் விரதத்துடன் இருந்து, கோவிலூர் நான்

மணிமாலை, திருக்களராண்டவர் புராணச் செய்யுள், புராண வசனம் முதலிய நூல்களை யெழுதி ஆசிரியரின் திருவடித் தாமரையில் சமர்ப்பித்துவிட்டு, ஆசிரியர்க்குரிய மற்றுமொரு உதவிசெய்யத் துணிந்து ஞானநிட்டராய் தவக் கோலத்துடன் பரமாஞ்சாராய்த் திரிந்து தனது சொரூபநிலையில் சுகித்திருந்த னர். இவ்வாறு தனித்துப் பேரானந்த வாழ்வில் மூழ்கிக்கிடக்க விருப்புற்ற இவருடைய நடையன்றோ, உலகம் போற்றுவதுடன் ஞானநூல்களும் பெரியார்களும் போற்றும் ஞானசாரமாம்.

இவர் ஆசிரியர்க்குச் செய்த பணியே திருப்பணியாம். ஏனையது பணி யாம். என்னை?

"துட்டமாந் தடைகண் மூன்றுந் தொடாமற் சொரூபஞான
நிட்டனா யிருக்கினீதே நீ செய்யும் உதவியாமே"

என்று கைவல்யமே கூறுதலின் என்க.

மற்றும், இவரே, துறவிகளுள், பேரானந்தத்தை அநுபவிப்பவர் என்ன லாம். மற்றவர், இடம் பொருள் ஏவல்களை நாடி எல்லாத் துன்பங்களையும் அநுபவிக்கின்றவராவர்.

அற்றாகலினன்றே,

"பற்றின்றித் தனியிருக்கு மனத்தைப் போல......
பொற்றிரள் சேர் இந்திரனும் சுகமடையான்"

என்று கூறுகிறது வாசிட்டம்.

இவ்வாறு, வடமொழி தென்மொழிகளில் வல்லுநராயும், தவச் செல்வ ராயும், பற்றின்றி வாழ்ந்து வரும்போது, வடமொழி தென்மொழி வல்லுந ராய் நிகழ்தல் போல், வேதாந்த சித்தாந்தங்களினும் சிறந்த கல்வியுடைய ராய் இருவகைச் சமயங்களையும் ஒருவகைப் பொருளையே கூறும் நற்சமயங்க ளென்றுணர்ந்து சிவோகம் பாவனையால் தத்துவஞான நிட்டராய் சமரச நன் னிலை கைகூடப் பெற்றனர்.

இவர் திருமறைக்காட்டில் அவதரித்ததினாலும், இளம் பிராயத்திலேயே வேதாகம ஞான விநோதனாகிய முருகக்கடவுளை உறுதியாய் வழிபட்டு வந்த உபாசனையின் வலியாலும், தமிழ்நாடு செய்த தவத்தாலும், தமிழ் மக்களின் நல்வினையாலும், ஒருபோது திருவருட் செலுத்த, சென்னையம் பதியிலுள்ள ஆனந்தாசிரமம் என்னும் ஒரு மடாலயத்தை யடைந்தனர்.

அக்கால், திருவொற்றியூர்த் தியாகராசப் பெருமானின் திருவருட் செலுத்தியதால், அருட்செல்வம் பொருட்செல்வம் பெற்று தமிழ் நாட்டின்

நற்றவப்பயனுய்ச் சென்னையம் பதியில் வாழும் த. ப. இராமசாமிப் பிள்ளை யவர்களால், தமிழ் மக்களுக்குள்ள குறையை நீக்குதற்பொருட்டு வட மொழிப் பாடசாலை நிறுவப்பட்டு இனிது நடந்தேறி வந்தது. அவ்வாறு நடக்கும் பாடசாலைக்கு முன்னிலையாக யிருந்த முத்தானந்த ரென்னும் ஒரு பெரியாரால், இவ்வேத மொழிபெயர்ப்பாசிரியரும், உயர்திரு. இராமசாமிப் பிள்ளை யவர்களும் ஒரு நாள் நேரில் சந்திக்குமாறு செய்யும்படி திருவருள் கூட்டி வைத்தது.

இவ்வாறு புக்கணமன்னனும், வித்தியாரண்ய முனிவரும் சேர்ந்தது போன்றே, இவ் வாசிரியரும், த. ப. இராமசாமிப்பிள்ளை யவர்களும் மற் றும் பல பெரியோர்களும் குழுமியவிடத்து, பிள்ளையவர்கள், இவ் வாசிரியர் முதலிய பெரியார்க்கு முறைப்படி உணவளித்துப் போற்றினர். போற்றும் போது, திருவொற்றியூர் சிவபெருமானருளானது பிள்ளை யவர்களின் உள் ளத்தினின்று தமிழ் நாட்டுக்கொரு பெரும்பணி செய்யுமாறு தூண்டியருள, அப்போது பிள்ளை யவர்கள், இவ்வாசிரியரை நோக்கி, சுவாமின்? தயவுசெய்து தமிழ் மக்கள் திருமறை யறியாதார் என்னுங்குறை நீங்குமாறு, தேவரீர் வட மொழியிலுள்ள தெய்வத் திருமறைகளை தமிழில் மொழி பெயர்த்தருளல் வேண்டும் என்று வணங்கிக் கேட்டுக்கொண்டனர்.

அப்போது, இவ்வாசிரியரின், இதயத்தைவிட் டகலாமல் நின்ற வேதா கமஞான விநோதனாகிய முருகப்பெருமானின் திருவருளானது, "அவர் கேட் டுக்கொண்டவாறே ஆகும் ஏற்றுக்கொள்வாயாக" என்று, தூண்டியதால் அதை ஏற்றுக்கொண்டனர். ஏற்றுக்கொண்ட பின்னரும், முருகப்பெருமானின் திருவருளையே இடையறாது வாழ்த்திக்கொண்டு, தாம் ஏற்றுக்கொண்ட அவ் வரும் பெருங்காரியம் எளிதில் முடியுமாறு அருள் செய்யும்படி முருகக்கட வுளை வேண்டிக்கொண்டிருந்தனர். திருவருளை நம்பினோர் சிறுமை யடை வரோ? அடையார். திருவருளுடையார்க்கு மிக அரியதும் எளியதாமன்றோ, மதி வலியினும் அருள்வலியே பெரிதெனல் நாயன்மார்களிடத்தில் மிக வெளிப்படையாம்.

இவ்வாறு, பிள்ளையவர்களும், இவ்வாசிரியரும் மன ஒற்றுமையோடு, வேதங்களை மொழி பெயர்க்க முயன்றவிடத்து, உயர் திருவாளர் பிள்ளையவர் கள் இவ்வாசிரியருக்கு வேண்டிய உதவிகளை நன்குசெய்து வந்தனர். வட மொழி வேதங்களையும், மற்றும், வேதாங்கங்களையும், மற்றும் பல நிருக்தம் நிகண்டு, அகராதிகளையும் ஆயிரக்கணக்கான ரூபாய்கள் செலவிட்டு வாங்கி வைத்தனர். இவ்வாசிரியரும், முருகக்கடவுளின் திருவருளின் வலியால் மன உறுதியுடன் பெரும் உற்சாகங் கொண்டு இரண்டு மூன்று வருடங்களுக்குள் சாமவேத முழுதையும் தமிழில் இனிய நடையில், பதவுரை, கருத்துரை

குறிப்புரைகளுடன் மொழி பெயர்த்து விட்டனர். பிள்ளையவர்களும், பதினாயிரக் கணக்கான ரூபாய்கள் செலவிட்டு, நாகரம், கிரந்தம், தமிழ் என்னும் மூன்று பாஷைகளிலும் இரண்டு வாலியங்களாக அச்சிட்டு முடித்து ஆயிரங் காப்பிகள் பயிண்டு செய்து கைமாறு கருதாது, ஆரியர்கட்கும், தமிழ் மக்கட்கும் நன்கொடையாக அளித்தனர். தமிழ் நாட்டிலுள்ளவரும் பிற நாட்டாரும் சாமவேதத்தை வாங்கி நோக்கி, அந்தோ! இதுகாறும், நமது செவியில் கேளாததும் கண்ணில் பாராததுமாகிய வேதத்தை, இன்று, காணவும், படிக்கவும், பொருளை யுணரவும் அருள்புரிந்த முருகப்பெருமான் அருள்தான் என்னே! என்னே! இவ்வேத மொழிபெயர்ப்பாசிரியரின் கல்வித்திறந்தான் என்னே! என்னே! திருவொற்றியூரானுடைய திருவருளடிமை, த. ப. இராமசாமிப் பிள்ளை யவர்களின் பெருந்தன்மைதான் என்னே! என்னே! இக்கலியுகத்தில், இவ்வாசிரியரும் இவ்வேத நன்கொடையாளரும், சிவனும் இராமனுமாய் வந்து தமிழ் நாட்டைச் சிறப்பிக்கும் பெருமை செப்பற்பாற்றே, இது திருவருட் செயல் திருவருட் செயல் என்று தமிழுலகம் வாழ்த்தி வருகின்றது.

மற்றும், திருவொற்றியூரான் அருளால், த. ப. இராமசாமிப் பிள்ளை யவர்கள் அடைந்துள்ள பரசிவோபாசனையை அறி குறியாகக் காட்டுவதற்கிடமாகியது எசுர் வேதமாம், அதிலும், மிகச்சிறந்தது நான்காங் காண்டமாம், அதிலும் மிகச்சிறந்தது சதருத்திரி சமகங்களாம், அதிலும் மிகச்சிறந்தது சிவ பஞ்சாட்சரமாம், இத்தகைச் சிறப்பு வாய்ந்த கிருஷ்ண எசுர்வேதத்தை மொழி பெயர்க்க வேண்டு மென்னும் பிள்ளையவர்களின் விருப்ப மிகுதியால், இவ் வாசிரியர், முருகக் கடவுளின் திருவருளையே தனது உள்ளத்திற்கொரு தெள்ளிய விளக்காது வைத்துக்கொண்டு எசுர் வேதத்தை முன்னோர் வகுத்த முறைகளுட் சிறந்த முறையில் மொழி பெயர்த்தனர். இதில் இவர் செய்துள்ள அரும்பெருஞ் செய்கை திருவருட் செயலென்றே சொல்லலாம். உயர்திரு பிள்ளையவர்கள், இவ்வாசிரியரிடத்தில் வைத்துள்ள பேரன்பும், திருவொற்றியூரான் திருவருளும், இவ்வாசிரியரை, அதர்வண வேதம், இருக்கு வேதங்களையும் மொழி பெயர்க்கச் செய்விக்குமென்று நம்புகின்றனம்.

மற்றும், இவ்வாசிரியரால் பொழிபெயர்த்த நூல்கள் :—இருக்குவேத ருத்திரி, சாமவேத ருத்திரி, சங்கரதிக்விசயம், வச்சிரசூசி யுபநிடதம், கிருஷ்ணோபநிடதம்.

இயற்றிய நூல்கள் :—இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம், தாயுமானவர் நன்னிலைத் தீர்ப்பு, சைவத் தெளிவு, அத்வைதத் தீர்ப்பு, சிவஞான போதசாரம், திருக்களராண்டவர் புராணம், கோயிலூர் நால்வர் நான்மணிமாலை, திருவொற்றியூர் மான்மியம், சிவப்பிரகாச சுவாமிகள் சரித்திரம், தோபா சுவாமிகழ் சரித்திரம், திருமண விளக்கம் என்பன.

மொழிபெயர்த்து அச்சிடாத நூல்கள் :—கண்டனகண்ட காத்தியம், சிவானந்த போதம், உண்மைத் துறவு நிலை முதலியன.

மேலும், இவ்வாசிரியர், நான்கு வேதங்களையும் முழுதும் தமிழில் மொழி பெயர்ப்பதுடன் பற்பல நூல்களையு மியற்றும்படி முருகக் கடவுள் திருவருட்புரிவாராக.

தனமிருந்தும் த. ப. பிள்ளையவர்களைப் போல் செலவிடல் வேண்டும். கல்வியிருந்தும், இவ் வாசிரியரைப் போல் உலகமுய்ய நூல்கள் இயற்றல் வேண்டும். இவ்வாறே, பொருத்தமுடைமை பெரும் புண்ணியத்தின் பயனும்.

அற்றாகலினன்றே,

"செயற்கரிய செய்வர் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலாதார்"

என்று, தமிழ் மறையுங் கூறுகின்றது.

இவ்வாற்றால் இவ்விருவர்களையும் உலகப் பெரியார்களென்றே சொல்லலாம்.

வேத மொழிபெயர்ப்பாசிரியரின் சரித்திரச் சுருக்கம்

முடிந்தது.





திருவொற்றியூரான் அடிமை

**சென்னை த. ப. இராமசாமிப்பிள்ளையவர்கள்.**

श्री बन्धकपुरेश्वरपादपद्मबद्धचित्तभक्तः

श्री. त. प. रामस्वामि नामालंकृत महाशयः, मद्रपुरि.

சிவகுகமயம்.

செந்திநாயகன் துணை.

வேதத்தை மொழிபெயர்க்கச் செய்து வெளியிட்டுதவிய

# ஸ்ரீமான் த. ப. இராமசாமிப் பிள்ளை யவர்களின்

# சரித்திரச் சுருக்கம்.

இது ஸ்ரீ, சு-அ. இராமசுவாமி அவர்களா லியற்றப்பெற்றது.

அகத்தியமா முனிவரின் கமண்டலநீரை, கணபதிக்கடவுள், காக்கையாய்க் கவிழ்க்க, அஃதொரு ஆருய்ப் பெருகவே, அக்கன்னியை, கவேரன் எடுத்து வளர்த்தமையின் காவேரி யென்னுந் திருநாமம்பூண்ட காவிரியாறு பாய்ந்து வளர்ந்த, கமுகு, கதலி, தெங்கு, மா, பலா முதலான பற்பல சோலைகள் நிறைந்ததும், வயல்களில் நெற்குவியல்கள் குன்றுகள் போன்று குவிந்து கிடப்பதும், 'சோழநாடு சோறுடைத்து' என்றபடி சோறுமிக் குடையதும், சோழனால் ஆளப் பெற்றதுமாகிய சோழநாட்டின் நாப்பண், பொற்பூணின் நடுவில் மணியைப்போலும், நற்காட்சி யுடுக்களுள் மதியம்போலும் நனிதிகழ்வதும், பராசமுனிவரின் அமுத புட்கரணி, வசிட்டதீர்த்தம், உமையின் மாலையாலுதித்த மணிமுத்தா நதி, சிவகங்கை, விண்ணுறு,(வீணன் வெட்டிய ஆறு) என்பது முதலான தீர்த்தங்களால் அழகுற்றதும், திருநாவுக்கரசர் திருவாய்மலர்ந்தருளிய தஞ்சைத் தளிக்குளத்தீசர், பெருவுடையார் (பிருகதீசர்) பெரியநாயகி (பிருகதாம்பிகை) கருவேல நாதர் என்பது முதலான தேவர்களால் சிவமணங் கமழ்வதும், வசிட்டர் முதலான மகரிஷிகளால் தவப்பயன் பழுத்ததும் 'சமிவனம்' என்று வழங்கப் பெற்றதுமாகிய தஞ்சை கருந்திட்டைக்குடி யென்னும் புண்ணியதலத்தில், மந்தாரடிச் செல்வப்பிள்ளையார் கோவில் வீதியில், வேளாளர் மரபிற்குத் திலகமாய்த் திகழும் *பஞ்சநதம் பிள்ளை என்னும் திருநாமம்பூண்ட ஒருவர் சுந்தரம்மாள் என்னும் தமது கற்புடைய மனைவியாரோடு,

> "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்,
> தெய்வத்துள் வைக்கப்படும்"

என்ற வாங்கு, இல்லறம் நடத்தி வந்தனர். அவ்வம்மையார், முற்பிறப்புக்களிற் செய்த பெரும் புண்ணியப் பேற்ருல் கௌசல்யை இராமனைப் பெற்றது போன்று, ஆறுகள் ஒருகடலில் ஒன்று சேறுமாறு † ஆருவதாக ஒரு

* பஞ்சநாதம் பிள்ளை யெனவும்,

† ஐந்தாவது எனவும், வேறு நூல்களில் இருப்பினும் இவ்வாறே திருத்திக் கொள்க.

ஆண் குழந்தையையும் பெற்றெடுத்தனர். பெற்றபோது, ஏனைய குழந்தைகளை யீன்றதினின்றும் இக்குழந்தை யுதித்தவுடன்,

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோனெனக் கேட்ட தாய்"

என்ற திருவாக்கின்படி, தன்னை யுணராமலே பேருவகை கொண்டனர்.

இது,

"எழுபிறப்புந்தீயவை தீண்டா பழிபிறங்கா
பண்புடை மக்கட்பெறின்"

என்றதை, அவ்வம்மையாரின் உள்ளத்தில் திருவருள் தோற்றுவித்தாற் போலும்?

மற்றும், இராமன், சிவபெருமானை வழிபட்டுப் பெரும்புகழ் பெற்றது போன்று, இக்குழந்தையும் சிவ வழிபாட்டில் நாயன்மார்கள் போன்று வன்றொண்டராய்ப் பெருங்கீர்த்தி வாய்ந்து இனிது வாழ்ந்துவரு மென்பதைத் திருவருள் விளக்கியதால் இக்குழந்தைக்கு 'இராமசாமி' என்னுந் திருப்பெயரைச் சூட்டினர்.

இக்குழந்தை, வித்தை கற்கவேண்டிய பருவத்தில், சிவகுருநாதர் இனிய தண்டமிழ்க் கல்வியைக் கற்பித்ததுடன், மார்க்கண்டன் போன்று மாபெருஞ் சிவ வழிபாட்டையும் நடிக்கும் வகையாற் பிடித்துக்கொள்ளும் பேருதவியையுஞ் செய்தருளினர்.

அக்காலத்தில், அங்குள்ள கருவேலநாதர் சந்நிதியில், மறையோது மொலிகேட்டு இச்சிறியார் விருப்பத்துடன் அங்குச் சென்றால், மறையந்தணர் பொறாமை கொண்டு இவரை வெருட்டுவர், அப்போது, இச்சிறியார், அந்தோ! வேதப்பொருளை யறியுமாறு திருவருளுண்டாங்காலம் எதுவோ? என்று மனம் வருந்துவர். இவ்வெண்ணமே, பின்னர் வேதங்களைத் தமிழில் மொழி பெயர்க்க வித்தாயிருந்தது. இவ்வாறு, இச்சிறியார் பதினாறு பிராயம் வரை தனது பிதா தேடிய ஊதியத்தால் வாழ்ந்துவிட்டு, பின்னர், நாம், தஞ்சன் போரிட்டதும், பஞ்சம் தருவதுமாகிய இவ்வூரைவிட்டு, சென்னன் ஆண்டதும், செல்வம் பூண்டதுமாகிய சென்னைபுரியை யடையில் நலம்பெறலாமெனக் கருதித் தனியராய்ச் சென்னைக்கு வந்து விட்டனர்.

அப்போது, இவர் முற்பிறப்பிற்செய்த புண்ணிய வசத்தால் இவர் பிறந்த ஊரிலுள்ள செல்வப்பிள்ளையாரின் செல்வத் திருவருளும் இவரது உள்ளத்தில் வாசனைவடிவாய் வந்துவிட்டது. ஆனால் அது இவருக்குத் தெரியாது.

சென்னையம்பதிக்கு வந்து,

> " நீரினும் நுண்ணிது நெய்யென்பர் நெய்யினும்
> யாரு மறிவர் புகைநுட்பம்—தேரின்
> நிரப்பிடும்பையாளன் புகுமே புகையும்
> புகற்கரிய பூழை நுழைந்து"

என்றபடி, சில வியாபாரத் துறையிற் புகுந்து, அறநூலினும், பொரு ணூல் வலி தென்பதற்கியை சிறிது பொருளீட்டி வந்தனர்.

பின்னர், செம்மானைக் கைக்கொண்டான் றிருவருளால் அம்மானுக்கு அன்புண்டாக, அவர் திருச்சியிலுள்ள சீரார் காவிரின்பாலுதித்துச் செல்வக்குறியாய்த் திகழ்ந்து வளர்ந்த மீனம்பாளை மணஞ் செய்வித்தனர்.

இவ்வாறு, மீனம்பாளும் இராமசாமி யென்னும் திருவொற்றியூரான் அடிமையாரும், இராமனுஞ் சீதையும்போல், உடல் வேறுயிருப்பினும் உயிர் ஒன்றுகவே யிருந்து கட்கிமைபோல் வாழ்ந்து வந்தனர். இவர்களுக்கு இரண் டொரு மக்களு முதித்தனர்.

இவ் விராமசாமித் தொண்டர், பலவகை வியாபாரஞ் செய்து வரினும், யோகம் பயிலல், நூல்கற்றல், அடியார்க்குணவிடன் முதலிய வழிபாடுகளையுஞ் செய்து கொண்டு வருவதுடன் சிவ வழிபாடு முதலான நல்லறங்களிலேயே விருப்புடையராய் ஒழுகி வந்தனர்.

மற்றும், "ஆற்றுப்பெருக்கால் அடிசுடு மந்நாளும், ஊற்றுப்பெருக்கால் உலகூட்டும்" என்ற வாங்குத் தனது வாழ்நாளில் வீழ்நாள் படாது நல்லதையே செய்து வந்தனர்.

பிறகு, " தொண்டரைத் தாமே தூயகதியினிற் சேர்ப்பன் " என்றபடி திருவொற்றியூர்ப் பெருமானுர், பட்டினத்தடிகள், இராமலிங்க சுவாமிகள் முதலானோர்க்கு அருள் செய்தது போன்று அருள்செய்யத் திருவுள்ளங் கொண்டு, சிவ வழிபாட்டில் ஊக்கமுண்டாகி நாடோறும் திருவொற்றியூரை யடைந்து இறைஞ்சி வருமாறு அநுக்கிரகித்தனர்.

இவ்வாறு, திருவொற்றியூர்ப் பெருமானுரின் திருவருளால், அவ்வுலகை யாளுதற்குரிய அருள் ஏற, ஏற, இவ்வுலகை யாளுதற்குரிய பொருளும் ஏறி ஏறி வந்தது.

எல்லாம் வல்ல இறைவனுர், தமது திருக்கடைக் கண்ணோக்கால் வறி யோனையும் குபேரனுக்குவரென்றால் தமது அடியார்கட்குப் பொருட் செல் வத்தை யளித்தல் அரிதாமோ ?

மற்றும், பொருளேறுவதோடு, இவ் விராமசாமித் தொண்டருக்குத் திருவருளால், அருள், கல்வி, ஞானம், தயை, பொறை, கொடை முதலான பெருங்குணங்க ளெல்லாம் ஞான அரசாட்சிக்கு அங்கங்களாய் இனிது அமைந்தன.

மற்றும் இத்தொண்டர், செல்வமிகுந்து, இடம்பொரு ளேவல் விரிந்து திடம்படு குறுமன்னர்போல் இருந்தும் செருக்கென்பது சிறிதுமிலாது, திரு வொற்றியூரானுக்கு அடிமைபூண்டு, சிவத்தொண்டு செய்தல், சிவனடியார்க்கு அன்பு செய்தல், சுற்றம் பேணல், அறிவுடையார் மாட்டு அன்புபாராட்டல், வறியார்க்கிரங்கல், வள்ளலாய் வழங்கல், கல்விச்சாலை புரிதல், மறைபயில் வித்தல் முதலானவைகளிலேயே தமது பொருளைச் செலவிட்டு வந்தனர். நல் குரவுற்றார்க்குச் செல்வ நலந்தோன்று மென்றதற்கும்,

> "கைப்பொருள் பெற்ற ஞான்றே கடவுளாலயத்துக் கீந்தும்,
> மெய்ப்படு புராண நூல்கள் விருப்பொடு கேட்டுவந்தும்,
> வைப்பென இரப்போர்க்கீந்தும் வருபவருளரேற் கூற்ற,
> மொய்ப்புயந் தண்டந்தப்பி முன்னவ னின்பத் தாழ்வார்"

என்ற திருவாக்கிற்கும் இலக்கியமா யிருந்தனர்.

அஃதன்றியும், உலகில், மாயோனுடைய மனைவியாகிய செல்வத்தை அன்பர்களுக்குள் யாவரேனும் ஒரு அன்பரிடத்து வைக்குமிடத்து, அவ் வன்பர் அறியாமையால், செல்வமாகிய விஷ்ணுவின் மனைவியைத் தனதாகப் பாவித்துத் தடுமாறுவது போலலாது, இச் செல்வமானது விஷ்ணுவின் மனை யாளாதலின் நமது என்பதே கூடாதென வுணர்ந்து விஷ்ணுவின் வடிவரான அடியார்களுக்கும், அரன்பணிக்கும் ஆக்கிவந்தனர்.

இவ்வாறு, திருவொற்றியூரையடைந்து நாடோறும் வழிபட்டு வருங் கால், ஒருநாள் அங்குள்ள பிரமதீர்த்தமாடி யெழுந்தபோது ஒரு சிவனடியார் வந்து, "ஐய! தாம், திருவொற்றியூரானிடத்தில் பேரன்புடையாராதலின் இவ்வாலயத்தைப் புதுப்பிக்கில் நலம்" என்றனர். அதைக்கேட்டு, இது திரு வொற்றியூரான் கட்டளையே யென்று அதைச் சிரமேற்கொண்டு திருவொற்றி யூரான் ஆலயத்தைப் புதுப்பிக்கத் தொடங்கி, முறையாய், பூசை, திருவிழா, திருவிளக்கு முதலானவைகள் நடந்து வருமாறுஞ் செய்தனர்.

அதன் பின்னர்,

"ஈது சிவலோக மென்றென்றே மெய்த்தவத்தோர், ஓதுந் திருவொற்றி யூர்" என்ற வாங்கு, இது சிவலோகமென்ற துணிவோடு இடைவிடாமல் பன் னிரண்டு வருடம் ஒரு நியமமாய் நாடோறும் திருவொற்றியூரானைப் போற்றி

வழிபட்டு வரல் வேண்டுமென்று மனத்துட்கொண்டு அவ்வாறே ஒழுகிவந்தனர். இதுபோன்ற, திருமகளும் விடாமல் நாடோறும் நினது வீட்டிற்கு நான் வருகின்றேன் என்று வந்துகொண்டே யிருந்தனள்.

இவ்வாறு, திருப்பணி நடந்தேறி வருவதோடு இவரது நியமமும் தவறாது நடந்து வந்தது.

இப்படி நடக்கும் நாளில், இவ்விராமசாமித் தொண்டரது பத்தியை கண்ணப்பர் பத்திபோன்று மிக உறுதிப்படுத்தியருளத் திருவுளங்கொண்டு, இவரது மக்களை இழக்குமாறு செய்ததுடன், இவர் நியமப்படி காலையில் திருவொற்றியூருக்குப் போகுந்தருணத்தில் ஒரு புத்திரனது உயிர் துறந்து போமாறு செய்தருளினர். அதுகண்ட இத் தொண்டாளர் அப்பூதியடிகள் போன்று புத்திரன் இறந்து கிடப்பதைப் பொருட்படுத்தாது நியமப்படி திருவொற்றியூருக்குச் சென்று எந்தையாரைப் பணிந்து போற்றி நியமத்தை முடித்துக் கொண்டு வந்து மகற்கு வேண்டிய இறுதிக்கடனைச் செய்தனர். அம்ம ! அம்ம ! இவரது மனவுறுதி எடுத்துரைக்கற்பாற்றோ ?

“இறக்கினும் இன்றே இறக்குக என்று மிருப்பினு மிருக்குக வேந்தன்
ஒறுக்கினும் ஒறுக்க வுவகைபு முடனே யூட்டினு மூட்டுக வானிற்
சிறக்கினும் சிறக்க கொடியதீநரகிற் சேர்க்கினுஞ் சேர்க்குக சிவத்தை
மறக்கிலம்.............. ”

என்று, திருவாதவூரடிகள் திருவாய்மலர்ந்தருளியது இவர்பால் கண்கூடாமன்றோ ?

இது தவிர்த்தும், மற்றொருநாள், இவரது செல்வப்பெருக்கானது திருவொற்றியூரான் திருவருளால் வந்ததென் றுணராதார் சிலர், இவர்பால் பொறாமையுற்று, பெருவிரோதமுற்றி இவரை எவ்வாற்றானுங் கொலை பண்ணலே நலமென உறுதிப்படுத்திச் சமயம் நோக்கிக் கொண்டிருந்தனர்.

அதற்கியையவும், திருவொற்றியூரான் திருவருள் விளக்கமுறவும், இத்தொண்டரிடத்துள்ள பேரருளை உலகிற்கு அறிவுறுத்தவும், திருவருட் சம்மதப்படி, மாலையில் சில நண்பர்களுடன் சகடவாயிலாய் கடற்கரைச்சென்று, அங்கு, கடலின் அருகிலுள்ள மணற்பூமியில் உட்கார்ந்து கொண்டு, கடலை நோக்கி, கடலானது, தன்பால் பல நதிகள் வந்து சேரினும் அவற்றைத் தன்மயமாக்கிக் கொண்டு, பெருகாது குறையாது கலங்காது தெளியாது ஒரு தன்மைத்தாகவே இருப்பது போன்று, பரசிவனும், பன்னெறிகளும் முடிவில் தன்மாட்டுவந்து முடிவுறினும், தனதுண்மையை யுணராது வேறுபாடுகளாகக் கொள்ளினும், மறுக்கினும், மற்றும் பலவாறாக மாறுபாடாக்கினும், ஒரு தன்மைத்தாகவே எல்லா வுயிர்கட்கும் அருள் செய்கின்றனன்,

அங்ஙனமே இக்கடலில், அலை, நுரை, குமிழி முதலாயின உதித்தொடுங்குமாறு, பரசிவனிடத்தில் பிரமன் விஷ்ணு முதலான எல்லா வுயிர்களும் தோன்றி நின்று ஒடுங்குகின்றன என்றும், மற்றும், பலவாறாகவுஞ் சிந்தித்துக் கொண்டிருக்குந் தருணத்தில், ஒருபகைவன் பின்புறமாகவே வந்து, வாக்குக்கரசரை வதைக்க வெண்ணிய சமணரைப்போன்று, வாள் கொண்டு இவர் கழுத்தைக் குறியாக்கி வெட்டினன்; திருவருளானது அவ்வெட்டுக் கழுத்திற் படாமலே தவறி விட்டது. மீண்டும் இரண்டொருமுறையும் வெட்டினன் அவ்வெட்டுகள் திருவருளால் இராமசாமித் தொண்டர்மீது படாமலே சிலவிடத்தில் மிக எளிதாய்ப்பட்டன. அதற்குள் திருவருள் வலியால் அவனுடைய கண்கள் மூடுமாறு செய்ய அவனும் மண்மீதுவிழ அப்பகைவனுடைய கையிலிருந்த வாளும் இம்மெய்த்தொண்டர் கைக்கு வந்துவிட்டது. அதற்குள் இவருடைய நண்பரும் வந்து சூழ்ந்தனர். அந்தோ! பகைவனுடைய தீச்செயல்கள் மெய்த்தொண்டன்பாற் செல்லுமோ? தருமந் தலைகாக்குமென்றதும் பழுதாமோ? அம்ம! அம்ம! திருவருட்பெருமை இருந்தவாறென்னே! கற்றுணைப் பூட்டிக் கடலிற் பாய்ச்சினதையும், சுண்ணும்புச் சூளையில் வைத்து எரித்த தன்மை முதலானவற்றையும் எளிதினீக்கியருளிய பேரருட் பெருமைக்கு இதுவும் ஒரு அரியதாமோ? 'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்' என்பது உண்மை யன்றோ? இதுவும் தடிந்தாட் கொள்ளுந் தனிப்பெருங் கருணை போலும்?

இவ்வண்ணம் வெட்டுண்டபோதும் ஆங்கிலமுறை வைத்தியர் பலர் தடுத்தும் கேளாமல் அன்றே திருவொற்றியூரையடைந்து பரசிவனைச் சேவித்து வந்தார். இத்தகைய மெய்த்தொண்டரை நாயன்மார்களுள் ஒருவராக எண்ணில் இழுக்கென்னை?

இவ்வாறு சிறிதுநாட் சென்றபின்னர், வெட்டத்துணிந்த வீரப்பகைவனும், ஓட்ட முயன்ற தீரப்பகைவனும், மற்றுமுள்ள எல்லாப் பகைவர்களும் திருவருளால் இவ்விராமசாமித் தொண்டரையே சரணடைந்தனர். அருள் வலியானது மருள்வலியிற் பெரிதன்றோ?

இங்ஙனம் பன்னிரண்டு வருடங்களாக தாம் எடுத்துக்கொண்ட நியதம் முடிந்ததுடன் திருப்பணியும் உற்சாகத்தோடும் அன்போடும் நிறைவேறியது. திருவொற்றியூரான் திருவருளால் இத் தொண்டருக்கு, செல்வந் தழைத்து, தயை மிகுந்து, அருள்சுரந்து, கொடை உயர்ந்து, இவரது வாழ்நாளும் தவநாளாகக் கழிந்து வந்தன.

இவருக்குள்ள மக்கள்கள் இறந்த பின்னர், இறந்த மக்களின் அறிவின் வலிமைகளனைத்தும் ஒரு உருவாய்வந்து அமையப்பெற்ற ஒரு ஆண்மகவைப் பெற்றெடுத்தனர்.

அக்குழந்தை, மாதா பிதாக்களுக்குக் கண்போன்றிருத்தலானும், கண்ணன் போன்று சிவபக்தியில் மிகச்சிறப்புறு மென்னுங் குறிப்பானும், நந்த கோபனுக்கும் யசோதைக்கும் பிறந்த கண்ணபிரான் போன்றிருந்ததாலும் கண்ணன் என்னும் காரணத் திருநாமஞ் சூட்டினர்.

அக்கண்ணனுக்குக் கல்வி கற்பிக்க வேண்டிய காலத்தில் கல்வி கற்பித்து வைத்தனர். அக்குழந்தையும் திருவொற்றியூரான் திருவருளால் இளமதி போன்று நாளுக்குநாள் வளர்வதுடன் அறிவு விளக்கத்தையும் பெற்று விளங்குகின்றது.

இவ்வாறு, இவ்விராமசாமித்தொண்டர், தமக்குத் திருவொற்றியூரான் றிருவருளால் செல்வந் தழைக்கத் தழைக்க, அவரது திருப்பணியையுங் கருங் கல்லால் இழைத்து இழைத்து, கருப்பக்கிரகம், அர்த்தமண்டபம், மகாமண்டபம், உட்பிரகாரம் முதலான திருப்பணிகளை, தேவரும் விரும்புமாறு செய்து முடித்தனர். இத் திருப்பணியின் பெருமை சொல்வதற்கு மெளிதோ?

என்னை? விநாயகர், சுப்பிரமண்யர், சனகாதிகள், நால்வர் முதலான அறுபத்து மூன்று நாயன்மார்கள், பட்டினத்தடிகள், பத்திரகிரியார், இராமலிங்கசுவாமிகள், தும்புரு, கின்னரர், நாரதர், பதஞ்சலி, வியாக்கிரபாதர், விஷ்ணு, பிரம்மா, நந்தி, பிருங்கிகளும், ஏனைய தேவர்களும் மெய்யுணர் வடைந்து பொய்ப்பிறப்பை யொழித்திருந்த இன்ப நிலையை விடுத்து;

" இரவில் எப்பதமும்பெற வேண்டிலேன் என்னும்
பிறவிவேண்டுவன் நின்றிருப்பணி செயப்பெறினே "

என்று கூறிய வாங்கும்,

' வானிடத்தவரும் மண்ணில் வந்தரன்றனை யருச்சிப்பர் '

என்றபடியும் இவ்வாலயத்தின் தம்பங்களில் நின்று கொண்டு திருவொற்றியூரானை வழிபடுகின்றார்களாதலின் என்க.

இராமன் சிவத்தொண்டர்களுள் முதற்றொண்டனானது போன்று இராமன் திருப்பணியும் எல்லாத் திருப்பணிகட்கும் முதலானதாய்த் திகழா நின்றது என்பதை இதனாற் காண்க.

இவ்வண்ணம், திருவொற்றியூரான் அடிமையின் திருப்பணித் திறமையை நோக்கி, திருவொற்றியூருடைய சிவபெருமானார், தமது ஆணையை முன்னிட்டு மணமுடித்துக்கொண்ட சுந்தரர் கண் பழுதுற்றமைகண்டு ஊன்று கோல் கொடுத்தருளினர். அத்தலம் திருவெண்பாக்கம் எனப்படும்; அத்தலத்தையும் இப்பணியாளரைக் கொண்டே திருப்பணி செய்து கொள்ளத் திருவுள்ளத் தெண்ணி செய்வித்துக் கொண்டருளினர்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த திருவொற்றியூரான் ஆலயத்திற்கு, தாதுஸு வைகாசிமீ 18வ அதாவது ஆங்கிலம், கி. பி. ஆயிரத்து தொளாயிரத்து முப்பத்தாறும் வருடம் மே மாதம் முப்பத்தோராம் தெய்தியில், எண்ணில் பொருள் செலவிட்டு கண்ணிற்கானந்த காட்சியாக மண்ணிலுள்ளார் வந்து சூழ, விண்ணிலுள்ளாரும் விரும்புமாறு கும்பாபிடேகஞ் செய்து முடித்தனர்.

இவர் தமது பெயரால் ஒரு சிவலிங்கப் பிரதிட்டையுஞ் செய்து வைத்துள்ளார்.

மற்றும், இக் கும்பாபிடேக மகோற்சவத்தில் தமிழ் மக்கள் உய்யும் பொருட்டு, சாமவேதத்தை தமிழில் மொழி பெயர்ப்பித்து, அச்சிட்டு நன்கொடையாகவும் அளித்தனர்.

இப்போது, எல்லா வேதங்கட்கும் தலைமையாகிய இந்த கிருஷ்ண எசுர் வேதத்தையும் மொழி பெயர்ப்பித்து, ஆயிரக்கணக்கான பணச் செலவு செய்து அச்சிட்டு தமிழ் மக்களின் நலத்தின் பொருட்டு நன்கொடையாக உதவி புரிந்தனர் ; இந்நன்றியை நமது தமிழ் நாடு என்றும் பாராட்டுவதாகுக. மேலும் வேதங்கள் முழுதும் வெளிவரும்படி திருவொற்றியூரான் திருவருள் புரிவானாக.

இவ் வேதத்தைப் பதிப்பித்து வெளியிட்டுதவிய
த. ப. இராமசாமிப் பிள்ளை யவர்களின் சரித்திரச்சுருக்கம்
முற்றிற்று.



ஓம்

சுப்ரமண்யோம்

# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை.

# உபோற்காதம்

### வேதத் தோற்றவியல்.

ஆதி நூலாகிய வேதம், எல்லாவுயிர்களிடத்தும் பேரருளுடைய பரசிவனால் அருளிச் செய்யப் பெற்றதாம். இது உருவத் திருமேனிகளையுடையதென்பது, திருமறைக்காட்டின் திருவருள் விளையாட்டால் இனிது துணியப் பெறும்.

அற்றாகலினன்றே,

"சாற்றின்முன் மறைகள் அங்கந் தன்னுடன் வடிவுகொண்டு"

என்று, வேதாரணிய புராணம் வேதநதிச் சருக்கங் கூறுகின்றது.

இனி,

तस्माद्यज्ञात्सर्वहुत ऋचः सामानि जज्ञिरे ।
छन्दांसि जज्ञिरे तस्माद्यजुस्तस्मा दजायत ॥

அதாவது, "எல்லா வுயிர்களும் இறைஞ்சி வேண்டுகின்ற இறைவனிடத்திலிருந்து, இருக்கு, எசுர், சாமம் என்னும் மறைகள் உண்டாயின." எனவும்

यस्य निश्वसितं वेदाः ।

அதாவது, 'எவருடைய மூச்சுக் காற்று வேதமோ' எனவும்,

तस्यैतस्य महतो भूतस्य निश्वसितं एतत् ऋग्वेदो यजुर्वेदोऽथर्ववेद ।

அதாவது, இம்மகா தேவனிடத்திலிருந்து, இருக்குவேதம், எசுர்வேதம், சாமவேதம், அதர்வணவேதம் உண்டாயின. எனவும்,

மற்றும் இங்ஙனமே பல்வேறு வகைகளாகவும், வேதம், உபநிடத முதலிய எல்லா நூல்களும் கூறுகின்றன.

இவ்வாறே, 'வேதநான்குடன் பதினெட்டொடாறும் விரித்தார்க்கிடம்' திருக்கேதாரம் என்று தேவாரமுங் கூறுகின்றது.

அற்றேலஃதாகுக. அக்கினி, வாயு, ஆதித்தன் முதலானோர்களும் வேதத்தை யுண்டாக்கி யிருக்கின்றார்களன்றோ,

அற்றாகலினன்றே,

**ऋग्वेद एवाग्ने रजायत यजुर्वेदो वायोः सामवेद आदित्यात् ।**

அதாவது, அக்கினியில் ரிக்வேதமும், வாயுவில் எசுர்வேதமும், சூரியனில் சாமவேதமும் உண்டாயின என்று, ஐதரேய பிராமணம், 5-32-வது கண்டத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

இவ்வாற்றால், பரசிவனிடத்திலிருந்தே வேதம் தோற்றிய தென்பது மாறுமெனின்? அற்றன்று, பரசிவனே, அக்கினி, வாயு ஆதித்தன் வடிவுகளாயிருக்கின்றானதலின், பரசிவனே, அக்கினி முதலிய தேவர்களை ஏவி, வேதங்களையருளிச் செய்வித்தனன் ஆதலின் இழுக்கொன்று மின்றென்க.

இதுபற்றியே,

**एकं सद्विप्रा बहुधा वदन्ति अग्निं यमं मातरिश्वानम् ।**

அதாவது, "பரசிவன் ஒருவனே யெனினும், அவனை, அக்கினி யென்றும், எமனென்றும், வாயு வென்றும் பல்வகையாகப் பெரியார் கூறுகின்றனர்." என்று சுருதியுங் கூறுகின்றது.

ஈண்டு, பரசிவனாலருளிச் செய்யப் பெற்றமையின், வேதம் ஒருவனாற் செய்யப்படாத தென்பதும், படைப்பின் முதலில் உண்டாகி இறுதியில் ஒடுங்குதலின் நித்தம் என்பதும் உபசாரமாம். பரம்பொருள் போல், வேதமும் நிலைபேறுடையதாமெனின்? பரம் பொருளொன்றே நித்தியமாம், ஏனையவனைத்தும் அநித்தியமாம், என்னுஞ் சுருதி வாக்கியத்துடன் முரண்படுமா றறிக. ஈண்டு, இருடிகளோ, மந்திரத்தைக் கண்டவர்கள், அதாவது, உலகொடுங்கித் தோற்றும்போது முதலில் வேதமந்திரங்களைத் தமது முற்றுணர்வாற் கண்டு உலகிற்குப் போதித்தவர்கள் என்பதாம். இதுபற்றியே,

**युगान्तेऽन्तर्हितान्वेदान्सेतिहासान्महर्षयः ।**
**लेभिरे तपसा पूर्वं अनुज्ञाता स्वयं भुवा ॥**

என்று, மிருதியுங் கூறுகின்றது.

---

## வேதத்தின் இலக்கணவியல்.

ஈண்டு, ஒரு பொருள் நமக்குப் பெறவேண்டுமானால் "இயல்பளவைகளாற் பொருட் பேறும்" என்னும் நியாயத்தால் முதலாவது, இலக்கணமும், பிரமாணமுங் கூறல் வேண்டுவது மரபாமாதலின் முதலில் வேதத்திற்கு இலக்கணங் கூறப்படுகின்ற தென்க.

இனி, காட்சி, கருதல், உவமை, ஆகமம் என்னும் நான்கு அளவைகளுள் ஈற்றிலுள்ளதே இலக்கணமெனின்? மநுமிருதி முதலியவைகளில் அதிவியாத்திக் குற்றந் தங்கலின் அஃதன்றுமென்க.

அற்றேல், ஒருவனாற் செய்யப்படாதது என விசேடங் கூறினும், வேதம் பரமேசுரனாற் செய்யப்பட்டதால் ஒருவனாற் செய்யப்பட்டது என்பதும் வரும். அற்றேல், உடம்பெடுத்த ஒருவனாற் செய்யப்படாமையின் எனச் சிறப்பிக்கினும், 'ஆயிரந்தலைகளுடையான்' என்னுஞ் சுருதி வாக்கியத்தால் பரசிவனுக்கும் உடம்பிருத்தல் பெறப்படுதலின், முன்போலவே குற்றமாம்.

அற்றேல், ஒருவனாற் செய்யப்படாதது என்பதற்கு, கருமத்தின் பயனாகிய உடம்பெடுத்த சீவனாற் செயப்படாதது என்பதே கருத்தாமெனின்? அதுவும் அமையாது, என்னை? சீவ வர்க்கங்களுட் சிறந்த, அக்கினி, வாயு முதலானோர்களால் வேதஞ் செய்யப்பட்டிருத்தலின் என்க. ஒலித்திரள் எனின்? பிறவற்றிலுஞ் செல்லும். ஆதலின்,

"வேண்டியவற்றை யடைவதற்கும் வேண்டாதவற்றை விலக்குவதற்கும், உலக வழக்கிலில்லாத உபாயத்தை யுணர்த்துவது" என்பது வேதத்திற்குச் சிறந்த இலக்கணம் எனக் கொள்ளற்பாலதாம். இதில், உலக வழக்கில் இல்லாத என்பதால், பிரத்தியட்சமும் அநுமானமும் நீக்கப்பட்டன என்பதை யுணர்க. ஈண்டநுபவிக்கப்படும், மாலை, மாது, சந்தன முதலியதோ' வேண்டியதை யடைவதில் காரணமென்பதும், மருந்துண்ணல் முதலியது வேண்டாததை யடைவதில் காரணமா மென்பதுங் கண்கூடாகும்.

அற்றேல், தன்னால் அநுபவிக்கப்படுவது, மற்றொருவனிடத்தும் அநுமானித்தறிவது போன்றே, மேல்வரும் பிறப்பின் கண்ணும், அநுபவிக்கப்படும் இன்ப துன்பங்களும் அநுமானத்தானே பெறப்படுவனவாம்; இதையுணர்த்துதற்கு வேதம் வேண்டாமெனின், நன்று கூறினாய், மேல் வரும் பிறப்பில் பொதுவாக இன்ப துன்பங்களுண்டென்று மாத்திரம் உணர முடியுமேயன்றி, சிறப்பு வகையாக உணர்தல் கூடாதாம். சோதிட்டோம முதலிய வேள்விகள் வேண்டியவற்றை யடைவதற்குக் காரணம் என்றும், கலஞ்சமருந்தாமை முதலிய வேண்டாததை விலக்குதற்குக் காரணம் என்றும் அறிதல் வேதத்தைத் தவிர்த்து நூற்றுக்கணக்கான அநுமானங்களாலும் கூடுமா? கூடாது. ஆதலின், உலக வழக்கிலில்லாத வுபாயத்தை யுணர்த்துவது வேதம் என்பது பெற்றாம். இதனால், வித, என்னும் வடமொழிப் பகுதியிலிருந்து வந்த வேதம் என்னுஞ் சொல்லின் பொருளும் இனிது பொருந்துமாறு உணரற்பாலது.

இதுபற்றியன்றே,

प्रत्यक्षेणानुमित्यावा यस्तूपायो न बुध्यते ।
एनं विदन्ति वेदेन तस्मात् वेदस्य वेदता ॥

அதாவது, காட்சி அநுமிதிகளால் அறியமுடியாத ஒருவுபாயம், வேதத்தால் அறியப்பட்டது, இதனல் அறிவிப்பது வேதமாம்; என்று உண்மை வாக்கியமும் வேதத்தின் உட்பொருளியல்பைக் கூறுகின்றது.

ஈண்டு, அத்தகைய உபாயமே இவ் வேதத்தின் விடயமாம். அவ்வுபாய உணர்ச்சியே பயனும். அவ்வுணர்ச்சியை விழைகின்றவன் அதிகாரி யாவன். அதனுடன், உதவி செய்வது, உதவி செய்யப்படுவது சம்பந்தமாம் என்பதை யுணர்ந்து கொள்க.

ஈண்டு, மந்திரப்பிராமணங்கள் என்பது இத்தகைய வேதமாம். ஆதலின், இதுவே இலக்கண மெனினும் அமையும்.

அற்றாகலினன்றே,

**मन्त्रब्राह्मणयोर्वेद नामधेयम् ।**

என்றார் ஆபஸ்தம்பரும்.

---

## வேதப் பிரமாண வியல்.

வேதம் ஒருவராற் செய்யப்படாமல் நிலைபேறுடைமையானும், ஆன்றோரால் தழுவப்படுதலானும் குற்றமின்றிய பிரமாணமாம் என்பது துணியப்படும்.

இனி, வேதம் நித்தியமாதலின் பிரமாணமா மெனக் கொள்ளின், இனிது அமையாது. ஏனெனின்? இரண்டு நித்தப்பொருள்கள் உண்டென்பதில் யாண்டும் பிரமாணமில்லாததானும், வேதத்திற்குத்தோற்ற வொடுக்கங்கள் காணக்கிடத்தலின் அநித்தமா மென்பதே துணியப்படுதலானும் என்க.

ஒலி நித்தம் என்னும் வழக்கோ, 'அந்தக் ககாரமே இது, என்றெழும் மறித்துணர்ச்சியைக் கொண்டு உபசாரமாம். இந்நிகழ்ச்சியும், அந்த ஆற்று நீரே இது என்பதுபோல, சாதி யொருமைப்பற்றித் தோற்றுவதாம்.

அற்றேலஃதாகுக, எல்லா வுயிர்களிடத்தும் பேரருளுடைய பரசிவனல் அருளிச்செய்யப் பெற்றமையால் பிரமாண மெனக் கொள்ளின், வேதம் பிரமாண்யமாயின் பரசிவனுண்மையும், பரசிவனற் செய்யப்பட்டமையின் வேதம் பிராமாண்யமும் எனப்பட்டு ஒன்றனையொன்று பற்றுதல் என்னும் குற்றமாகாதோ எனின்? ஆகா. என்னை? ஒருவன் இன்னேன் வந்தேன் என்னுமிடத்து, அவனும் அவன் வாய்மொழியும்போல, வேதமும் பரசிவனும் தம்முள் காரக ஏதுவும் ஞாபக ஏதுவுமாகிய வேறுபாடுடைமையின் இவ்வண்ணமானவைகள் ஒன்றனையொன்று பற்றுதல் என்னுங் குற்றங்கள் ஆகமாட்டா.

அன்றியும், ஆன்றோர்களால் தழுவப்பெற்றமையின் வேதம் பிராமாண்ய மெனத் துணிவுபெற்ற பின்னர், அவற்றானே, அது பரசிவனற் செய்யப்பட்

டது என்பது துணியப்படுதலின் ஒன்றனை யொன்று பற்றுதல் என்னுங் குற்றத்திற்கே இடமின்மையையுங் காண்க.

அற்றேல் எவ்வாற்றால், ஆன்றோர்களால் தழுவுப்படுத லெனின், "துறக்கம் வேண்டியோன் சோதிட்டோமத்தால் வேட்க" என்பது முதலிய சுருதிகளைக் கொண்டு உலகநடையும் பழிப்புமல்லாத ஆன்றோர்கள் வேள்வி முதலியவைகளை ஆசரித்து வருதலின் என்னும் நெறிபற்றியாம் என்க.

ஈண்டு, பிற பிரமாணங்களை வேண்டாது வேதம் தன்னாற்றானே பிரமாண்யமாம் என்பது திரண்டபொருள். இதனால் அறியப்படாததை யறிவிப்பது பிரமாணத்தின் பொது வியல்பென்பதும் பெறப்பட்டமை காண்க.

அற்றாகலினன்றே, பூர்வ மீமாஞ்சை மதத்தரும் அறுவகைப் பிரமாணங்களுள், முதலாவதாகிய 'சுருதி' என்னும் பிரமாணத்திற்கு, பிறவற்றைத் தழுவாத ஒலியே. இயல்பாய்க் கொண்டுள்ளார் என்பதையு முணர்க.

---

## ஸ்வர [மாத்திரை] யியல்.

இவ் வேதத்தின் மந்திரங்களின் எழுத்துக்களின் கீழும் மேலும் காட்டப்பட்டிருக்குங் குறிகளுள், கீழேயுள்ளது அநுதாத்தக் குறியாம், மேலேயுள்ளது சுவரிதம், இவற்றில் அநுதாத்தக் குறியிட்ட எழுத்துக்களுக்கு முன்னர் வரும் குறியிடாத எழுத்து உதாத்தமாகும். சுவரிதக் குறியிட்ட எழுத்திற்கு முன்னர் உள்ள எழுத்துக்கள் பிரசயமாம். உதாத்தம் பதத்தில் மாறாது, மற்றவைகள் பெரும்பான்மை மாறிவிடும்.

इ॒ षे त्वो॒ र्जे त्वा॑ वा॒ य वं॑ स्थ ।

அநு - உதா - அநு - உதா - சுரிதம் - அநு - உதா - சுரிதம் - பிரசயம்

இவ்வாறே மற்றவைகளையுங் காண்க.

---

## வேதத்தின் சந்த வியல்.

வேதங்களின் மந்திரங்களைப் பல்வகைச் சந்தங்களுடன் ஓதுமாறு சந்தசு என்னும் நூல் வழிகாட்டுகின்றது. இந்நூல், பிங்களர் என்பவரால் இயற்றப்பட்டது.

ஈண்டு, இருபத்துநான்கு உயிரெழுத்துக்களைக் கொண்டு, இரண்டு அல்லது மூன்றடிகளால் யாத்தது 'காயத்திரி' சந்தம் எனப்படும். இதுவே வேதங்களில் பெரும்பான்மை காணப்படுகின்றது.

எட்டு-எட்டு, பன்னிரண்டு-எட்டு, $8+8+12+8$. என்று நான்கு பதங்களாக யாப்பது பிருகதியாம்.

முப்பத்திரண்டு (32) எழுத்துக்களால் நான்கு தொடைகளில் இரண்டு அடிகளால் யாப்பது அநுஷ்டுப் என்னுஞ் சந்தமாம்.

அநுஷ்டுப், என்பதுடன் இன்னும் ஒரு அடிசேர்ந்தது பங்க்தியாம்.

(48) நாற்பத்தெட்டு எழுத்துக்களை நான்கு அடிகளாய் யாப்பது சகதியாம். இதில் ஒரு அடிகளுக்கு இரண்டு தளைகளுள.

நாற்பத்துநான்கு எழுத்துக்களால் நான்கு அடிகளாய் யாப்பது திருஷ்டுப் என்னுஞ் சந்தமாம்.

மற்றும், ஒவ்வொரு எழுத்துக்களின் இடம், முயற்சி, பிறப்பு, கால முதலானவை நோக்குமிடத்து ஒவ்வொரு எழுத்துக்களும் சொற்களும் பல் வகை மாத்திரைகள் முதலியவைகளை யுடையதாம். அவற்றிற்கு எடுத்துக் காட்டாக ஒரு மந்திரத்தில் பொருத்திக் காட்டுவாம் :—

वसिष्ठस्समानानां भवति ।

(வஸிஷ்டஸ்ஸமாநாநாம் பவதி)

ஈண்டு,

ध्वनिः स्थानं च करणं प्रयत्नः कालता स्वरः ।
देवता जाति रेतैश्च वर्णा ज्ञेया विचक्षैः ॥

அதாவது, ஒவ்வொரு எழுத்தும் ஓசை, இடம், கருவி, முயற்சி, காலம், மாத்திரை தேவதை, சாதி என்பவைகளுடன் கூடியது என்று நுண்ணறி வாளர்கள் உணர்வார்களாக.

மேலேகாட்டிய, இந்த அடியில், முதலில், வ், அ, ஸ், இ, ழ், இரட்டிக் கும் டகாரத்தைக்காட்டும் குறி, ட், அ, வைகிருதமென்னும் ஸ், பிராகிருத மென்னும், ஸ்-அ, ம்-ஆ, ந்-ஆ, ந்-ஆ, ம்-அ, வ்-அ, த்-இ, என்னும் இவ்வகைகளை யுடைய எழுத்துக்கள் இருக்கின்றன. இது சுத்த எழுத்து முறையாம்.

எழுத்துக்களின் சாரமுறை.

முதல், வ், என்பது, சம்விருத கண்டத்திலெழுதல் நாத ஓசை உத்தரதந்த அந்தஸ்தான ஆதார ஓஷ்டகரண அப்யந்தர மென்னும், ஈஷ்ஸப்ருஷ்ட முயற்சி, வெளிமுயற்சியாகிய, நாத, கோஷ, அல்ப்ப பிராணம், அரைமாத்திரை காலம், சந்திரன் தேவதை, வைசியசாதி, பராங்க பூத அந்தஸ்தா என்பவைகளை யுடையதாம்.

இவ்வாறே ஏனைய எழுத்துக்களையும் யூகித்துணர்க.

---

## எசுர் வேதச் சிறப்பியல்.

ஆதிவேதம் ஒன்றுமாயினும், அது மனவாக்கிற் கெட்டாத மாண்புடைய தாயிருத்தலின், பாடல், போற்றல், செயல் என்னும் சிற்சில வேறுபாட்டைக் கொண்டு, மூன்றாய் வகுக்கப்பட்டிருக்கின்றது. அவற்றுள், இந்திரன் முத லான தேவர்களைத் துதிக்கும் வடமொழிச்சந்த விருத்தங்கள் அனைத்தையும் ஒன்றாய்த் தொகுத்தது இருக்குவேத மெனப்படும். இந்தச் சந்த விருத்தத் தையே பல்வகைச் சங்கீதத்துடன் பாடும் பகுதிகள் ஒன்று சேர்ந்தது சாம வேத மெனப்படும்.

இனி, கீத நடையின்றி நியதமாகிய எழுத்துக்களா லாக்கப்படாதபடி பாதங் (அடி) களையுடைய வேதப்பகுதிகள் ஒன்று சேர்ந்து எசுர் வேதமென வழங்கப்பெறும். 'யஜ' என்னும் வடமொழிப்பகுதிக்கு, தேவாராதனை யென் பது இங்கு உரியதாகிய பொருள். இவ்வாற்றால், தேவாராதனை செய்யப் படுதலின் இது எசுர்வேதம் என்னுங் காரணப் பெயர் பெற்றது. இதுவே அத்வர்யு வேதமெனப்படுவதுமாம்.

இனி, ஈண்டுப் பாடம் ஓதும் முறைமையானும், எசுர் வேதத்தாற் செய்யப் படும் வேள்வியை உறுதிப்படுத்தலானும் இருக்குவேதமே யாண்டும் முதலா வதாம் என்பது தெற்றென விளங்குகின்றது.

மற்றும், எசுர் வேதத்திலும், சில இருக்குக்கள் படிக்கப்பட் டிருத்தலா னும் சாமவேதம் பெரும்பான்மை இருக்கு மந்திரங்களாகவே இருப்பதாலும் இருக்குவேதமே வேதங்களுட் சிறந்ததென்பது எல்லா நூல்களிலுங் கூறி யிருக்க, ஈண்டு, எசுர்வேதமே வேதங்களுட் சிறந்ததென்பது என்னை? நன்று வினவினாய் அதைக் கூறுதுங் கேட்பாயாக.

இருக்குவேதமானதே, ஓதல், பாராயணம், பிரமவேள்வி, செபம் முத லியவைகளில் முதலாவதாக எடுத்துக் கொள்ளப்படுவதாகும். ஆனால்,

ஈண்டு, வேதத்தை ஓதல் மாத்திரத்தால் புண்ணியமேயலாது உண்மைப் பயன் இல்லை, மற்றோ, வேதப்பொருளை யுணர்ந்து ஆசரித்தால் உண்மைப் பயனுமென்க. இதன் விரிவை, 'तदधीते तद्वेद' என்னும் பாணினி சூத்திரம் பாடிய முதலியவற்றிற் காண்க. 'अनधीयाना व्राया' என்றபடி, வேதமோதி அதன் பொருளறியாதவனுக்கு ஒரு பயனும் இல்லை யென்பது பாடியம்.

வேதத்தின் பொருளை நோக்குமிடத்து, வேதத்தின்பொருளாகிய யாக்த் தைச் செய்விக்கும் எசுர் வேதமே தலை சிறந்ததாம். இவ்வாற்றால் எசுர் வேதமே சிறப்புடையதாம். ஆதலின் இதுவே அங்கியெனப்படும். ஏனைய வேதங்களோ, இதனுடைய அங்கங்கள்.

அற்றாகலினன்றே,

ऋचां त्वः पोषमास्ते पुपुष्वान् गायत्रं त्वोगायति शक्करीषु ।
ब्रह्मा त्वो वदति जातविद्यां यज्ञस्य मात्रां विमिमीत उत्व ॥

என்று, இருக்கு, சங்கிதை. 8-8-24-வது மந்திரங் கூறுகின்றது:

அதாவது, வேள்வி செய்யும்போது, ஹோதா என்னும் இருக்கோதுவான், தனது வேதத்திலுள்ள இருக்கு மந்திரங்களைத் தொகுத்து, இது சஸ்த்ரம் எனத் துணிவுபடுத்துகின்றான். இதனால் 'ரிக்' என்னும் வடமொழிப் பகுதியின் பொருள் புகழ்தலாம். ஆகவே, சில தேவர்களையும், சில கிரியைகளையும் புகழ்கின்றான் என்பது பெறப்படுகின்றது. யாகத்தையும் யாகதேவதைகளையும் புகழ்வது 'இருக்குவேதம்' என்னுங் காரணப் பெயருடையது என்பது திரண்ட பொருள்.

அங்ஙனமே, உத்காதா என்னும் சாமவேதப் பாடகன், வேள்விசெய்யும்போது, காயத்திரி என்னும் வடமொழிச்சந்தமுடைய துதியை, சாக்வரி என்னும் இருக்குமந்திரத்தில் சேர்த்து இசையோடு பாடுகின்றான்.

அவ்வாறே, பிரமன் என்னும் வேள்வியாளன், அக்கினி வளர்த்தல் முதலிய கிரியை நடந்து கொண்டிருக்குந் தருணத்தில் அங்கங்கு, அநுக்ஞையைச் சொல்கின்றான். அதாவது, பிரமனே தண்ணீரை நிறைக்கின்றேன் என்று கூப்பிட்டுக் கேட்கும்போது, ஓம் ப்ரணய (தண்ணீரை நிறைப்பாயாக) என்றாற் போல்வதாம். இனி, அத்துவர்யு (வேட்போன்) வேள்வியின் வடிவத்தையே யுண்டாக்குகின்றான். ஆதலின் இது, அத்துவர்யு, என்னுஞ் சொற்பொருளா யிருக்கின்றமை காண்க.

இதனால், எசுர்வேதத்தை ஓதுகின்ற வேட்போனே யாகத்தைத் தோற்றுவிக்கின்றவன், இவனால் ஆணைகொடுக்கும்போதுதான், மற்றையோர்கள், தமது பாட்டையும் பாடல்வேண்டும். இன்றெனில், வாளாயிருத்தல் வேண்டுமென்க. இதனாலேயே மூன்று வேதங்களையும் வேள்வியிற் கொண்டு செலுத்துவோன் அத்துவர்யுவே ஆகின்றான், ஆகவே, எசுர்வேதமே, ஏனைய வேதங்கட்கு தலைமையாய் நின்று வேள்வி செய்யும்போது அதை நடாத்துவிக்கும் வன்மையை யுடையதுமாம் என்பது துணிந்த பொருள்.

இவ்வாற்றால், எசுர்வேதம், வேள்வி முதலியவைகளின் சிறந்த பயனையுணர்த்தலின், வேதம் என்னுஞ் சொல் ஏனைய வேதங்கட்குப் பொதுவாக வழங்கப்படினும், எசுர்வேதம் ஒன்றுக்கே சிறப்பாக வழங்கப்படுவதாம் என்பது உற்று நோக்கில் இனிது விளங்கும். இதுபற்றியே, பாடமுறையினும், பொருள்முறையே வலியுடைய தென்பது மீமாஞ்சை நூலின் மரபாய் நிகழ்கின்றது, இதன் விரிவைப் பிறவிடத்திற் காண்க.

வேதபுருடனுக்கு, இருக்கு பிராணன் என்றும், அதர்வணம் முகமென்றும், சாமம் உரோமமென்றும், இத்தகைய எசுர்வேதமே, இருதயமென்றும், அதர்வணவேதம், கா-10, பிர-23, அநு-4, மங்-20,ல் சொல்லப்படுகின்றது. ஒருடம்பிற்கு தலையே சிறந்ததோர் அங்கமாமெனினும் இருதயமல்லவா? வழக்கிற் கெல்லாங் காரணமாயுள்ளது, இதுவே உண்மைப் பொருளின் மெய்யுணர்விற்கும் வைப்பிடமாம். என்னும் இதனாலும் எசுர்வேதமே சிறந்ததென்பது உணரற்பாலது.

மற்றும், நான்கு வேதங்கட்கும் முழுதும் பாடிய மியற்றிய சாயணாசாரியரும், முதலில் யசுர்வேதத்திற்குப்பாடிய மியற்றியபின்னரே ஏனைய வேதங்கட்குப்பாடிய மியற்றினர் என்பதை இருக்குவேத பாடிய முன்னுரையில் தாமே கூறியுள்ளார். அங்கு, எல்லா வேதங்கட்குள்ளும், பொருளையே முக்கியமாகக் கொண்டுள்ள எசுர்வேதமே மிகச் சிறந்ததென்று விரித்துக் கூறியுள்ளார். இது பற்றியும் எசுர்வேதமே சிறப்புடையதாமென்பது பெறப்பட்டது. மற்றும், எல்லா நூல்களும், எல்லாச் சமயத்தவர்களும் போற்றும் சதருத்திரீயமும், சமகமும் இதனிடத்திலேயே விளங்குகின்றன. இவ்வுருத்திர சம்மிதையின் கண்ணேயே சிவபஞ்சாக்கரமு மிருக்கிறது என்பது உற்று நோக்கத்தக்கது.

---

## எசுர்வேத பாகுப்பாட்டியல்.

இவ்வேதம், கிருஷ்ணம் என்றும், சுக்லம் என்றும், இருவகைப்படும். இவற்றுள், கிருஷ்ணம் என்பது சிறிது மாசுடையதாம் சுக்லம் என்பது மாசின்றியதாமென்ப.

அற்றேல், பரசிவனருளியதால் மிகத் தூயதாகிய வேதம் மாசுடையதென்பது பொருந்துமாலோ வெனின்? அற்றன்று, நம்மனோரது ஏனைய நூல்களிலுள்ள மறப்பு முதலிய குற்றங்கள் போன்று எசுர்வேதம் குற்றமுடையதன்று. எல்லாம்வல்ல இறைவனருளியதால் என்பது முன்னர்க் கூறப்பட்டுள்ளது.

இனி, அக்குற்றம் யாதெனில்? கூறுதும், முறையாய் வேள்விக்கிரியைகளைச் செய்யத்தொடங்கில் அக்கிரியையைச் செய்யும் முறைமையில் சிறிது முன் பின்னாக இருத்தலாம். சிலவிடத்திற் குறைவுபட்டு மிருத்தலாம். இது, ஏனைய சாகைகளின் மந்திரங்களைத் தொகுத்து, வைதிகக்கிரியைகளை ஒருவாறு முறைமைப்படுத்திய ஆபத்தம்ப சூத்திரங்களைக்கொண்டு இத் தைத்திரீய சம்மிதையில் சில கிரியை முடிவுபெறுதலால் இனிது விளங்கும்.

கிருஷ்ண எசுர்வேதம், (101) நூற்றொரு சாகைகளையுடையது. இவ்வாறே, வடமொழி இலக்கணத்திற்குப் பாடிய மியற்றிய பதஞ்சலிமாமுனிவருங்

கூறியுள்ளார். சரணவியூகமென்னும் நூலில், (86) எண்பத்தாறு சாகைகள் என்று கூறப்பட்டிருக்கின்றது. சம்மிதை, சாகை யென்பது ஒரு பொருளை யுணர்த்துஞ் சொற்கள்.

## எசுர்வேதத்தின் சாகையியல்.

சாகைகளின் விவரம் வருமாறு :—

சரகசம்மிதை, பதஞ்சலிமாமுனிவர் காலத்தியது, இதை ஓதியவர் இன்னாரென்பது புலப்படவில்லை.

காடகசம்மிதை, இது மாபாடியத்திலுங் கூறியுள்ளதாம். இது இப்போதும் நிகழ்கின்றது. இது, பதினெட்டுப் பகுதிகளையுடையது ஒவ்வொன்றிற்கும் ஸ்தானம் எனப்பெயர்.

கபிஷ்டல சம்மிதை, இதுகாறும் ஏட்டுப்பிரதியில் இருக்கின்றது.

மைத்திராயணி சம்மிதை, இது, கலாப சம்மிதை எனவும் வழங்கப்பெறும். இது பதஞ்சலி காலத்தில் ஓதப்பட்டுவந்தது, இதனைத்தழுவிய நூல்கள், மைத்திராயணி உபநிடதம், மானவசுரௌதம் என்பன.

தைத்திரீய சம்மிதை, இதுவே, எல்லாவற்றுள்ளும் மிகப் பழைமையதாகும். ஆபத்தம்ப சுரௌத சூத்திரமும், இரண்யகேசி என்னுஞ் சம்மிதையும் இதைச்சேர்ந்தவைகளாகும். மற்றும், இதன் வழிநூல்கள், தைத்திரீய பிராமணம், தைத்திரீய அரண்யகம், தைத்திரீய வுபநிடதம், ஆபத்தம்பகல்ப சூத்திரம், போதாயன கல்பசூத்திரம், இரண்யகேசி கல்பசூத்திரம், பாரத்வாச சூத்திரம் என்பவைகள். ஏனைய சம்மிதை (சாகை) கள், இப்போது காணப்படவில்லை.

இவ்வாறு சாகைகள் பிரிந்ததற்குக் காரணம் யாதோவெனின்? எசுர்வேதத்தை ஆசரித்துவந்த மகரிஷிகள் தத்தமது மாணவர்கட்கேற்பவும், இடம், கால முதலியவைகட்கேற்பவும், சிறிது சிறிது மாறுபட ஓதுவித்தலேயாம். ஆனாலும், ஒவ்வொரு சாகைகளினும், சம்மிதை, பிராமணம், உபநிடதம், சூத்திரம் ஆரண்யகம் என்பன வேண்டுமாறு இருத்தலின் ஒவ்வொரு சம்மிதையும் முழு எசுர்வேதமென்றே சொல்லலாம்.

## தைத்திரீயம் என்னும் பெயரின் காரண வியல்.

எசுர்வேத சாகைகள் எல்லாவற்றினுள்ளும், உண்மையாய் நோக்குமிடத்து, இந்தத் தைத்திரீய சம்மிதையே பண்டைக்காலத்தியதும், கர்மகாண்டமுறையை விரித்துக்கூறுவதும், எல்லாவேதங்களின் பொருள்களை தன்னுட்கொண்டதுமா மென்பது நன்கு புலப்படும். இந்தத் தைத்திரீய சம்மிதையின்

மந்திரங்கள் சிறிது கலங்கிக்கிடப்பதற்குக் காரணம் இன்னதென்று தெரிய வில்லை. ஆபத்தம்பர், இதன் பொருளை முறையாய்க் கூறியிராவிடில் வேள்விக் கிரியைகளின் முறை இன்ன தென்று அறிந்து செய்தல் பெரும்பாடாயிருக் கும். இவ்வாறு, ஆபத்தம்பர், முறைமையை ஏற்படுத்தியும் பெரியாரின் மரபுப் படி தொடர்ந்து வேள்விகளைச் செய்து வந்தவர்கட்கே தைத்திரீய மந்திரங் களின் வைப்பு முறை இனிது விளங்கும்; இன்றெனில் மயக்கமடைவர். இதற்கு என்ன காரணமெனின்? இதிற்றொடங்கிக் கூறப்படும் தரிசபூரண யாகங்களோ, அல்லது சோமயாக முதலியவைகளோ, யாண்டும் ஒரு முறை யாய்த் தைத்திரீய சங்கிதையிற் கூறப்படவில்லை. இதன் விரிவை விடய அட்டவணையிற் காண்க. இவ்வாறு தைத்திரீய சங்கிதை மந்திரம் முறைபிறழ்ந் திருப்பதற்கு அதன் பெயரே ஒரு கதையைக் குறிப்பிடுகின்றது. அது வரு மாறு:—

போதாயனருக்கு, ஆபத்தம்பர், யாக்ஞவல்கியர் முதலான அறுவர் மாணவருளர், அவர்களுள் ஒவ்வொருவரும், காலமுறையாய், தமது ஆசிரியரின் பாதுகாப்பாளனாகிய ஒரு அரசனுக்கு, தமது ஆசிரியரின் வாழ்த்துப்பெற்ற அதாவது ஆசிர்வாதஞ் செய்யப்பெற்ற அட்சதையைத் தினந்தோறும் கொண்டுபோய்க் கொடுத்து வந்தனர். ஒருநாள், ஏனைய மாணவர்போ கத் தடைப்பட்டமையின், அவ் வட்சதையை அவ்வரசனுக்குக் கொண்டு போய்க் கொடுத்துவரும்படி யாக்ஞவல்கியரை ஆணையிட்டனர், அவ்வாணை யைத் தாங்கி யாக்ஞவல்கியர் அவ்வாறே அட்சதையைக் கொண்டு சென்றனர், சென்றவுடன், அங்கு, அவனுடைய சிம்மாசனத்தில் அவ்வரசன் அச்சமயம் இலன், அதைக்கண்ட யாக்ஞவல்கியர், தான் கொண்டு வந்த அட்சதையை அம் மன்னனுடைய சிம்மாசனத்தின் மீது போட்டு விட்டு வந்து விட்டனர்.

பிறகு, அவ்வரசன் வந்து, தனது சிம்மாசனத்தைப் பார்க்குங்கால் அதி லுள்ள காய்ந்த மரங்களனைத்தும் அழகாய்த் தளிர்த்திருந்தன. அதைக் கண்டமன்னன் வியப்பும் களிப்புமடைந்து, ஆசிரியரே! இனிமேல், நேற்றைய தினம் இங்கு அட்சதை கொண்டு வந்த மாணவனையே மேலும் நாடோறும் அட்சதை கொண்டு வருமாறு பணிப்பீராக என்று போதாயனரிடத்திற் கேட்டுக்கொண்டனன். ‘அவ்வாறேயாகுக’ வென்று போதாயனரும் அதற்கு உடன்பட்டுக் கொண்டனர்.

அதன்பிறகு, மறுநாள், போதாயனர், யாக்ஞவல்கியரைக் கூப்பிட்டு மாணவ; நீ, நேற்றுக்கொண்டுபோனதுபோல் இன்றும் அரசனுக்கு அட்சதை யைக் கொண்டுபோவாயாக என்றனர். அதைக்கேட்ட யாக்ஞவல்கியர், இன்று அதைக் கொண்டு செல்லவேண்டிய முறை பிறருக்காமாதலின் நான் கொண்டு போக மாட்டேன் என்று மறுத்துவிட்டனர், பிறகு, போதாயனர், பலவாறுய்க் கூறியும் கேட்காமையால் யாக்ஞவல்கியர்மேல் மிக வெகுண்டு, நீ எனது

ஆணையை மறுத்தமையின், யான் போதித்த கல்வியை எமதிடங்கொடுத்து விடுவாயாக, என்று கேட்பதுடன் நீ பறையவனுவாய் என்றுஞ் செபித்தனர். அதைக்கேட்ட யாக்ஞவல்கியர் தமது தவவலியால், தான் கற்ற வேதமந்திரங்களைக் கக்கிவிட்டனர். பிறகு யாக்ஞவல்கியரும் வெகுண்டு எனது ஆசிரியரின் செயல் அதாவது போதாயன சூத்திரம் கேடுறும்படி செபித்தனர்; அப்போது, கக்கியவேதமந்திரங்களை தித்திரிப்புள்ளாய் (மீன்கொத்திப்பறவையாய்) வந்து எடுத்துத் தின்றுவிட்டு மீண்டும் அப்பறவை அதை மந்திரமாய்க் கூறியது என்பதாம். அதனுற்றுன் இந்தத் தைத்திரீயசம்மிதை முறைபிறழ்ந்துள்ளது என்பதாம். இதை, "அருமறையைச் சிச்சிலிப்பண்டருந்தத் தேடும்" என்னும் பழவடியரின் இனிய தமிழ்ச் செய்யுளானும் அறிக.

இஃதன்றியும், வைசம்பாயனருக்கு, அத்வர்யு, சரகர் என இரண்டு மாணவருளர். இவர்களை, வைசம்பாயனர் மிகக் கொண்டாடியது, யாக்ஞவல்கியருக்கு மனம் ஒப்பவில்லை. அதைக்கண்ட ஆசிரியர் வெகுண்டு, எனது வித்தையைக் கொடுத்துவிடும் என்றதால், யாக்ஞவல்கியர் எசுர்வேத மந்திரத்தைக் கக்கிவிட்டனர், ஏனைய முன்போல், என்பர் சிலர். இவ்வாற்றுல், கிருஷ்ண எசுர் தைத்திரீய சம்மிதை எனப் பெயர் வந்தது என்பதையுணர்க. ஈண்டு இவ்வாறு போதாயனருக்கும் யாக்ஞவல்கியருக்கும் சாபப் பிரதி சாபம் நிகழ்ந்ததைக் கண்ட பிரமன், இவர்கள்பால் அருள்கூர்ந்து எழுந்தருளிவந்து, இவ்விருவர்களையும் சாந்தப்படுத்தி, சிறிய காரணத்தை முன்னிட்டு பெரிய தவப்பயனைக் குலைத்தல் தகுமா? என்று பலவகையாக எடுத்துக்கூறி, தத்தமது சாபத்தை அநுக்கிரகஞ் செய்யுமாறு கேட்டுக்கொண்டனர். அதற்கு, இருவரும் எமது சாபம் முழுதும் ஒருகாலத்தும் வீண்போகாது; ஆனுல், ஒரு வகையாக மாற்றுவோம் என்று கூறிவிட்டு போதாயனர் பெற்ற பறையனுந்தன்மையை, மத்தியானவேளையில் மாத்திரம் அநுபவிக்கும்படி அநுக்கிரகித்தனர். போதாயனரின் சூத்திரம் நாசமாமென்னும் சாபம் மாற்றப்பெற்று, இச்சூத்திரம் சிறிது தாழ்ந்த நிலைமையில் இருக்கட்டும் என்று அநுக்கிரகித்தனர். இவ்வாறே இப்போதும் எசுர்வேதத்தைத் தழுவிய ஒரு சாரார் மாத்தியந்தின சாகையையுடையவர்கள் என வழங்கப்படுகின்றனர். இவர்கள் மத்தியானத்தில் மாத்திரம் தமது இல்லத்தினின்றும் வெளியேறி பறையராந்தன்மைபெற்று யாண்டேனு மிருந்துவிட்டு, மாலையில் புநித சமற்காரத்துடன் வீட்டுக்குள் வந்து கொண்டிருக்கின்றனர். இவர்கள், தம்மை பிரதம சாகையுடையவர்கள் என்பர். இப்போது இவர்கள் மிகக் குறைந்துவிட்டார்கள்.

## சுக்ல யசுர்வேத வியல்.

பிறகு போதாயனரால் சாபத்தையடைந்த யாக்ஞவல்கியர், சூரியனை வழி பட்டு எசுர்வேதத்தைக் கற்றுக்கொண்டனர். இதுவே சுக்ல எசர்வேதமெனப் படும், சுக்லம் வெண்மை, அதாவது புநிதமானது என்பதாம். இவ்வேதத்தைப் பதினைந்து வகைப்படுத்தி, கண்வர், மாத்தியந்தினர் முதலானோர்களுக்குப் போதித்தனர். குதிரையிலிருந்து சூரியன் ஓடி வந்தமை பற்றி இச்சம்மி தைக்கு, வாசஸனேயம் எனப் பெயர்வந்தது. இது, வேள்விக்கிரியைகளை மேலெழுந்தவாரியாய்க் கூறுகின்றது.

இதன் சாகைகள் பதினேழு, இவற்றுள் மாத்தியந்தின சாகையே முக் கியமாகும். இது வடநாட்டில் மிகுதியாயிருக்கின்றது. சூரியனுடைய குதிரை விரைவிற்செல்லும் வேக ஒலியால் இதனுடைய, யகரம் = ஜகாரமாய்க் கேட்கப் பட்டதாம் இதுபோல் மற்றும் பல எழுத்தோசைகள் மாறியுமிருக்கின்றன வென்பர். இதை ஓதும்போது கையை மேலுங் கீழுமாக அசைத்துக்கொண் டிருப்பர்.

இதைச் சேர்ந்தவைகள், வாசஸனேய சம்மிதை, சதபதபிராமணம், பிருக தாரணிய உபநிடதம், காத்தியாயன சூத்திரம் என்பன.

காண்வ சாகையை, ஆசரிப்பவர்கள் வடநாட்டில் உள்ளார்கள்.

இதற்கு மகீதார், உவட்டர் என்பவர்கள் பாடியஞ் செய்துள்ளார்கள். மற்றும் உத்பட்டர், மாதவர், அனந்ததேவர் என்பவர்களின் பாடியங்களுமிருக் கின்றன என்பது புலப்படுகின்றது.

சதபதப்பிராமணத்திற்கு, ஹரிசுவாமி, சாயணர், கவீந்திராசாரியர் என் பவர்களின் உரைகள் உள்ளன.

இவ்வேதம் கிருஷ்ண எசுர்வேதத்திலிருந்து தொகுக்கப் பெற்றதென் பர் ஒரு சாரார்.

மற்றொரு சாரார், எசுர்வேதமே இருக்குவேதத்திற்குப் பிந்தியதென்பர். இதன் வடமொழிச் சொற்கள் புதியன வென்பர்.

---

## தைத்திரீய சங்கிதையின் பகுப்பியல்.

கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை, (7) ஏழுகாண்டங்களாகவும், (44) நாற்பத்து நான்கு பிரபாடகங்கள், அல்லது, பிரசினங்களாகவும் (2198) இரண்டாயிரத்து நூற்றுத் தொண்ணூற்றெட்டு பஞ்சாதிகளாகவும் (பஞ்சாதி-ஐம்பது பதங்களின் கூட்டம்) (109286) ஒரு லட்சத்து ஒன்பதி னயிரத்து இருநூற்றெண்பத்தேழு பதங்களாகவும் பிரிக்கப்பட்டிருக்கின் றது.

இவற்றுள், முதற்காண்டம், எட்டு (8) பிரபாடகங்களேயும், (146) நூற்று நாற்பத்தாறு அநுவாகங்களேயும் (342) முன்னூற்று நாற்பத்திரண்டு, பஞ்சாதிகளேயும் (16572) பதினாறுயிரத்து ஐந்நூற்றெழுபத்திரண்டு பதங்களே யுங் கொண்டது.

இரண்டாங்காண்டம், (6) ஆறு பிரபாடகங்களேயும், (75) எழுபத்தைந்து அநுவாகங்களேயும், (384) முன்னூற்று எண்பத்து நான்கு பஞ்சாதிகளேயும், (19273) பத்தொன்பதாயிரத்து இருநூற்றெழுபத்து மூன்று பதங்களேயுங் கொண்டது.

மூன்றாங்காண்டம், (5) ஐந்து பிரபாடகங்களேயும், (55) ஐம்பத்தைந்து அநுவாகங்களேயும், (206) இருநூற்றாறு பஞ்சாதிகளேயும், (10622) பத்தாயிரத்து அறுநூற்றிருபத்திரண்டு பதங்களேயுங் கொண்டது.

நான்காங்காண்டம், (7) ஏழு பிரபாடகங்களேயும், (82) எண்பத்திரண்டு அநுவாகங்களேயும், (279) இருநூற்று எழுபத்தொன்பது பஞ்சாதிகளேயும், (14095) பதிநான்காயிரத்துத் தொண்ணூற்றைந்து பதங்களேயுங் கொண்டது.

ஐந்தாங் காண்டம், (7) ஏழு பிரபாடகங்களேயும், (120) நூற்றிருபது அநுவாகங்களேயும், (403) நானூற்று மூன்று பஞ்சாதிகளேயும், (19404) பத்தொன்பதாயிரத்து நானூற்று நான்கு பதங்களேயுங் கொண்டது.

ஆறாங்காண்டம், (6) ஆறு பிரபாடகங்களேயும், (66) அறுபத்தாறு அநுவாகங்களேயும், (333) முன்னூற்று முப்பத்துமூன்று பஞ்சாதிகளேயும், (16981) பதினாறுயிரத்துத் துளாயிரத்து எண்பத்தொரு பதங்களேயுங் கொண்டது.

ஏழாங்காண்டம், (5) ஐந்து பிரபாடகங்களேயும், (25) இருபத்தைந்து அநுவாகங்களேயும், (54) ஐம்பத்துநான்கு பஞ்சாதிகளேயும், (2631) இரண்டாயிரத்து அறுநூற்று முப்பத்தொரு பதங்களேயுங் கொண்டது.

---

வாக்யாந்தங்கள் (50) ஐம்பது.

மற்றும், பராயதம் என்னும் பிராமணம் (28) இருபத்தெட்டுப் பிரபாடகங்களேக் கொண்டதாம்.

ஆருணம், அதாவது ஆரண்யம் (6) ஆறு பிரபாடகங்களேக் கொண்டதாம்.

உபநிடதம் (4) நான்கு பிரபாடகங்களேக் கொண்டதாம். இவ்வாற்றால், கிருஷ்ண எசுர்வேத தைத்திரீயசம்மிதை (82) எண்பத்திரண்டு பிரபாடகங்(பிரசினங்க)ளே யுடையதாம்.

இஃதன்றியும், எசுர்வேதத்திலுள்ள சோடச சமத்காரங்களைக் கூறு மந்திரங்களை மாத்திரம் வகுத்தது மந்திரப்பிரசினம் எனப்படும். இதுவே ஏகாக்கினிகாண்ட மென்பதுமாம்.

---

## பொதுவிடய வியல்.

மற்றும், இந்த கிருஷ்ண எசுர் வேதத்திற் கூறப்படும் விடயம் பொது வகையால் ஒன்பது வகைப்படும். அதாவது, ஆத்துவரம், யாசமானம், ஹோதாரம், ஹௌத்ரம், அதன் விதிகள், நான்கு பிதிருமேதங்கள் என்பன.

அவற்றுள், 'இஷேத்வா' என்றற் ரொடக்கத்திய பிரபாடகங்கள், ஆத்வர்யமாகும், (அத்வரியுவைப்பற்றியது.) 'ஸம்த்வா சிஞ்சாமி' என்பது முதலிய ஆறு அநுவாகமந்திரங்கள் யாஜமானங்கள். (எசமானனைப் பற்றியது.) 'சித்தி ஸ்ருக்' என்பது முதலிய மந்திரங்கள் ஹோதார மந்திரங்கள். 'ஸத்யம் பிரபத்யே' என்பது முதலியவைகள் தரிசத்தைச் சார்ந்த ஹௌத்துரு மந்திரங்கள், கூறிய நால்வகை மந்திரங்களின் விதிகளென்னும் நான்கு பிராமணங்கள், 'பரேயுவாம்ஸம்' என்பது பிதிருமேத மந்திரம் என்பது. இது பிரமனால் கண்டுபிடிக்கப் பெற்றதாம்.

அற்றாகலினன்றே,

शाखादिं याजमानं च होतॄन्हौत्रंच दार्शिकम् ।
तद्विधीन्पितृमेधं च नवाऽऽहुः कस्य तद्विदः ॥

என்று, காண்டாநுக்கிரமணியையுங் கூறுகின்றது.

ஈண்டு, நான்காங் காண்டமும் ஆறாங்காண்டமும் சேர்ந்து சோமத்தை முக்கியமாய்க் கூறுதலால் இவை சௌம்யம் எனப்படும். இரண்டாங்காண்டம், காமிய பசுக்களைக் கூறுவதாம். இது வைசுவ தேவம் எனப்படும். மூன்றாங் காண்டமும், ஏழாங்காண்டமும் எல்லாவற்றிற்கும் சேடம். (அங்கமாம்.) இவை பிராஜாபத்ய மெனப்படும். நான்காம் காண்டமும், ஐந்தாங் காண்டமும் அக்கினிசயன முதலியவற்றைக் கூறுதலின் இவை ஆக்னிகம் எனப்படும். இவ்வாற்றால், சௌம்யம், வைசுவதேவம், பிராஜாபத்யம், ஆக்நிகம் என்பது ஏழுகாண்டங்களின் பொருள் வகைகளைப்பற்றிய குறிப்புப் பெயர்கள்.

ஈண்டு, பாடமுறைப்படி ஏழுகாண்டங்களின் விடயங்களை நோக்குமிடத்து, முதற்காண்டம் :— பருவயக்ஞம், சோமயாகம், அக்கினி சோம ஆகுதி, அக்கினி சோம பசுஹோமம், மீண்டு ஆதானஞ்செய்தல், வேள்வித்தலைவன் செய்யத்தக்கது, வேள்வித்தலைவனுடைய கடமை, வாஜபேயம், இராஜசூயம் என்பவற்றைக் கூறுகின்றதாம்.

இரண்டாங் காண்டம்:— பசு யாகங்கள், தனியக்ஞங்கள், பட்சங்களிற் செய்யும் யக்ஞங்கள் என்பவற்றைக் கூறுகின்றதாம்.

மூன்றுங் காண்டம்:— சோமயாகத்தைச் சேர்ந்த தனி யக்ஞங்கள், மற்றும் பல்வகை யக்ஞங்கள் என்பவற்றைக் கூறுகின்றதாம்.

நான்காங் காண்டம்:— தீ வைத்தல், நிலந்திருத்தல், செங்கல்களை கருடன் வடிவாய் அடுக்கல் முதலியவைகள், தீயுண்டாக்கல், தீ வளர்த்தல் என்பவற்றைக் கூறுகின்றதாம்.

ஐந்தாங் காண்டம்:— உகா என்னுந் தொட்டியில் தீயை வைத்தல், தீயின் பொருட்டு நிலத்தைத் திருத்தல், செங்கல் சூளைக்கு நெருப்பு வைத்தல், பசு ஹோமம், தீயுண்டாக்கல் என்பன முதலியவற்றைக் கூறுகின்றதாம்.

ஆறுங் காண்டம்:— சோமயாகத்தைப் பற்றியவைகள், பசு தந்திரம், இந்திரன் முதலிய தேவதைகளின் பொருட்டு சோமரசம் வைக்குங் கிண்ணங்கள், தட்சிணை முதலியவைகளைக் கூறுகின்றதாம்.

ஏழாங் காண்டம்:— சோம யாகத்தின் தொடர்ச்சி விஷயங்கள், அசுவமேதம், அசுவமேத விரதம் என்பது முதலியவைகளைக் கூறுகின்றதாம் என்பதையுங் காண்க.

இனி முதற் காண்டத்திலிருந்து நாலு காண்டம் வரை ஒவ்வொரு பிரபாடகத்தின் ஈற்றிலுள்ள அநுவாகங்கள், இருக்குக்களாய் (சந்தவடிவாய்) இருக்கின்றன.

நாலாங் காண்டமும் பெரும்பான்மை சந்தவடிவமாகவே யிருக்கின்றது.

ஈண்டு, இச்சாகையை ஓதுகின்றவர்கள் உபாகர்மத்திலுள்ள விதிவாக்கியங்களைத்தழுவி, முதலில், பிராசாபத்தியமென்னும், மூன்றுங்காண்டம் ஏழாங் காண்டங்களையே ஓதுகின்றனர்.

பிறகு, சௌம்யம் என்னும் முதற்காண்டத்தையும் ஆறுங் காண்டத்தையும் ஓதுகின்றனர்.

அதன்பிறகு, ஆக்னிகம் என்னும், நாலாங்காண்டத்தையும் ஐந்தாங் காண்டத்தையும் ஓதுகின்றனர்.

முடிவில், வைசுவதேவம் என்னும், இரண்டாங்காண்டத்தை ஓதுகின்றனர் என்பதை யுணர்க.

மற்றும், இது பிராஜாபத்யம், சௌம்யம், ஆக்னேயம், வைசுவதேவம், சுவாயம்புவம், ஆருண மெனவும் பெயர் பெறும். இவைகளன்றி, இதற்கு சாம்ஹிதி தேவதை, வாருணிதேவதை, யாக்ஞிகி தேவதை என மூன்று குறிப்பு பெயர்களு மிருக்கின்றன வென்று புலப்படுகின்றது.

ஈண்டு, வேள்விகளின் வடிவம் முறையாக இவ்வெசுர் வேதத்திற் கூறி யிருக்கின்றமையாலும், ஒரோரிடத்தில் இருக்கு வேண்டியக்கால், இருக்கு வேதத்திலுள்ள யாஜ்யா புரோநு வாக்கியங்களை அவாவி நிற்றலாலும், துதிக்கும்போது சாமவேதத்தை அவாவுவதாலும் எசுர் வேதமே சிறந்ததென்பது ஒவ்வும். அங்ஙனமாயினும், இடையில் இடையில், இவ் வெசுர்வேதத்தின் கண்ணும் இருக்குக்களும் இருத்தலின் எசுர் வேதமென்பது இதற்கு எவ்வாறு பொருந்தும்? உண்மை. ஆனாலும், எசுர் மந்திரங்களின் மிகுதிபற்றி எசுர் வேதம் என்றும், அத்வரியு வேதமென்றும், அநாதி காலந்தொட்டே யாகச் செயலாளர்களின் சங்கேதமாம் என்பதை யுணர்க.

மற்றும், இவ் வேதத்திற்கூறிய தரிச பூரண மாச இஷ்டியின் மந்திரங்கள் மூவகைத்தாம். அவை, ஆத்வரியுக்கள், யாஜமானங்கள், ஹௌத்ரங்கள் (அத்வரியுக்குரியன, எசமானனுக்குரியன, ஹோதாவிற் குரியன) என்பன. இவற்றுள்ளும், ஆத்வரியு மந்திரங்கள் சுவரைப் போன்றன. ஏனையவைகள் சித்திரம் போன்றவைகள். ஆதலின், முதலில் ஆத்வரியு மந்திரங்களே இதிற் கூறப்பட்டிருக்கின்றன.

ஈண்டு, இருக்குக்கள் என்பன ஹோதாவிற்குரியன. அவைகளே இருக்கு வேதமாய் வகுக்கப்பட்டிருக்கின்றன.

அஃதன்றியும், எசுரில், இருக்குக்கள் கூறியிருக்கின்றதென்னையோவெனின்? எசுர்வேதம், வேள்விக் கிரியைகளை முறையாய்க் கூற எழுந்தாமாதலின், ஆண்டாண்டு வேண்டிய ஹௌத்திரங்களையும் அதாவது இருக்குக்களையும் வேள்விச் செயலாளர்களிடத்திலுள்ள அன்பால் ஈண்டுக் கூறி யிருக்கின்றன என்க.

மற்றும், இருக்குவேதம் ஹௌத்ருப் பிரயோகங்கட்கே சிறப்புடையதாயிருப்பினும், இருக்குவேத ஹௌத்ரப் பிரயோகக்காரர்களும், நட்சத்திர சத்திரமிருகாரேஷ்டிகட்கு இருக்குக்கள் இல்லாததால் எசுர் வேதத்திலிருந்தே அவ்விரண்டிற்கும் ஹௌத்ரங்கள் எடுத்துக்கொள்ளல் வேண்டும் என்பதை யுணர்க.

ஈண்டு, இருக்குவேதிகளிற் சிலர், தமது வேதத்திலுள்ள அபிமானத்தால், எசுர் வேதத்திலுள்ள ஹௌத்ரங்களை ஒதுக்கிவிட்டு இருக்குவேத ஹௌத்திரங்களையே கைக்கொள்வர். ஆனல், அவர்கள், நட்சத்திரத்திலும் சத்திரத்திலும், மிருகாரேஷ்டியிலும் யாது செய்வார்களோ அறிகிலேம்?

எசுர்வேதிகளும், தமது வேதத்திற் கூறாத ஹௌத்ரங்களை இருக்கிலிருந்து எடுத்துக்கொள்வர். இவ்வாற்றால், எசுர் மந்திரங்கள், சிறிது இருக்குக்களுடனுங் கலந்து கிடக்கின்றன வென்பது பெற்றாம்.

## தைத்திரீய சம்மிதையின் வேறுபாட்டியல்.

ஈண்டு, தைத்திரீய சம்மிதையானது சிற்சில பிராமண பாகத்துடன் கூடி யிருக்கின்றது. தைத்திரீயப் பிராமணமும் சிற்சில மந்திர பாகங்களுடன் கூடிக் கிடக்கின்றது. இவ்வாறிருத்தல், சாரஸ்வத பாட முறையைத் தழுவியதென்று தெரிந்துகொள்க.

இனி, சத்யாஷாட க்ருகியசூத்திரத்தைத் தழுவிய சம்மிதையின் பாடமோ, மந்திரப் பிராமணங்கட்குச் சிறிதளவேனுங் கலப்பின்றியதாம். அஃது இன்னதென்று புலப்படவில்லை.

அற்றேலஃதாகுக, சாரஸ்வத பாடமுறை என்றால் என்னை? அதன் காரணம் யாது எனின்? கூறுதும் அது வருமாறு:—

முன்னொருகால், பிரமனுடைய சபையின்கண் துருவாச மாமுனிவர் சாமமறையை இனிது பாடிக்கொண்டிருந்தனர். அப்போது அவருடைய உக்கிரமான தவ ஒளியைக் கண்டு கலைமகள் நகைத்தனள். அதைக்கண்ட துருவாச முனிவர் வெகுண்டு, சரசுவதியை "நீ மனித யோனியிற் பிறக்கக் கடவாய்" என்று சபித்துவிட்டனர். அதற்குக் கலைமகளும், துருவாச முனிவரைநோக்கி, முனிவர்க்கிறைவ! தமது சாபத்தை அடியாள் களிப்புடன் ஏற்றுக் கொண்டனன். ஆனால், யான் ஒரு அந்தணன் வீட்டிற் பிறக்கும்படி அருள் புரிவீராக என்று வேண்டினள். முனிவர், அதற்கியைந்து அவ்வாறே ஆகுக என்று அருள்புரிந்தார். பிறகு, அவ்வாறே, கலைமகள், ஆத்ரேயருடைய வீட்டிற் பிறந்தனள். பிறந்து, எல்லாக் கலைகளையு முணர்ந்த ஒரு கணவனை யடைந்து, சாரசுவதன் என்னும் ஒரு புதல்வனைப் பெற்றனள். அப் புதல்வனுக்கு உபாகருமஞ் செய்து சாரசுவத வேதத்தை முறையாய் அப் புதல்வனுடைய பிதாவே ஓதி வைத்தனர். ஓதி வைக்குங்கால், அவ்வேதம் சிறிது வருத்தத்துடன் ஓதவேண்டியதாதலின் அச்சிறுவன் ஓதுவதிற் பிழையுற்றனன். அதற்கு, பிதாவானவர் வெகுண்டு அவனைப் பிரம்பால் அடித்தனர். அதனால் அச்சிறுவன் கதறி யழுதனன். அதைக்கண்ட கலைமகள், எனது அருமைப் புதல்வன் இவ்வாறு துன்புறல் தகுமா? என்று இரங்கி, தானே அப் புதல்வனுக்கு, சாரசுவத வேதத்தையும், மற்றுமுள்ள அறுபத்து நான்கு கலைகளையும் எளிதில் ஓதிவைத்து, வாயுவை அருந்திக்கொண்டே வாழும் வகையையும் அருள் புரிந்தனள்.

இவ்வாறிருக்க, அப்போது, உலகில் பெரும் பஞ்சம் வந்து உயிர்கள் மடிந்து விட்டன. அக்கால், சாரசுவத முனிவர், வாயுவை யருந்திக்கொண்டு குருக்ஷேத்திரத்தில் கடுந் தவம் புரிந்துகொண்டிருந்தனர். அதைக் கேள்வியுற்ற இருடி கணங்கள் குருக்ஷேத்திரத்தை யடைந்து சாரசுவத மாமுனிவரைக் கண்டு, முனிவ! எமக்கு, இலைகளை யருந்துமாறுவது அருள்புரிய வேண்டு

மென்றிரக்க, அவ்வாறே இலைகளை யருந்திக்கொண்டு தவம் புரிந்து வருமாறு அம் முனிகணங்கட்கு அருள் புரிந்தனர். அவ்வாறு, அங்குக் கூடியிருந்த அறுபத்து நான்கு முனிகணங்களும், சாரசுவத முனிவரையடைந்து முனி சிரேஷ்ட! எமக்கு வேதத்தை ஓதி வைப்பீராக என்று வேண்டிக்கொண்டனர். அவ்வாறே சாரசுவத வேத சாகையை அவர்கட்கு ஓதி வைத்தனர். ஓதி வரும்போது, தைத்திரீய சாகையைச் சேர்ந்தவர்கள் தம்முள் கூடிக் கலந்து, இவ்வேதம் எமது சாகைக்கு வேறாயிருக்கின்றது; இதை எமக்கு ஓதிவைத்து எம்மை மூடராய் ஆக்கிவிட்டீர் என்று வெகுண்டு குற்றங் கூறத் தலைப்பட்டார்கள்.

அப்போது, சாரசுவத முனிவர், முனிவர்காள்! நீவிர், எமது வேதம் வேதமல்லவென்று புலப்படுத்துவிரேல், யான் தீயி லிறங்கிவிடுகின்றேன், இது சத்தியம் என்று ஆணையிட்டனர். அதைக்கேட்ட முனிவர் கணங்கள் இதைத் துணிவுபடுத்துவதற்கு, எண்ணிறந்த இருடிகளைக் கூட்டிக்கொண்டு பிரமனிடஞ் சென்று இவ் விவரத்தைப் பிரமனுக் கறிவிக்க, பிரமனும், சாரசுவத முனிவர் கூறிய சபதம் உண்மையே, சாரசுவத வேதம் ஓதுமுறை சாரசுவத முனிவராற் கூறியதேயாம். வேறுமுறையில் ஓதில் அதற்குப்பயன் இல்லை என்று எல்லா முனிவர்களுக்குங் கூறி அவர்களை உபசாந்தப்படுத்தினர் என்பது இதிகாசமாம்.

இது, சமற்கார ரத்னமாலையிற் கூறியுள்ளது. இப்போது, காண்டாநுக்கிரமணியிற் கூறிய பாடம் முறை ஆசரணத்தில் இல்லை. இந்தத் தைத்திரீய சம்மிதையின் பாட முறையே சாரசுவத பாட முறையாம் என்பதை யுணர்க.

---

## யாக வியல்.

### यज्ञाद्भवन्ति भूतानि ।

ஈண்டு, யாகம் என்பதன் பொருள், தேவதையைக் குறித்துத் திரவியங்களை (நெய் முதலியவைகளை) தியாகஞ் செய்தல். இது அத்வரம், யக்ஞம் என்பது முதலிய பெயர்களால் வழங்கப்படும். தேவாராதனை என்பது திரண்ட பொருள். இது, இருபத்தொரு வகைப்படும். இவைகளுக்குள் அடங்கியுள்ள வேறுபாடுகள் எண்ணிறந்தன.

இருபத்தொருவகை யாகங்கள் வருமாறு:—

(1) அக்னியாதானம், இதுவே அக்கினி ஹோத்திரமுமாம். (2) தரிசபூரண மாசங்கள். (3) பிண்டப் பித்ருயக்ஞம். (4) ஆக்ரயணம். (5) சாதுர் மாசியம். (6) நிரூட பசுபந்தம். (7) சௌத்திராமணி என அவிர்யக்ஞம் எழு வகைப்படும்.

(1) ஔபாசனம், (2) வைசுவ்தேவம், (3) ஸ்தாலீபாகம், (4) ஆக்ரயணம், (5) சர்ப்ப பலி, (6) ஈசான பலி, (7) அஷ்டகான்வஷ்டகா என பாக யக்ஞம் எழு வகைப்படும்.

(1) அக்னிஷ்டோமம், (2) அத்யக்னிஷ்டோமம், (3) உக்த்யம், (4) ஷோடசீ, (5) வாசபேயம், (6) (இது, குரு, அதிராசமென இரு வகைத்து), (7) அப்தோர்யாமம். இது சோம சமஸ்தைகள் (எழுவகைச் சோமயாகங்கள்) எனப்படும்.

மற்றும், மகாவிரதம் (1) சர்வதோமுகம், (2) இராசசூயம், (3) பௌண்டரீகம், (4) அபிசித், (5) விசுவசித், (6) அசுவமேதம், (7) பிருகற்பதிசவம் என்பவைகளு முள.

அஃதன்றியும், தேவ யக்ஞம், பித்ரு யக்ஞம், பூத யக்ஞம், மநுஷ்ய யக்ஞம் என, யக்ஞம் நான்கு வகைப்படும். இவை முறையே, வேதமோதல், தென்புலத்தார் கடன், ஓமம், பலி எனப்படுவனவாம்.

ஈண்டு, வஷட்காரத்தால், யாஜ்ய புரோநு வாக்கியங்களுடன் செய்வது யாகமென்பதும், சுவாகாகாரத்தாற் செய்வது ஹோமமென்பதும் உணரற்பாலது.

இவைகள், நித்தியமென்றும், காமிய மென்றும் இருதிறப்படும்.

இவைகளன்றியும், நிட்டையில் புலன்களின் விருத்திகளை யடக்கல், விருப்பு வெறுப்பின்றி இந்திரியங்களால் விடங்களை நுகர்தல் முதலான பல் வகை யக்ஞங்கள் உள்ளன.

மற்றும், இவ்வெக்ஞம், விதித்திருக்கின்றமையின் இது நமது கடமை என்று பயன்கருதாது செய்வது சாத்வீகம் எனப்படும், பயனை விரும்புவதுடன் இடம்பத்தின் பொருட்டுச் செய்வது இராசதமெனப்படும். விதியின்றி, மந்திரமின்றி அன்பின்றியுஞ் செய்யப்படுவது தாமதமெனப்படும்.

இங்ஙனம் பலதிறப்படு மென்பதை,

**द्रव्ययज्ञास्तपो यज्ञा योगयज्ञास्तथापरे ।**

**स्वाध्या यज्ञान यज्ञाश्च यतयः संशितव्रताः ॥**

என்பது முதலிய கண்ணபிரான் திருவாக்காற் காண்க.

இவ்வாறு, இந்த எக்ஞங்களனைத்தும் வேதவிதிகளாயிருப்பினும், இவைகளெல்லாவற்றினுள்ளுஞ் சிறந்தது செபயக்ஞம் ஒன்றேயாம்.

அற்றாகலினன்றே,

यज्ञानां जपयज्ञोऽस्मि ।

அதாவது, "யக்ஞங்களுக்குட் செபயக்ஞம் நானாகவே யிருக்கின்றேன்" என்று பகவான் திருவாய் மலர்ந்தருளிய தூஉம் என்க.

இவ்வாறே மற்றும் வருவனவற்றாற் காண்க.

---

## யாகத்தாற் போற்றப்பெறுகின்றவன் பரமேசுரனே யெனல்.

ஈண்டு, பல்வேறுவகைப்பட்ட யாக ஹோமங்களைக் குறித்த தேவதைகளும் பல்வேறு வகைப்பட்டவைகளே யாகின்றன.

அற்றாகலினன்றே, இருக்குவேதத்தில், "அக்கினி, வாயு, ஆதித்தன் யமன், சூரியன், பகன், பூஷன், மித்திராவருணர்கள், இந்திரன், உருத்திரன், மருத்து, ரிபு, மண்விண், உஷா, அசுவினி, வைசுவாநரன் என்பவர்கள் முதலானோர்கள் தேவர்கள் என்று கூறப்பட்டிருக்கின்றது. இவைகளின் ஆராய்ச்சி முறையை, சாமவேத உபோற்காதம் தேவதை இயலிற் காண்க.

இனி, ஆராயுமிடத்து, பண்டைக்காலத்தவர்களான அத்தியான்மவாதிகள் தேவதை ஒன்றே யென்கின்றனர். பல்வேறு வகைப்பட்ட தேவதைகள் என்பர் இதிகாசக்காரர்கள்.

யாகத்தையே மேற்கொண்டவர்கள் யாகத்தில் ஓதும் மந்திரமயங்களே தேவதைக ளென்பர்.

நிருத்தகாரர்கள், மண், விண், சுவர்க்கம் எனப்படும். அக்கினி, வாயு, சூரியன் என்னும் மூவர்களே தேவர்கள், ஏனைய தேவதைகள் இவர்களின் உருவ வேறுபாடுகளே யென்பர்கள்.

இவற்றுள்ளும், சூரியனே யாண்டு நிறைந்த மேலாகிய தேவதை என்பது வேதக்கருத்து.

அஃதல்லாமலும், 'யக்ஞோவை விஷ்ணு:' என்று கூறுதலால், யக்ஞம் விஷ்ணுமயமே என்பதுங் கொள்ளக் கிடக்கின்றது.

முடிவில்,

ऋतौ सुप्ते जाग्रस्त्वमसि फलयोगे क्रतुमताम् ।

என்றற் றொடக்கத்து, எண்ணிறந்த பிரமாண வாக்கியங்களும், சோமாசி நாயனாரின் சரித்திரமும், யாகத்தில் அவியேற்பவனும், பயனை யளிக்கின்றவனும் ஒரு பரமேசுரனே என்பது தெளிவாய்ப் புலப்படுகின்றது.

இவற்றை ஆராய்ந்து உறுதிப்படுத்துவது பேரறிவாளராகிய பெரியார்க்கும் எளிதன்றுமெனல் வெளிப்படையாம்.

இனி, வேதங்களுட் சிறந்ததாகிய எசுர்வேதம், வேள்விக்கிரியை முதலியவைகட்கு முக்கியமாயினமை போன்றே, எல்லா வேள்விகளாலும் போற்றப்படுகின்றவன் பரமேசுரனே என்பதையுஞ் சிறிது விளக்குவாம். அதிலும்,முதலாவது எசுர் வேதத்தைக்கொண்டே ஈசுரன் முக்கியன் என்பதைக் கூறுவாம்.

எசுர்வேதம், பல்வேறு வகைப்பட்ட தேவதைகளைக்குறித்து வேள்விகளை முறையாய்க் கூறுகின்றதென்பது ஒவ்வொரு யாகமந்திரங்களிலும் நன்கு புலப்படுகின்றது, அதை ஈண்டெடுத்துக் காட்டுவதில் என்? அஃதன்றியும், சிற்சிலவிடத்தில் ஏனைய தேவதைகளைப் போன்று உருத்திரனுக்கும் அவிர்ப்பாகங் கொடுத்தலுங் காணப்படுகின்றதே என்பதிலும் மறுப்பொன்றுமில்லை. ஆனாலும், இதில் ஒன்று கூற விருப்பம் அதாவது எசுர்வேதத்தின் நாலாங் காண்டத்திற் கூறும் மகாக்கினிசயனத்தில், சத ருத்திரீய மென்றும், சமகமென்றும் சில அநுவாகங்களுள்ளன. அவை, உருத்திர பரமேசுரனையே சிறப்பாகக் கூறுகின்றன என்பது உலகெலாமறிந்த ஒரு உண்மைவிடயமன்றோ? அவற்றுள்ளும், சிவ பஞ்சாட்சரம், ஒரு இரத்தினம்போல் விளங்குவது எம்மதத்தார்க்குஞ் சம்மதமாகிய தல்லவா?

அற்றேலஃதாகுக, அவ்வுருத்திர மந்திரங்களை மாத்திரஞ் சிறப்பித்துக் கூறுதல் என்னை யெனின்? கூறுதும், அத்தகைய சதருத்திரீய மந்திரங்கள் உருத்திர பரமேசுரனுக்கு வணக்கங் கூறுதலே மிகப்பெரிய பயனாய்க் கொண்டன வென்பதாலென்க. அதுவும்,

'ஓம், நமஸ்தே ருத்ர மன்யவ' என்றறற்றொடக்க மந்திரத்தால் இனிது தெளியப்படுகின்றதாம்.

ஈண்டு, இத்தகைய வணக்கமானது, வணக்கங்கட்கெல்லாம் அடிப்படையாகிய உருத்திர பரமேசுரனைத் தவிர்த்து ஏனைய தேவர்கட்கு உள்ளவாறு பொருந்தாவாம். ஏனைய, தேவர்கட்கு வேதமுதலிய நூல்களில் நேரே வணக்கங்கள் கூறியிருப்பினும், அவைகளை, ஏனைய தேவர்கள் ஏற்றுக்கொள்ள வல்லார்களலர். ஆனல், ஒரு மன்னனுடைய திருமுடியைப்பெறின் அதை விலைப்படுத்தி அநுபவித்துக் கொள்ளலாமே யன்றி நேரே தனது சிரசில் கவிழ்த்துக் கொள்ளலுங் கூடுமோ? கூடா.

அற்றாகலினன்றே,

दत्तन्नमः किमुपशुश्रम देवताभ्यः त्वामन्तरेण नमसा मवसान भूमिम् ।
तास्तद्गृहीतु मनलन्नहि कश्चिदीष्टे चोरोपनीतमिव धारयितुं क्रीटम् ॥

என்றருளினர், அரதத்தரும்.

மற்றும், ஏனைய தேவர்கட்குச் செய்கின்ற வணக்கங்க ளனைத்தும் முடிவில் பரமேசுரனையே யடையுமன்றி பிறதேவரை யடையா. ஏனெனின்? உலகிற்கு அதிட்டானமாதற்றன்மை பரமேசுரனுக்கே யன்றி ஏனைய தேவர் கட்கு உள்ளவாறு பொருந்தாமையி னென்க.

அற்றேல், அஃதாகுக,

आकाशात्पतितं तोयं यथागच्छति सागरम् ।
सर्वदेव नमस्कारः केशवं प्रतिगच्छति ॥

என்று கூறியிருத்தலால், மாயோனாகிய விஷ்ணுவிற்கே வணக்கங்க ளனைத்துஞ் சேருமெனல் பொருந்தாத தென்னையோவெனின்? உண்மை. ஆனால் இது மிருதிவாக்கியமாம். சுருதிவாக்கியமாகிய மன்னனுடைய ஆணைக்கு முன் மிருதி வாக்கியமாகிய ஒரு காலாளின் வாக்கியம் எதிர் நிற்குமோ? நிற்கா.

அற்றேல், 'யக்ஞோவை விஷ்ணு:' என்றபடி வேள்வியே விஷ்ணுவடிவா யிருக்குமிடத்து, வேள்விகளிற் கூறுகின்ற வணக்க மாத்திரம் விஷ்ணுவிற் குப் பொருந்தாத தென்னைகொலோ? கூறுதும். யக்ஞம் விஷ்ணு வென்றதால் விஷ்ணுவே வேள்விக்கிறைவன் என்பது அமையாது. ஏனெனின்? யக்ஞத் திற்குத் தலையாகிய பிரவர்க்யம் என்னுங் கருமம் விஷ்ணுவின் சிரசாம் என் பதே அதன் கருத்தாம், ஆதலினென்க.

இதுபற்றியே,

विष्णोश्शिर प्रचिच्छिदतुर्यत् घ्राङिति पपात तत् घर्मस्य घर्मत्वम् ।

என்று, வாசசநேய சுருதியுங் கூறுகின்றது.

இவ்வாற்றால், எல்லா வடிவங்களாயும் அருட் டிருமேனிகொண்டருளும் பரமேசுரனே வணக்கங்களை ஏற்றுக்கொள்ள உரியான். உரியனாகவே, சதருத்திரீய மந்திரங்களும் உருத்திர பரமேசுரனுக்கே வணக்கங்கூறுகின்றன. ஆண்டு கோபவடிவாகிய அக்கினியென்னும் மகாசயனமே (செங்கல் அடுக்குகளை) உருத்திரனாகப் பாவித்து உருத்திரீய சம்மிதையில் வணக்கங் கூறப்படுகின் றது. அதாவது இம் மந்திரங்களால் உருத்திரத்தன்மை சாந்தப்படுமாறு ஹோமஞ் செய்யப்படுகின்றது. பிறகு, நமஸ்காரங்களால் திருவுள்ளங் குளிர்ந்த பரமேசுரனை, எல்லா நலங்களையும் அளித்தருளுமாறு வேண்டிக் கொள்ளலே சமகமாம். விரிக்கிற் பெருகும். இவ்வாற்றால், வேள்விகளனைத் திலும் போற்றப்பெறுகின்றவன் உருத்திர பரமேசுரன் ஒருவனேயாவன்.

அஃதன்றியும், உற்றுநோக்கின் ஏனைய தேவர்களும் உருத்திர பரமேசுரனது அருட்டிருமேனிகளே யாவர்கள்.

அற்றாகலினன்றே, இருக்கு சங்-2-3-22-ல்

इन्द्रं मित्रं वरुणमग्निमाहुरथो दिव्यः समुपर्णो गरुत्मान् ।
एकं सद्विप्रा बहुधावदन्त्यग्निं यमं मातरिश्वानमाहुः ॥

என்று, கூறப்பட்டிருக்கின்றது மென்க.

இதுபற்றியன்றே, பகவான் கண்ணபிரானும்,

येप्यन्यदेवता भक्ता यजन्ति श्रद्धयान्विताः ।
तेपि मामेव कौन्तेय यजन्ति......... ॥

என்று, திருவாய்மலர்ந்தருளியுள்ளார்.

இனி, வேதத்திற் சிலவிடத்தில் உருத்திரனுக்கு பக்குவமிலாத அவியை அர்ப்பிக்கும்படி சொன்னது, கண உருத்திரர்களுள் ஒருவனாகிய உருத்திரன் என்னும் தேவதைக்கென்பதை உய்த்துணர்ந்து கொள்க. ஏனெனின்? ஏனைய தேவர்களுக்குள் ஒரு தேவராக உருத்திர பரமேசுரனை எண்ணக் கூடாமையி னென்க.

இக்கருத்தைக் கொண்டன்றே,

नमो ज्येष्ठाय श्रेष्ठाय ।

என்று, உருத்திரனுக்கு, எல்லாத்தேவர்களைவிட மேம்பாடுடைமையைச் சதருத்திரியுங் கூறுகின்றது.

காமன், பரசிவனது நெற்றிக்கண்ணால் நீறானதும் இதையே விளக்குகின்றது. மற்றும்,

"போதுநீக்கித் தனைநினையவல்லார்க்கென்றும்" என்று கூறுகின்ற தமிழ்த் திருமறை வாக்கும் இப்பொருளையே மேற்கொண்டெழுந்தது என்பதையு முணர்க.

மற்றும், இதன் விரிவை, சிவதத்துவவிவேகம் என்னும் உண்மைநூலிற் காண்க.



## யாகத்திற் செய்யும் பசுக்கொலை பாவமாகாதெனல்.

ஈண்டு, யாகமென்பது தேவாராதனை யென்றும், இது வேதத்தில் பெரும்பான்மை விதிக்கப்பட்டிருக்கின்றதென்றும், வேதம், எல்லாவுயிர்களிடத்தும்

பேரருளுடைய பரசிவனு லருளிச்செய்யப்பட்டதென்றுங் கூறுவது முரணும். என்னை? யாகத்தில், பாவமாகிய பசுக் (விலங்கின்) கொலைகள் விதிக்கப்பட்டிருத்தலின் என்க.

கொலையை விதித்தலோ,

"அக்கினிசோமப் பசுவைக் கொல்லுக" என்பது முதலிய விதிகளில் மிக வெளிப்படையாம்.

அற்றேல், கொலைத்தொழில், வேதத்தால் விலக்கப்படினன்றோ? பாவமாகும். ஆம். விலக்கப்பட்டிருக்கின்றது.

அதையும்,

'ஒருயிரையுங் கொல்லற்க' என்பது முதலிய விலக்கு விதிகளிற் காண்க.

இப்பொருளையே,

"நன்ருகுமாக்கம் பெரிதெனினுஞ் சான்ருேர்க்குக்
கொன்ருகும் ஆக்குங் கடை" எனவுப் பொதுவாகவும்,

"அவிசொரிந்தாயிரம் வேட்டலினு மொன்றன்
உயிர்செகுத் துண்ணுமை நன்று"

எனச் சிறப்பாகவும் தெய்வநற்றமிழ்த் திருவருண்மறையுந் தெரிவிக்கின்றது.

மற்றும், இவ்வாறே,

'கள்ளூமூனு நீவிரும்பினுல் மகங்கள்செய்'

என்று கைவல்ய நூலுங் கூறுகின்றது.

அங்ஙனமே,

"கொலையாதியகன்ருெழுகுந் தவங்கடாமே,
குற்றமிலா நற்றவமென்றுரைக்க நூலும்,
கொலையாதி யகற்றிய நல் லறங்கடாமே,
குவலயத்தி லொப்பரிய வறங்களாகும்"

என்று, சிவஞான தீபமுங் கூறுகின்றது. இன்னோரன்னவைகள் எண்ணிறந்தன.

மேலும் இதுவே, சைனம், பௌத்தம் முதலான சமயங்களின் தலைசிறந்த கொள்கையுமாம். விரிக்கிற் பெருகும். இவ்வாற்ருல், யாகத்திற்செய்யும் பசுக்கொலை பாவமே யென்பது பெறப்பட்டது.

இனி, ஈண்டு 'ஒருயிரையுங் கொல்லற்க' என்பது பொது விதியாம். 'அக்கினி சோமங்களின் பசுவைக் கொல்க' என்பதோ, சிறப்பு விதியாம்

இவற்றுள். பொதுவிதியானது சிறப்புவிதியைக் கெடுக்காது. விடயம் வேறு னமையின் என்பது யாண்டுமுள்ள ஒருவகைப் பரிகாரமாம்.

இப்பொருளையே,

" அசுத்தமாமெனின் இல்லை விதியாதலால் "

என்னும், வியாச சூத்திரத்திற்குப் பாடிய முறைப்பான் புகுந்து, யாகம், தரும மாதலின் அதிற் செய்யப்படும் கொலை பாவமாதலால் அத்தகைய தருமம் எவ் வாறு அசுத்தப்படும்? என்று பாடியஞ் செய்புமிடத்து, பகாவன் சங்கராசாரி யருங் கூறியுள்ளார் என்பதை யுணர்க.

மற்றும், இதை நன்கு உற்று நோக்கில், யாகத்திற் செய்யும் பசுக்கொலை கொலையே ஆகாது. மற்றே, முரணைப் பாதுகாப்பேயாகும். என்னை? கொலை யென்பது, பெருங் கேட்டை விளைவிக்கும் தீய தொழிலாம். யாகத்திற் செய் யப்படும் பசுவின் கொலையோ, பெருங் கேட்டைத்தருவதோர் இம்சையன்று. எவ்வாற்றலெனின்? உயிர் நீத்தலாகிய சிறிய துன்பத்தால் பேரின்பந்தரும் சுவர்க்கமடையப்படுதலின் என்க. இதனுல் யாகத்தில் உயிர் துறந்த உயிர்கள் சுவர்க்கத்தில் இன்புற்று வாழும் என்பது பெற்றும்.

அற்றாகலினன்றே,

हिरण्य शरीर ऊर्ध्वस्स्वर्गं लोकमेति ।

அதாவது, பொன்னுடம்பை யெடுத்துக் கொண்டு மேலாகிய சுவர்க்க லோகத்தை யடைகின்றது, என்றும்,

नवा उवे तन्मृयसे ।

அதாவது, 'அவ்வுயிர் இறக்கின்றதில்லை' என்றும், வேதமந்திரங்களுங் கூறுகின்றன.

மற்றும், கொல்லும் விதியைக் கூறும்போதும்,

संते प्राणो वायुना गच्छताꣳ ।

" அப்பசுவின் பிராணன் வாயுவுடன் ஒன்றுருக "

என்று, அவ்வுயிரின் மரணமின்மையையே போதிக்கின்றது.

இவ்வாறே எண்ணிறந்த பிரமாணங்க ளிருக்கின்றன என்பதையுமுணர்க. மற்றும், இப்பொருளையே இராமாநுசரும், தேசிகாசாரியரும் மிக விரித்துக் கூறியுள்ளார்கள் அதை ஆண்டுக் காண்க.

பாரதம் அநுசாசன பருவத்திலும்,

यस्मात्पशुत्वमिच्छन्ति पशवस्वर्ग लिप्सया ।
तस्मात्पशुवधे हिंसा नास्ति यज्ञेषु पाण्डव ॥

என்று கூறப்பட்டிருக்கின்றது.

இனி, இக்கருத்தையே,

"பூசுரருக்கிழிவு இலை யாகத்து உயிர் கொன்று அருந்தலின்
விண் புகுதா நிற்பர்
கோசமெடுத்து உரை நவிற்று ஆசிரியர் சிறுர்க்கு
இதமதுபின் கொடுப்பான் முன்னர்
ஆசுமிகு துயர்விளைத்தும் இதம் அதுவாப்
பொருள் பெறலின் அரியவேத
ஓசைமிகும் அமருலகை அவர் வதைத்த
சீவனும் பெற்று உய்தலாலே"

என்று, உண்மைச் சைவசமய உபதேசகராகிய சாந்தலிங்க சுவாமிகளும் தமது கொலை மறுத்தல் என்னும் நூலில் இனிது அறிவுறுத்தியுள்ளார். மற்றும் இவ்வாறே வருவனவற்றை யூகித்துக்கொள்க.

## அவிகளை ஏற்பவனும் பயனை அளிக்கின்றவனும் பரசிவனே.

ஈண்டு, யாகங்களில் கொடுக்கின்ற அவிகளை ஏற்றுக் கொள்ளுகின்ற தேவதைகள் பல்வேறு வகைப்பட்டவைகள். ஏனெனின்? பல்வகைத் தேவதைகளின் பெயர்களைக் குறித்து அவிகள் அர்ப்பிக்கப்படுதலின் என்க.

இதனாலன்றே,

'இந்திராய ஸ்வாஹா', 'அக்கினயே ஸ்வாஹா' என்பது முதலிய மந்திரங்களைக் கூறி ஹோமங்கள் செய்யப்படுகின்றன.

அங்ஙனமே, அந்த அவிகளை ஏற்றுக் களிப்புற்று அவரவர்கள் விரும்பும் பயனை யளிக்கின்ற தேவதைகளும் இந்திரன் முதலிய தேவதைகளே யாவர்கள் என்பதையு முணர்க.

இதுபற்றியே,

"அவீஸ்ரதத்தாதி த்ரவ்யேஷு அத்தீந்த்ரம் பிபசப்ரஸ்திதஸ்யாக்னிரிதம் ஹவிரஜுஷதே" என்பது முதலிய மந்திர வாக்கியங்களில் இப்பொருள் கூறப்பட்டுள்ளது.

மற்றும்,

'த்ருபத் ஏவைநமிந்தர: ப்ரஜயா பசுபிஸ்தர்ப்பயதீ' என்பது முதலிய வாக்கியங்களில் பயனை யளிக்கின்றவர்களும் இந்திரன் முதலான தேவர்களே என்பதும் புலப்படுகின்றது. மற்றும், இவ்வாறே வருவனவற்று ணுணர்க.

இவ்வாற்றல், இந்திரன் முதலான பல்வகைத் தேவதைகள் வேள்விக்குரிய தேவதைகளாகுமிடத்து பரமேசுரனே வேள்விக்கிறைவன் எனல் எங்ஙனமெனின்? உண்மை. அற்றேல், இந்திரன் முதலான தேவதைகள் கண்ணுக்குப் புலப்படாமையானும், அக்கினியின் கண்ணேயே அவிகளனைத்தையும்

ஈதல் யாண்டும் புலப்படுவதானும் அக்கினியே அவியேற்பதும் பயனை யளிப்பதுமாம் என்பதும் எளிதாமன்றோ, ஆம். அதுவே எமது கோட்பாடுமா மெனின்றோ? நன்று நன்று. ஒருவரிடத்தில் ஒரு பொருளைக் கொடுக்கில் அது அவருடையதேயாம் என்பது உலகவழக்கிலாவது உண்டா? இல்லை; அங்ஙனமிருக்க அக்கினியிலிட்ட அவிமாத்திரம் அக்கினிக்கே என்பது எவ்வாறு பொருந்தும்? பொருந்தா, என்னை? அக்கினியானது, தேவர்களுக்கு அவியேற்றுக்கொண்டு போய்ச் சேர்க்கும் ஒரு தூதுவனாதலின் என்க.

அற்றாகலினன்றே,

'அக்னிம் தூதம் வ்ருணீ மஹே'

அதாவது, "தூதனாகிய அக்கினியை யழைக்கின்றோம்" என்று வேத மந்திரமே கூறுகின்றது.

இவ்வாறே,

अग्नौ प्रास्ताहुतिः सम्यगादित्यमुपतिष्ठते ।
आदित्याज्जायते वृष्टिः वृष्टेरन्नं ततः प्रजाः ॥

என்று, மிருதியிலும் அருளிச் செய்துள்ளார் என்பதையு முணர்க.

அற்றேல், 'அக்கினியே எல்லாத் தேவர்களுள்ளுஞ் சிறந்தது' என்பது போன்ற மந்திரங்கட்கு யாது கதியாமெனின்? கதி உண்டு; என்னை? தேவர்கள், வேள்வி செய்வதற்குச் சமித்து வகைகள் தேடும்போது அவர்களோடு அசுரர்கள் கலந்து கொண்டு அவர்களைப் பழித்ததால் இருவகையார்களுக்கும் போர் மூண்டபோது ஏனைய தேவர்கள் சிற்சிலவற்றைப் புகல அக்கினி மாத்திரம் ஒன்றும் பேசாதிருந்ததால், அது முதல் அக்கினியை, தேவர்கள் தெய்வமாகக் கொண்டு வழிபடத் தொடங்கினர்; ஆதலின் அக்கினி, தேவதைகளிற் சிறப்புடையதா மென்பதே அதன் கருத்தெனக் கொள்க

இதுபற்றியே,

'அக்னிர்முகம் ப்ரதமோ தேவாநாம்' என்று, வேதமந்திரமுங் கூறுகின்றது.

அஃதன்றியும், அக்கினியை பரமான்மதத்துவமாகக் கூறியவிடங்களில், அக்கினியின் அதிட்டானமாகிய பரமேசுரனே கொள்ளுதற்குரியன் என்பதையும் உணர்க. இதன் விரிவை, சாமவேத உபோற்காதத்தின் தேவதையியலிற் காண்க.

ஈண்டு, அறியக்கிடந்ததோர் இரகசியத்தைக் காண்க. அதாவது, மாயோன் முதலான எவ்வகைப்பட்ட தேவதைகட்கு அவியை அர்ப்பணஞ் செய்யினும் அது உருத்திர பரமேசுரனுக்கே அர்ப்பணஞ் செய்ததாகும்

ஏனெனின்? எல்லாத் தேவர்களுக்கும் பரமேசுரன் ஒருவனே அதிட்டானன் ஆதலின் என்பதாம்.

இதை, அருச்சுனன், விஷ்ணுவிற்கு அர்ப்பித்த பொருள்கள், பரசிவன் திருவடித்தாமரைகளிற் கிடந்தன என்னும் பாரதக் கதையாற் காண்க.

அற்றாகலினன்றே,

पञ्चोपहारं सकलं नैशं निमित्तमात्मनः ।
ददर्श त्र्यम्भकाभ्यासे वासुदेवे निवेदितम् ॥

என்னும் பாரதத்தில், துரோணபருவ வாக்கியமும் இக்கருத்தையே கூறுகின்றது.

மற்றும்,

अहं हि सर्वहविषां भोक्ताचैव फलप्रदः ।
सर्वदेव तनुर्भूत्वा सर्वात्मा सर्वसंस्थितिः ॥

என்று, பரசிவன் நேரே திருவாய் மலர்ந்தருளிய கூர்மபுராண வாக்கியத்தாலும் இதிலுள்ள ஐயத்தை யகற்றுக.

அஃதன்றியும், வேள்வி முதலியவைகளில் எண்ணிறந்த தேவதைகளின் பெயர்கள் கூறப்பட்டிருப்பினும் அப்பெயர்களனைத்தும் பரசிவன் ஒருவனுடைய திருநாமங்களேயாகின்றன. இதையே, தமிழ் வேதங்களும்,

'நாமநாறாயிரஞ் சொல்லி வானோர் தொழுநாதனும்' என்றும்,

'பேராயிரம் பரவும் பெம்மான்றன்னை' என்றும்,

"ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமிலார்க்கு ஆயிரம்
திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமே"

என்றும், இனிது விளக்குகின்றன.

அற்றாகலினன்றே,

शब्दजात मशेषन्तु शंभु र्मनोरमा ।
अर्थस्वरूपमखिलं धत्ते मुग्धेन्दु शेखरः ॥
यस्य यस्य पदार्थस्य या या शक्ति रुदीरिता ।
सा सा सर्वेश्वरी देवी स स सर्वो महेश्वरः ॥

என்னும் வாயவீய சம்மிதையும் இதையே கூறி யிருக்கின்றது.

அற்றேலஃதாகுக, பரசிவன், கொலை செய்து சமைத்தளித்த ஊனை ஏற்றுண்டு களிப்பவன் எனின்? அந்தோ! அந்தோ! அவன் உலகிற்கிறையவன்

என்றும், உயிர்களிடத்துப் பேரருள் உடையானென்றும், மற்றும் பல்வகை யான பெருங்குணமுடையா னென்றும் அவன் போற்றுதற்கும் உரியான் கொல்லோ ?

இதுபற்றியே, வேதமந்திரங்களும்,

**अयं सोमं कपर्दिने घृतं न पवते मधु ।**

அதாவது, "இச்சோம கபர்த்தியாகிய பரசிவனுக்கு" எனவும்,

**इमं पशुं पशुपते अद्य बधाम्यग्ने सुकृतस्य मध्ये ।**

அதாவது, "பசுபதிக்குரிய இப்பசுவை (ஆட்டுக் கடாவை) இப்போது கட்டுகின்றேன்" எனவும், பரசிவனுக்கு பலி ஏற்றருந்தலுங் கூறப்பட்டிருக்கின்றது. மற்றும் இவ்வாறே வருவனவற்றுற் காண்க.

இவ்வாறே, தெய்வத் திருமறையும்,

'வட்டக் குண்டத்தில் எரிவளர்த்தோம்பி மறைபயில்வார்,
அட்டக் கொண்டுண்ப தறிந்தோமே நாமிவர்க்காட்படோமே'

என்று கூறுகின்றது.

சோமாசி நாயனாரின் யாகத்தில், வெட்டியானைப்போல் கொட்டி முழக்கித் தியாகங் கொண்டதும் இதனையன்றே, வற்புறுத்துகின்றது.

ஆனல், அங்ஙனமேயாகுக ; இதனாற்படுமிழுக்கு என்னை கொலோ ? ஒன்றும் இல்லை. எவ்வாற்றாலெனின் ? எல்லாப் பசுக்களுக்கும் பரசிவன் ஒருவனே பதியாதலின் (இறைவனாதலின்) அவனுடைய அநுக்ஞையை ஏற்றுக்கொண்ட பிறகே ஏனைய தேவர்கட்கு அவிர்ப்பலி ஈதல் உரியதாமாதலின், பசுபதியின் பசு என்றதே யொழிய, பசுபதிக்கு இப்பசு பலி கொடுக்கப்படுகின்றது என்பது அதற்குப் பொருளன்று. இவ்வாறே, பசுபதியின் சோமம் என்றதும் எல்லாவற்றின் உற்பத்திக்குங் காரணனாகிய பரமேசுரன் அநுக்ஞையால் சோமம் ஏனைய தேவதைகட்கு அளித்தல் வேண்டும் என்பதே கருத்தாமென்பதாலெனக. ஈண்டு, இவ்வாறு பொருள் கொள்வதே ஏற்புடையதாம்.

இதை,

**उत्पत्तितश्शिव गृहीत समन्वयास्ते**
**सोमः पशुर्गविचसन्ति हवींषितानि ।**
**देवाः पशौ हवीषि भागमनुज्ञायाते**
**गृह्णन्ति तद्वदितरेण्वपि कल्पनीयम् ॥**

என்னும் அரதத்த வாக்காற்றெளிக.

ஈண்டு, இவ்வாறு பரசிவனுக்கு ஊன்பலி ஏற்றல் பொருந்ாதென்று வாதாடினே, பேரன்பின் பெருக்கால் கொடுக்கப்படுகின்றதே பரசிவனுக்கு மிக விருப்புடையதாம், மற்றவை அன்றென்று மறுக்க.

அற்றாகலினன்றே,

"வெய்யகனற் பதங்கொள்ள வெந்துளதோ வெனுமன்பால்
மைபு மனத்தினிமையினின் மையமிக மென்றிடலால்
செய்யுமறை வேள்வியோர் முன்பு தருந்திருந்தவியில்
எய்யும்வரிச் சிலைப்பவன்றான் இட்டவூன் எனக்கினிய"

என்னும், பெரிய புராணத்திலுள்ள நேரே பரசிவன் திருவாய் மலர்ந்தருளிய அரியதோர் அருட்டிரு விருத்தமும் இதையே கூறுகின்றது. விரிக்கிற் பெருகும்.

உபோற்காதம் முடிந்தது.



## காருகபத்திய அக்கினிக்குண்டத்தின் இயல்பைக்காட்டும் படம்.

முதலில், கிழக்கு இதுதான் என்று துணிந்து கொள்ளல் வேண்டும்.

அதன் பிறகு, காரிகையில், 14 அங்குலம் கூறி யிருப்பினும், வேள்வி செய்யும் ஆன்றோர்களின் வழக்கைத் தழுவி, பதின்மூன்றரை அங்குல நீள முள்ள ஒரு கயிற்றை எடுத்து, நடுவில் ஒரு சங்கு என்னும் முளையை அடித்து அதிற் கட்டிவிட்டு, அக் கயிற்றைச் சுற்றினால் ஒரு சக்கரம் போன்று குறியுண் டாகும் அக்குண்டமே காருகபத்திய மென்னும் வேள்வித்தீயினுடைய இட மாம். இக் குண்டம் மூன்று மேகலைகளை (கழுத்து வரம்புகளை) யுடையதாம். உயரம், 6 அங்குலம்.

இதை, இங்குப் போடப்பட்டிருக்கின்ற வட்ட வடிவத்திற் கண்டுகொள்க.



இதற்குக் காரிகை :—

प्राचीं निश्चित्य ततः पश्चात् मध्यान्मन्वंगुलेनतु ।
सूत्रेण भ्रमयेद्गार्हपत्यायतन मुच्यते ॥

என்பது.

## ஆகவனீயாக்கினிக் குண்டத்தின் இயல்பைக்காட்டும் படம்.

பிறகு, முன்னர்ப் போட்டுள்ள காருகபத்தியச் சக்கரத்திலிருந்து எட்டு அடி கிழக்கில் தள்ளிப்போய், இருபத்துநான்கு அங்குலங்கள் நீளங்கொண்ட ஒரு கயிற்றை யெடுத்து, அத்துடன் அவ்வளவாக மற்றும் ஒரு பாகத்தை யுஞ் சேர்த்துக்கொண்டு, சேர்த்துக்கொண்ட பங்காகிய இருபத்துநான்கு அங்குலமுள்ள பாதியை இரண்டாய்ப் பங்கிட்டு, அவ்விரண்டு பங்கினுள் உட்பாதியையும் இரண்டு பங்காக்கி, அவற்றில் ஒரு குறிவைத்துக்கொண்டு, அக்கயிற்றை யெடுத்து, அதாவது ஒரு பாதியாகிய இருபத்துநான்கு அங் குலங்களுடன் சேர்த்த பாதியின் நாலில் ஒரு பங்காகிய ஆறங்குலத்தையுஞ் சேர்த்து முப்பதங்குலங்கள் அளவு கொண்ட அக் கயிற்றின் ஒரு தலைப்பை யெடுத்து, நாற்கோணத்தின் கீழ்ப்பக்கத்திற்கு நடுவில் பிடித்துக்கொண்டு, மற் றொரு தலைப்பை நாற்கோணத்தின் மேல்பக்கத்தின் நடுவில் பிடித்துக்கொண்டு, உட்பாதியை மூலையாக்கி இழுக்கில், மேலே முப்பதங்குலமும், கீழே பதி னெட்டு அங்குலமுமாக நிற்கும். அப்போது அதன் பக்கத்திலுள்ள உட் பாதியிலும், அவ்வாறே அடுத்த பக்கத்திலும் அக் கயிற்றைப் பிடித்து, அதன் உட்பாதியிலும் கணக்கெடுத்துக் கோடிட்டால் எடுத்த மூலையில், வெளி யில் தள்ளுபடி அவ்வாறங்குலமாகும். உள்ளில் பன்னிரண்டு பன்னிரண்டு அங்குலங்களாகவும் நாற்கோணம் இனிதமையும். இதுவே ஆகவனீய அக் கினிக் குண்டமெனப்படும். இது, மூன்று மேகலைகளை (கழுத்து வரம்புகளை) யுடையது. இதன் உயரம், 6 அங்குலம்.

இதை, இங்கு போடப்பட்டிருக்கின்ற இப்படத்திற் காண்க.




இதற்குக் காரிகை,

तद्वहिः प्राक् पदान्यष्टौ गत्वातु चतुरश्रकम् । द्वि सूर्यांगुलिमानेन कुर्यादाहवनीयकम् ॥ १ ॥
यावत्प्रमाणा रज्जुस्यात् तावानेवागमो भवेत् । आगमार्धेतु शंकुस्यात् अंतरर्धे निरंछनम् ॥२॥
प्रतिमुच्य ततः पाशौ शंकून् कोणेषु निक्षिपेत् । என்பது.

## தட்சிணக்கினிக் குண்டத்தின் இயல்பைக் காட்டும் படம்.

வேதிகையின் நீளத்தை, அதாவது எட்டு அடிகளை, ஐந்தாகவேனும், அல்லது, ஆறாகவேனும் பங்கிட்டுக் கொண்டு, அவ் வெட்டில் ஒரு பங்கு அதனுடன் கூட்டிச் சேர்த்துக் கொண்டு, பிறகு, அக்கயிற்றை மூன்றாய் மடித்துக் குறி வைத்துக்கொண்டு, அக்கயிற்றின் நுனிகளை, வேதிகையின் கீழ் மேல் நடுவில் பிடித்து அம் மூன்று பங்கில் ஒரு பங்கை தெற்கில் மேல் மூலையாகப் பிடிக்கில், மேலே ஒரு பங்கும் கீழே இரண்டு பங்குமாக நிற்கும். அப்போது அதிலுள்ள மூலையே தக்ஷிணாக்கினிக் குண்டத்தின் வடக்கு நடுவாகும். அதிலிருந்து பத்தொன்பது அங்குலக் கயிற்றைச் சுற்றில், அது, அச்சக்கரக் குண்டத்தின் தென்பாதியாகும். இது தக்ஷிணாக்கினியின் இடமாம். இது, மூன்று மேகலைகளை யுடையதாம். இதன் உயரம், 6 அங்குலம்.

இதை, கீழ்க் காட்டியிருக்கின்ற படத்திற் காண்க.



இதற்குக் காரிகை,

आयामं पञ्चधा कृत्वा षोढा वागन्तु षष्ठकम् ।
सप्तमं वा समंत्रेधा दक्षिणाग्न्य परत्रिके ॥ १ ॥
अंगुल्येकोनविंशत्या मण्डलेऽर्धन्तु दक्षिणा ।

என்பது.

## அம்சம், சுரோணி என்பவைகளின் இயல்பைக் காட்டும் படம்.

*வேதியின் நீளத்தை எட்டுப் பங்காக்கி, அதாவது ஒவ்வொரு அடியாய்ப் பங்கிட்டு, அதில் ஐந்து பங்கை வேதிகையின் நடுவிலிருந்து மூலையாகவும், மூன்று பங்கை, மேலேனும் அல்லது கீழேனும் நடுவிலிருந்து குறுக்காய் இழுத்துப் பிடிக்கில், மூன்று பங்கில் பாதி கொண்டது அம்சமாகும். இதில் பதினெட்டங்குலம் தள்ளுபடியாகும். அதாவது ஒன்றரைப் பங்கு தள்ளுபடியாம். அந்தத் தள்ளுபடியில் பாதியை யெடுத்து சேர்த்துக் கொண்டதுவே சுரோணியாகும். இதில் தள்ளுபடி ஒன்பது அங்குலமாகும்.*

*இதை, கீழே காட்டியிருக்கின்ற படத்திற் காண்க.*




*இதற்குக் காரிகை*

**वेद्यायामोऽष्टधाकार्यः पञ्चिका मध्यमेक्षणया ।**

**त्रिका तिर्यक् त्रिकार्धैंसौ श्रोणी अध्यर्धके परे ॥ १ ॥**

**वेद्यायतन निर्माणं द्वित्रि मेखलकं क्रमात् ।**

என்பது.

# தரிசபூரணமாத யாகத்தின் முழுப்படம்.



*இதிலுள்ள எண்கள் அங்குலங்களைக் காட்டுகின்றன.*

மேற்கு

## எட்டுக்கபாலங்களை (அகல்களை) வைக்கும் முறையைக் காட்டும் படம்.




இதில் காட்டியிருக்கும் ஒன்று இரண்டு முதலிய எண் முறைப்படியே அகல்களை வைத்து அவற்றின் மேல் புரோடாசத்தைச் செய்தல் வேண்டும் என்பதாம்.

## பதினொரு அகல்களை வைக்கும் முறையைக் காட்டும் படம்.






இதில் போட்டிருக்கும் ஒன்று இரண்டு முதலான எண்களின் முறைப்படியே அகல்களை வைத்து அவற்றின் மேல் புரோடாசஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

## அநுபந்தத்திலுள்ள அக்கினி ஆதானத்தின்

# பிழை திருத்தங்கள்.

| பக். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 7 | 8 | य | य॑ |
| ,, | 9 | मर्व॑ | म॑र्व |
| ,, | ,, | गमि॑ | ग॑मि |
| 8 | 4 | ऊ॒र्जं॑ पृ॑थि॒ | ऊर्जं॑ पृथि॒ |
| ,, | ,, | द॒ः पुरू॑ | द॑ः पुरू॒ |
| ,, | 25 | विह | विह॑ |
| ,, | ,, | र॑ | र॒ |
| 9 | 19 | ति॒प्रय॑ | तिप्र॒य |
| 10 | 17 | विरोह | विरो॑ह |
| ,, | 18 | षे | षे॑ |
| ,, | 29 | सो | सो॑ |
| 11 | 17 | म॑श | मश॑ |
| 12 | 22 | द्धिं॑ | द्धिं |
| ,, | ,, | ह॑ | ह |
| 13 | 20 | செய்வதும் உண்டு | செய்தல் வேண்டும் |
| 14 | 10 | शं॒यो | शंयो॑ |
| ,, | 20 | பேனோடு | போனோடு |
| 15 | 1 | கிளாமரம் | சொத்தைக்கிளாமரம் |
| ,, | 18 | निर्वे | निर्वे॑ |
| 15 | 22 | निर्वे॑ | निर्वे |
| 16 | 9 | न्य॑ | न्य |
| ,, | 25 | புரசமரம் | அரசமரம் |
| ,, | 27 | चित्रि | चित्रि॑ |

| பக். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 17 | 2 | न स्वाहा | न |
| ,, | 9 | मम स्वाहा | मम |
| ,, | 16 | य स्वाहा | य |
| 19 | 4 | नि | नि |
| , | 5 | श | श |
| ,, | 6 | नि | नि |
| ,, | ,, | यतो | यतो |
| ,, | 7 | न्न | न्न |
| ,, | 18 | வேள்வித்தலைவன் | வேட்போன் |
| 20 | 3 | यथा | यथा |
| ,, | 8 | ददे | दधे |
| 22 | 10 | आखुं | आशुं |
| ,, | 16 | मृत | मृत |
| ,, | 25 | सं | सं |
| 23 | 14 | नः | नाः |
| ,, | 17 | सर्पो | सर्पो |
| 26 | 18 | नः | तु |
| 32 | 17 | पितरं | पितरं |
| 33 | 1 | आरभे | आदधे |
| ,, | 15 | ...... | பத்தினி மூவரும் |
| 34 | 8 | தென்புறம் | கீழ்புறம் |
| 35 | 12 | ...... | यास्ते अग्ने घोरास्तनुवः। ताभिः पाप्मानं गच्छ । योस्मान्द्वेष्टि । यंच वयं द्विष्मः । இம் மந்திரத்தைச் சேர்த்துக்கொள்க. |
| ,, | 14 | सेदि | सेदि |
| 37 | 6 | ...... | 'अग्नेसम्राट्' என்பது முதலிய தையஞ் சேர்த்துக்கொள்க. |

| பக். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 37 | 23 | नां स्वाहा | नां |
| 38 | 3 | यि स्वाहा | यिं |
| ,, | 10 | यं स्वाहा | यं |
| ,, | 17 | उदारदु | उदारद्धु |
| ,, | 18 | भिः स्वाहा | भिंः |
| ,, | 26 | स्यमानं | स्यमानं |
| ,, | ,, | वमी | वमी |
| 39 | 7 | शं स्वाहा | शं |
| ,, | 16 | जाः स्वाहा | जाः |
| ,, | 23 | द्धे स्वाहा | द्धे |
| 40 | 4 | घारां | घारां |
| ,, | ,, | गांस्वाहा | गां |
| ,, | 17 | ...... | यास्ते अग्ने घोरास्तनुवः । ताभिः पाप्मानं गच्छ । योस्मान्द्वेष्टि । यंच वयं द्विष्मः । இம் மந்திரத்தைச் சேர்த்துக்கொள்க. |
| 41 | 3 | स्वाहा | स्वाहा |
| ,, | 15 | பிராயச்சித்த | மேகமறைக்கில் பிராயச்சித்த |
| ,, | 16 | श्यन्तो | श्यन्तो |
| 42 | 17 | अया | अया |
| 43 | 5 | मुक्षी | मुंक्षी |
| 44 | | பிராயச்சித்தங்கள் | 'अनाज्ञातं' என்பது முதலியது அவசியஞ் செய்யற்பாலது. ஏனையவைகள், குற்றம் ஏற்படின் செய்யத்தக்கன என்பதை யுணர்க. |
| 44 | 26 | ...... | எசுர் விடுபடில், 'भुवः स्वाहा' என்று தட்சிணாக்கினியில் ஓமஞ் செய்தல் வேண்டும். என்பதைச் சேர்க்க. |

## அநுபந்தத்திலுள்ள அக்கினி ஹோத்திரத்தின் பிழை திருத்தங்கள்

| பக். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 47 | 11 | तेह | ते विधे |
| ,, | 12 | सो ममपात् | सोमं पिबतु |
| ,, | 13 | मादेव्यस्त...स्वाहा | अस्मासु नृम्णं धत्स्वाहा |
| 48 | 8 | மாணவன் | வேள்வித்தலைவன் |
| ,, | 9 | प्रणेन | प्राणेन |
| ,, | 21 | मस्मि | मस्ति |
| 50 | 10 | मि | मयि श्रद्धा |
| ,, | 11 | (நீரைத் தொட்டுத் துடைத்து | நீரை ஆசமனஞ் செய்து |
| ,, | 16 | ஆகவனீயம் | காருகபத்தியம் |
| ,, | 27 | காருகபத்தியத்தில் | காருகபத்தியத்திற்கு வடக்கருகில் |
| ,, | 30 | அதைப் பார்த்தல் வேண்டும் | தருப்பையால் காருகபத்தியத்தைக் காட்டிப் பார்த்தல் வேண்டும் |
| 51 | 5 | र्षते | र्षति |
| ,, | ,, | मृच | मच्छ |
| ,, | 15 | மும்முறை ஓதி | ஒருமுறை ஓதி |
| 52 | 22 | 'प्रजाः दृःह' என்று கையைக் காய்ச்சிக்கொண்டு, என்பதை | 'सजूर्देवैः' என்பது முதலிய மந்திரத்திற்குப் பின்னர்க் கொள்க. |
| 53 | 4 | क्षमन्विहि | क्षंवीहि |
| 54 | 21 | ...... | 'प्रजां मे यच्छ' என்பதை சேர்க்க |
| 56 | 8 | மும்முறை | இருமுறை |
| ,, | 12 | ,, | ,, |
| ,, | 24 | देशं चतुष्पेदे | देच चतुष्पदे |
| 58 | 12 | पिपीलिकान् | पिपीलिका |
| ,, | 21 | केभ्यः | काभ्यः |
| 59 | 26 | தலைமேல் தெளித்துக் கொள்ளல் வேண்டும் | பரிஷேசனஞ் செய்தல் வேண்டும் |
| ,, | 30 | ...... | 'अनाघ्रातं' என்பது முதலியதை சேர்க்க |
| 60 | 15 | उपगां | उपागामष्तु श्रद्धा |
| ,, | 17 | இடது காலால் தாண்டிக் கொண்டு | ஆகவனீயத்திற்கு வடபுறமாய் வந்து அந்தர்வேதியில் நின்றுகொண்டு |



# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை அநுபந்தம்.

ஈண்டு, இல்லறத்தையே ஒரு நல்லறமாகக் கொண்ட அந்தணன், தைத்திரீய சுருதியில், 'அக்ஷய ஆதாதவ்யா:' என்று விதித்தவாறே, மூன்று வேள்வித் தீக்களேயு முண்டாக்கி, உயிருடன் வாழும் வரையும், அவைகளை வழிபட்டுக்கொண்டே வரல்வேண்டும்.

ஆதானம், சுவதந்திரமாகிய ஒரு கருமம். எந்த யாகங்களுக்கும் அங்கமன்று; இதனால் உண்டான அக்கினிகளை, பல்வகை யாகங்கட்கு வேதம் விதித்திருக்கின்றது.

ஆதான மென்பது—காருகபத்தியாக்கினி, ஆகவனீயாக்கினி, தக்ஷிணக்கினி என்னும், மூன்றக்கினிகளேயு முண்டாக்குங் கிரியையாம். இஃது, அமாவாசையிற் செய்யப்படுவதும், நல்ல நாளிற் செய்யப்படுவதும், அக்கினிஹோத்ர பூர்வாதானம் எனவும், பௌர்ணமியிற் செய்யப்படுவது 'இஷ்டி பூர்வாதான' மெனவும் வழங்கப்பெறும். மற்றும்,

ஆதானஞ் செய்த பின்னர், சோமயாக சங்கற்ப முதலானவைகளாற் செய்யப்படுவது, 'சோமபூர்வ' மென வழங்கப்பெறும்.

இவ்வாறு உண்டாக்கும் அக்கினிகளுள், காருகபத்திய அக்கினியின் இடம் வட்டக்குண்டம். ஆகவனீயாக்கினிக்கு இடம் நாலுமூலைக்குண்டம். தக்ஷிணக்கினிக்கு இடம் பிறைபோன்ற குண்டம். இவை, காருகபத்தியத்திற்குக் கிழக்கில் ஆகவனீயமும், அவ்விரண்டிற்குந் தெற்கில் தக்ஷிணக்கினியுமாக இருத்தல் வேண்டும்.

மற்றும், சபையினும் அக்கினியாதானஞ் செய்யப்படும். இது 'சப்யாக்கினி' என வழங்கப்பெறும்.

அதிதிகள் வாழுமிடத்திலும் அக்கினியாதானஞ் செய்யப்படும். இஃது 'ஆவசத்ய' மென வழங்கப்பெறும்.

மற்றும், இஃது, இருது நக்ஷத்திரங்களை நோக்கிச் செய்தல், பருவத்திற் செய்தல், பருவ நக்ஷத்திரத்திற் செய்தல், கேவலம் (தனி) இருதுவிற் செய்தல் என நான்கு வகைகளேயு முடையதாம்.

இங்கு, எசுர்வேதத்தில், முதலாவது தரிசபூரணமாச வேள்விகள் கூறப்படுகின்றன. அவ் வேள்விகளோ, அக்கினிகளின்றி முடியாதன. அக்கினிகளோ, ஆதானக் கிரியையின்றி பெறப்படாதன. ஆதலின், முன்னர் ஈண்டு, ஆதானமே கூறப்படுகின்றது.

இவ் வாதான முடிந்தவுடனே பவமான இஷ்டியும் (தீக்களைப் புனிதப் படுத்தும் இஷ்டியும்) ஒருதலையாகச் செய்யற்பாலதாம். இன்றெனில், தீக்க ளுண்டாகியும், வேள்விக்குரியனவாகா என்பதை யுணர்க.

இவ்வாறு, தீக்களை யுண்டாக்கி மரணம் வரை வழிபட்டு வருதல் பொது விதியாம். சிறப்பு விதியில், பன்னிரண்டு இரவுகள் வரை அவசியமாக அக் கினி ஹோத்ரஞ் செய்து வரல் வேண்டும். ஆறிரவுகள், மூன்றிரவுகள் என் பாரு முளர். இதுவும், அக்கினி ஹோத்ர பூர்வாதானத்தில். இஷ்டி பூர்வா தானத்திலோ, இவ் வாராய்ச்சியே இல்லை என்பது உரைற்பாலது.

மேற்கூறியவாற்ருல், அந்தணனென்பவன், தனது இல்லத்தின் ஒரு பாகத்தில், முறைப்படி மூன்றக்கினிகளையும் வளர்த்து வழிபட்டு வரல்வேண் டும். இன்றெனில், காருகபத்தியமென்னும் ஒரு தீயை மாத்திரமேனும் பாதுகாத்துக்கொண்டே வரல் வேண்டும். மற்றிரண்டையும், கருமங்கள் செய்யும்போது, காருகபத்தியமென்னுந் தீயிலிருந்து எடுத்துத் தீ மூட்டிக் கொண்டு வளர்த்தல் வேண்டும். இவ் விரண்டும், கருமமுடிந்தவுடன் அணைந்துவிடலாம். ஏனெனின்? கருமமுடிந்தவுடன், வைதிகாக்கினி என் னும் பெயர் இல்லை ஆதலினென்க. மந்திர முதவானவைகளாற் புனிதமாகிய அக்கினி வைதிகாக்கினி. அஃதிலாதது. இலௌகிகம் என்பது திரண்ட பொருள்.

வேள்வித் தீக்களை யுண்டாக்குவதில்,

சூத்திரப்படி

வேள்வியாளர்கட்கு மதுபர்க்கம் அளித்தல்.

சங்கற்பம்.

மனையாளுடன் கூடிய வேள்வித்தலைவன், தருப்பையின் மீது அமர்ந்து, கையைப் புநிதமாக்கிக்கொண்டு, ஆசமனஞ் செய்து, "எனது பாவ நிவிர்த்தி வாயிலாகப் பரமேசுரன் பிரியமடைதற் பொருட்டு, அக்கினியை யுண்டாக்கு வேனாக" என்று சங்கற்பித்துக்கொண்டு, வேள்வியாளர்களை அழைத்தல் வேண்டும்.

அவற்றுள், வேள்வித் தலைவன் '**अस्मिन्नाधाने चन्द्रमा मे ब्रह्मा स मे ब्रह्मा ब्रह्माणं त्वा वृणे**' என்று, முதலில், பிரமனை அழைத்தல் வேண்டும். பிரமன், '**महन्मे वोचः**' என்பது முதலிய மந்திரத்தை ஓதி, '**अहं ते मानुषः**' என்று முடித்தல் வேண்டும்.

பிரமன்—வேள்வியைப் பரிபாலிக்கும் வகையால் சாக்ஷியாய் இருந்து வேள்வியை நடாத்துபவன்.

மற்றும், வேள்வித் தலைவன், '**अस्मिन्नाधाने अग्निर्होता**' என்பது முதலிய மந்திரத்தால், ஹோதாவை (இருக்கோதுவோனை) அழைத்தல் வேண்டும்.

ஹோதா, '**महन्मे वोचः**' என்பது முதலியவற்றை ஓதி, ஈற்றில் '**अहं ते मानुषः**' என்னல் வேண்டும்.

பின்னர், வேள்வித் தலைவன், '**अस्मिन्नाधाने आदित्यो मे अध्वर्युः**' என்பது முதலிய மந்திரத்தால் வேட்போனை அழைத்தல் வேண்டும்.

வேட்போன், '**महन्मे वोचः**' என்பது முதலியவற்றை ஓதி, '**अहं ते मानुषः**' என்று முடித்தல் வேண்டும்.

இவ்வாறே, ஆக்னீத்ரனையும் அழைத்தல் வேண்டும். ஈண்டு, ஒவ்வொருவரையும், அவரவர்களின் பெயரைச் சொல்லி அழைத்தல் வேண்டுமென்பதும் உரைரற்பாலது.

மதுபர்க்கத்தை ஏற்றுக்கொள்ளல்.

வேள்வித் தலைவன், 'தீ யுண்டாக்குவதற்கு அங்கமாகிய மதுபர்க்கத்தை வேள்வியாளர்களின் பொருட்டு அளிப்பேனாக' என்று சங்கற்பித்துக்கொண்டு, விஷ்டர:, விஷ்டர: என்று மும்முறை கூறி, ஆசனத்தின் பொருட்டு, வேள்வியாளர்களின் கையில், விரிப்பை (தருப்பையை)க் கொடுத்தல் வேண்டும்.

வேள்வியாளர்கள், ‘अहं वर्ष्म सजातानां विद्युतामिव सूर्यः। इदं तमधितिष्ठामि यो मा कश्चाभिदासति’ என்று, அத் தருப்பைகளை, வடக்கு நுனியாக போட்டுக் கொண்டு, அவ் வாசனத்தில் உட்காரல் வேண்டும்.

பின்னர், ஆராதிக்கின்றவன், *பாத்யம், பாத்யம் என மும்முறை கூறி, பாத்ய நீரை வேள்வியாளர்கட்குக் கொடுத்தல் வேண்டும். மற்றும், அந்நீரால், வேள்வியாளர்களின் இரண்டு கால்களையும், வலம், இடம் முறையாகக் கழுவிவிடல் வேண்டும்.

பின்னர், முன்போன்றே †அர்க்ய நீரை யேற்று, ஆசமனஞ் செய்து கொள்ளல் வேண்டும்.

பின்னர், கொண்டுவரப்போகும் மதுபர்க்கத்தை, ‘मित्रस्य त्वा चक्षुषा प्रतीक्षे’ என்று பார்த்தல் வேண்டும்.

தயிர்கலந்த தேன், அல்லது தயிர் கலந்த நெய் மதுபர்க்க மெனப்படும். இதை, இருக்-சங்கிதை, 1-14-91-6-வது மந்திரத்திற் காண்க.

அதன் பின், அதைக் கொடுப்போன், மதுபர்க்கம் மதுபர்க்கம் என, மும்முறை கூறிக்கொடுக்க, அம் மதுபர்க்கத்தை, ‘देवस्य त्वा सवितुः’ என்பது முதலிய மந்திரத்தால் இரண்டு கைகளையுஞ் சேர்த்து வாங்கி, ‘मधुवाता ऋतायते’ என்பது முதலிய மந்திரத்தால் முதலாவது முறையும், ‘मधु न क्तमु तोषसः’ என்பது முதலிய மந்திரத்தால் இரண்டாவது முறையும், ‘मधुमान्नो वनस्पतिः’ என்பது முதலிய மந்திரத்தால் மூன்றாவது முறையும் பார்த்தல்வேண்டும்.

பார்த்துவிட்டு, பெருவிரல் ஆழி விரல்களால், தெற்குச்சுற்றாக மும்முறை அதைத் துழாவி,

‘वसवस्त्वा गायत्रेण’ என்பது முதலியவற்றால் கிழக்கிலும்,

‘रुद्रास्त्वा’ என்பது முதலியவற்றால் தெற்கிலும்,

‘आदित्यास्त्वा’ என்பது முதலியவற்றால் மேற்கிலும்,

‘विश्वे त्वा देवा’ என்பது முதலியவற்றால் வடக்கிலும்,

‘भूतेभ्यस्त्वा’ என்று மேலிலும், அதிற் சிறிதெடுத்துத் தெறித்தல் வேண்டும். சிந்த லெனினுமாம்.

பின்னர், ‘अमृतोपस्तरणमसि’ என்ற மந்திரத்தால், முதலில் ஆசமனம் செய்தல் வேண்டும்.

---

* பாத்யம்—பாதம் அலம்பும் நீர். † அர்க்யம்—கை கழுவு நீர்.

பின்னர், 'विराजो दोहोऽसि' என, முதன் முறையும்,

'विराजो दोहमशीय' என, இரண்டா முறையும்,

'मयि दोहः पद्यायै विराजः' என, மூன்று முறையும், அம் மதுபர்க்கத்தை அருந்தல் வேண்டும்.

பின்னர், 'अमृतापिधानमसि' என, முதன் முறையும்,

'सत्यं यशः श्रीर्मयि श्रीः श्रयताम्' என, இரண்டா முறையும் ஆசமனஞ் செய்தல் வேண்டும்.

பின்னர், 'गौः गौः' என மும்முறை கூறி, வடக்கு முகமாக்கிப் பசுவைக் கொடுத்தல் வேண்டும்.

'माता रुद्राणां' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்துவிட்டு, 'ओमुत्सृजत' என்று கூறல் வேண்டும். பின்னர், அவர்கட்கு உணவும் அளித்தல் வேண்டும். அதன் பின் 'வேள்வித் தலைவன் செய்த மதுபர்க்க மென்னும் இக் கருமத்தாற் பரமேசுரன் பிரியமடைவானாக' எனக் கூறல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—ஆபத்தம்ப சூத்திரம், மந்திரமின்றியே வேள்வியாளர்களை அழைத்தல் முதலியவற்றைக் கூறுகின்றது. ஈண்டுக் கூறிய முறையோ, ஆசுவலாயன கிருஹ்ய சூத்திரத்திற் கண்டதாம். சோம யாகத்தில் மது பர்க்கமுங் கூறப்பட்டிருக்கின்றது.

### அரணியை (தீக்கடைக் கோலை)க் கொண்டுவருதல்.

**यो अश्वत्थः शमीगर्भ आरुरोह त्वे सचा ।**

**तं ते हरामि ब्रह्मणा यज्ञियैः केतुभिः सह ॥** தைத். பிரா. 1-2-1-21.

#### பாடியம்.

தீக்கடைக் கோலாகிய அரணி யென்னுங் கட்டையே! நீ, ஒரு நிமித்தம் பற்றியே வன்னிமரத்தின் நடுவில் முளைத்து அரசமரமாய் வளர்ந்தனை. அத் தகைய வுன்னை, மந்திரத்தால், மேற்செய்யப்படும் வேள்விக்குரிய பாத்திரங்களைத் தொடுதன் முதலிய சமற்காரங்களுடன், வேள்விப் பூமிக்குக் கொண்டுபோகின் றேன் என்பதாம்.

(கருத்து) வேட்போன், இம் மந்திரத்தை ஓதி, வன்னிமரத்தின்மீது முளைத்தெழுந்த அரசமரத்தில், வடக்கே போகின்றதும், வயிரம் பாய்ந்தது மாகிய ஒரு கிளையை வெட்டி, அது விழுங்கால், முதலிற் பூமியிற்பட்ட

கூற்றை, கீழ்வைக்கும் அதராரணியாகவும், மேற்கூற்றை, மேல்வைக்கும் உத்தராரணியாகவுஞ் செய்து, வேட்குமிடத்திற்குக் கொண்டுவரல் வேண்டும் என்பது.

ஈண்டு, 'वैश्वानरोनऊत्या प्रयातु परावतः। अग्निरुक्थेन वाहसा' என்பது முதலிய மந்திரத்தால், அதை வெட்டி, காயத்திரி மந்திரத்தால் இரண்டாக்கிக் கொண்டுவரல் வேண்டுமென்பர் சிலர்.

ஈண்டு, 2-1-16, ஆசுவலாயன சுரௌத சூத்திரம், அதன் விருத்தி, என்னும் இரண்டையுந் தழுவி, வேள்வித் தலைவனும் அரணிக்கட்டையைக் கொண்டுவரல் வேண்டுமென்பது உரைரற்பாலது. இதில் வேறுபாடோ, மந்திரத்தில், (तं त्वा) 'தம் த்வா' என்று கொள்ளல் வேண்டும் என்னு மிவ் வளவே யன்றி வேறில்லை.

மற்றும், மந்திரத்தில் 'केतुभिः सह' என்பதால், வேள்விப் பாத்திரங் களைத் தொடுதல் முதலிய சமற்காரங்களுங் கொள்ளற்பாலன என்பதையுங் கண்டுகொள்க.

தீக்கடைக் கோலைத் தொட்டுப் போற்றுதல்.

अश्वत्थाद्धव्यवाहाद्धि जातामग्नेस्तनूं यज्ञियाꣳ संभरामि ।
शान्तयोनिꣳ शमीगर्भमग्नये प्रजनयितवे ॥ தைத். பிரா. 1-2-1-20.

பாடியம்.

அவியைக் கொண்டுபோகும் அக்கினி வடிவாகிய அரசமரத்திலிருந்து உண் டானதும், சுடுதல் முதலியவற்றிற்குக் காரணமும், ஒளியின்மையின் சாந்தமும், தீயை யுண்டாக்குவதற்குக் காரணமும், வன்னிமரத்தைச் சுற்றிக்கொண் டெழுந்ததால் வன்னிமரத்தைக் கருப்பமாக வுடையதுமாகிய அரணிக்கட்டை யைக் கொண்டுவருகின்றேன்.

(க-து.) இம்மந்திரத்தை, வேட்போன் ஓதிக்கொண்டு, தீக்கடைக் கோலைப் போற்றல் வேண்டுமென்பதாம். அஃதாவது சூத்திரப்படி, எனக் கும் வேள்வித்தலைவனுக்கும் ஆயுளை நிறையக் கொடுப்பாயாக என, வேட் போன் வேண்டல்வேண்டும் என்பது.

மணலைக் கொண்டுவருதல்.

वैश्वानरस्यरूपं पृथिव्यां परिस्रसा ।
स्योन मा विशन्तु नः ॥ १ ॥ தைத். பிரா. 1-2-1.

பாடியம்.

உலகிற்கு நலஞ்செய்யும் 'வைசுவாநரம்' என்னும் அக்கினியின் வடிவமானது, நாற்புறத்தும், தரையிற் பட்டதாலுண்டான மணல்கள் சுகமடையுமாறு, எமது தேவபூசையில் (வேள்வியில்) பிரவேசமாகுக.

(க-து.) *இப் பிராமண மந்திரத்தால், வேட்போன், நாடோறும், தீயோம்பு மிடத்திற்கு மணலைக் கொண்டுவரல் வேண்டும் என்பது.*

உவர்மண்ணைக் கொண்டுவருதல்,

**यदिदं दिवो यददः पृथिव्याः संजज्ञाने रोदसी संबभूवतुः ।**

**ऊषान्कृष्णमवतु कृष्णमूषा इहोभयोर्यज्ञियमागमिष्ठाः ॥ २ ॥** தை.பி. 1-2-1-4.

பாடியம்.

வானிலுள்ள உவர்ப்பு வடிவம் பூமியில் வைக்கப்பட்டிருக்கிறது. பூமியிலுள்ள கருமை வடிவம் சந்திரனிடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றது. இவ்விரண்டு வடிவுகளும், வான், பூமி என்பவற்றின் வடிவுகளெனக் காணப்படுகின்றன. அவற்றுள், கருமைவடிவம் உவர்மண்ணைப் பாதுகாக்க. ஊஷரமண், (உவர்மண்) கருமைவடிவைப் பாதுகாக்க. வான், தரை என்பவைகளின் உருவங்களை யுடையதும், வேள்விக்குரியதுமான இவ் விரண்டு கூறுகளும், எனது தேவாராதனையிற் பிரவேசமாகுக.

(க-து.) *இப் பிராமண மந்திரத்தால், வேட்போன், உவர் மண்ணைக் கொண்டுவரல் வேண்டுமென்பது.*

எலிவளை மண்ணைக் கொண்டுவருதல்.

**ऊतीः कुर्वाणोऽयत्पृथिवीमचरो गुहाकारमाखुरूपं प्रतीत्य ।**

**तत्तेन्यक्तमिह सं भरन्तः शतं जीवेम शरदः सवीराः ॥ ३ ॥** தை. பி. 1-2-1-5.

பாடியம்.

அக்கினியே! நீ, எலிவடிவாய், மலைகளிலுள்ள குகைகளென்னும் வளைகளை யுண்டாக்கிவிட்டுப் பூமியில் திரிகின்றனை. உன்னாற் கெல்லித் தள்ளப்பட்ட மண்ணை, தேவாராதனையிற் கொண்டுவந்து சேர்க்கின்றவர்களான யாம், வீரர்களுடன் நூறுவருடம் வாழ்வோமாக.

(க-து.) *இப் பிராமண மந்திரத்தால், வேட்போன், எலிவளை மண்ணைக் கொண்டு வரல் வேண்டும் என்பது.*

புற்று மண்ணைக் கொண்டுவருதல்.

ऊर्जं पृथिव्या रसमा भरन्तः शतं जीवेम शरदः पुरूचीः ।

वम्रीभिरनुवित्तं गुहासु श्रोत्रंत उर्व्यबधिरा भवामः ॥ ४ ॥ தை. பி. 1-2-1-6.

பாடியம்.

பூமியின் துவாரங்களிலிருந்து கறையான்களால் தாரையாய்க் கொண்டு வரப்பெற்றதும், பூமியின் இரச வடிவமுமாகிய புற்று மண்ணைக் கொண்டு வருகின்ற யாங்கள், மிகுந்த போகப் பொருள்களைத் தேடுகின்றவர்களாய் நூறு வருடம் வாழ்வோமாக.

(க-து.) *இப் பிராமண மந்திரத்தால், வேட்போன், புற்று மண்ணைக் கொண்டுவரல் வேண்டும் என்பது.*

நீர்வற்றாத குளத்தின் சேற்றைக் கொண்டுவருதல்.

प्रजापति सृष्टानां प्रजानां क्षुधोपहत्यै सुवितं नो अस्तु ।

उपप्रभिन्नमिषमूर्जं प्रजाभ्यः सूदं गृहेभ्यो रसमाभरामि ॥ ५ ॥ தை.பி. 1-2-1-7.

பாடியம்.

பிரசாபதியினுற் படைக்கப்பட்ட பிரசைகளின் (மக்களின்) பசி நீங்குதற் பொருட்டு, எமக்குக் கிடைத்த உண் பொருள், கரும்பின் இரசம் என்னுமிரண் டையு மிக நன்ருய் ஒன்றுபடக் கலந்தது போன்றுள்ள சேற்றை, இல்லின் வளர்ச்சியின் பொருட்டுக் கொண்டு வருகின்றேன்.

(க-து.) *இப் பிராமண மந்திரத்தால், சேற்றைக் கொண்டு வரல் வேண்டும் என்பது.*

பன்றி கெல்லிய மண்ணைக் கொண்டுவருதல்.

यस्यरूपं बिभ्रदिमामविन्दद् गुहाप्रविष्टꣳ सरीरस्य मध्ये ।

तस्येदंविहतमाभरंतोच्छंम्बट्कारमस्यां विधेम ॥ ६ ॥ தை. பி. 1-2-1-8.

பாடியம்.

முன்னர், பிரசாபதியானவர், பன்றி வடிவெடுத்துக் கடலின் நடுவிலமிழ்ந்த பூமியைக் கொண்டுவந்தாரன்றே, அத்தகைய பன்றியின் மூக்காற் கெல்லப்பட்ட மண்ணைக் கொண்டுவந்து, இப்பூமியின்கண் வீணுக்காமல் வேள்விக் கிரியை களுக்கு உதவுமாறு செய்கின்றோம்.

(க-து.) *இப் பிராமண மந்திரத்தால், வேட்போன், பன்றி கெல்லிய மண்ணைக் கொண்டுவரல் வேண்டும் என்பது.*

சுக்கான் கல்லைக் கொண்டுவருதல்.

**याभिरदृंहज्जगतः प्रतिष्ठामुर्वीमिमां विश्वजनस्य भर्त्रीम् ।**

**ता नः शिवाः शर्कराः सन्तु सर्वाः ॥ ७ ॥** தைத். பிரா. 1-2-1-10.

பாடியம்.

தாவரங்கட்கு நிலைக்களமாகியதும், பயிர் முதலியவற்றால் எல்லா வுயிர் களையும் பாதுகாக்கின்றதுமாகிய பூமி, எந்தச் சுக்கான் கற்களால் உறுதிப்பட் டிருக்கின்றதோ, அந்தச் சுக்கான் கற்கள் எம்முடையன வாகுக.

(க-து.) *இப் பிராமண மந்திரத்தால், வேட்போன், சுக்கான் கற்களைக் கொண்டுவரல் வேண்டும் என்பது.*

பொன்னைக் கொண்டு வருதல்.

**अग्ने रेतश्चन्द्रं हिरण्यमद्भ्यः संभूतममृतं प्रजासु ।**

**तत्संभरन्नुत्तरतो निधायातिप्रयच्छन्दुरितिं तरेयम् ॥ ८ ॥** தை. பி. 1-2-1-11.

பாடியம்.

அக்கினியின் சுக்கில வடிவமும், நீரின் வெண்மை வடிவமும், பிரசை களுக்குள் (மக்களுக்குள்) அமுதமுமாகிய பொன்னையும், வெள்ளியையும், அக் கினியின் தாக நிவர்த்தியின் பொருட்டு, வடக்கில் வைக்கின்றவனும், வேறுப்பவ ரின் பொருட்டு வெள்ளியைக் கொடுக்கின்றவனுமாகிய யான், பாவத்தினின்றுங் கரையேறி விடுவேனாக.

(க-து.) *இப் பிராமண மந்திரத்தால், மூன்று பொன் துண்டுகளைத் தேடிவைத்தல் வேண்டும் என்பது.*

*மந்திரமின்றி, மூன்று வெள்ளித் துண்டுகளையுந் தேடிக்கொள்க; அதன் விநியோகம் மேல் வெளியாகும். இவ்வாறு, பூமியிலிருந்துண்டாகும் எழு வகைப் பொருள்களுந் தேடப்பட்டன.*

*ஈண்டு, ஐவகைச் சமித்துக்களைக் கொண்டுவரல் வேண்டுமென்னும் பட்சத்தில், தாமிரத்தகட்டை ஐந்தாவதாகத் தேடிக்கொள்க. வாசசநேய சூத்திரத்தைத் தழுவியோ, மண், சமித்து என்னும் இருவகைகளையுந் தேடுதல் இல்லை.*

இனி, மரவகைகளின் விறகுகளுக்குள்,
அரசமரத்தின் விறகைக் கொண்டு வருதல்.

अश्वो रूपं कृत्वा यदश्वत्थेऽतिष्ठः संवत्सरं देवेभ्यो निलाय ।

तत्तेन्यत्कमिह संभरन्तः शतं जीवेम शरदः सवीराः ॥ ९ ॥ தை.பி. 1-2-1-12.

பாடியம்.

அக்கினியே! நீ, குதிரை வடிவெடுத்துத் தேவர்களின் பொருட்டு ஒரு வருடம் அரசமரத்தில் ஒளித்துக்கொண் டிருந்தனையன்றோ, அப்போது, உன்னுடைய ஒளி அரசமரத்தில் தங்கியது, அச் சாரத்தை, வேள்விக்குத் தேடுகின்ற யாங்கள், புத்திரர், வீரர் முதலியவர்களுடன் இனிது வாழ்வோமாக.

(க-து.) *இப் பிராமண மந்திரத்தால், அரசமரத்தின் விறகைக் கொண்டுவரல் வேண்டுமென்பது.*

அத்தி விறகைக் கொண்டு வருதல்.

ऊर्जः पृथिव्या अध्युत्थितोसि वनस्पते शतवल्शो विरोह ।

त्वया वयमिषमूर्जं मदन्तो रायस्पोषेण समिषा मदेम ॥ தை. பி. 1-2-1-13.

பாடியம்.

அத்திமரமே! நீ, இரசஞ் சித்தியாதற் பொருட்டுப் பூமியில் முளைத்துவளர்ந்தனை; எம்மால் வெட்டப்படினும், நூற்றுக்கணக்கான கிளைகளோடு தளிர்த்தெழுவாயாக. உன்னால் உதவிபுரியப்பெற்று, அன்னத்தையும், இரசத்தையுங் களிப்புடனடைந்த யாம், தனத்தால் வலுவையடைந்தும், நல்லுணவையும் பெற்று, மீண்டு மகிழ்வோமாக.

(க-து.) *இப் பிராமண மந்திரத்தால், அத்தி விறகைக் கொண்டுவரல் வேண்டும் என்பது.*

புரசம் விறகைக் கொண்டு வருதல்.

गायत्रिया ह्रियमाणस्य यत्ते पर्णमपतत्तृतीयस्यै दिवोऽधि ।

सोऽयं पर्णः सोमपर्णाद्धि जातस्ततो हरामि सोमपीथस्यावरुद्ध्यै ॥

देवानां ब्रह्मवादं वदतां यदुपाशृणोः सुश्रवा वै श्रुतोऽसि ।
ततो मामाविशतु ब्रह्मवर्चसं तत्संभरꣳस्तदवरुन्धीय साक्षात् ॥

தைத். பிரா. 1-2-1-14, 15.

பாடியம்.

சோமமே! மூன்றாவது உலகமாகிய சுவர்க்கத்திலிருந்து காயத்திரியாற் கொண்டுவருங்கால், கீழே விழுந்த உனது இலை புரசமரமாயிற்று. அதுவும், சோமத்தின் இலையால் முளைத்ததென்றதனுனே வெளிப்படையாம். அஃதாவது, புரசமரம், பர்ண விருக்ஷமென்பதாம். ஆதலின் சோமரசத்தை யருந்துதற் பொருட்டே, உன்னை யான் இங்குக் கொண்டுவருகின்றேன். மற்றும், புரசமரத்தின் நிழலிலிருந்து ஒருகால் பிரமவாதம் பேசுங்கால், நீயுங் கூடவிருந்து அதைக் கேட்டுக்கொண்டிருந்தவனுயு மிருக்கின்றனை. இதுபற்றியே, இனிது கேட்டவன், எனவும் வழங்கப்படுகின்றனை. ஆதலின், உன்னைக் கொண்டுவருவதற் கெழுந்த எனக்குப் பிரமவொளி திகழ்வதாகுக. அஃதாவது, அத்தகைய புரசமர விறகைத் தேடிவைத்து, அதனுல் யான், நேரே பிரம ஒளியை யடைவேனுக.

(க-து.) *இப் பிராமண மந்திரங்களால், புரசம் விறகைக் கொண்டுவரல் வேண்டும் என்பது.*

வன்னி விறகைக் கொண்டுவருதல்.

यया ते सृष्टस्याग्नेर्हेतिमशमयत्प्रजापतिः ।
तामिमामप्रदाहाय शमीꣳ शान्त्यै हराम्यहम् ॥ தைத். பிரா. 1-2-1-16.

பாடியம்.

வன்னிமரமே! உன்னுடைய கிளையால், பிரசாபதியானவன், தான் படைத்த கனலுக்குச் சூடு வடிவாகிய ஆயுதத்தைச் செய்து கொண்டனன். அத்தகைய இந்தச் சமீ விருக்ஷத்தை, முந்திய சூடு நீங்கவும், பின்னர்ச் சூடு இல்லாதிருக்கவும், வேள்வி செய்யுமிடத்திற்குக் கொண்டு வருகின்றேன் என்பதாம்.

(க-து.) *இப் பிராமண மந்திரத்தால், வன்னி விறகைக் கொண்டுவரல் வேண்டும் என்பது.*

சோத்தைக்களா விறகைக் கொண்டுவருதல்.

यत्ते सृष्टस्य यतो विकङ्कतं भा आर्च्छज्जातवेदः ।
तया भासा संमित उरुं नो लोकमनुप्रभाहि ॥ தைத். பிரா. 1-2-1-17.

பாடியம்.

'ஜாதவேத:' என்னுந் தீயே! பிரசாபதியாற் படைத்த உனது விரை வுள்ள எந்த ஒளி, சோத்தைக்களா மரத்தை யடைந்ததோ, அவ் வொளியோடு கூடி, எம்முடைய விரிந்த இடத்தை முறையாய் விளக்குவாயாக என்பதாம்.

(க-து.) *இப் பிராமண மந்திரத்தால், சொத்தைக்களா விறகைக் கொண்டுவரல் வேண்டும் என்பது.*

இடிவிழுந்த மரத்தின் விறகைக் கொண்டுவருதல்.

यत्ते तान्तस्य हृदयमाच्छिन्दज्जातवेदो मरुतोऽद्भिस्तमयित्वा ।
एतत्ते तदशनेः संभरामि सात्मा अग्ने सहृदयो भवेह ॥ தை. பி. 1-2-1-18.

பாடியம்.

அக்கினியே! ஒருகால், 'மருத்' என்னுந் தேவதை, பொறுமையால் உனது சுவாலையை நீரிலமிழ்த்தியதால் மெலிந்த உன்னுடைய இருதயத்தைப் பிளந் தது, அத்தகைய உன்னுடைய இருதயத்தை, வேள்விக்கு உபகரணமாய்க் கொண்டு போகின்றேன். பிளந்த இருதயம், இடியிற் புகுந்ததால், கொண்டு வருதல் கூடும் என்க. அத்தகைய உள்ளத்தை, யான், வேள்விசெய்யுமிடத்திற் குக் கொண்டுவருகின்றேன் ஆதலின், இங்கு நல்ல உள்ளமுடையவனுகுதி என் பதாம்.

(க-து.) *இப் பிராமண மந்திரத்தால், இடிவிழுந்த மரத்தின் விறகைக் கொண்டுவரல் வேண்டும் என்பது.*

தாமரை யிலையைக் கொண்டு வருதல்.

यत्पर्यपश्यत्सरिरस्य मध्य उर्वीमपश्यज्जगतः प्रतिष्ठां ।
तत्पुष्करस्यायतनाद्धि जातं पर्णं पृथिव्याः प्रथनꣳ हरामि ॥ தை. பி. 1-2-1-9.

பாடியம்.

தாவர சங்கம வடிவ உலகிற்கு ஆதாரமாகிய பூமியைப் பெறவேண்டு மென்ற வேட்கையையுடைய பிரசாபதியானவர், ஊழிக்காலக் கடலின் நடுவிற் கண்டதாகிய தாமரையிலையை, வேள்விசெய்யு மிடத்திற்குக் கொண்டுவருகின் றேன். அது எவ்வண்ணமாகிய இலையெனின்? நீர் நடுவில் மூழ்கிய நிலைக் களத்திலிருந்து உண்டானதாம். மற்றும், எவ்வண்ணமாகிய தாமரையிலை யெனின்? ஆதிநிலம் பரவுதற்கு இடமானதாம். இக் கதை, பிராமணத்தில் விரிவா யுள்ளது ஆண்டுக்காண்க.

(க-து.) *இப் பிராமண மந்திரத்தால், வேட்போன், தாமரையிலையைக் கொண்டு வருதல் வேண்டும் என்பது.*

*வேட்போன், உபகரணங்களனைத்தையுங் கொண்டுவந்து, ஒன்றும் பேசாமல் (மந்திரமின்றி) அவ் வனைத்தையும் ஒன்றுபடுத்தி ஒரு பாத்திரத்திற் போட்டு,*

உபகரணங்களை வைத்தல்.

**यं त्वा समभरञ्जातवेदो यथाशरीरं भूतेषु न्यक्तम् ।**
**स संभृतः सीद शिवः प्रजाभ्य उरुं नो लोकमनुनेषि विद्वान्॥** தை.பி.1-2-1-22

பாடியம்.

அக்கினியே! ஒவ்வோர் உடம்பிலும் பசிக்கனல் வடிவாய் ஒளித்திருக்கின்ற உன்னை, வேள்வியாளர்கள், எழுவகை மண்விகாரங்களுடனும், சமித்துக்களுடனுங் கூடியவனாகச் செய்கின்றார்கள். நீ, அவைகளுடன் கூடினவனாயும், மக்கட்கு இன்பத்தைக் கொடுப்பவனாயும், வேள்விசெய்யு மிடத்தில் இருப்பாயாக. உணர்வு மிக்கானாகிய நீ, எமக்குப் பரந்த வுலகத்தைத் தேடுவாயாக என்பதாம்.

(க-து.) *இப் பிராமண மந்திரத்தால், உபகரணங்களை வைத்துள்ள அப் பாத்திரத்தை, நாடோறுந் தீயோம்புகின்ற விடத்திற் கொண்டுவந்து வைத்தல் வேண்டும் என்பது.*

*பின்னர், வேள்வித்தலைவன் 'நாந்தீ' என்னும், பித்ரு தேவதைகளுக்கு அன்னம் அளிக்குங் கிரியையைச் செய்வதும் உண்டு.*

## வேள்விக்குரிய பூமியைக் கெல்லுதல்.

பின்னர், வேட்போன், (அத்வர்யு) சூத்திரத்திற் கூறியவாறே, வேள்வி செய்வதற்குரிய ஒரு குச்சை (கொம்பை) யெடுத்து,

**उद्धन्यमानमस्या अमेध्यमप पाप्मानं यजमानस्य हन्तु ।**

**शिवा नः सन्तु प्रदिशश्चतस्रः शं नोमाता पृथिवी तोकसाता ॥** தை. பி. 1-2-1-1.

(க-து.) இப் பிராமண மந்திரத்தால், மேற்கிலிருந்து கிழக்காக வேள்வி செய்யவேண்டிய இடத்தைக் கெல்லல்வேண்டும் என்பது.

பின்னர்,

**शंनो देवीरभिष्टय आपो भवन्तु पीतये ।**

**शंयो रभिस्रवन्तुनः ॥** தைத். பிரா. 1-2-1-2.

(க-து.) இம் மந்திரத்தை ஓதி, அதில் நீரைத் தெளித்தல் வேண்டும்.

ஈண்டு, சூத்திரங்களிற் கூறியவாறே, காருகபத்தியம், தட்சிணம், ஆகவனீயம் என்னும், மூன்று தீக்குண்டங்களைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், மயிரையும், நகங்களையுங் களைந்துகொண்டும், பத்தினி நகங்களை மாத்திரங் களைந்துகொண்டும், நீராடி, இருவரும் பட்டாடை முதலானவைகளை யணிந்து கொள்வாராக.

வேள்வித் தலைவன், ஔபாசனத் தீ யென்னும், தான் வளர்த்துக்கொண்டிருந்த தீயை, இருகூறாக்கி, ஒரு கூறை, முன்போல் வைத்துக்கொண்டு, மற்றொரு பாதியை எடுத்துக்கொண்டு, அதற்கு வேண்டிய உபகரணங்களுடன், வேட்பேனோடு கூட, மூச்சைச் சிறிது அடக்கிக்கொண்டவனாய் வேள்விசெய்யு மிடத்தை யடைதல் வேண்டும். அடைந்து, அங்கு, காருகபத்திய மென்னுந் தீயை வைக்கவேண்டிய இடத்திற்கு மேற்கில், சூத்திரத்திற் கூறியவாறே, ஒரு அம்பின் அளவுகொண்ட நான்கு மூலை மேடை (வேதிகை) செய்து, மெழுகி, மேற்கும், வடக்கு மும்மூன்றாக ஆறு கோடுகள் கிழித்து, அதன் நடுவில் நீர் தெளித்து, அதில், தான் கொண்டுவந்த பாதித் தீயையும் வைத்தல் வேண்டும். இத் தீயின் பெயர் 'பிரமௌதனத்தீ' என்பதாம். இத் தீயுண்டாக்கலை அர்த்தாதானம் (பாதித் தீயுண்டாக்கல்) என்பர். முழுத் தீயையுங் கொண்டுபோய்த் தீ யுண்டாக்கலும் உண்டு. இது பூரணாதான மெனப்படும். கலியில், இது இல்லை, சிலர் செய்வர்.

பின்னர், சூத்திரத்தைத் தழுவி, உலராதவைகளும், காய்களை யுடையவைகளும், ஒட்டைச்சாண் அளவுகொண்டவைகளுமான மூன்று, புரசமரக்

குச்சில்களும், பன்னிரண்டு வன்னிமரச் சமித்துக்களும், ஊாமரம், அத்தி மரச் சமித்துக்கள் மும்மூன்றுமாக இருபத்தொரு சமித்துக்களையும், எவ்வாறுகவேனுந் தேடிக்கொள்க. இவைகளுலர்ந்தவைகளா யிருத்தல் வேண்டும்.

இவைகளை விநியோகிக்கும் முறை, மேலே கூறப்படும். பத்தினியும், எஜமானனும் நெய், அல்லது, பாலுடன் கலந்த அவியை அருந்தல் வேண்டும்.

இவ்வாறு அருந்துங்கால், வேள்வித்தலைவன் ஆசமனம் பண்ணிக்கொண்டு, "எமது பாவ நீங்கும் வாயிலாகப் பரமேசுரன் பிரியப்படுதற்பொருட்டு போஜனத்திற்கு முன் செய்யப்படும் ஹோமத்தைச் செய்கின்றேன்" என்று சங்கற்பித்துக்கொண்டு,

"अग्नये स्वाहा न मम" இது அக்கினியின் பொருட்டாம் எமக்கன்று.

"प्रजापतये स्वाहा न मम" இது பிரஜாபதிக்கு எமக்கல்ல.

என்று, நெய்கலந்த அன்னத்தை, சமையற்செய்த தீயில் ஓமஞ் செய்துவிட்டு, ஆசமனஞ் செய்துகொண்டு, 'வீட்டிற் செய்கின்ற இவ் வாராதனையாற் பரமேசுரன் பிரீதி யடைவானாக' என்று போற்றுவானாக.

பின்னர், சூத்திரத்திற் கூறியபடியே, பிரமோதனம் என்னும் அன்னத்தை, அன்றிரவு இரண்டாவது யாமத்திற் சமைத்தற் பொருட்டு,

देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्याम् ।
पूष्णोहस्ताभ्यां ब्रह्मणे प्राणायजुष्टं निर्वपामि ॥

(க-து.) இம் மந்திரத்தை ஓதி, ஒரு பானையில் அரிசியை எடுத்தல் வேண்டும்.

மீண்டும், இம் மந்திரத்தை ஓதுவதுடன்,

'ब्रह्मणेऽपानाय जुष्टं निर्वपामि' என்பதையுங் கூட்டி ஓதிக்கொண்டு, இரண்டாமுறையும் ஒரு பானையில் அரிசியை எடுத்தல் வேண்டும்.

மீண்டும், இம் மந்திரத்தையே ஓதுவதுடன்,

'ब्रह्मणे व्यानाय जुष्टं निर्वपामि' என்பதையுங் கூட்டி ஓதிக்கொண்டு, மூன்றுமுறையும் ஒரு பானையில் அரிசியை எடுத்தல் வேண்டும்.

மீண்டும், இம் மந்திரத்தையே ஓதுவதுடன்,

'ब्रह्मणे जुष्टं निर्वपामि' என்பதையுங் கூட்டி ஓதிக்கொண்டு, நான்காமுறையும் ஒரு பானையில் அரிசியை எடுத்தல் வேண்டும்.

இங்கு, சமைத்தற்குரிய ஏனைய கருவிகளையுந் தேடிக்கொள்க.

பின்னர், சூத்திரத்திற் கூறியவாறே, வேட்போன், அல்லது, எவனாகினு மொரு வல்லுனன், அப் பானைகளில் நீர் நிறைத்து, அரிசியைக் களையாமற் போட்டுப் பொங்கி அரிசிப்பதத்தில் (மலர்வதன்முன்) இறக்கி வைத்தல் வேண்டும். இக் காலத்தில் ஒரு பானை வைத்துப் பொங்குதல் வழக்கில் இருக்கிறது.

சூத்திரத்திற் கூறியவாறு,

**प्रवेधसे कवये मेध्याय वचो वन्दारु वृषभाय वृष्णे ।**

**यतो भयमभयं तन्नो अस्त्वव देवान्यजे हेड्यान्स्वाहा ॥** தை. பி. 1–2–1–23.

(க-து.) இப் பிராமண மந்திரத்தை ஓதி, சமைத்த அத் தீயில் ஆகுதி செய்தல் வேண்டும், அக் கால், வேள்வித் தலைவன், '**प्रवेधसे ब्रह्मण इदं न मम**' என்று தியாகஞ் செய்வானாக.

இவ்வாறு சமைத்த அன்னத்தை, நான்கு பாகங்களாக்கி, சூத்திரத்திற் கூறியவாறு, மீந்த சிறிது அன்னத்தை அப் பானைகளிலேயே வைத்து விடல் வேண்டும்,

பின்னர், வேள்வித் தலைவன், அவ் வன்னங்களில், நிறைய நெய் வார்த்து, சூத்திரத்திற் கூறியவாறு, ஹோதா, பிரமன், ஆக்னீத்ரன், வேட்போன் என்னும், வேள்விச் செயலாளர்கள் நால்வருக்குங் கொடுத்தல் வேண்டும்.

அவர்கள், தத்தமது கையில், அவ் வன்னத்தை வாங்கி வைத்துக்கொண்டு, அவ்வப் பாத்திரங்களையுங் கையாற் றொட்டுக்கொண்டவர்களாய் இருப்பார்களாக.

இவ்வாறாய பின்னர், வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறு, இடது கையால், சோற்றுப்பானையைத் தொட்டபடியே, வலது கையில், சோற்றின் உருண்டையும் இருந்தவாறே யிருக்க, அக் கையால், மீந்த அன்னத்தில் பாக்கியிருந்த நெய்யை விட்டுக் கலந்துகொண்டு, புரசமரத்தின் ஈரச் சுப்பில் கள் மூன்றையும்,

**चित्रियादश्वत्थात्संभृता बृहत्यः शरीरमभिसंस्कृताःस्थ ।**

**प्रजापतिना यज्ञमुखेन संमितास्तिस्रस्ति वृद्धिर्मिथुनाः प्रजात्यै ॥** தை.பி. 1-2–1-19

(க-து.) இப் பிராமண மந்திரத்தால், மீந்த அவ் வன்னத்தில் புரட்டிக் கொண்டு, (தோய்த்துக்கொண்டு)

समि धाग्निं दुवस्यत घृतैर्बोधयतातिथिम् ।
आस्मिन्हव्या जुहोतन स्वाहा ॥ தைத். பிரா. 1-2-1-24.

(க-து.) இப் பிராமண மந்திரத்தால் வேட்போன், முதலாவது சமித்தைத் தீயில் ஆகுதி செய்வானாக என்பது.

அச்சமயம், வேள்வித் தலைவன்,

'अग्नय इदं न मम' என்று தியாகஞ் செய்வானாக.

அவ்வாறே,

उपत्वाग्ने हविष्मती र्घृताचीर्यन्तु हर्यत ।
जुषस्व समिधो मम स्वाहा ॥ தைத். பிரா. 1-2-1-25.

(க-து.) இம் மந்திரத்தால், வேட்போன், இரண்டாவது சமித்தையும் தீயில் ஆகுதி செய்வானாக என்பது.

முன்போல் வேள்வித் தலைவன்,

"अग्नय इदं न मम" என்று, தியாகஞ் செய்வானாக.

அவ்வாறே,

तं त्वा समिद्भि रङ्गिरो घृतेन वर्धयामसि ।
बृहच्छोचा यविष्ठ्य स्वाहा ॥ தைத். பிரா. 1-2-1-26.

(க-து.) இப் பிராமண மந்திரத்தால், வேட்போன் மூன்றாவது சமித்தையும் தீயில் ஆகுதி செய்வானாக என்பது.

முன்போல் வேள்வித் தலைவன்,

"अग्नय इदं न मम" என்று, தியாகஞ் செய்வானாக.

### கன்றுடன் கூடிய பசுவின் தானம்.

வேள்வித் தலைவன், சூத்திரத்திற் கூறியவாறு, கன்றுடன் கூடின மூன்று பசுக்களை அவனுக்கு ஈதல் வேண்டும். அவற்றை, வேட்போன், மந்திர மோதுதலின்றிப் பெற்றுக்கொள்ளல் வேண்டும்.

ஈண்டு, பசுவை ஈயாவிடின், பாலுள்ள பசு ஒன்றை வாங்குவதற்குரிய தனத்தையேனுங் கொடுத்தல் வேண்டும் என்பது உரைநற்பாலது.

அதன் பின்னர், வேள்விச்செயலாளர்கள் நால்வரும், அவ் வன்னத்தை அருந்தல் வேண்டும். அருந்துங்கால், சூத்திரத்திற் கூறியவாறே, முன்னர் தத்தமது கைகளில் வைத்திருந்த பிரமோதன மென்னும் அன்னக் கவளத்தை முதலில் அருந்தல் வேண்டும்.

பின்னர், சூத்திரத்திற் கூறியவாறு, "உண்ட அந்தணர்களே! உங்களுடைய கன்னிகைகளுக்கு ஒத்த கணவர்களைத் தேடிக்கொள்வதற்கு வேண்டிய பணங்களைக் கொடுக்கின்றேன்" என்று, அதற்குரிய தட்சிணையை அவர்கட்களித்தல் வேண்டும்.

முன்போல், அதையும், மந்திர மோதுதலின்றியே அவர்கள் பெற்றுக் கொள்வார்களாக.

ஆட்டுக் கடாவைக் கட்டுதல்.

प्रजा अग्ने संवासयाशाश्च पशुभिःसह ।

राष्ट्राण्यस्मा आधेहि यान्यासन्सवितुः सवे ॥ தைத். பிரா. 1–1–33.

(க-து.) சூத்திரத்திற் கூறியவாறே, இப் பிராமண மந்திரத்தால், கரும் புள்ளிகளையுடைய ஆட்டுக்கடா ஒன்றை, அங்கு, கட்டிவைத்தல் வேண்டும் என்பது.

வேள்வித் தலைவனுடைய விரதம்.

अनृतात्सत्यमुपैमि मानुषाद्दैव्यमुपैमि दैवीं वाचं यच्छामि ॥ தை. பி. 1-2-1-38.

(க-து.) இப் பிராமண மந்திரப்படி, "இனி, வேட்போன், மாமிசம் உண்ணுமலும், பெண் புணர்ச்சி யில்லாமலும் விரதத்துட னிருப்பானுக. யான், மனிதரின் பேச்சைப் பேசாமல், தெய்வ வாக்கினுலேயே பேசுவேனுக" என்று விரதம் பண்ணிக்கொள்வானுக. அஃதாவது ஸம்ஸ்கிருதத்திலேயே பேசுவேன் என்பதாம்.

அக்கினியை வளர்த்தல்.

शल्कै रग्निमिन्धान उभौलोकौ सनेमहम् ।

उभयोर्लोकयो ऋद्ध्वाति मृत्युं तराम्यहम् ॥ தைத். பிரா. 1–2–1–39.

(க-து.) பின்னர், சூத்திரத்திற் கூறியவாறே, அதிகாலையிலிருந்து (தீக்கடைக்கோலை இவ் வக்கினியிற் காய்ச்சும் வரை) அத் தீயை அணையாவண்ணம், இப் பிராமண மந்திரத்தால், வேள்வித் தலைவன், விடியும்வரை வளர்த்துக் கொண்டிருத்தல் வேண்டும் என்பது.

இவ்வாறு உஷக்காலம் (அதிகாலை) வரை செய்யவேண்டிய கிரியைகள் முடிந்தன.

தீக்கடைக்கோலைக் காய்ச்சுதல்.

जातवेदो भुवनस्य रेत इह सिञ्च तपसो यज्जनिष्यते ।
अग्नि मश्वत्थादधि हव्यवाहꣳ शमीग र्भाज्जनयन्योमयोभूः ॥
अयंते योनिर्ऋ ऋत्वियो यतो जातो अरोचथाः ।
तंजानन्नग्न आरोहाथा नो वर्धया रयिम् ॥ தை. பி. 1-2-1-40, 41.

(க-து.) உதய காலத்தில், வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறே, இப் பிராமண மந்திரங்க ளிரண்டாலும், தீக்கடைக் கோலை, அத் தீயிற் காய்ச்சல் வேண்டும். காய்ச்சுதலால் அவ் வக்கினி இக் கோலின்மீது ஏறி விடுகின்றதென்பதாம்.

தீயை யணைத்தல்.

சூத்திரத்திற் கூறியவாறே, பிரமோதன மென்னும், அக்கினியை, சாம்பரைத்தள்ளி அவித்துவிடல் வேண்டும்.

தீக்கடைக்கோலை அநுமந்திரித்தல்.

अग्नी रक्षाꣳसि सेधति शुक्रशोचिरमर्त्यः ।
शुचिः पावक ईड्यः ॥ தைத். பிரா. 2-4-1-32.

(க-து.) வேள்வித்தலைவன், காய்ச்சிய தீக்கடைக்கோலை, சூத்திரத்திற் கூறியவாறே, இப் பிராமண மந்திரத்தாற் போற்றல் வேண்டும் என்பது.

தீக்கடைக்கோலை நோக்கல்.

मही विश्पत्नी सदने ऋतस्यार्वाची एतं धरुणे रयीणाम् ।
अन्तर्वत्नी जन्यं जातवेदसमध्वराणां जनयथः पुरोगाम् ॥ தை.பி. 1-2-1-34.

(க-து.) வேள்வித்தலைவன், சூத்திரத்திற் கூறியவாறே, இப் பிராமண மந்திரத்தால், வேட்போன், கொண்டுவந்திருக்கின்ற தீக்கடைக்கோலை இனிது நோக்கல் வேண்டும் என்பது.

தீக்கடைக்கோலைக் கொடுத்தல்.

வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறு, தீக்கடைக்கோலை வேள்வித்தலைவனிடம் அளித்தல் வேண்டும்.

தீக்கடைக்கோலை ஏற்றல்.

आरोहतं दशतं शक्करीर्ममर्तेनाग्न आयुषा वर्चसा सह ।

ज्योग्जीवन्त उत्तरामुत्तराꣳ समां दर्शमहं पूर्णमासं यज्ञं यथा यजै ॥

தைத். பிரா. 1–2–1–35.

(க-து.) சூத்திரத்திற் கூறியவாறு, இப் பிராமண மந்திரத்தால், வேள்வித்தலைவன், வேட்போன் கொடுத்த தீக்கடைக்கோலை, இரண்டு கைகளாலும் பெற்றுக்கொள்ளல் வேண்டும் என்பது.

தீக்கடைக்கோலைப் போற்றுதல்.

ऋत्वियवतीस्थो अग्निरेतसौ गर्भं दधाथां ते वामहं ददे ।

तत्सत्यं यद्वीरं बिभृथो वीरं जनयिष्यथः ॥

ते मत्प्रातः प्रजनिष्येथे ते मा प्रजाते प्रजनयिष्यथः ।

प्रजया पशुभिर्ब्रह्मवर्चसेन सुवर्गे लोके ॥ தைத். பிரா. 1–2–1–36, 37.

(க-து.) வேள்வித்தலைவன், சூத்திரத்திற் கூறியவாறு, இப் பிராமண மந்திரங்க ளிரண்டாலும், தீக்கடைக்கோலை அபிமந்திரித்தல் (போற்றல்) வேண்டும் என்பது.

இவ்வாறு அபிமந்திரணஞ் செய்தது முதற்கொண்டு, தீயைக் கடைந்தெடுக்கும் வரை, வேள்வித்தலைவன், தீக்கடைக்கோலை தனது கையிலேயே வைத்துக்கொண்டிருத்தல் வேண்டும்.

சேபம்.

मयि गृह्णाम्यग्रे अग्निꣳ रायस्पोषाय सुप्रजास्त्वाय सुवीर्याय ।

मयि प्रजां मयि वर्चो दधाम्यरिष्टाः स्याम तनुवा सुवीराः ॥

यो नो अग्निः पितरो हृत्स्वन्तरमर्त्यो मर्त्याꣳ आविवेश ।

तमात्मन्परि गृह्णीमहे वयं मा सो अस्माꣳ अवहाय परागात् ॥

தைத். சங்கிதை 5–7–9–1, 2.

(க-து.) (எசமானனும்) வேள்வித்தலைவனும், (அத்வர்யும்) வேட்போனும், இந்தத் தைத்திரீய சங்கிதை மந்திரங்களைச் செபித்தல் வேண்டும் என்பது.

### தீக்குண்டங் கெல்லல்.

अपेत वीत वि च सर्पतातो येऽत्र स्थ पुराणा ये च नूतनाः ।
अदादिदं यमो वसानं पृथिव्या अक्रन्निमं पितरो लोकमस्मै ॥

தைத். பிரா. 1–2–1–42.

(க-து.) *வேட்போன், இப் பிராமண மந்திரத்தால், காருகபத்தியத் தீயை யுண்டாக்கு மிடத்தைக் கெல்லவேண்டும் என்பது.*

### நீர் தெளித்தல்.

शं नो देवी रभिष्टय आपो भवन्तु पीतये ।
शंयोरभिस्रवन्तु नः ॥ தைத். பிரா. 1-2-1-2.

(க-து.) *சூத்திரத்திற் கூறியவாறு, இப் பிராமண மந்திரத்தால், வேட்போன், கெல்லியவிடத்தில் அவோக்ஷணம் (நீரைக் கையால் எடுத்துச் சாய்வாகத் தெளித்தல்) செய்தல் வேண்டும் என்பது.*

*இல்வாறே, சூத்திரத்திற் கூறிய விதிப்படி, தக்ஷிணாக்கினி, ஆகவனீயாக்கினி என்னும், இரண்டு தீக்களின் இடங்களையுஞ் செய்க.*

*இம் முறையாகவே, இதற்குமேல் வருங் கிரியைகளைச் செய்யவும்.*

### சம்பார (உபகரணங்களின்) விபாகம்.

*வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறு, மணல் முதலிய ஒவ்வொன்றையும், இரண்டு பங்காக்கி, ஒரு பங்கை இரண்டாக்கி, அதில் ஒரு பங்கை, காருகபத்தியத் தீ யுண்டாக்குமிடத்திற் போடவும். மற்றொரு பங்கை, தக்ஷிணாக்கினி யுண்டாக்குமிடத்திற் போடவும். முதலாவதில் இரண்டாம் பங்கை, ஆகவனீயாக்கினி யுண்டாக்குமிடத்திற் போடவும்.*

### மணலைப் போடுதல்.

अग्नेर्भस्मास्यग्नेः पुरीषमसि ॥ தைத். பிரா. 1-2-1-43.

(க-து.) *வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறே, இப் பிராமண மந்திரத்தாலேயே காருகபத்தியத் தீ யுண்டாக்கு மிடத்திலும், தக்ஷிணாக்கினி உண்டாக்கு மிடத்திலும், ஆகவனீயத் தீ யுண்டாக்கும் இடத்திலும், மணலைப் போடுவானாகை என்பது.*

### உவர்மண்ணைப் போடுதல்.

संज्ञानमसि कामधरणं मयि ते कामधरणं भूयात् ॥ தை. பி. 1–2–1–44.

(க-து.) வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறு, இப் பிராமண மந்திரத்தாலேயே, உவர்மண்ணை, மேற்கூறிய முறையாய்ப் போடல் வேண்டும் என்பது.

பின்னர், சூத்திரத்திற் கூறியவாறே,

"यददश्चन्द्रमसि कृष्णं तदिहास्तु" என்று, மனத்தினுள்ளே அதைத் தியானித்தல் வேண்டும்.

இவ்வாறு, உவர்மண் போடுதல், தியானித்தல் என்பவற்றை, ஒவ்வொரு தீ யுண்டாக்கும் இடங்களிலுஞ் செய்க.

எலிவளை மண்ணைப் போடுதல்.

उदेह्यग्ने अधिमातुः पृथिव्या विश आविश महतः सधस्थात् ।

आखुं त्वा ये दधिरे देवयन्तो हव्यवाहं भुवनस्य गोपाम् ॥ ஆப. சூ. 5-9-8.

(க-து.) வேட்போன், சூத்திரத்திற் கூறியபடி, இம் மந்திரத்தால் காருகபத்தியத் தீ யுண்டாக்குமிடத்தில், எலிவளை மண்ணைப் போடுவானாக என்பது.

இவ்வாறே, ஒவ்வொரு தீ வைக்குமிடத்திலும் போடுவானாக.

புற்று மண்ணைப் போடுதல்.

यत्पृथिव्या अनामृतꣳ संबभूव त्वे सचा ।

तदग्निरग्नये ददात्तस्मिन्नाधीयतामयम् ॥ ஆப. சூ. 5–9–8–46.

(க-து.) வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறு, இம் மந்திரத்தால், காருகபத்தியத் தீ யுண்டாக்குமிடத்தில் புற்று மண்ணைப் போடுவானாக என்பது.

यदन्तरिक्षस्यानामृतꣳ संबभूव त्वे सचा ।

तदग्निरग्नये ददात्तस्मिन्नाधीयतामयम् ॥ ஆப. சூ. 5-9-9.

(க-து.) இவ்வாறே, இம் மந்திரத்தால் தக்ஷிணாக்கினி யுண்டாக்கும் இடத்திற் போடுக என்பது.

यद्दिवोऽनामृतꣳ संबभूव त्वे सचा ।

तदग्निरग्नये ददात्तस्मिन्नाधीयतामयन् ॥ ஆப. சூ. 5-9-9.

(க-து.) அங்ஙனமே, இம் மந்திரத்தால் ஆகவனீயாக்கினி யுண்டாக்கு மிடத்திலும் போடுக என்பது.

சேற்றைப் போடுதல்.

उत्सं॑मुद्रान्मधु॑मा॒ऽऊर्मिरा॒गात्साम्रा॑ज्याय प्र॒तरं॒ दधा॑नः ।
अमी॒ च॒ ये॒ म॒घवा॑नो व॒यं चे॒षमू॒र्जं॒ मधु॑मत्सं॒भरे॑म ॥ ஆப. சூ. 5-9-10.

(க-து.) வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறு, இம் மந்திரத்தால், காருகபத்தியத் தீ யுண்டாக்குமிடத்தில், நீர்வற்றுக் குளத்திலெடுத்துவந்த சேற்றைப் போடல் வேண்டும் என்பது.

இவ்வாறே, தக்ஷிணாக்கினி, ஆகவனீயாக்கினிகள் உண்டாக்க வேண்டிய விடங்களிலும் போடுக.

பன்றி கெல்லிய மண்ணைப் போடுதல்.

इ॒यत्यग्रं॑ आसीः ॥ ஆப. சூ. 5-9-10.

(க-து.) வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறே, முன்போல், மூன்றக்கினிகளுண்டாகு மிடத்திலும், பன்றி கெல்லிய மண்ணைப் போடல் வேண்டும் என்பது.

சுக்கான் கற்களைப் போடல்.

अ॒दो दे॒वी प्रथ॑माना॒ पृथ॒ग्यद्दे॒वैर्न्यु॑प्ता॒ व्यस॑र्पो महि॒त्वा ।
अ॒द्दृ॒ँ॒ह॒थाः॒ शर्क॑राभि॒स्त्रिवि॑ष्टप्य॒ ज॒यो॑ लो॒कान्प्र॒दिश॒श्चत॑स्रः ॥ ஆப. சூ. 5-9-11

(க-து.) வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறு, காருகபத்தியத் தீ யுண்டாக்கு மிடத்தில் சுக்கான் கற்களைப் போடல் வேண்டும் என்பது.

இனி, பொறுமை யுடையோரைத் தியானித்தல்.

வேட்போன், வேள்வித் தலைவனிடம், அவனுடைய விரோதி இன்னானெனக் கேட்டு, சூத்திரத்திற் கூறியபடி, அவ் விரோதியைத் தியானித்து வைத்துக்கொள்ளல் வேண்டும் என்பது.

இவ்வாறே, சுக்கான் கற்களைப் போடவேண்டியதும், துவேஷமுடையவனைத் தியானிக்க வேண்டுவதும், ஒவ்வொரு தீ யுண்டாக்கு மிடத்திலுஞ் செய்தல் வேண்டும் என்பது உரைற்பாலது.

ऋतꣳ स्तृणामि पुरीषं पृथिव्यामृतेऽध्यग्निमादधे सत्येऽध्यग्निमादधे ॥

ஆப. சூ. 5–10–1.

(க-து.) சூத்திரத்திற் கூறியபடி, போட்ட உவர்மண் முதலான உபகரணங்களை, ஒவ்வோரிடத்திலுங் கலந்து அமிழ்த்தி வைத்தல் வேண்டும் என்பது.

சமித்துக்களை ஒழுங்காகக் கலத்தல்.

सं या वः प्रियास्तनुवः सं प्रिया हृदयानि वः ।

आत्मा वो अस्तु संप्रियः संप्रियास्तनुवो मम ॥ தைத். பிரா. 1-2-1-46.

(க-து.) வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறு, இப் பிராமண மந்திரத்தானும்,

सं वः सृजामि हृदयानि सꣳसृष्टं मनो अस्तु वः ।

सꣳसृष्टः प्राणो अस्तु वः ॥ தைத். பிரா. 1-2-1-45.

(க-து.) இப் பிராமண மந்திரத்தானும், சமித்து வகைகளை அவிழ்த்து ஒழுங்காய்க் கலந்துகொள்வானுக.

சமித்துக்களை, மணலைப் பகுத்ததுபோல் பங்கிட்டுக்கொள்க.

इतः प्रथमं जज्ञे अग्निः स्वाद्योनेरधि जातवेदाः ।

स गायत्रिया त्रिष्टुभा जगत्या देवेभ्यो हव्यं वहतु प्रजानन् ॥ தை..பி. 1-4-4.

(க-து.) பின், வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறு, இப் பிராமண மந்திரத்தால், சமித்துக்களை ஒவ்வொரு தீ யுண்டாக்கு மிடங்களிலும் வைத்தல் வேண்டும். எல்லாச் சமித்துக்களையும் பரப்பி வைத்துவிட்டு, தாமரையிலைகளையும் அவ்வாறே வைத்தல் வேண்டும் என்பது.

பொன் வைத்தல்.

यास्ते शिवास्तनुवो जातवेदो या अन्तरिक्षे दिवि याः पृथिव्याम् ।

ताभिः संभूय सगणः सजोषा हिरण्ययोनिर्वह हव्यमग्ने ॥ ஆப. சூ. 4-10-3.

(க-து.) வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறே, காருகபத்தியத் தீ யுண்டாக்குங் குண்டத்தில், ஒரு பொன் தகட்டின் துண்டை, வடபுறத்திலுள்ள சமித்துக்களுக்குட் செருகி வைத்தல் வேண்டும் என்பது.

பொன்னைப் போற்றுதல்.

**चन्द्रमग्निं चन्द्ररथं हरित्वचं वैश्वानरमप्सुषदꣳ सुवर्विदम् ।**
**विगाहं तूर्णिं तविषीभिरावृतं भूर्णिं देवास इह सुश्रियं दधुः ॥** ஆ. சூ. 5-10-4.

(க-து.) *வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறு, வைத்த பொன்னைப் போற்றுவானாக என்பது.*

வெள்ளியைப் போடுதல்.

*வேட்போன், சூத்திரத்திற் கூறியபடி, வேள்வித் தலைவனிடம், உனது விரோதமுடையவன் யாவன்? என்று வினவி, அவ் விரோதியின் பொருட்டு வெள்ளியைக் கொடுத்தல் வேண்டும்.*

*விரோதி கிடைக்காவிடின், அவனுள்ள திசையில் வெள்ளியை எறிந்து விடுவானாக.*

*வெள்ளியைப் போட்டுவிட்டு, வேட்போன் கையில் நீரைத் தொட்டுக் கொள்வானாக.*

*இவ்வாறே, தக்ஷிணாக்கினி, ஆகவனீயாக்கினி என்னும் இரண்டையும் உண்டாக்க வேண்டிய விடங்களிலும் பொன் வைத்தல், வைத்த பொன்னைப் போற்றல், வெள்ளியைப் போடல் என்பவைகளை, சூத்திரத்திற் கூறியபடி செய்வானாக.*

*ஐந்து சம்பாரங்களா யிருந்தால் '* यास्ते शिवाः *' என்றுற் றொடக்கத்து மந்திரத்தால், செப்புத் துண்டை வைத்தல் வேண்டும். அபிமந்திரணங் கிடையாது.*

தீக்கடையுமிடம்.

*சூத்திரத்திற் கூறியவாறே, பிரமோதனம் பக்குவஞ்செய்த தீயை, சாம்பரைப்போட்டு அவித்துவிட்ட இடத்தின்மேல், கிழக்குத்திக்கில் சிறிது இரவி வெளிச்சம் வந்தபோது கடைவானாக.*

தீக்கடைக்கோலை வைத்தல்.

**चित्तिः स्रुक् । चित्तमाज्यम् । वाग्वेदिः । आधीतं बर्हिः । केतो अग्निः ।**
**विज्ञातमग्निः । वाक्पतिर्होता । मन उपवक्ता । प्राणो हविः । सामाध्वर्युः ॥**

தைத். ஆர. 3-1.

(க-து.) *வேட்போன், சூத்திரத்திற் கூறியபடி, 'தசஹோதா' என்னும், இத் தைத்திரீய ஆரண்ய மந்திரங்களைக்கொண்டு, தீக்கடைக்கோலை அங்கு வைத்தல் வேண்டும் என்பது.*

குதிரையை நிறுத்தல்.

சூத்திரத்திற் கூறியவாறு, எவனுகிலுமொருவன், ஒரு குதிரையை, தீக்கடையுமிடத்திற் கொண்டுவந்து நிறுத்தி வைப்பானுக.

தீக்கடைதல்.

सहाग्नेऽग्निना जायस्व सह रय्या सह पुष्ट्या सह प्रजया सह
पशुभिः सह ब्रह्मवर्चसेन ॥ ஆ. சூ. 5-9-10.

(க-து.) வேட்போன், இந்த ஆபஸ்தம்ப சுரௌத சூத்திரத்தால், அரணிகளைக் கொண்டு, தீயைக்கடைதல் வேண்டும் என்பது.

இம் மந்திரத்தையே, ஒவ்வொருமுறை கடைதலுக்கும், மீண்டும் மீண்டும் ஓதிக்கொள்க.

சாமம் பாடுதல்.

சூத்திரத்திற் கூறியவாறு, தீக்கடையும்போது, பிரமன், சாமவேத மந்திரத்தைப் பாடல் வேண்டும்.

புகை யெழுந்தவுடன், சூத்திரத்திற் கூறியவாறு, சாமம் பாடுவோன், கௌசிக கோத்திரத்தானெனின்? ‘अरण्यो निहितो जातवेदा’ என்பதையுஞ் சேர்த்துப் பாடல் வேண்டும்.

தீயைப் போற்றல்.

उपावरोह जातवेदः पुनस्त्वं देवेभ्यो हव्यं वह नः प्रजानन् ।
आयुः प्रजाꣳ रयिमस्मासु धेह्यजस्रो दीदिहि नो दुरोणे ॥ தை. பி. 2-5-8.

(க-து.) வேள்வித்தலைவன், சூத்திரத்திற் கூறியவாறு, இப் பிராமண மந்திரத்தால், தீக்கடைக்கோலை முறுகக் கடைவதாலெழுந் தீயைப் போற்றுவானுக என்பது.

நான்கு ஹோதாவாக்குகளை ஓதுவித்தல்.

चित्तिः स्रुक् । चित्तमाज्यम् । वाग्वेदिः । आधीतं बर्हिः । केतो अग्निः ।
विज्ञातमग्निः । वाक्पतिर्होता । मन उपवक्ता । प्राणो हविः । सामाध्वर्युः ॥
पृथिवी होता । द्यौरध्वर्युः । रुद्रोऽग्नीत् । बृहस्पतिरुपवक्ता ॥
अग्निर्होता । अश्विनाऽध्वर्यू । त्वष्टाऽग्नीत् । मित्र उपवक्ता ॥

सूर्यं ते चक्षुः । वातं प्राणः । द्यां पृष्ठम् । अन्तरिक्षमात्मा । अङ्गैर्यज्ञम् । पृथिवीꣳ शरीरैः ॥

महाहविर्होता । सत्यहविरध्वर्युः । अच्युतपाजा अग्नीत् । अच्युतमना उपवक्ता । अनाधृष्यश्चाप्रतिधृष्यश्च यज्ञस्याभिगरौ । अयास्य उद्गाता ॥

தைத். ஆர. 3-1, 2, 3, 4, 5.

(க-து.) *வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறு, இச் சதுர்ஹோதா மந்திரங்களை, வேள்வித்தலைவன் ஓதுமாறு செய்விப்பானாக என்பது.*

கடைதலாலெழுந்த தீயைப் போற்றல்.

अजनन्नग्निः पूर्वः पूर्वेभ्यः पवमानः शुचिः पावक ईड्यः ॥ ஆ. சூ. 5-11-2.

(க-து.) *வேட்போன், இம் மந்திரத்தால், கடைதலால் உண்டாகிய தீயைப் போற்றுவானாக என்பது.*

மணமகன் பொருட்டுப் பொருளீதல்.

*வேள்வித்தலைவன், சூத்திரத்தின்படியே, வரனை; (மணமகனைத்) தேடிக் கொள்வதற்கு வேண்டிய தனத்தை அளித்தல் வேண்டும்.*

प्रजापतेस्त्वा प्राणेनाभिप्राणिमि पूष्णः पोषेण मह्यम् ।
दीर्घायुत्वाय शतशारदाय शतꣳ शरद्भ्य आयुषे वर्चसे जीवात्वै पुण्याय ॥

தைத். பிரா. 1-2-1-51.

(க-து.) *இப் பிராமண மந்திரத்தை ஓதி, வேள்வித்தலைவன், சூத்திரத்திற் கூறுமாறு, உண்டாகிய அக்கினியின்மீது, மூச்சை விடல்வேண்டும்.*

*மற்றும்,*

अजीजनन्नमृतं मर्त्यासोऽस्रेमाणं तरणिं वीडुजम्भम् ।
दश स्वसारो अग्रुवः समीचीः पुमाꣳसं जातमभिसꣳरभन्ताम् ॥

தைத். பிரா. 1-2-1-50.

(க-து.) *வேள்வித்தலைவன், சூத்திரத்திற் கூறியவாறு, இப் பிராமண மந்திரத்தால், கைகூப்பிக்கொண்டு, உண்டாகிய தீயைப் பிடித்தல் வேண்டும். அஃதாவது தீயின்மீது கையைக் குவித்துக்காட்டலாம் என்பது.*

*ஒவ்வோர் அக்கினி யுண்டாகும்போதும், வேட்போனும் (அத்வர்யும்) ஆக்னீத்ரனும் இவ்வாறு செய்க.*

வேள்விக்குரிய சமித்துக்களால் தீ வளர்த்தல்.

**सम्राडसि विराडसि सारस्वतौ त्वोत्सौ समिन्धातामन्नादं त्वान्नपत्याय ॥**

ஆப. சூ. 5-11-6.

(க-து.) *வேள்வித்தலைவன், இம் மந்திரத்தால் வேள்விக்குரிய ஏனைய விறகுகளால் அவ் வக்கினியை வளர்ப்பானாக என்பது.*

*பின்னர், வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறே, கிழக்கில் அத் தீயை இறக்கி வைத்தல் வேண்டும். வைத்த தீயை மேலே கைகூப்பி எடுத் தலும் வேண்டும்.*

காருகபத்தியத் தீயை யுண்டாக்கல்.

*வேட்போன், உட்கார்ந்துகொண்டு, கீழ்வரும் மந்திரங்களின் முடிவில், சூத்திரப்படி, அத் தீயைக் குண்டத்தில் வைத்துள்ள சமித்தில் எடுத்து வைத் தல் வேண்டும்.*

**भृगूणां त्वा देवानां व्रतपते व्रतेनादधामि ॥**

*என்னும் மந்திரத்தால், பிருகு கோத்திரத்தான் தீயை வைப்பானாக.*

**आङ्गिरसां त्वा देवानां व्रतपते व्रतेनादधामि ॥**

*என்னும் மந்திரத்தால், ஆங்கிரச கோத்திரத்தான் தீயை வைப்பானாக*

*சூத்திரத்திற் கூறியவாறே,*

**आदित्यानां त्वा देवानां व्रतपते व्रतेनादधामि ॥**

ஆப. சூ. 5-11-7.

*என்னும் மந்திரத்தால், ஏனைய கோத்திரத்திற் பிறந்த அந்தணர்கள் தீயை வைப்பார்களாக. இங்கு,*

**भूर्भुवः—भूमिर्भूम्ना द्यौर्वरिणान्तरिक्षं महित्वा ।**
**उपस्थे ते देव्यदितेऽग्निमन्नादमन्नाद्यायादधे ॥**
**आऽयं गौः पृश्निरक्रमीदसनन्मातरं पुनः ।**
**पितरं च प्रयन्त्सुवः ॥** தை. ஸம். 1-5-3.

घर्मः शिरस्तदयमग्निः संप्रियः पशुभिर्भुवत् ।
छर्दिस्तोकाय तनयाय यच्छ ॥ தை. பி. 1-1-7.

यास्ते शिवास्तनुवो जातवेदो या अन्तरिक्ष उत पार्थिवीर्याः ।
ताभिः संभूय सगणः सजोषा हिरण्ययोनिर्वह हव्यमग्ने ॥ ஆ. சூ. 5-12-2.
प्राणं त्वामृत आदधाम्यन्नादमन्नाद्याय गोप्तारं गुप्त्यै ॥ தை. பி. 1-2-1-63.

மற்றும்,

दिवस्त्वा वीर्येण पृथिव्यै महिम्नान्तरिक्षस्य पोषेण पशूनां तेजसा सर्वपशुमादधे ।
अग्ने गृहपतेऽहे बुध्न्य परिषद्य दिवः पृथिव्याः पर्यन्तरिक्षाल्लोकं विन्द यजमानाय ।
पृथिव्यास्त्वा मूर्धन्सादयामि यज्ञिये लोके ।
यो नो अग्ने निष्ट्यो योऽनिष्ट्योऽभिदासतीदमहं तं त्वयाभिनिदधामि ॥
ஆ. சூ. 5–12–2.

என்னும் மேற்காட்டிய மந்திரங்களை ஓதுக.

சூத்திரத்திற் கூறியபடி, பிரமன், 'रथन्तरं' 'यज्ञा यज्ञीयं' என்னும் சாம வேதப் பாடல்களை, காருகபத்தியத் தீ யுண்டாக்குங் காலத்திற் பாடுவானாக.

வேள்வித் தலைவனும், வியாகிருதி (பூர்புவஃ) முதற்கொண்டு, 'यास्ते शिवा' என்பது ஈறாகவுள்ள மந்திரங்களை, வேட்போனுடன் அக்கினியைத் தொட்டுக்கொண்டு ஓதுவானாக.

सुगार्हपत्यो विदहन्नरातीरुषसः श्रेयसीः श्रेयसीर्दधत् ।
अग्ने सपत्नाँ अपबाधमानो रायस्पोषमिषमूर्जमस्मासु धेहि ॥ தை. பி· 1-2-1-54.

(க-து.) வேள்வித்தலைவன், சூத்திரத்திற் கூறியபடி, உண்டாக்கிய காருகபத்தியத் தீயை, இப் பிராமண மந்திரத்தாற் போற்றல் வேண்டும் என்பது.

பின்னர், வேட்போன்,

घर्मः शिरस्तदयमग्निः संप्रियः पशुभिर्भुवत् ।
छर्दिस्तोकाय तनयाय यच्छ ॥ தை. பி. 1-1-7-1.
वातः प्राणस्तदयमग्निः संप्रियः पशुभिर्भुवत् ।
स्वदितं तोकाय तनयाय पितुं पच ॥ தை. பி. 1-1-7-2.

अर्कश्चक्षुस्तदसौ सूर्यस्तदयमग्निः संप्रियः पशुभिर्भुवत् ।
येत्ते शुक्र शुक्रं वर्चः शुक्रा तनूः शुक्रं ज्योतिरजस्रम् ।
तेन मे दीदिहि तेन त्वादधेऽग्निनाग्ने ब्रह्मणा ॥ தை. பி. 1-1-7-3, 4.

(க-து.) என்னும் மந்திரங்களையும், வேள்வித்தலைவன் ஓதுமாறு செய்வானாக என்பது.

ஈண்டு, சூத்திரத்திற் கூறியபடியே, உண்டாக்கிய காருகபத்தியத் தீயை, பரிசித்தல் முதலானவைகள், சமனஹோமஞ் செய்யாததன் முன்னர்ச் செய்யக்கூடாதவைகள் என்பதை யுணர்தல் வேண்டும்.

சமன ஹோமம்.

வேட்போன், எள், உளுந்து, நெல், வாற் கோதுமை, கோதுமை, தினை, சாமை, மூங்கிலரிசி, வெள்ளை யெள் முதலானவைகளை, நெய்யுடன் கலந்து, சுருவால், மீண்டும் மீண்டும் எடுத்து ஒவ்வொரு மந்திரத்தாலும் ஓமஞ் செய்தல் வேண்டும். எள் முதலானவைகள் கிடைத்தவரை கொள்க.

याते अग्ने पशुषु पवमाना प्रिया तनूर्या पृथिव्यां याऽग्नौ
या रथन्तरे या गायत्रे छन्दसि तां त एतेनावयजे स्वाहा ॥ ஆ. சூ. 5-16-4.

இம் மந்திரத்தால் ஓமஞ் செய்தல் வேண்டும்.

இங்கு, வேள்வித்தலைவன்,

'अग्ने पवमानायै प्रियायै तन्वा इदं न मम' என்று, தியாகஞ் செய்வானாக.

याते अग्नेऽप्सु पावका प्रिया तनूर्याऽन्तरिक्षे या वायौ या वामदेव्ये
या त्रैष्टुभे छन्दसि तां त एतेनावयजे स्वाहा ॥ ஆ. சூ. 5-16-4.

இம் மந்திரத்தால் ஓமஞ் செய்தல் வேண்டும்.

இங்கு, வேள்வித்தலைவன்,

अग्ने पावकायै प्रियायै तन्वा इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

याते अग्ने सूर्ये शुचिः प्रिया तनूर्या दिवि यादित्ये या बृहति
या जागते छन्दसि तां त एतेनावयजे स्वाहा ॥ ஆ. சூ. 5–16–4.

இம் மந்திரத்தால் ஓமஞ் செய்தல் வேண்டும்.

இங்கு, வேள்வித்தலைவன்,

'अग्ने शुच्यै प्रियायै तन्वा इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

காருகபத்திய ஆதானம் முடிந்தது.

## ஆகவனீயத் தீயை யுண்டாக்கல்.

வேட்போன், ஸூத்திரத்திற் கூறியவாறு, ஸூரியன் பாதி உதிக்கும் நேரத்தில் தீயை உண்டாக்க வேண்டியது.

வேட்போன், காருகபத்தியத்தில் வைத்த அரசம் விறகை நன்ருய் எரியும்படி செய்துவிட்டு, ஸூத்திரத்திற் கூறியபடியே, உபயமனீ: என்னும் பெருமணலை ஒரு மட்பாண்டத்திற் போட்டு வைத்துக்கொள்வானுக.

தணலை யெடுத்தல்.

பின்னர், ஸூத்திரத்திற் கூறியவாறே,

ओजसे बलाय त्वोद्यच्छे वृषणे शुष्मायायुषे वर्चसे ।
सपत्नतूरसि वृत्रतूः ॥ தை. பி. 1-2-1-56.

यस्ते देवेषु महिमा सुवर्गो यस्त आत्मा पशुषु प्रविष्टः ।
पुष्टिर्या ते मनुष्येषु पप्रथे तया नो अग्ने जुषमाण एहि ॥ தை. பி. 1-2-1-57.

दिवः पृथिव्याः पर्यन्तरिक्षाद्वातात्पशुभ्यो अध्योषधीभ्यः ।
यत्र यत्र जातवेदः संबभूथ ततो नो अग्ने जुषमाण एहि ॥ தை. பி. 1-2-1-58.

उदु त्वा विश्वे देवा अग्ने भरन्तु चित्तिभिः ।
स नो भव शिवतमः सुप्रतीको विभावसुः ॥ தை. ஸ. 4-6-3-1.

(க-து.) இம் மந்திரங்களால், எரிகின்ற தணலை யெடுத்துப் பாத்திரத்தி லுள்ள மணலின்மீது வைப்பானுக என்பது.

பின்னர், ஸூத்திரத்திற் கூறியவாறே, வேட்போன், மற்றுமொரு பாத்திரத்தில் மணலைப்போட்டு, முன் பாத்திரத்தை அதன்மேல் வைத்துக் கையில் எடுத்துக்கொள்வானுக.

या वाजिन्नग्नेः पशुषु पवमाना प्रिया तनूस्तामावह ।
या वाजिन्नग्नेरप्सु पावकाः प्रिया तनूस्तामावह ।
या वाजिन्नग्नेः सूर्ये शुचिः प्रिया तनूस्तामावह ॥ ஆப. ஸூ. 5-13-7.

(க-து.) இம் மந்திரங்களை, குதிரையின் வலது காதில் ஓதுவதுடன் வேள்வித்தலைவனையும் ஓதும்படி செய்வானுக என்பது.

### இடையில் தக்ஷிணாக்கினியை உண்டாக்கல்.

*ஆசுவலாயன சூத்திரம், போதாயன சூத்திரம் என்பவைகளைத் தழுவி, ஆக்னீத்ரன், காருகபத்தியத் தீயிலிருந்து எரிகின்ற தணலை யெடுத்துக் கொண்டு, சூத்திரத்திற் கூறியபடி, முழந்தாள்வரை மேல் உட்கார்ந்தவனாய்,*

'भृगूणां त्वा देवानां व्रतपते व्रतेनादधामि' *என்று, பார்க்கவ கோத்திரத்திலுள்ள வேள்வித்தலைவனுக்கு, அத் தணலைத் தக்ஷிணாக்கினிக்குச் செய்துள்ள குண்டத்தில் வைப்பானாக.*

'अङ्गिरसां त्वा देवानां व्रतपते व्रतेनादधामि' *என்று, ஆங்கீரச கோத்திரத்திலுள்ள வேள்வித்தலைவனுக்குத் தணலை வைக்கவும்.*

'आदित्यानां त्वा देवानां व्रतपते व्रतेनादधामि' *என்று, ஏனைய கோத்திரத்திலுள்ள அந்தணர்கட்குத் தணலை வைப்பானாக.*

*அங்கு,*

भुवः—भूमिर्भूम्ना द्यौर्वरिणान्तरिक्षं महित्वा ।
उपस्थे ते देव्यदितेऽग्निमन्नादमन्नाद्यायादधे ॥
आऽयं गौः पृश्निरक्रमीदसनन्मातरं पुनः ।
पितरं च प्रयन्त्सुवः ॥
त्रिꣳशद्धाम वि राजति वाक्पतङ्गाय शिश्रिये ।
प्रत्यस्य वह द्युभिः ॥ தைத். ஸம். 1–5–3.
वातः प्राणस्तदयमग्निः संप्रियः पशुभिर्भुवत् ।
स्वदितं तोकाय तनयाय पितुं पच ॥ தைத். பிரா. 1–1–7–2.

यास्ते शिवास्तनुवो जातवेदो या अन्तरिक्ष उत पार्थिवीर्याः ।
ताभिः संभूय सगणः सजोषा हिरण्ययोनिर्वह हव्यमग्ने ॥ ஆப. சூ. 5-12-2.
व्यानं त्वामृत आदधाम्यन्नादमन्नाद्याय गोप्तारं गुप्त्यै ॥ தை. பி. 1-2-1-3.

दिवस्त्वा वीर्येण पृथिव्यै महिम्ना। अन्तरिक्षस्य पोषेण पशूनां तेजसा सर्वपशुमारभे ॥

தைத். பிரா. 1–2–1–49.

अग्नेन्नपा मयोभुव सुशेव दिवः पृथिव्याः पर्यन्तरिक्षाल्लोकं विन्द यजमानाय ।
पृथिव्यास्त्वा मूर्धन्त्सादयामि यज्ञिये लोके ।
यो नो अग्ने निष्ट्यो योऽनिष्ट्योऽभिदासतीदमहं तं त्वयाभिनिदधामि ॥

ஆப. ஸூ. 5–13–8.

என்பன முதலான மந்திரங்களும் ஓதப்படுவனவாகின்றன.

இவ்வாறே, பிரமன், 'यज्ञा यज्ञीयं' என்னும், சாமவேதப் பாட்டைப் பாடுவானுக.

இங்கு, அக்கினியைப் பரிசித்தல் இல்லாமையும், சமன ஹோமமும் முன்போன்றன. ஆனல், ஆக்னீத்ரனே சமன ஹோமத்தைச் செய்வானுக.

இவ்வாறே, பிரமன், 'வாமதேவ்யம்' என்னும், சாமவேதப் பாடலையும் பாடுவானுக.

குதிரையைச் செலுத்தல்.

வேட்போன், வேள்வித்தலைவன் இருவரும், குதிரையுடன், சூத்திரத்திற் கூறியவாறே, கிழக்கிற் செல்லல் வேண்டும்.

प्राचीमनु प्रदिशं प्रेहि विद्वानग्नेरग्ने पुरो अग्निर्भवेह ।
विश्वा आशा दीद्यानो विभाह्यूर्जं नो धेहि द्विपदे चतुष्पदे ॥ தை.பி. 1-2-1-59.
विक्रमस्व महाꣳअसि वेदिषन्मानुषेभ्यः ।
त्रिषु लोकेषु जागृहि प्रजया च धेनेन च ॥ தை. பி. 1–2–1–61.
इमा उ मामुपतिष्ठन्तु राय आभिः प्रजाभिरिह संवसेय ।
इहो इडा तिष्ठतु विश्वरूपी मध्ये वसोर्दीदिहि जातवेदः ॥ தை. பி. 1-2-1-55.

(க-து.) அப்போது, வேட்போனும், வேள்வித்தலைவனும், இம் மந்திரங்களையும் ஓதல் வேண்டும் என்பது.

வண்டிச் சக்கரத்தை உருட்டல்.

பிரமன், சூத்திரத்திற் கூறியபடி, அக்கினிச்சாலைக்குத் தெற்கில், மும்முறை சுழலும்வரை, ஒரு வண்டிச் சக்கரத்தைச் செலுத்துவானுக.

அக்கினியைக் கோண்டுபோகும் முறை.

வேட்போன், சூத்திரத்திற் கூறியபடி, வழியின் மூன்றிலொரு பங்கு வரை, அவ் வக்கினியை முழந்தாள்வரை உயர்த்தி எடுத்து வைத்துக் கொண்டும், இரண்டாவது பாகத்தில், தொப்பூழ்வரை உயர்த்தி எடுத்துக் கொண்டும்,

மூன்றும் பாகத்தில், வாய்வரை உயரத்தூக்கி எடுத்துக்கொண்டுந் தீச் சாலைக்கு வடபுறமாய்ச் செல்வானுக.

குதிரை அவனுக்குத் தென்புறமாய்ச் செல்லல் வேண்டும்.

வர தானம்.

வேள்வித்தலைவன், வேட்போனுக்கு (அத்வர்யுவிற்கு) ஒரு மனைமகளைத் தேடிக்கொள்ளுதற்குரிய பணத்தை, சூத்திரத்திற் கூறியபடியே ஈதல் வேண்டும்.

பாதிவழியிற் போன் வைத்தல்.

சூத்திரத்திற் கூறியபடி, வேட்போன், அக்கினியை எடுத்துக்கொண்டு போகுங்கால், பாதி வழியில் ஒரு பொன் துண்டை வைத்தல் வேண்டும்.

போன்னைத் தாண்டுதல்.

नाकोऽसि ब्रध्नः प्रतिष्ठासंक्रमणः ॥ ஆப. சூ. 5-14-13.

(க-து.) வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறே, இம் மந்திரத்தால் வழியில் வைத்த பொன்னைத் தாண்டிச் செல்வானுக என்பது.

குதிரை, சமித்துக்களை மிதித்தல்.

பின்னர், சூத்திரத்திற் கூறியவாறே, கிழக்கே சென்ற குதிரை, ஆகவனீயமுள்ள விடஞ் சென்று, அதன் வலது கால், சம்பாரத்தின் (மண் சமித்துக்களின்) வடபுறமாய்ப் படுமாறு செய்வானுக.

अभ्यस्थाद्विश्वाः पृतना अरातीस्तदग्निराह तदु सोम आह ।

बृहस्पतिः सविता तन्म आह पूषा माधात्सुकृतस्य लोके ॥ தை. ஸ. 4-2-8-1.

(க-து.) அப்போது, வேட்போன், இம் மந்திரத்தை ஓதுவானுக என்பது.

यदक्रन्दः प्रथमं जायमान उद्यन्त्समुद्रादुत वा पुरीषात् ।

श्येनस्य पक्षा हरिणस्य बाहू उपस्तुतं जनिम तत्ते अर्वन् ॥ தை. ஸ. 4-2-8-2.

(க-து.) *பின்னர், ஸூத்திரத்திற் கூறியவாறே, இச் சங்கிதை மந்திரத்தால், குதிரையைப் பிரதக்ஷிணமாய்ச் சுற்றச் செய்து மேற்கே முன்போல் கொண்டுவரல் வேண்டும் என்பது.*

*பின், ஸூத்திரத்திற் கூறியவாறே, ஆகவனீயத்திற்கு முன், மேற்கு முகமாய் அக் குதிரையை நிற்க வைப்பானாக.*

வேள்வித்தலைவன் சேபம்.

ये ते॑ अग्ने शिवे त॒नुवौ॑ वि॒राट् च॑ स्व॒राट् च॒ ते मा॑ विंश॒तां॑ ते मा॑ जिन्वताम् ।
ये ते॑ अग्ने शिवे त॒नुवौ॑ स॒म्राट् चा॑भिभू॒श्च ते मा विंश॒तां॑ ते मा॑ जिन्वताम् ।
ये ते॑ अग्ने शिवे त॒नुवौ॑ वि॒भू॑श्च परि॒भूश्च ते मा विंश॒तां॑ ते मा॑ जिन्वताम् ॥
ये ते॑ अग्ने शिवे त॒नुवौ॑ प्र॒भ्वी॑ च प्र॒भू॑तिश्च ते मा विंश॒तां॑ ते मा॑ जिन्वताम् ॥
यास्ते॑ अग्ने शि॒वास्त॒नुव॒स्ताभि॒स्त्वाऽऽद॑धे ॥ தைத். பிரா. 1-1-7.

यास्ते॑ अग्ने घो॒रास्त॒नुवः॑ । क्षुच्च॒ तृष्णा॑ च । अस्नु॒क्चाना॑हुतिश्च । अ॒श॒न॒या च॑ पिपा॒सा च॑ । से॒दिश्चाम॑तिश्च । ए॒तास्ते॑ अग्ने घो॒रास्त॒नुवः॑ । ताभिः॑ पा॒प्मानं॑ गच्छ । यो॑ऽस्मान्द्वेष्टि॑ । यं च॑ व॒यं द्वि॒ष्मः ॥ தை. ஆர. 4-22.

स्निक्च स्नीहि॑तिश्च स्नि॒हि॑तिश्च । उ॒ष्णा च॑ शी॒ता च॑ ।
उ॒ग्रा च॑ भी॒मा च॑ । स॒दा॒म्नी॑ से॒दिर॒नि॑रा । ए॒तास्ते॑ अग्ने घो॒रास्त॒नुवः॑ ।
ताभिः॑ पा॒प्मानं॑ गच्छ । यो॑ऽस्मान्द्वेष्टि॑ । यं च॑ व॒यं द्वि॒ष्मः ॥ தை. ஆ. 4-23.

(க-து.) *வேள்வித்தலைவன், இம் மந்திரங்களை செபிப்பானாக என்பது.*

தீயைப் போற்றுதல்.

य॒दि॒दं दि॒वो यद॒दः पृ॑थि॒व्याः सं॑विदा॒ने रोद॑सी संबभूव॒तुः ।
तयोः॑ पृ॒ष्ठे सी॑दतु जा॒तवे॑दाः श॒म्भूः प्र॒जाभ्य॑स्त॒नुवे॑ स्यो॒नः ॥ தை. பிரா. 1-2-1.

(க-து.) *வேட்போன், ஸூத்திரத்திற் கூறியவாறே, ஆகவனீயத் தீ யுண்டாக்குதற் பொருட்டுக் கொண்டுவந்துள்ள அக்கினியைக் கிழக்கு முகமாய் நின்றுகொண்டு போற்றுவானாக என்பது.*

மீண்டும் ஆகவனீயத் தீ யுண்டாக்கத் தொடங்கல்.

*வேட்போன், ஆகவனீயாக்கினிக்கு இடமாகிய குண்டத்தின் முன் நின்றுகொண்டு, சூத்திரத்திற் கூறியவாறு, கீழ்வரும் மந்திரங்களை ஓதிக் கொண்டு அக்கினியை எடுத்துக் குண்டத்திலுள்ள சமித்தில் வைப்பானுக.*

*அப்போது, 'गीयमाने आदधाति' என்னும், ஆபத்தம்ப சூத்திரப்படி, பிரமன், 'बृहच्चैतं, वारवन्तीयं, यज्ञायज्ञीयं' என்னும் சாமப்பாடல்களை, பாடலின் முடிவும், அக்கினி வைத்தலும் ஒன்ருகவே ஆகுமாறு பாடி முடிப்பானுக. இதனுல், தீயை வைத்த பின்னர், சாமப்பாடல் பாடாதவாறு பாடல் வேண்டு மென்பது பெற்ரும்.*

ஆகவனீயத் தீ யுண்டாக்குமுறை.

भृगूणां त्वा देवानां व्रतपते व्रतेनादधामि ॥

*என்று, பிருகு குலத்தானுக்கு, தீயை வைப்பானுக.*

आङ्गिरसां त्वा देवानां व्रतपते व्रतेनादधामि ॥

*என்று, ஆங்கிரச குலத்தானுக்கு, தீயை வைப்பானுக.*

आदित्यानां त्वा देवानां व्रतपते व्रतेनादधामि ॥

*என்று, ஏனைய கோத்திரத்தார்களுக்கு, தீயை வைப்பானுக. வைத்த பின்னர்,*

भूर्भुवः सुवः—भूमिर्भूम्ना द्यौर्वरिणान्तरिक्षं महित्वा ।
उपस्थे ते देव्यदितेग्निमन्नादमन्नाद्यायादधे ॥
आऽयं गौः पृश्निरक्रमीदसनन्मातरं पुनः ।
पितरं च प्रयन्त्सुवः ॥
त्रिꣳशद्धाम विराजति वाक्पतङ्गाय शिश्रिये ।
प्रत्यस्य वह द्युभिः ॥

अस्य प्राणादपानत्यन्तश्चरति रोचना । व्यख्यन्महिषः सुवः ॥ தை. ஸம். 1-5-3.

अर्कश्चक्षुस्तदसौ सूर्यस्तदयमग्निः संप्रियः पशुभिर्भुवत् ।
येत्ते शुक्र शुक्रं वर्चः शुक्रा तनूः शुक्रं ज्योतिरजस्रम् ।

तेन मे दीदिहि तेन त्वाऽऽदधेऽग्निनाऽग्ने ब्रह्मणा ॥ தைத். பிரா. 1-1-7.

यास्ते शिवास्तनुवो जातवेदो या अन्तरिक्ष उत पार्थिवीर्याः ।
ताभिः संभूय सगणः सजोषा हिरण्ययोनिर्वह हव्यमग्ने ॥ ஆப. சூ. 5-15-6.

अपानं त्वामृत आदधाम्यन्नादमन्नाद्याय गोप्तारं गुप्त्यै ॥ தை. பி. 1-2-1-63.

दिवस्त्वा वीर्येण पृथिव्यै महिम्नान्तरिक्षस्य पोषेण पशूनां तेजसा सर्वपशुमादधे ॥
ஆப. சூ. 5-15-6.

पृथिव्यास्त्वा मूर्धन्सादयामि यज्ञिये लोके ।
यो नो अग्ने निष्ट्यो योऽनिष्ट्योऽभिदासतीदमहं तं त्वयाभिनिदधामि ॥
ஆப. சூ. 5-12-2.

(க-து.) *என்னும், இம் மந்திரங்களையும் வேட்போன் ஓதல் வேண்டும் என்பது.*

ஆகவனீயத் தீயைப் போற்றுதல்.

आनशे व्यानशे सर्वमायुर्व्यानशे ॥ தைத். பிரா. 1–1–7.

अहं त्वदस्मि मदसि त्वमेतन्ममासि योनिस्तव योनिरस्मि ।
ममैव सन्वह हव्यान्यग्ने पुत्रः पित्रे लोककृज्जातवेदः ॥ தைத். பிரா. 1-2-1-52.

(க-து.) *வேள்வித்தலைவன், இம் மந்திரத்தால், உண்டாக்கிய ஆகவனீயாக்கினியைப் போற்றல் வேண்டும் என்பது.*

அநுவார்த்தனம்.

*வேள்வித்தலைவன், சூத்திரத்திற் கூறியவாறே, காருகபத்தியத் தீ யுண்டாக்குவதில் நடந்தபடி (வேட்போனைப்) பின்பற்றி நடந்துகொள்வானாக.*

*சூத்திரத்திற் கூறியபடி, அக்கினியைப் பரிசித்தலும், சமன ஹோமமும் முன்போற் செய்க.*

சமித்தை வைத்தல்.

अग्न आयूंषि पवस आसुवोर्जमिषं च नः ।
आरे बाधस्व दुच्छुनां स्वाहा ॥ தைத். ஸம். 1–3–14.

(க-து.) *வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறு, ஒவ்வொரு தீயினும், மூன்று அரசஞ் சமித்துக்களை நெய்யில் நனைத்து வைப்பானாக என்பது.*

*வேள்வித்தலைவன், 'अग्नये पवमानाय इदं न मम' என்று தியாகஞ்செய்வானாக.*

அங்ஙனமே,

अग्ने पवस्व स्वपा अस्मे वर्चः सुवीर्यम् ।

दधत्पोषꣳ रयिं मयि स्वाहा ॥

(க-து.) இம் மந்திரத்தால், ஒவ்வொரு தீயில் ஒவ்வொன்ருக, மூன்று அரசஞ் சமித்துக்களை, வேட்போன் நெய்யில் நனைத்து வைப்பானுக என்பது.

வேள்வித்தலைவனும், 'अग्नये पवमानाय इदं न मम' என்று தியாகஞ் செய்வானுக.

மற்றும், இவ்வாறே மீண்டும்,

अग्निर्ऋषिः पवमानः पाञ्चजन्यः पुरोहितः ।

तमीमहे महागयꣳ स्वाहा ॥ தைத். ஆர. 2-5.

(க-து.) வேட்போன், இம் மந்திரத்தால், ஒவ்வொரு தீயில் ஒவ்வொன்ருக, மூன்று அரசஞ் சமித்தை நெய்யில் நனைத்து வைப்பானுக என்பது.

வேள்வித்தலைவனும், 'अग्नये पवमानाय इदं न मम' என்று தியாகஞ் செய்வானுக.

வன்னிச் சமித்தை வைத்தல்.

இவ்வாறே, மீண்டும்,

समुद्रादूर्मिर्मधुमाꣳ उदारदुपाꣳशुना सममृतत्वमानट् ।

घृतस्य नाम गुह्यं यदस्ति जिह्वा देवानाममृतस्य नाभिः स्वाहा ॥

தைத். ஆ. 10-12.

(க-து.) வேட்போன், இம் மந்திரத்தால் ஒவ்வொரு தீயிலும் ஒவ்வொரு சமித்தாக, மூன்று வன்னிச் சமித்துக்களை நெய்யில் நனைத்து வைப்பானுக என்பது.

வேள்வித்தலைவன், 'आदित्यात्मने ब्रह्मण इदं न मम' என்று, தியாகஞ் செய்வானுக.

இவ்வாறே,

वयं नाम प्र ब्रवामा घृतेनास्मिन्यज्ञे धारयामा नमोभिः ।

उप ब्रह्मा शृणवच्छस्यमानं चतुःशृङ्गोऽवमीद्गौर एतत्स्वाहा ॥ தை. ஆ. 10-12.

(க-து.) வேட்போன், இம் மந்திரத்தால், முன்போல் மூன்று வன்னிச் சமித்துக்களை வைப்பானாக என்பது.

வேள்வித்தலைவனும், 'यज्ञात्मने ब्रह्मण इदं न मम' என்று, தியாகஞ் செய்வானாக.

இவ்வாறே,

चत्वारि शृङ्गा त्रयो अस्य पादा द्वे शीर्षे सप्त हस्तासो अस्य ।
त्रिधा बद्धो वृषभो रोरवीति महो देवो मर्त्या॑ँ आविवेश स्वाहा ॥

தைத். ஆ. 10-12.

(க-து.) வேட்போன், இம் மந்திரத்தால், முன்போல் மூன்று வன்னிச் சமித்துக்களை வைப்பானாக என்பது.

வேள்வித் தலைவனும் 'यज्ञात्मने ब्रह्मण इदं न मम' என்று தியாகஞ் செய்வானாக.

இனி, பலவகைச் சமித்துக்களை வைத்தல் வேண்டும். அவற்றுள்,

அத்தி விறகை வைத்தல்.

இவ்வாறே,

प्रेद्धो अग्ने दीदिहि पुरो नोऽजस्रया सूर्म्या यविष्ठ ।
त्वा॑ँ शश्वन्त उपयन्ति वाजाः स्वाहा ॥ தை. ஸ. 4-6-5.

(க-து.) வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறே, இம் மந்திரத்தால் முன்போல், ஒவ்வொரு தீயில் ஒவ்வொரு சமித்தாக மூன்று அத்திச் சமித்துக்களை வைத்தல் வேண்டும் என்பது.

வேள்வித்தலைவன், 'अग्नय इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

இவ்வாறே,

विधेम ते परमे जन्मन्नग्ने विधेम स्तोमैरवरे सधस्थे ।
यस्माद्योनेरुदारिथा यजे तं प्रत्वे हवी॑ँषि जुहुरे समिद्धे स्वाहा ॥

தைத். ஸம். 4-6-5.

(க-து.) வேட்போன், சூத்திரத்திற் கூறியபடி, முன்போல் ஒவ்வொரு சமித்துக்களாக மூன்று வைகங்கதச் சமித்துக்களை வைப்பானாக என்பது.

வேள்வித்தலைவன், 'अग्नय इदं न मम' என்று, தியாகஞ் செய்தல்வேண்டும்.

இவ்வாறே,

तां सवितुर्वरेण्यस्य चित्रामाहं वृणे सुमतिं विश्वजन्याम् ।

यामस्य कण्वो अदुहत्प्रपीनां सहस्रधारां पयसा महीं गां स्वाहा ॥

தைத். ஸ. 4-6-5.

(க-து.) வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறே, ஒவ்வொரு தீயில் ஒவ்வொரு சமித்துக்களாக மூன்று வன்னிச் சமித்துக்களை வைத்தல் வேண்டும் என்பது.

வேள்வித்தலைவன், 'सवित्र इदं न मम' என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

இவ்வாற்றால் ஒவ்வொரு அக்கினிகளிலும், எல்லாச் சமித்துக்களுங் கூடி ஒன்பது ஒன்பது சமித்துக்களாயின.

பிரஜாபத்ய ஹோமம்.

வேட்போன், பன்னிரண்டு முறை நெய் யெடுத்து, சுருக்கை நிறைத்துக்கொண்டு, பிரஜாபதியை மனதால் தியானித்து, சூத்திரத்திற் கூறியவாறே, 'प्रजापतये स्वाहा' என்று ஹோமஞ் செய்யவும்.

வேட்போன், 'प्रजापतय इदं न मम' என்று, தியாகஞ் செய்வானாகை.

விரோதியின் பொருட்டு ஏவுதல்.

यास्ते अग्ने घोरास्तनुवः । क्षुच तृष्णा च । अस्नुक्चानाहुतिश्च ।

अशनया च पिपासा च । सेदिश्चामतिश्च ।

एतास्ते अग्ने घोरास्तनुवस्ताभिः पाप्मानं गच्छ ।

योऽस्मान्द्वेष्टि यं च वयं द्विष्मः ॥ தை. ஆ. 4–22.

स्निक्च स्नीहितिश्च स्निहितिश्च । उष्णा च शीता च ।

उग्रा च भीमा च । सदाम्नी सेदिरनिरा ।

एतास्ते अग्ने घोरास्तनुवः । ताभिः पाप्मानं गच्छ ।

योऽस्मान्द्वेष्टि यं च वयं द्विष्मः ॥ தை. ஆ. 4-23.

(க-து.) வேள்வித்தலைவன், இக் கோர மந்திரங்களையுஞ் செபிப்பானாகை என்பது.

பூரணாகுதி.

सप्त ते॑ अग्ने समिध॑ः सप्त जिह्वाः सप्तर्ष॑यः सप्त धाम॑ प्रियाणि॑ ।

सप्त होत्राः॑ सप्तधा त्वा॑ यजन्ति सप्त योनीरापृ॑णस्वा घृतेन स्वाहा ॥

தைத். ஸ. 4-6-5.

(க-து.) வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறே, பன்னிரண்டு முறை நெய் யெடுப்பதாற் சுருக்கை நிரப்பிக்கொண்டு ஆகுதி செய்வானாக என்பது.

வேள்வித்தலைவன், 'अग्नये सप्तवत इदं न मम' என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

வரதானம்.

வேள்வித்தலைவன், வேட்போனுக்கு, அவனுடைய மகளுக்கு மணமகனைத் தேடுதற்குரிய பணத்தைத் தானமாய்க் கொடுத்தல் வேண்டும்.

சேபம்.

வேள்வித்தலைவன், 'சிவா' என்பதைச் செபிப்பானாக. மற்றும், 'येते अग्ने' என்பது முதற்கொண்டு, 'ताभिस्स्वादधे' என்பது ஈறாகவுள்ள மந்திரங்களையுஞ் செபிப்பானாக.

பிராயச்சித்த ஹோமம்.

उद्वयं तम॑सस्परि पश्य॑न्तो ज्योतिरुत्त॑रम् ।

देवं दे॑वत्रा सूर्य॑मगन्म ज्योति॑रुत्तमꣳ स्वाहा॑ ॥ தைத். ஸ. 4-1-7.

(க-து.) வேட்போன், சூத்திரத்திற் கூறியவாறே, இம் மந்திரத்தைச் சொல்லி ஆகுதி செய்தல் வேண்டும் என்பது.

வேள்வித்தலைவன், 'सूर्याय इदं न मम' என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

இவ்வாறே, வேட்போன், தெரிந்தும், தெரியாமலுஞ் செய்த குற்றத்தின் பொருட்டு,

उदु त्यं जातवे॑दसं देवं व॑हन्ति केतव॑ः ।

दृशे विश्वा॑य सूर्य॑ꣳ स्वाहा॑ ॥ தை. ஸ. 1-4-43.

अना॑ज्ञातं यदाज्ञा॑तं यज्ञस्य॑ क्रियते मिथु॑ ।

अग्ने तद॑स्य कल्पय त्वꣳ हि वेत्थ॑ यथातथꣳ स्वाहा॑ ॥ தை. பி. 3-7-11.

पुरुषसंमितो यज्ञो यज्ञः पुरुषसंमितः ।

अग्ने तदस्य कल्पय त्वꣳ हि वेत्थ यथातथꣳ स्वाहा ॥ தை. பி. 3-7-11.

यत्पाकत्रा मनसा दीनदक्षा न यज्ञस्य मन्वते मर्तासः ।

अग्निष्टद्धोता क्रतुविद्विजानन्यजिष्ठो देवाꣳ ऋतुशो यजाति स्वाहा ॥

தை. பிரா. 3-7-11

(க-து.) என்னும் இம் மந்திரங்களால் ஆகுதி செய்வானுக என்பது. வேள்வித்தலைவன், 'अग्नय इदं' என்று தியாகஞ் செய்க.

இவ்வாறே, வேட்போன், கருமங்களின் மாறுபாடு முதலானவை களின் பொருட்டு,

त्वं नो अग्ने वरुणस्य विद्वान्देवस्य हेडोऽव यासिसीष्ठाः ।

यजिष्ठो वह्नितमः शोशुचानो विश्वा द्वेषाꣳसि प्र मुमुग्ध्यस्मत्स्वाहा ॥

தை. ஸம், 2-5-12.

स त्वं नो अग्नेऽवमो भवोती नेदिष्ठो अस्या उषसो व्युष्टौ ।

अव यक्ष्म नो वरुणꣳ रराणो वीहि मृडीकꣳ सुहवो न एधि स्वाहा ॥

தை. ஸம். 2-5-12.

(க-து.) முன்போல், இம் மந்திரங்களால் ஆகுதி செய்வானுக என்பது. வேள்வித்தலைவன், 'अग्नी वरुणाभ्यामिदम्' என்று தியாகஞ் செய்வானுக. மற்றும்,

त्वमग्ने अयास्ययासन्मनसा हितः ।

अयासन्हव्यमूहिषेऽया नो धेहि भेषजꣳ स्वाहा ॥ தை. பி. 2-4-1.

(க-து.) வேட்போன், இம் மந்திரத்தால் ஆகுதி செய்வானுக என்பது. வேள்வித்தலைவன், 'अग्नये अयस इदं न मम' என்று தியாகஞ் செய்வானுக.

வாக்கையடக்கல் விடுபட்டதின் பொருட்டு,

इदं विष्णुर्वि चक्रमे त्रेधा नि दधे पदम् ।

समूढमस्य पाꣳसुरे स्वाहा ॥ தை. ஸம். 1-2-13.

(க-து.) வேட்போன், இம் மந்திரத்தால் ஆகுதி செய்வானாகை என்பது.

வேள்வித்தலைவன், 'विष्णव इदं न मम' என்று, தியாகஞ் செய்வானாகை.

அங்ஙனமே,

त्र्यम्बकं यजामहे सुगन्धिं पुष्टिवर्धनम् ।
उर्वारुकमिव बन्धनान्मृत्योर्मुक्षीय माऽमृतात्स्वाहा ॥ தை. ஸம். 1-8-6.

(க-து.) இம் மந்திரத்தால் ஆகுதி செய்வானாகை என்பது.

வேள்வித்தலைவன், 'त्र्यम्बकाय इदं न मम' என்று, தியாகஞ் செய்வானாகை.

வேட்போன், சுரம் (மாத்திரை), அக்ஷரம் (எழுத்து), முதலியன விடுபட்டதின் பொருட்டு,

आभिर्गीर्भिर्यदतो न ऊनमाप्यायय हरिवो वर्धमानः ।
यदा स्तोतृभ्यो महि गोत्रा रुजासि भूयिष्ठभाजो अध ते स्याम स्वाहा ॥

தைத். பிரா. 3-7-11.

(க-து.) இம் மந்திரத்தால் ஆகுதி செய்வானாகை என்பது.

வேள்வித்தலைவன், 'इन्द्राय हरिवते वर्धमानाय इदं न मम' என்று, தியாகஞ் செய்வானாகை.

இவ்வாறே, வேள்விச் செயலாளர்கள் (ரித்துவிக்குகள்) செய்யும் மூடத்தன்மையின் பொருட்டு,

यद्विद्वाꣳसो यदविद्वाꣳसो मुग्धाः कुर्वन्त्यृत्विजः ।
अग्निर्मा तस्मादेनसः श्रद्धा देवी च मुञ्चताꣳ स्वाहा ॥ ஆப. சூ. 3-12-1.

(க-து.) இச் சூத்திர மந்திரத்தால், ஆகுதி செய்வானாகை என்பது.

வேள்வித்தலைவன், 'अग्नये श्रद्धायै देव्या इदं न मम' என்று தியாகஞ் செய்வானாகை.

தீயில், தண்ணீர் விழுந்து அவிந்து விடல் முதலான குற்றத்தின் பொருட்டு,

पुनस्त्वादित्या रुद्रा वसवः समिन्धतां पुनर्ब्रह्माणो वसुनीथ यज्ञैः ।
घृतेन त्वं तनुवो वर्धयस्व सत्याः सन्तु यजमानस्य कामाः स्वाहा ॥

தைத். ஸம். 4-2-3.

(க-து.) இம் மந்திரத்தால் ஆகுதி செய்வானாக என்பது.

வேள்வித்தலைவன், ‘अग्नये वसुनीधाय इदं न मम’ என்று, தியாகஞ் செய்வானாக.

பின்னர், சூத்திரத்திற் கூறியவாறே, எசுர் விட்டுப் போனதின் பொருட்டு,

| வேட்போன் : | வேள்வித்தலைவன் : |
|---|---|
| भूः स्वाहा | अग्नय इदं न मम |
| भुवः स्वाहा | वायव इदं न मम |
| सुवः स्वाहा | सूर्यायेदं न मम |
| भूर्भुवः सुवः स्वाहा | प्रजापतय इदं न मम |

என்று, சூத்திரத்திற்கூறிய மந்திரத்தால் ஆகவனீயத்தில், வேட்போன் ஆகுதி செய்வானாக. வேள்வித்தலைவன் தியாகஞ் செய்வானாக.

அக்கினியை உண்டாக்கியவனுடைய விரத சங்கற்பம் “பொய்மை கூறேன்” என்பதாம்.

ஹோமம்.

ये अग्नयो दिवो ये पृथिव्याः समागच्छन्तीषमूर्जं दुहानाः ।
ते अस्मा अग्नयो द्रविणं दत्त्वेष्टाः प्रीता आहुतिभाजो
भूत्वा यथालोकं पुनरस्तं परेत स्वाहा ॥ ஆப. சூ. 5-8-1.

(க-து.) வேட்போன், இம் மந்திரத்தால், ஆகுதி செய்வானாக என்பது.

வேள்வித்தலைவன் ‘अग्निभ्य इदं न मम’ என்று தியாகஞ் செய்வானாக.

அக்கினியை வழிபடல்.

अथर्वपितुं मे गोपायान्नं प्राणेन संमितम् ।
त्वया गुप्ता इषमूर्जं मदन्तो रायस्पोषेण समिषा मदेम ॥ ஆப. சூ. 5-18-2.

(க-து.) வேள்வித் தலைவன், இம் மந்திரத்தால் தக்ஷிணாக்கினியைப் போற்றுவானாக என்பது.

नर्य प्रजां मे गोपाय मूलं लोकस्य संततिम् ।
आत्मनो हृदयान्निर्मितां तां ते परिददाम्यहम् ॥ ஆப. சூ. 5-18-2.

(க-து.) இம் மந்திரத்தால் கார்ஹபத்தியாக்கினியையும் போற்றுவானாக என்பது.

शꣳस्य पशून्मे गोपाय विश्वरूपं धनं वसु ।
गृहाणां पुष्टिमानन्दं ताꣳस्ते परिददाम्यहम् ॥ ஆப. சூ. 5-18-2.

(க-து.) இம் மந்திரத்தால், ஆகவநீயத் தீயையும் போற்றுவானாக என்பது.

पञ्चधाग्नीन्व्यक्रामद्विराट् सृष्टाः प्रजापतेः ।
ऊर्ध्वारोहद्रोहिणी योनिरग्नेः प्रतिष्ठितिः ॥ ஆப. சூ. 5–18–2.

(க-து.) இம் மந்திரத்தால், எல்லா அக்கினிகளையும் போற்றுவானாக என்பது.

அக்கினி ஆதானம் முடிந்தது.

## ஆதானத்தின் அங்கமாகிய இஷ்டி.

இதன் பின்னர், வேள்வித்தலைவனும் பத்தினியும், முன்போல் 'இஷ்டியா யக்ஷியே' என்று, சங்கற்ப முதலியவைகளைச் செய்து கொண்டு, சமித்து, விறகு, தருப்பை, பாத்திரம், நிர்வாபம் (சமைக்கும் பாத்திரத்தில் அரிசியை எடுத்தல்) என்பன முதலானவைகளை விதிப்படியே செய்து கொண்டு, அக்கினி, பவமானம், பாவகம், சுசி, இந்திராக்கினி, அதிதி என்னுந் தேவதைகளைக் குறித்து, வேள்வித் தலைவன், ஆகுதிகளைச் செய்வானாக.

இதன் பிரயோக முறைகள், தரிச பூர்ணமாஸம் போலவே உள்ளன. ஆனால், சில மாறுபாடுகளுள. அவற்றை வைதிகப் பிரயோக நூல்களிற் காண்க.

### சதுர் ஹோத்ரு ஹோமம்.

'पृथिवी होता' என்பது முதலான 'சதுர்ஹோதா' என்னும் மந்திரத்தால் ஓமஞ் செய்வானாக.

இவ்வாறு, காலையிற் செய்ய வேண்டிய ஆதானக்கிரியைகள் முடிந்து விட்டனவாதலின், மாலை, அக்கினி ஹோத்திரக் கிரியையைத் தொடங்குவானாக.

ஆதான சேடமாகிய இஷ்டியும் முடிந்தது.

## எசுர்வேதீய அக்கினி ஹோத்திரம்.

ஈண்டு, 'அக்கினி ஹோத்திரம், என்பது, நாடோறும், சூரியன் உதிக்கும்போதும், ஒடுங்கும்போதுஞ் செய்யப்பெற்ற ஓமங்களாம்.

இதற்கு, உரியதாவது பாலாம். ஆனால், கீர்த்தி, பசுக்கள், இந்திரியங்களின் வன்மை, கிராமத்தலைமை முதலான பயன்களை விரும்பிலோ, முறையே நெய், பால், தயிர், அரிசிக்கஞ்சி முதலானவைகளும் அக்கினி ஹோத்திரத்திற்கு உரிய பொருளாகின்றன.

இவற்றுள், முதலாவதாக எப்பொருளைக் கொண்டு ஓமஞ் செய்யத் தொடங்கப் பெற்றதோ, அதுவே முடிவு வரை விநியோகப்படுத்தப்படுவதாம்.

இவ் வக்கினி ஹோத்திரத்திற்கு உரிய தேவதைகள், சூரியனும், பிரஜாபதியு மாவார்கள். இவர்களுக்குள்ளும், காலையில் இரவியும், மாலையில் பிரசாபதியுமாகக் கொள்ளுதல் வேண்டும்.

இவ்வக்கினி ஹோத்திரம், மூன்று வேதங்களுள் யார் யார் எவ்வெவ் வேதத்தைக் கொண்டுள்ளாரோ, அவ்வவ் வேதத்தைத் தழுவி அவரவர் செய்துகொள்வதாகும். இவ்வாறுதலின், இஃது, ஒன்றற்கொன்று வேறுபட்டிருக்கும். அக்கினி யாதானமோ, பெரும்பான்மை வேறுபட்டிராது.

'வாழும் வரை தீ யோம்புக' என்று, சுருதி விதித்தலின், இஃது, இறக்கும் வரை செய்யற்பாலதாம்.

இதில், இரவி யெழுந்த பின்னர்ச் செய்தல் வேண்டும், இரவி யெழுமுன் செய்தல் வேண்டும், எனப் பலவகை யுள. ஆனால், இரவில், சூரியன், தீயிற் கலந்து கொண்டிருக்கின்றான் என்று சுருதிகள் கூறுகின்றனவாதலின், இரவிலும் சூரியன் உளன் என்பது உரைற்பாலது.

மற்றும், சூரியன் உதிப்பதின் முன் செய்யில் அது தீக்குச் செய்ததாகும் என்பர் சிலர்.

சூரியன் உதிப்பதன் முன் செய்யில், உதித்தவுடன் களிப்போடு சூரியன் ஏற்றுக் கொள்ளுவன் என்பர் சிலர். மற்றும், இவ்வாறு பலவகை உள்ளன.

சூரியன், அக்கினி என்னும் இரண்டு தேவதைகட்கும் ஒரே காலத்திலும் ஓமஞ் செய்யலாம் என்பதை, ஆராய்ந்துணர்ந்து கொள்க.

பருவநாளின் உச்சிப் போதுவரை, விதிப்படி, வேள்வியின் பொருட்டு, தீயை யுண்டாக்கிய வேள்வித்தலைவன், மாலையில், நீராடல் முதலானவைகளாற் புநித முடையவனாய், வெளியில் ஆசமனஞ் செய்து கொண்டு,

தண்ணீரை யுடையவனாய், வேள்விச்சாலையை யடைந்து, காருகபத்தியத்திற்கு மேற்கில் கிழக்கு முகமாய்ப் பத்தினியுடன் அமர்ந்துகொண்டு,

பின்னர், பிராணாயாமஞ் செய்துவிட்டு,

अग्निहोत्रमारप्स्ये । तेन यावज्जीवं होष्यामि ।

என்று, முதலில் சங்கற்பம் செய்துகொண்டு, மறுபடியும் பிராணாயாமஞ் செய்துவிட்டு,

अग्निहोत्रमारप्स्यमाणो दशहोतारं होष्यामि ।

என்று, மறுபடியும் சங்கற்பம் செய்து கொள்ளல் வேண்டும்.

பின்னர், காருகபத்தியத் தீயிலிருந்து, சிறிது அக்கினியை யெடுத்து ஆகவனீயத்தில் வைத்துவிட்டு, சுருவில் ஒருமுறை நெய் யெடுத்துக்கொண்டு,

चित्तिस्रुक्..................सामाध्वर्युः । वाचस्पतेहृद्विधेनामन् ।

विधेमतेनाम । विधेस्त्वमस्माकं नाम । वाचस्पतिः सोममपात् ।

मादेव्यस्तन्तुर्मामनुष्यः नमो दिवे । नमः पृथिव्यै स्वाहा ॥

என்று, அந் நெய்யை ஆகவனீயாக்கினியில் ஹோமஞ் செய்துவிட்டு, அவ்வக்கினியை யெடுத்து வெளியிற் போட்டு விடல் வேண்டும்.

பின்னர், முன்போல், காருகபத்தியத்திற்கு மேற்கில் உட்கார்ந்துகொண்டு பிராணாயாமஞ் செய்துவிட்டு,

सायमग्निहोत्र होमं तण्डुलैर्होष्यामि ।

என்று, சங்கற்பஞ் செய்து கொள்ளல் வேண்டும். அதிலும்,

प्रातरग्निहोत्र होमं तण्डुलैर्होष्यामि ।

என்பது காலையிற் சங்கற்பமாம். இங்கு, அரிசி தவிர வேறு அவியால் அக்கினி ஹோத்திர ஹோமஞ் செய்வானாயின் அந்த அவியைக் குறிப்பிடல் வேண்டும்.

பின்னர், மாணவன் :—

धृष्टिरसि ब्रह्म यच्छ ।

என்னும் இம் மந்திரத்தால், தணலைத் தள்ளும், உபவேஷம் என்னும் ஒரு தடியை யெடுத்துக்கொண்டு,

सुगार्हपत्यो विदहन्नरातीरुषसः श्रेयसीः श्रेयसीर्दधत् ।

अग्ने सपत्नाꣳ अपबाधमानो रायस्पोषमिषमूर्जमस्मासु धेहि ॥

என்னும் இம் மந்திரத்தால், காருகபத்திய மென்னுந் தீயைப் போற்றிய பின்னர்,

उद्बुध्यस्वाग्ने प्रतिजागृह्येनमिष्टापूर्ते सꣳसृजे धामयञ्च ।
अस्मिन्त्सधस्थे अध्युत्तरस्मिन् विश्वेदेवा यजमानश्चसीदत ॥

என்னும் இம் மந்திரத்தால், காருகபத்திய மென்னும் தீயை இனிது வளர்த்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன் :— ओमुद्धर । என்றவுடன்,

மாணவன் :—

वाचात्वाहोत्रा प्रणेनोद्गात्रा चक्षुषाध्वर्युणा मनसा ब्रह्मणा
श्रोत्रेणाग्नीधेतैस्त्वापंचभिर्दैव्यैः ऋत्विग्भिरुद्धरामि ।

என்னும் இம் மந்திரத்தை ஓதல் வேண்டும். அஃதாவது வாக்கு ஹோதா, பிராணன் உத்காதா, நேத்திரம் அத்வர்யு, மனு பிரமன், சுரோத்திரம் ஆக்னீத்ரன், என்னும் இந்த ஐவகை வேள்வியாளர்களால் உன்னை எடுத்துக்கொள்ளுகின்றேன் என்பதாம்.

ஆகவனீயாக்கினியின் பொருட்டு, எரிந்து கொண்டிருக்கும் காருகபத்தியாக்கினியிலிருந்து சிறிதளவு எடுத்து ஒரு பாத்திரத்தில் வைத்துக்கொள்ளல் வேண்டும்.

வேள்வித்தலைவன் :—

ओं भूर्भुवः सुवः । उध्रियमाण उद्धरपाप्मनोमायदविद्वान्यच्च विद्वाꣳश्चकार ।

என்னும் இம் மந்திரத்தை ஓதல் வேண்டும்.

अह्वायदेनः कृतमस्मि पापꣳ सर्वस्मान्नो धृतमुञ्च तस्मात् ।

என்னும் இது, மாலையிற் செயற்பாலது.

रात्रियायदेनः कृतमस्मि पापꣳ सर्वस्मान्नो धृतोमुञ्च तस्मात् ।

என்று காலைப் போதிற் செய்தல் வேண்டும்.

மாணவன் :— பின்னர், காருகபத்தியத்திலிருந்து சிறிது நெருப்பையெடுத்து, மந்திரம் ஓதாமல் தக்ஷிணாக்கினியில் வைத்து விட்டு,

பின்னர், ஆகவனீயாக்கினியை எடுத்து வைத்தல் வேண்டும்.

அது வருமாறு :—

अग्निपतयेऽग्नये मे विध्यग्निपतयेग्नयेमे मृड । अमृताहुतिममृतायां जुहोम्यग्निं पृथिव्याममृतस्यजित्यै । तयानन्तं काममहञ्जयानि प्रजापतिर्यं प्रथमो जिगायाग्निमग्नौ स्वाहा ॥

अग्ने सम्राडजैकपादाहवनीयदिवः पृथिव्याः पर्यन्तरिक्षाल्लोकं विन्द यजमानाय ।
पृथिव्यास्त्वा मूर्धन्त्सादयामि यज्ञिये लोके ।
यो नो अग्ने निष्ट्यो योऽनिष्ट्योऽभिदासतीदमहं तं त्वयाभिनिदधामि ॥

என்னும் இம் மந்திரங்களை ஓதி, அக்கினியை எடுத்துக்கொண்டு போய், காலையில் கிழக்கு முகமாய் உட்கார்ந்துகொண்டு, மாலையில், வடக்கு முகமாக வேனும், அல்லது, மேற்கு முகமாகவேனும் உட்கார்ந்துகொண்டு ஆகவனீயத்தை யுண்டாக்கும் இடத்தில் வைத்தல் வேண்டும்.

இஃது 'அக்கினிப் பிரணயனம்' எனப்படும்.

ஹோமம்.

மாணவன் :—

विश्वदानी माभरन्तोनातुरेण मनसा । अग्नेमाते प्रतिवेशारिषाम ॥

என்னும் இம் மந்திரத்தால், விறகை யெடுத்து, காயத்திரி மந்திரத்தால் அதில் நீர் தெளித்து,

यदग्ने यानि कानि चाते दारूणि दध्मसि ।
तदस्तु तुभ्यमिद्घृतं तज्जुषस्वयविष्ठ्य ॥

என்னும் இம் மந்திரத்தால், காருகபத்தியத் தீயில் அவ் விறகை வைத்தல் வேண்டும்.

यदत्त्युपजिह्विका यद्वम्रो अतिसर्पति ।
सर्वं तदस्तु ते घृतं तज्जुषस्वयविष्ठ्य ॥

என்னும் இம் மந்திரத்தால், தக்ஷிணாக்கினியில் விறகை வைத்தல்வேண்டும்.

रात्रिꣳ रात्रिमप्रयावं भरन्तो श्वायेवतिष्ठतेघा समस्मै ।
रायस्पोषेण समिषामदन्तोऽग्नेमाते प्रतिवेशारिषाम ॥

என்னும் இம் மந்திரத்தால், ஆகவனீயத் தீயில் விறகை வைத்தல் வேண்டும். பின்னர்,

अग्ने गृहपते शुन्धस्व ।

என்று, காருகபத்தியத் தீயின் சுற்றிலுமிருக்கும் தூசைக் கையால் துடைத்தல் வேண்டும்.

அவ்வாறே,

अग्ने वह्ने शुन्धस्व ।

என்று, தக்ஷிணாக்கினியைச் சுற்றிலுமுள்ள தூசைத் துடைத்தல் வேண்டும்.

அங்ஙனமே,

**अग्ने संराट् छुन्धस्व ।**

என்று, ஆகவனீயத் தீயைச் சுற்றிலுமுள்ள தூசைத் துடைத்தல் வேண்டும்.

பின்னர், அதைச் சுற்றிலும் தருப்பையைப் பரப்புதல் (பரிஸ்தீர்ணஞ் செய்தல்) வேண்டும்.

பின்னர், வேள்வித்தலைவன், தெற்கில் வலது காலை யெடுத்து வைத்து ஆகவனீயத்திற்கு மேற்கில் வேதிகையைத் தாண்டிக் கிழக்கு முகமாய் உட்கார்ந்துகொண்டு,

**विद्युदसि विद्यमे पाप्मानमृतात्सत्यमुपैमि ।**

என்று, நீரைத் தொட்டுக் கையைத் துடைத்துக்கொண்டு,

**मयि श्रद्धा ।**

என்று, ஆசமனம் பண்ணிக்கொள்ளல் வேண்டும்.

மாணவன் :—

**ऋतंत्वा सत्येन परिषिञ्चामि ।**

என்று, ஆகவனீயத் தீயிலிருந்து, முறையே மூன்று அக்கினிகளைச் சுற்றிலும் நீரைத் தெளித்தல் வேண்டும்.

இது மாலையிற் செயற்பாலது. காலையில்,

**सत्यं त्वर्तेन परिषिञ्चामि ।**

என்னும் இம் மந்திரத்தால், நீரைத் தெளித்தல் வேண்டும்.

பின்னர், 'अग्निहोत्रहवणि' என்னும் ஒரு மரத்தாலாய சுருக்கில் நீரை யெடுத்துக்கொண்டு,

**यज्ञस्य सन्ततिरसि यज्ञस्यत्वा सन्ततिमनुसन्तनोमि ।**

என்று, காருகபத்தியத் தீயிலிருந்து ஆகவனீயம் வரை தாரையாக அந் நீரை ஒழுக விடல் வேண்டும்.

பின்னர், அக்கினி ஹோத்திரஞ் செய்யும் பானையில் அரிசியைப் போட்டு, காருகபத்தியத் தீயின்மேல் வைத்துச் சிறிது சூடு காட்டல் வேண்டும். பின்னர்,

**अदब्धेनत्वा चक्षुषावेक्षे ।**

என்று ஓதி, அதைப் பார்த்தல் வேண்டும்.

उद्भवस्थोदहं प्रजयाप्र पशुभिर्भूयास ँ हरस्तेमाविगादुद्यन्स्त्वर्गोलोकस्त्रिषु लोकेषु रोचय ।

என்னும் இம் மந்திரத்தால், மீண்டும் ஒருமுறை அதைப் பார்த்துவிட்டு,

अन्तरित ँ रक्षोऽन्तरिता अरातयोपहताव्युद्भिरपहतं पापं कर्मापहतं पापस्य पापकृतः । पापं कर्मायोनः पापं कर्म चिकीर्षते प्रत्यगेनमृच ॥

என்னும் இம் மந்திரத்தை யோதி, ஒரு தணலை யெடுத்து அப்பானையை மும்முறை வலமாகச் சுற்றிவிட்டு, வடக்கில் இறக்கி வைத்தல் வேண்டும். ஈண்டு, மேற்கோ பத்தினியைச் சேர்ந்ததாம். தெற்குப் பிதிர்க்களைச் சேர்ந்ததாம். ஆதலின், வேள்வித் தலைவனுடையது வடக்காம். அதில் இறக்கி வைத்தல் நலம் என்பது உரைரற்பாலது. மற்றும், தயிர், நெய், பால், அரிசி, அரிசிக்கஞ்சி என்பவைகளுள் ஒன்று அக்கினி ஹோத்திரத்திற்கு எடுத்துக் கொள்ளலாம். ஆனால், எது எடுக்கப்பட்டதோ அதுவே முடிவுவரை யிருத்தல் வேண்டும் என்பதுரைரற்பாலது. மீண்டும்,

इह प्रजां पशून् द ँ ह ।

என்னும் இம் மந்திரத்தை மும்முறை ஓதி, மண்ணில் மூன்று இடத்தில் வைத்துவிட்டு,

देवस्यत्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्यामाददे ।

என்னும் மந்திரத்தால், 'अग्निहोत्रहवणि' என்னும் சுருக்கை (அகப்பை விசேடத்தைக்) கையில் எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

அவ்வாறே, இம் மந்திரத்தையே ஓதி, சுருவத்தையும் எடுத்து,

प्रत्युष्ट ँ रक्षः प्रत्युष्टा अरातयः ।

என்று, காருகபத்தியத் தீயிற் காய்ச்சல் வேண்டும்.

अरिष्टो यजमानः पत्नीच ।

என்று, அவைகளைக் கையால் துடைத்தல் வேண்டும்.

हिरण्ययष्टिरस्यमृतपलाशाल्लोतो यज्ञानाम् ।

என்று, போற்றிக்கொண்டு,

ओं उन्नेष्यामि हव्यं देवेभ्यः पाप्मनो यजमानम् ।

என்று, மாலையில் வேள்வித்தலைவனை ஆணை கேட்டல் வேண்டும்.

ओं उन्नयामि हव्यं देवेभ्यः पाप्मनो यजमानम् ।

என்னும் இம் மந்திரத்தால், காலையில் ஆணை கேட்டல் வேண்டும்.

வேள்வித்தலைவன் :—

हविर्देवानामसि मृत्योर्मे भयꣳ स्वस्तिमेस्त्वभयम्मे अस्तु ।

என்னும் இம் மந்திரத்தை ஓதல் வேண்டும். ஓதி, 'ओं उन्नय' (அரிசியை எடுப்பாயாக) என்று ஆணை கொடுத்தல் வேண்டும்.

மாணவன் :—

अग्नयेचत्वा पृथिव्यैचोन्नयामि ।

அக்கினியின் பொருட்டும், பிருதிவியின் பொருட்டும், உன்னை யெடுக்கின்றேன். எனவும்,

वायवेचत्वाऽन्तरिक्षायचोन्नयामि ।

வாயுவின் பொருட்டும், அந்தரிட்சத்தின் பொருட்டும், உன்னை யெடுக்கின்றேன். எனவும்,

सूर्यायचत्वा दिवेचोन्नयामि ।

சூரியன் பொருட்டும், பகலின் பொருட்டும், உன்னை யெடுக்கின்றேன் எனவும்,

चन्द्रमसेचत्वा नक्षत्रेभ्यश्चोन्नयामि ।

சந்திரன் பொருட்டும், நக்ஷத்திரத்தின் பொருட்டும், உன்னை யெடுக்கின்றேன் எனவும், நான்கு முறை யெடுத்துவிட்டு, எல்லாவற்றையும் நிறைய எடுக்கின்றேன் எனக்குப் பசுவைக் கொடுப்பாயாக என்று, சுருவத்தால் அரிசியை எடுத்துச் சுருக்கில் நிரப்பிக்கொண்டு,

காருகபத்தியத்திற்கு மேற்கில் 'पशून्मे यच्छ' என்று தருப்பையின்மீது அதை வைத்தல் வேண்டும். பின்னர்,

'प्रजां दꣳह' என்று, கையைக் காய்ச்சிக்கொண்டு,

सजूर्देवैः सायं यावभिः सायं यावानो देवास्वस्ति संपारयन्तु पशुभिर्संपृचीय ।

என்னும் இம் மந்திரத்தை யோதி, அவியைத் தொடல் வேண்டும்.

सजूर्देवैः प्रातर्यावभिः प्रातर्यावानो देवास्वस्ति संपारयन्तु पशुभिस्संपृचीय ।

என்னும் இம் மந்திரத்தால், முன்போற் காலையிற் றொடல் வேண்டும்.

மற்றும்,

चित्तिः स्रुक् । चित्तमाज्यम् । वाग्वेदिः । आधीतं बर्हिः । केतो अग्निः ।

विज्ञातमग्निः । वाक्पतिर्होता । मन उपवक्ता । प्राणो हविः । सामाध्वर्युः ॥

பின்னர், என்று கூறியபடி, பாவித்துக்கொண்டு, மீண்டும் மந்திரமின்றி, கையைக் காய்ச்சிக்கொண்டு, மந்திரமின்றியே ஒட்டைச்சாண் அளவுள்ள புரசமர விறகை சுருக்கின் மேலே வைத்து,

उर्वन्तरिक्षमन्विहि ।

என்று, சுருக்கை எடுத்துக்கொண்டு,

चित्तिः स्रुक्.........सामाध्वर्युः स्वाहाऽग्नये वैश्वानराय ।

என்னும் இம் மந்திரத்தைச் செபித்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன் :—'अग्नये वैश्वानरायेदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மாணவன் :—'वातायत्वा' என்று, முகத்திற்கு நேரே சுருக்கைத் தூக்கிப் பிடித்துக்கொள்ளல் வேண்டும்.

அக்கால், வேள்வித்தலைவன் :—'वातायेदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

சீடன் :—

उपप्रेत संयदध्वं मान्तर्गातभागिनं भागधेयात्सप्तर्षिणां सुकृतां यत्र लोकस्तत्रेमं यज्ञं यजमानंच धेह्युपप्रत्न उप भूर्भुवस्सुवरायुर्मेयच्छ ।

என்னும் இம் மந்திரத்தைச் செபித்தல் வேண்டும்.

பின்னர், ஆகவனீயத்திற்கு மேற்கில் தருப்பையின்மீது அச் சுருக்கை வைத்தல் வேண்டும்.

பின்னர்,

विद्युदसि विद्यमे पाप्मानमृतात्सत्यमुपैमि ।

என்று, நீரைக் கையிற் றொட்டுக்கொண்டு,

एषाते अग्ने समित्तया वर्धस्वचाचप्यायस्ववर्धतांचते यज्ञपतिराचप्यायतां बर्धिषी महिचवयमाचप्यासिषीमहि स्वाहा ।

என்னும் இம் மந்திரத்தை யோதி, சுருக்கின்மீது வைத்திருந்த விறகுத்துண்டை ஆகவனீயத்திற் போட்டு விடல் வேண்டும்.

வேள்வித்தலைவன் :—

'अग्नय इदं न मम' (இஃது அக்கினிக்காம், என்னுடையது அன்று) என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

சீடன் :—பின்னர், சுருக்கை (அவியுள்ள அகப்பை விசேடத்தை) யெடுத்து, மூச்சை அடக்கி விட்டு, கண்களை மூடி திறந்து, அவியைப் பார்த்து 'भूर्भुवस्सुवः' என்று ஓதி,

अग्निर्ज्योतिर्ज्योतिरग्नि स्वाहा ।

என்பதால், பாதி அவியை, முன் போட்டுள்ள விறகுத் துண்டின் அடியின்மீது ஆகுதி செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्नये ज्योतिष इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

सूर्योज्योतिर्ज्योतिः सूर्यः स्वाहा ।

காலைப் போதில், இம் மந்திரத்தால் ஹோமஞ் செய்தல் வேண்டும். மாலைக்கு அக்கினி தேவதை. காலைக்குச் சூரியன்; ஆதலின், காலையில், 'सूर्याय ज्योतिष इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

சீடன்,

इषेत्वा என்று, நுனியிலிருந்து அடிப்புறமாய் மாலையிலும்,

ऊर्जेत्वा என்று, அடிப்புறத்திலிருந்து நுனிப்புறமாய் காலையிலும், ஒட்டி யிருப்பதை யெடுத்து,

ओषधीभ्यस्त्वौषधीर्जिन्व ।

என்று, தருப்பைகளில் அதைத் துடைத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

'ओषधीभ्य इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

சீடன்,

वर्चोमे यच्छ ।

என்று, தருப்பை மீது, சுருக்கை வைத்தல் வேண்டும்.

பின்னர்,

अग्ने गृहपते मामा सन्ताप्सीरात्मं नमृतमधिषि प्रजाज्योतिरदब्धेनत्वा चक्षुषा प्रतीक्षे ।

என்னும் இம் மந்திரத்தால், மேற்கே திரும்பிக்கொண்டு, காருகபத்தியத் தீயைப் பார்த்தல் வேண்டும்.

மீண்டும், சுருக்கை, (அவியுள்ள அகப்பையை) எடுத்துக்கொண்டு,

ओं भूर्भुवस्सुवः स्वाहा ।

என்று, மீந்துள்ள பாதி அவியையையும் அவ் விறகுத் துண்டின் நுனியின்மீது ஆகுதி செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

'प्रजापतय इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

சீடன் :—

रुद्रमृडानाभवमृडधूर्त नमस्ते अस्तु पशुपते त्रायस्वैनम् ।

என்று, மும்முறை அக்கினியை வலமாகச் சுருக்கைச் சுற்றல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

'रुद्राय पशुपतय इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். பின்னர், இரண்டு முறை, நீரைக் கையிற் றொட்டுக்கொள்ளல் வேண்டும்.

பின்னர், சீடன் :—

इषेत्वा என்று மாலையினும், ऊर्जेत्वा என்று காலையினும் முன்போல், ஒட்டியுள்ள அவியை எடுத்து, பூணூலை மாற்றிப் போட்டுக்கொண்டு,

स्वधापितृभ्यः पितॄन् जिन्व ।

என்று, அந்தர்வேதியின் தெற்குப் பக்கத்தில் அதை வைத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

'स्वधापितृभ्य इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பின்னர், இருவரும் பூணூலை முன்போற் போட்டுக்கொண்டு, கையில் நீரைத் தொட்டுக்கொள்ளல் வேண்டும்.

அதன் பின்னர், சீடன், சுருக்கை, தருப்பைகளின்மீது வைத்துவிட்டு,

वृष्टिरसि वृश्चमे पाप्मानमृतात्सत्यमुपागाम् ।

என்று, நீரைத் தொடல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

दिवस्परि......................सुरेताः ।

என்னும் அநுவாக மந்திரங்களால், ஆகவனீயாக்கினியைப் போற்றல் வேண்டும்.

இனி, காருகபத்திய ஹோமம்.

சீடன்,

अग्ने गृहपते परिषद्य जुषस्व स्वाहा ।

என்று, சுருவத்தால் ஆகுதி செய்தல் வேண்டும். அஃதாவது அரிசி முதலான அவிகளைக் காருகபத்தியத் தீயிற் போடல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

'अग्नये गृहपतये परिषद्याय इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

இவ்வாறே, மும்முறை ஆகுதிகள் செய்தல் வேண்டும்.

சீடன்,

अग्नये गृहपतये रयिपतये पुष्टिपतये कामायन्नाद्याय स्वाहा ।

என்று, சுருவத்தால் ஆகுதி செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

'अग्नये गृहपतये रयिपतये पुष्टिपतये कामायान्नाद्याय इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

இனி, தக்ஷிணக்கினி ஹோமம்.

சீடன்,

अग्नेऽदाभ्यपरिषद्य जुषस्व स्वाहा ।

என்று, சுருவத்தால், அவியை, தக்ஷிணக்கினியில் ஆகுதி செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

'अग्नये अदाभ्याय परिषद्याय इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

சீடன்,

अन्नपतेन्नस्य नो देह्यनमीवस्य शुष्मिणः ।
प्रप्रदातारं तारिष ऊर्जं नो धेहि द्विपदेशं चतुष्पदे स्वाहा ॥

என்று, சுருவத்தால் ஆகுதி செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

'अन्नपतय इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

சீடன்,

अग्नेऽदाभ्य परिषद्य जुषस्व स्वाहा ।

என்று, சுருவத்தால் ஆகுதி செய்தல் வேண்டும். மற்றும், இவ்வாறே, இரண்டு முறை செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

‘ अग्नये अदाभ्याय परिषयाय इदं न मम ’ என்று தியாகஞ் செய்தல் வேண்டும். மற்றும், இவ்வாறே இருமுறை செய்தல் வேண்டும்.

சீடன், ஆகவனீயமுள்ள விடத்திற் சென்று, ‘ पूषासि ’ என்று, சுருக்கில் ஒட்டியிருந்த அவியை உண்டு, ஆசமனஞ் செய்துகொள்ளல் வேண்டும்.

வேள்வித்தலைவன், ‘ गर्भेभ्य इदं न मम ’ என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

சீடன், ‘ पूषासि ’ என்று, மீண்டும் ஒட்டியிருந்ததை யுண்டு, ஆசமனஞ் செய்துகொள்ளல் வேண்டும்.

வேள்வித்தலைவன், மீண்டும், ‘ गर्भेभ्य इदं न मम ’ என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

சீடன்,

गर्भेभ्यस्त्वा गर्भान् प्रीणीहि । आग्नेयꣳ हविः । प्रजननं मे अस्तु ।
दशवीरꣳ सर्वगणꣳ स्वस्तये । आत्मसनिप्रजासनिपशुसन्यभजसनि
लोकसनि वृष्टिसनि । अग्निः प्रजां बहुलां मे करोतु अन्नं
पयोरेतो अस्मासु धेहि । रायस्पोषमिषमूर्चमसुधी धरस्स्वाहा ॥

என்னும் மந்திரங்களை யோதி, நீரைக் குடித்து, ஆசமனஞ் செய்துகொள்ளல் வேண்டும்.

மற்றும், காலையிலும் இவ்வாறே செய்தல் வேண்டும். ஆனால்,

सौर्यं हविः प्रजननं मे अस्तु ।
सूर्यः प्रजां बहुलां मे करोतु ॥

என்று, ஓதல் வேண்டுவது மாத்திரம், காலையிற் செய்யும் அக்கினிஹோத்திரத்தில் விசேடமாம் என்பதுணரற்பாலது.

வேள்வித்தலைவன்,

‘ मनुष्यगर्भेभ्य इदं न मम ’ என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

சீடன்,

அக்கினிஹோத்திர ஹவணியில் நீர் கொண்டு வந்து,

उच्छिष्टभाजो जिन्व ।

என்று, ஆகவனீயத்தீக்கு வடக்கில் அந்நீரை இறைத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், ‘उच्छिष्टभागेभ्य इदं न मम’ என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

சீடன், தருப்பைகளால் அக்கினிஹோத்திர ஹவணியைத் துடைத்து, அதில் நீர் நிறைத்துக்கொண்டு,

सर्पेभ्यस्त्वा सर्पान् जिन्व ।

என்று, ஆகவனீயத்தின் ஒவ்வொரு திக்கிலும் அந்நீரை இறைத்தல் வேண்டும். ஈண்டு, மந்திரத்தை மீண்டும் மீண்டும் படித்துக்கொள்ளல் வேண்டும் என்பதை யுணர்க.

வேள்வித்தலைவன்,

‘सर्पेभ्य इदं न मम’ என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

சீடன், மீண்டும் சுருக்கில் நீர் நிறைத்துக்கொண்டு,

सर्पान् पिपीलिकान् जिन्व ।

என்று, ஆகவனீயத்திற்கு முன்னர் நீரை இறைத்தல் வேண்டும்.

இரண்டாம் முறையும் நீர் நிரப்பி,

सर्पेतर जनान् जिन्व ।

என்று, அதன் முன்னரேயே இறைத்தல் வேண்டும்.

மூன்றாம் முறையும் நீரால் நிரப்பி,

सर्पदेव जनान् जिन्व ।

என்று, அதன் முன்னரேயே இறைத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

‘सर्पेभ्यः पिपीलिकेभ्य इदं न मम’, ‘सर्पेतरजनेभ्य इदं न मम’, ‘सर्पदेव जनेभ्य इदं न मम’ என்று, தியாகங்களைச் செய்தல் வேண்டும்.

சீடன்,

நான்காம் முறையும் நீர் நிரப்பி,

पृथिव्याममृतं जुहोमि स्वाहा ।

என்று, அதில் பாதி நீரை அந்தர்வேதியில் வார்த்து விட்டு,

गृहेभ्यस्त्वा गृहान् जिन्व ।

என்று, மீந்த நீரை, பத்தினியின் இரண்டுகைகளி லூற்றிவிடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், ‘पृथिव्या इदं न मम’, ‘गृहेभ्य इदं न मम’ என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

குறிப்பு :— பத்தினி சமீபத்தில் இல்லாவிடில், அந் நீரை,

**देवानां पत्नीभ्योमृतं जुहोमि स्वाहा ।**

என்று, பத்நினியின் இடத்தில் ஊற்றல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

'देवानां पत्नीभ्य इदं न मम' என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

சீடன், மீண்டும், சுருக்கில் நீரை நிறைத்துக்கொண்டு,

**विप्रुषां शान्तिरस्ति ।**

என்று, முன், அவியைச் சுருக்கில் நிரப்பிய இடத்தில் இறைத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'विप्रुड्भ्य इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

சீடன், ஆகவனீயத்தில், சுருக்கையும் கையையுஞ் சூடு காட்டிக்கொண்டு,

**सप्त ऋषिभ्यस्त्वा सप्त ऋषीन् जिन्व ।**

என்று, சப்தரிஷி மண்டலத்தைச் சுருக்கால் குறிப்பித்துக் காட்டல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'सप्त ऋषिभ्य इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

சீடன், வலம் வந்து காருகபத்தியத்திற்கு முன்னர், சுருக்கை வைத்துவிட்டு,

**दीदिः दीदि दासि दिदाय ।**

என்று, காருகபத்தியத்திலும், தக்ஷிணாக்கினியிலும், ஆகவனீயத்திலும், ஒவ்வொரு விறகை வைத்தல் வேண்டும். ஈண்டு மந்திரத்தை, மறித்தும் மறித்தும் ஓதிக்கொள்ளல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

'अग्नय इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

சீடன், விரித்துள்ள தருப்பைகளை எடுத்துவிட்டு முன்போல் அக்கினிக (மூன்றிடத்திலுமுள்ள வேள்வித் தீக்க)ளின் சுற்றிலுமிருக்கும் தூசுகளைத் தள்ளிவிட்டு, முன்போல் பரிஷேசனம் பண்ணி,

**अवभृथस्यैव रूपमकः ।**

என்று, அந்தர்வேதியில் நீரை வார்த்துவிட்டு, தலையின்மேல் தெளித்துக்கொள்ளல் வேண்டும்.

**अक्षितमक्षित्यै जुहोमि स्वाहा ।**

என்று, அக்கினி ஹோத்திரப் பானையில் (அரிசியைப் போட்டுமுன் சூடு காட்டிய பாண்டத்தில்) நீரையூற்றி மண்ணில் அந்நீரைக் கொட்டிவிடல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

'अग्नय इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

சீடன், காலை மாலைகளில் செய்த அக்கினி ஹோத்திரங்கள் நலமுடையவைகளாதற்பொருட்டு, (சாத்குண்யார்த்தம்) யான், அனுக்ஞாதம் என்பது முதலான மூன்று மந்திரங்களைச் செபிப்பேனாக, என்று எண்ணிக்கொண்டு,

अनाज्ञातं यदाज्ञातं यज्ञस्य क्रियते मिथु ।
अग्ने तदस्य कल्पय त्वꣳहि वेत्थ यथातथम् ॥

पुरुषसंमितो यज्ञो यज्ञः पुरुषसंमितः ।
अग्ने तदस्य कल्पय त्वꣳहि वेत्थ यथातथम् ॥

यत्पाकत्रा मनसा दीनदक्षा न यज्ञस्य मन्वते मर्तासः ।
अग्निष्टद्धोता क्रतुविद्विजानन्यजिष्ठो देवाꣳ ऋतुशो यजाति ॥

என்னும் மந்திரங்களைச் செபித்துவிட்டு, 'ओं भूर्भुवस्सुवः' என முடித்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

वृष्टिरसि वृश्चमे पाप्मानमृतात्सत्यमुपगाम् ।

என்று, நீரைக் கையால் தொட்டுக்கொண்டு, ஆசமனஞ் செய்துவிட்டு, இடது காலால் தாண்டி அந்தர்வேதிகையின் மீது உட்கார்ந்துகொண்டு, இடது கையில் நீரை எடுத்து,

अन्नदास्थान्नदोभूयासं यशस्थ यशस्वी भूयासम् । श्रद्धास्थः श्रद्धिषीय ।
आपोह श्रेष्म प्रथमꣳ संबभूव । येन धृतो वरुणो येनमित्रः । येनेन्द्रं
देवा अभ्यषिंचन्त राज्याय । तेनाहं मामभिषिञ्चामि वर्चसे ॥

என்னும் மந்திரத்தை யோதி, தலையில் தெளித்துக் கொள்ளல் வேண்டும்.

பின்னர், அக்கினிகளை வலம் வரல் வேண்டும்.

அக்கினி ஹோத்திரம் முற்றிற்று.

---

இனி, தரிசபூரணமாச வேள்வியைத் தொடங்குவானாக; தொடங்கினும், முதலாவதாக பௌர்ணிமை யாகமே செய்யற்பாலது. இதன் கருத்தை வைதிக கருமங்களை யுணர்ந்த வல்லாரிடத்திற் கேட்டுக்கொள்க.

அநுபந்தம் முடிந்தது.

---

# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதையில்

## தரிசபூரணமாத வேள்விகளின்

## விடய அட்டவணை.

### முதலாம் (பிரசினம்) பிரபாடகம்.

என்று, திருவேங்கடத்தை எல்லையாகக் கூறியது, அவர் காலத்தில் அத் துணை நாடே தமிழ்நாடா யிருந்தமையால் இழுக்கில்லை யென்க.

இனிய தமிழ்ப் பெருமையோ, நம்மனோரால் எடுத்துக்கூற முடியாததே யாம். என்னை?

"யாரறிவார் தமிழருமை யென்கின்றேனென்
அறிவீன மன்றேவுன் மதுரைமூதூர்
நீரறியு நெருப்பறியும் மறிவுண்டாக்கி
நீ யறிவித்தா லறியு நிலமுந்தானே"

என்று, உன்னிப்புகன்ற மன்னை சிவக்கொழுந்தின் திருவாக்காலென்க.

அங்ஙனமாயினும், விருப்பு மிகுதியால் தமிழின் பெருமைகட்கு சில கூறுவாம். இத்தகைய செந்தமிழ், பரசிவன் திருவருளால் நிகழ்ந்ததாம். இது இன்புருவாதலின் பரசிவ வடிவென்றே கூறலாம். இதை அருட்பெருஞ்சோதி இராமலிங்க வள்ளலாரின் திருவருட்பாவிற் காண்க.

இப்பொருளையே,

'என்றுமுள தென்றமிழ் இயம்பி இசை கொண்டான்'

என்று, செந்தமிழ்க் கவிச்சுவை வந்து வந்தொழுகும் முந்தியராமன் கதை புகல் கம்பநாட்டாழ்வாரும் நன்கு விளக்கினர்.

மற்றும் இக்கருத்தையே,

'தமிழ்சிவம் இனிமையெனுந் தனிப்பொருளாம்'

என்னும், கழாரம்பரின் கனிந்தவாக்குங் காண்பிக்கின்றது.

இஃதன்றியும், தமிழ், பன்னிரண்டு உயிரெழுத்தாகிய கலைகளையுடைய தால், தந்தைமொழியாம், தந்தை = இரவி. வடவாரியம், பதினாறு உயிரெழுத் துக்களாகிய கலைகளை யுடையதால் தாய்மொழியாம். மதி = தாய். இவ்வாறே எண்ணிறந்த பெருமைகளை யுடையது தமிழ்நாடாம். அதைப் பழிக்கின்,

"ஆரியநன்று தமிழ் தீதெனவுரைத்த
காரியத்தாற் காலக்கோட்பட்டானை—சீரிய
அந்தண் பொதியி லகத்தியனா ராணையாற்
செந்தமிழே தீர்க்க சுவ:"

என்னும், சொற்பயன் மேற்கொண்ட நற்கீரன் வாக்கிற்கு இலக்காகுவ ரென்க.

இனி, இத்தகைய நந்தமிழ்நாடு, சேரன், சோழன், பாண்டிய என்னும் மூவேந்தர்களால் ஆளப்பெற்றதால், சேரமண்டலம், சோழமண்டலம், பாண்டி மண்டலமென முப்பகுதிகளை யுடையதாம் இவற்றின் இடைப்பட்ட பாகுபாடு கள் எண்ணிலாதன,

இவ்வாற்ருல் நிலவளம், நீர்வளம், நிழல்வள முதலானப் பல்வகை வளங்களேயும் நிறையப் பெற்றிருப்பதோடு மாபெருஞ் சிவத்தலங்களால் சைவந் தழைத்தோங்கும் நாடும் சோழநாடேயாம்.

அத்துணைப்புகழ் மலிந்த சோழ நாட்டில், எல்லாச் சிவத்தலங்களுட் சிறந்ததும், தெய்வத் திருமறைகள் திருமேனி தாங்கிப் பூசித்ததால் திருமறைக்காடு என்னுஞ் சிறப்புப் பெயர் வாய்ந்ததும், அகத்தியாம்பள்ளி, கோடிக்குழகர்கோவில் முதலான அரும்பெருந் தலங்களால் அணியுடையதும், கடலெறியுந் திரையொலியும், உடல் முழுதும் உருக்கும் தமிழ் மறைப் பண்ணொலியும், தேவ அடியார்களின் சங்கீதவொலியும் இடையருது கேட்டுக் கொண்டிருக்கும் வேதநாயகப் பெருமான் திருமணக் கோலங்காட்டும் அருட்டிருமேனியுடனும், சிவலிங்கமாகிய அருவுருவத் திருமேனியுடனும் எழுந்தருளப்பெற்றதும், யாழைப்பழித்த அம்மையார் விளங்கப்பெற்றதும், சோழ மன்னர்களால் அரிய பெரிய திருக்கோபுரம் திருக்கோவில்களமைக்கப் பெற்றதுமாகிய திருமறைக்காடென்னும் ஒரு சிவத்தலம் உண்டு, அத்தலம் திருநாவுக்கரசு சுவாமிகளால், அநாதி காலத்திலிருந்து திருமறைகளால் அடைக்கப் பெற்றிருந்த கதவு திறக்கும்படி தெய்வத்தமிழ்த் திருமறையாகிய பாடல் பெற்றதும், வெம்பந்த மற்ற சம்பந்த சுவாமிகளால் பூசித்து மீண்டும் அக் கதவு அடைக்கும்படி பாடப் பெற்றதுமாம். இதனுல், திருமறைகள் பூசித்து திருக்கதவம் அடைபட்டிருந்தது, தமிழ்த் திருமறையின் அருள் வலியால் திறக்கப் பெற்றமையின், தமிழின் பெருமையும், தமிழ் மறையின் அருமையும், நான்மறைச் செல்வர்களான நால்வர்களின் அருள்வன்மையுங் காணக் கிடக்கின்றன என்பதை யுணர்க. இது பற்றியே, வேதாரணிய புராணமும்,

> "காசியிலிறக்க முத்தி கமலேயிற் பிறக்க முத்தி
> தேசுறு சிதம்பரத்தைத் தரிசிக்க முத்தியாகும்
> மாசிலா மேன்மைபூண்ட மறைசையம் பதியோ கூறில்"

என்று கூறுகிறது.

இத்தகைய திருமறைக்காட்டிற் கருகில், ஆயக்காரம் புலம் என்னுந் திருப்பெயர் வாய்ந்ததும், அகமுடைவீரர்களின் குடிகளாற் சூழப்பெற்றதும், அகத்தியமா முனிவருண்டாக்கிய முள்ளியாற்றின் நீர் பாயப்பெற்றதும், காடாரம்பம் என்னும் பொதுப் பெயரை யுடையதுமாகிய ஒரு சிற்றூருண்டு. அவ்வூரில், மலேமண்டலம், கொங்குமண்டலம் எனவும், அக நாடு, மலே நாடு, சேர நாடு எனவும், குடதிசை எனவும், வழங்கப்பெறுஞ் சேரமண்டலத்தை யாண்ட சேரமன்னனின் குலத்தைச் சார்ந்த பழங்குடியாகிய அகம்முடைத் தேவர் குடிகள் சில உள. இச்சேரமன்னனேயே, கொங்கர் கோ, எனச் சங்க நூல்களும் புல்கின்றன.

தரிசபூரணமாசயாக விடய அட்டவணை முடிந்தது.



தரிசபூரணமாச யாகங்களின்

# பிழை திருத்தங்கள்.

| பக். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 4 | 4 | பிரயாஜம் | அநுயாஜம் |
| 6 | 8 | பௌத்திரம் | பவித்திரம் |
| 8 | 11 | 3-4-7 | 3-7-4 |
| 11 | 14 | 3-4-7-8 | 3-7-4-8 |
| 20 | 2 | अश्वपर्शोः | अश्वपर्शो |
| 33 | 7 | अदित्ये | अदित्यै |
| 39 | 23 | पृथिवीः | पृथिवी |
| 46 | 21 | विष्णोः | विष्णो |
| 51 | 34 | ब्रह्मणं | ब्रह्माणं |
| 52 | 12 | इदमह मर्वावसोः | इदमहमर्वाग्वसोः |
| 82 | 3 | हस्ताभ्यां मधि | हस्ताभ्यामधि |
| 90 | 8 | दहाहिरसि बुध्न्यः | दहाहिरसि बुध्नियः |
| 103 | 24 | பின்னுள்ளது | முன்னுள்ளது |
| 118 | 23 | बाडो | बाढो |
| ,, | 28 | अव बाडाया | अव बाढाया |
| 120 | 17 | मे तु | मेत |
| 121 | 18 | परिग्राहीष्यामि | परिग्रहीष्यामि |
| 144 | 6 | पृष्टानां | पृष्ठानां |
| 147 | 9 | रेष्टोऽग्नये | रेष्ठोऽग्नये |
| 148 | 22 | आखरेष्टः | आखरेष्ठः |
| 150 | 26 | अभिश्रेम बहिरन्तः | अशिश्रेम बर्हिरन्तः |
| 153 | 27 | शिखण्ड | शिखण्डा |

| பக். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 160 | 16 | जूहः | जुहु |
| 161 | 2 | त्रिये | प्रिये |
| 163 | 16 | *தருப்பைபின்மீது* | *தருப்பையின்மீது* |
| 168 | 17 | माऽस्य प्रातरनु | माऽस्य यज्ञस्य प्रतरनु |
| 173 | 9 | अक्रुणाद्वीर्याणि | अक्रुणोद्वीर्याणि |
| 175 | 20 | दुश्चरिता दाता | दुश्चरिता दामा |
| 180 | 16 | *வேட்போன்* | *வேள்வித்தலைவன்* |
| 182 | 30 | *வேட்போள்* | *வேள்வித்தலைவன்* |
| 183 | ,, | अग्नि– | अग्नी |
| 188 | 23 | अग्नीषोमौ दिविरोचनानि | अग्नीषोमौ युवमेतानि दिवि रोचनानि |
| 192 | 21 | ये यजामहे इन्द्राग्नीवृत्रहणा | ये यजामहे इन्द्राग्नी गीर्भिर्विप्रः प्रमतिं |
| 194 | 26 | अग्ने स्विष्टकृते | अग्नये स्विष्टकृते |
| 195 | 7 | 3-7-5-14 | 3-5-7-14 |
| 196 | 7 | *வேட்போன்* | *வேள்வித்தலைவன்* |
| 199 | 4 | *வேட்போன்* | *இருக்கோதுவோன்* |
| 203 | 16 | एतद् ब्राह्मणाः | एत ब्राह्मणाः |
| 204 | 30 | वेदिर्बहिः | वेदिर्बर्हिः |
| 212 | 10 | निमृक्षम् | निर्मृक्षम् |
| 221 | 2 | *பத்மாசனத்தில்* | *குந்திக்கொண்டு* |
| 222 | 31 | *வடபாதியில்* | *தென்பாதியில்* |
| 223 | 13 | ये यजामहे यास्तेराके | ये यजामहे राकां यास्तेराके |
| 225 | 22 | *ஹோதா முதலியோர்களை* | *ஹோதாவை* |
| ,, | 25 | *இளா பஹு தேளா பாஸ் மாம்* | *இளா பஹுதோ பஹுதே ளாபாஸ்மாம்* |
| 227 | 19 | अशीततनोः | अशीततनो |

## தரிசபூரணமாச யாகங்களின் பிழை திருத்தங்கள்

| பக். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 229 | 22 | अथाश्वाग्ने | अयाश्वाग्ने |
| 230 | 30 | वषडनुष्टेभ्यः | वषड्डनिष्टेभ्यः |
| 231 | 7 | मवतं | ममतं |
| 234 | 18 | प्रजापतेवि | प्रजापतेर्वि |
| 235 | 4 | भूयः | भूयाः |
| „ | 12 | ये देवा | यं देवा |
| 236 | 2 | विष्णुवि | विष्णुर्वि |
| „ | 10 | வேட்போன் | வேள்வித்தலைவன் |
| 239 | 2 | जुषेंथाम् | जुषेथाम् |
| 240 | 18 | அனுவாகங்களில் | அநுவாகத்தில் |
| 241 | 10 | त्वाया | त्वाय |
| 246 | 16 | नवतीं | नवतिं |
| 251 | 5 | யாஜ்ய | யாஜ்யா |
| 252 | 17 | पन्थानमपि | पन्थामपि |
| 254 | 4 | वाजा | वाजाः |
| „ | 30 | भवा | भव |
| „ | 33 | शंयौः | शंयोः |
| 255 | 18 | व्रतपा | व्रतपाः |

தரிசபூரணமாச யாகங்களின் பிழை திருத்தங்கள்

முடிந்தது.



எசுர்வேதமூர்த்தி

अजास्यः पीतवर्णः स्यात् यजुर्वेदोऽक्षसूत्रधृक् ।
वामे कुलिशपाणिस्तु भूतिदो मङ्गलप्रदः ॥

கிழக்கு




தரிசபூரண மாச யாகசாலை

ஓம்

வேதமூர்த்தினே நம:.

# கிருஷ்ண எசுர்வேத

## தைத்திரீய சங்கிதை.

## மொழிபெயர்ப்பு மந்திரம்.

ஓங்காரத்தின் உட்பொருளாகிய ஒரு பெரும்பொருளே! ஆதி பகவனுக்கும் அருள் செய்த அண்ணலே! நான்முகற் கடிந்த நாத! எல்லாஞ் செய வல்ல இறைவ! எழுதாக் கிளவியை எழுதப்புகுந்த எனது இதயத்தில் அறிவுக் கறிவாய் நின்று இனிது முடியுமாறு இன்னருள் புரிந்தருள்வாயாக. நினை யன்றிப் பிற தெய்வத்தை நினைத்திலேன். நினது தண்ணருள் நீடூழி வாழ்க.



## முதலாம் பிரபாடகம்.

இது, பதினைந்து அநுவாகங்களையும், இருபத்தேட்டுப் பஞ்சாதிகளையும் உடையது

### பிரபாடகத்தின் விடயச் சுருக்கம்.

ये दर्शपूर्ण मासाङ्ग मन्त्रा एते समासतः ।
इषेत्वा ह्यनुवाकेषु त्रयोदशसु वर्णिताः ॥ १ ॥

वत्सापकरणं बर्हि र्दोहो निर्वापकण्डमे ।
पेषणञ्च कपालानि पुरोडाशश्च वेदिका ॥ २ ॥

आज्यग्रहेध्म संनाहा वाघारो परितन्त्रके ।
इत्युक्ता अनुवाकार्थाः प्रतिमन्त्रं क्रियोच्यते ॥ ३ ॥

பசுங் கன்றுகளைப் பிரித்துவிடல், தருப்பை கொண்டு வரல், பால் கறத்தல், நெல் லெடுத்தல், நெற் குத்தல், மா வரைத்தல், கபாலங்களை வைத்தல், புரோடாசஞ் செய்தல், வேதிகை போடுதல், நெய் யெடுத்தல், விறகை வைத்தல், வேதிகையின் கோடிகளில் ஆகார ஹோமஞ் செய்தல் (நெய்யை ஒழுக விடல்) சிருக் முதலியவைகளைக் கைமாற்றி யெடுத்தல் என்பது. காமியயாஜ்ய புரோநுவாக்கிய அநுவாகத்தையுஞ் சேர்த்துக்கொள்ளின் பதினைங்காம்.

## தரிசபூரணமாச யாகத் தொடக்கம்.

தரிச பூரணமாச யாகங்கள் என்பது: தரிசம் = அமாவாசை, பூரண மாசம் = பௌர்ணமி எனப்படுதலின், அமாவாசையிற் ருெடங்கி, பிரதமையில் முடிக்கும் மூன்று யாகங்களுஞ் சேர்ந்து, 'தரிசம்' எனவும், பௌர்ணமியிற் ருெடங்கி, பிரதமையில் முடிக்கும் மூன்று யாகங்களுஞ் சேர்ந்து, 'பூரண மாசம்' எனவும் வழங்கப்படுவதாம்.

இவற்றுள், ஆங்கிரசர்கள், சுவர்க்கஞ் சென்று யாகஞ் செய்யுமிடத்தை யடைந்தனர். அங்கு, புரோடாச தேவதை, ஆமை யுருவெடுத்து ஓட, இந்திர னுக்கும், பிருகஸ்பதிக்கும் உன்னைக் கொடுக்கின்றேன், நீ நிற்பாயாக என்ற தற்கு நிற்காமல், அக்கினிக்குக் கொடுக்கின்றேன் என்றவுடன் அது நின்றமை யின், இரண்டு நாளும், புரோடாசத்தை அக்கினிக்கு அருப்பித்து, சுவர்க் கத்தை யடைக என்று, கா-2, பிர-6, அநு-3, பஞ்-15, 16 கூறுகின்றன. இதுபற்றியே தரிசத்தின் முதலாவது யாகம் ஒரேவிதமா யிருக்கின்றது.

அங்ஙனமே, இந்திரன், விருத்திரனைக் கொன்றவுடன் அவனுடைய இந் திரியங்களின் வன்மைகள் பூமியில் மரம், கொடி, செடிகளாயிற்று. அதைப் பிரசாபதிக்கு அறிவிக்க, பிரசாபதி பசுக்களை ஏவி, அவ் வன்மையைக் கொண்டு வருமாறு செய்து, அவ்வன்மை பசுவின் பால் ஆனமையின், இந்திரன் அதை அருந்திச் சீரணமாகாமை கண்டு, காய்ச்சுவித்து அருந்த, அதிலும் களிப்படையாமையின், தயிராக்கி யளிக்க, அதை யுண்டு இந்திரன் களிப்புற்ற னன்; ஆதலின், இந்திரனுக்கு, பால், இந்திரிய வன்மையையும், தயிர், களிப் பையுங் கொடுப்பதாம். தரிசத்தின் இரண்டாவது, மூன்ருவது யாகங்களில், இந்திரனுக்கு, பால் தயிர் கொடுக்கவேண்டு மென்பதை, கா-2, பிர-5, அநு-3, பஞ்-17, 18 கூறுகின்றன என்க.

மற்றும், இந்த இரண்டு யாகங்கட்கு மகேந்திரனும் தேவதையாவன். மூன்று வேதங்களை யுணர்ந்தவனும், அரச குமாரனும், கிராமத் தலைவனும், செல்வ முடையவர்கள் எனப்படுகின்றனர். இவர்கள், தமது தேவதையை விட்டுவிட்டு, இதர தேவதைகட்கு யாகஞ் செய்யின், தமது தேவதையின் சாபத்தால் வறியராகின்றனர். அவர், மகேந்திர யாகத்தைச் செய்தல் வேண் டும். ஒரு வருடம் வரை இந்திர யாகஞ் செய்துவரில் மகேந்திர யாகங் கை கூடும். இந்திரன் களிப்புற்று, யாகஞ் செய்கின்றவனை, 'गतश्री' செல்வவந்த னைச் செய்கின்ருன். ஒரு வருடத்திற்குப் பின், விரதபதியாகிய அக்கினி தேவதையின் யாகத்தைச் செய்துகொண்டு வரல் வேண்டும். திரவியம் புரோ டாசம். இவ்வாறு ஒரு வருடம் இந்திர யாகஞ் செய்துவந்தால், மகேந்திர யாகத்திற்குத் தடையாகிய பாவம் போய்விடுகின்றது. விரதபதியாகிய அக்

இனியும், மகேந்திர யாகத்திற்குரிய விரதத்தை முடித்து வைக்கின்றான். இவ்வாறு செய்தும், செல்வவந்தன் ஆகாவிடின், பின்னரும், 'இந்திர யாகத்தையேனும், அல்லது, மகேந்திர யாகத்தையேனுஞ் செய்தல் வேண்டும் என்று, கா-2, பிர-5, அநு-4, பஞ்-25, 26 கூறுகின்றன.

மற்றும் இவ்வாறே, இந்திரன், விருத்திரனைக் கொல்வதற்கு, வச்சிரத்தையெடுத்துக் கொண்டு செல்ல, அவ்வசுரனுடைய வாய்க்குட்கிடந்த அக்கினி சோமன் என்னுமிருவரும், அவனைக் கொல்லற்க, அவனுக்குள் நாம் இருக்கின்றோம் என்றனர். அதைக் கேட்ட இந்திரன், அற்றேல், என்னைச் சேர்ந்த நீவிரிருவரும் எம்மிடம் வருவீர்களாக என்றனன். அதைக் கேட்ட அக்கினியுஞ் சோமனும், எங்கட்கு, அவிகளில் பாக உண்டெனின் வருவோம் என்றிரந்தனர். ஆதலின், பூரணமாச யாகத்தைச் சார்ந்த மூன்றாம் யாகத்தில், இந்திரனுக்கு புரோடாசத்தை அவியாகக் கொடுக்கும்படி, கா-2, பிர-5, அநு-2, பஞ்-9, 10 கூறுகின்றன.

அஃதன்றியும், பூரண மாசத்தில், இரண்டு புரோடாசங்கள் உள்ளன. அவற்றை, ஒன்றன்பின்னாக ஒன்றைச் செய்தால், வேள்வி செய்வதிற் சோம்பலுண்டாகு மாதலின், இடையில், 'உபாம்சு யாகம்' என்னும் ஒருவகை யாகஞ் செய்யற்பாலதென்று விதிக்கப்பட்டிருக்கின்றது. அதாவது, மந்திரங்களை, அருகிலுள்ளார் கேட்குமாறும் ஓதலாம். கேட்காதிருக்குமாறும் ஓதலாம். அவற்றுள், அருகிலுள்ளார் கேட்காதிருக்குமாறு ஓதுவதே இந்த உபாம்சு யாகமாம்.

சோமயாகஞ் செய்யாதவனுக்கு, தரிச யாகத்தின் இரண்டாவது மூன்றாவது யாகங்கள் இல்லை. என்னை? சோமம் என்பதோ, ஒரு கொடியின் சாறும். பால் அந்த இரசத்திலொருவகையாம். ஆதலின், பால் தயிர் என்பவைகளை, அருப்பிக்கும் வேள்வியைச் செய்கின்றவன் கள்ளன்; அவனுடைய ஹோமப் பொருள் வீணாகின்றது என்று, கா-2, பிர-5, பஞ்-27 வது கூறுகின்றது. ஆதலின், இவ்விரண்டு யாகங்கட்குப் பதிலாக இந்திராக்கினி தேவதைகட்குப் புரோடாச யாகஞ் செய்தல் வேண்டும். பூரண மாசத்திலும் மூன்றாவது யாகங் கிடையாது.

மற்றும், இதற்கு, பிரயாஜைகள், அநுயாஜைகள் என, இருவகை அங்க யாகங்கள் உள்ளன.

அவைகள், எவ்வாற்றால் அங்கங்களெனின்? கூறுதும் :—முன்னொரு கால் தேவர்கள் யாகஞ் செய்தனர்; அதைக் கெடுக்க அசுரர்கள் கருதினர், அதை நீக்க, காயத்திரிச் சந்தத்தின், ஒரு கூறாகிய ஐந்தெழுத்தை யெடுத்து ஒரு வடிவாக்கி அந்த யாகத்திற்கு முன் வைத்தனர். மற்றைய மூன்றெ

மூக்கையு மெடுத்து ஒரு வடிவாக்கி, அதற்குப் பின் வைத்தனர். அவைகள் இரண்டு கவசங்களாய் யாகத்தைப் பாதுகாத்தன. ஆதலின், ஐந்தெழுத்துக்குப் பதில் ஐந்து பிரயாஜ யாகங்களும், மூன்றெழுத்துக்குப் பதிலாக மூன்று பிரயாஜ யாகங்களுஞ் செய்யற்பாலன என்று, கா-2, பிர-6, அநு-1, பஞ்-5 வது கூறுகின்றது.

இவ்வாறே, ஆஜ்ய பாகங்கள், யாகத்திற்கு இரு கண்கள் என்று, கா-2, பிர-6, அநு-2, பஞ்-8 ல் கூறி யிருக்கின்றது. அக்கினி மேலுலகிலும், எமன், கீழுலகிலும் இருந்தது கூடாதென, தேவர்கள் அக்கினியை இவ் வுலகத்திற்கும், எமனை மேலுலகிற் பிதுர்க்கட்கும், அரசனுகச் செய்தனர். ஆதலின், மீந்த அவிகளைக்கொண்டு, * சுவிஷ்டகிருத் யாகஞ் செய்தல் வேண்டுமென்று, கா-2 பிர-6, அநு-6 ல் கூறி யிருக்கின்றது. அவற்றின் அவிகள் என்னும் பால் தயிர்களைத் தேடுதற் பொருட்டு, முன்னர், கன்றுகளைப் பசுக்களினின்றும் வேறு பிரித்து விடுதலே, ‘வத்ஸாபகரண’ மெனப்படும் என்க. இதுவே, இவ் வேதத்தின் தொடக்கத்திலுள்ளதாம். அற்றேல், இது எவ்வாற்றுல் முதலிற் செய்யப்படுவதா மெனின்? கூறுதும். அது வருமாறு:—தரிச யாகத்தில் அதாவது அமாவாசையிற் செய்யும் ஒருவகை வேள்வியில், அக்கினி தேவதைக்குரிய அஷ்ட கபாலங்களும், அதாவது சுட்ட மண் அகல்களில் பக்குவஞ் செய்த மாவடைகளும், இந்திர தேவதைக்குரிய ‘ஸான்னுயம்’ எனப்படும் பால் தயிர்களும் முக்கியமானவைக ளாகின்றன. இதில், ஆபஸ்தம்ப சூத்திரத்தைத் தழுவிலோ! பிரஜாபதி யென்னுந் தேவதைக்கு நெய்யாற் செயப்படும் ஆகுதியும் உண்டு என்பது ஈண்டு உணரற்பாலதாம்.

மற்றும், இவ்வாறே, பௌர்ணமியிற் செய்யும் ஒருவகை வேள்வியிலும், அக்கினி தேவதைக்குரிய அஷ்ட கபாலங்களும், பிரஜாபதி தேவதைக்குரிய நெய் யாகுதியாகிய உபாம்சு யாகமும், அதாவது இரைச்சலின்றிச் செய்யும் வேள்வியும், அக்கினி, சோமன் என்னுந் தேவதைகட்குரிய பதினொரு கபாலங்களும் முக்கியமானவைக ளாகின்றன. இதில், வைமிருத தேவதைக்குரிய பதினொரு புரோடாச கபாலங்களும் உளவென்றுணர்க.

இவைகட்குள், பிரதமை (பாட்டிமை) யிற் செய்யவேண்டிய தயிர் ஆகுதியின் பொருட்டு, அமாவாசை யிரவிலேயே பால் கறத்தல் வேண்டும்; ஆகையால், உலகிலுள்ளார் பால் கறக்குஞ் சமயத்திற்கு முன்னரே இத்தகைய பாலைக் கறத்தல் வேண்டும். அதை முன்னிட்டு, பசுக்களுடன் கூடி நிற்கின்ற கன்றுகளை புரசங் கொம்பால் வேறு பிரித்து ஓட்டல் வேண்டும் என்னும் இவ் வாற்றுல் இது முதலாவது என்பதை யுணர்க.

* சுவிஷ்டகிருத் — நலம்பெறச் செய்வித்தல்.

மற்றும், ஈண்டுத் தொடர்புபற்றி அறிந்துகொள்ளற்பாலன வருமாறு :—

மந்திரமென்பது, வேள்விப் பொருள்களை நினைப்பூட்டுவதா மெனினும், இங்கு, மிகச் சுருக்கமாகிய விதியை மேற்கொண்ட வேதப் பகுதியாம்.

பிராமணம் எனப்படுவதோ? அம் மந்திரப் பகுதிகட்கு உரையாகிய வேதப் பகுதியாம். இவற்றுள், உரைப் பகுதியாகிய பிராமணங்களென்னும் பிரயோகங்களில், மந்திரங்கள் முழுவதிற்கும் விநியோகங் கூறப்படவில்லை; ஆகையால், ஆபத்தம்ப முதலான சூத்திரங்களைக் கொண்டும், ஏனைய பிராமணங்களைக்கொண்டும் அம் மந்திரங்கட்கு முழு விநியோகங்களுங் கூறற்பாலன. இன்றேல், வேள்வி செய்யும் முறைகளின் தொடர்பு இனிது முடியாதென்க. இதுவோ, பிராமணங்களாற் செயப்படும் பிரயோகங்களிற் குறைவுண்டாய விடத்து இனிது வேண்டற்பாலதா மென்பது ஆண்டாண்டு நன்கு புலப்படும்.

தரிச யாகத் (அமாவாசையிற் செய்யும் யாகத்) தில் அக்கினி, இந்திரன் தேவதைகள், புரோடாசம், பால், தயிர் அவிகள்.

பூரணமாச யாகத்தில் அக்கினி, விஷ்ணு, அக்கினி சோமம் தேவதைகள். புரோடாசம், நெய் அவிகள்.

பௌர்ணமியிற் செய்யும் இரண்டாவது வேள்விக்கு 'உபாம்சு யாகம்' என்று பெயர். இதன் தேவதையோ, விஷ்ணுவைத் தவிர்த்து, பிரஜாபதியேனும், அக்கினி சோமங்களேனும் தேவதைகளாகவும் இருத்தல் கூடும்.

இவைகளின் அங்க யாகங்களோ, ஐவகைப் பிரயாஜ யாகங்களும், இருவகை ஆஜ்ய பாகங்களுமாகின்றன. இவைகள், முக்கியமாகச் செய்யும் யாகத்திற்கு, அதாவது அங்கியாகிய வேள்விக்கு முன்னரே செயற்பாலன.

சுவிஷ்டகிருத் யாகம், மூவகையான அநுயாஜங்கள் என்பவைகளோ, அங்கி (முக்கிய) யாகஞ் செய்த பின்னர் செயற்பாலன.

ஈண்டு, தரிசபூரணமாச வேள்விகள் இரண்டுந் தொடங்கினும், முன்னர்ச் செய்யற்பாலது பௌர்ணிமை யாகமேயாம் என்பது உணரற்பாலது.

---

## இனி, பௌர்ணிமை வேள்வித் தொடக்கம்.

ஈண்டு, வேள்வியை நடாத்துகின்றவன் வேள்வித் தலைவனவன். அவ் வேள்வித்தலைவன், அக்கினி ஹோத்திரத்தைத் தானே செய்யலாம். தனக்குப் பதிலாக இருத்துவிக்கை வைத்துங் கொள்ளலாம். இஷ்டியில் அத்வர்யு, ஹோதா, பிரமன், ஆக்னீத்ரன் என்னும் நால்வரையும் வைத்துக்கொண்டு, அந்வாதானஞ் செய்யவேண்டிய நாளில், அதாவது அக்கினியை மூன்றாக வளர்க்க வேண்டிய தினத்தில், தனது இல்லத்தின்கண் விதிப்படி வளர்த்து

வந்த காருகபத்தியம் என்னுந் தீயை, மீண்டும், காருகபத்தியம், ஆகவனீயம், தக்ஷிணாக்கினியென மூவகையாகப் பிரித்துத் தீயோம்பத் தொடங்குதல். அதில், தலைமயிரைக் கழித்துக்கொண்டு (சங்கற்பத்தின் பின்னர் தலைமயிர் கழித்தலும் உண்டு) தீயோம்புஞ் சாலைக்கு வெளியே, ஈசான திசைக்கண், கிழக்கு முகமாய், பூணூலணிந்து உட்கார்ந்து, ஆசமனஞ் செய்துகொண்டு, அதாவது மந்திர மோதலுடன் உழுந்தளவு நீரை உள்ளங்கையிலெடுத்து அருந்திக்கொண்டு, காருகபத்தியம் என்னும் அக்கினிக்குப் பின்புறமாய், தருப்பை யாதனத்தின் மீது அமர்ந்து, பௌத்திர மணிந்துகொண்டு, மனையாளுடன் பிராணாயாமஞ் செய்துவிட்டு, வேள்வி தொடங்கிய, தேசம், கால முதலானவற்றைக் கூறி, "என்னைத் தொடர்ந்த பாவத்தை நீக்கும் வாயிலாகப் பரமேசுரனைப் பிரிய மடைவித்தற் பொருட்டு, தரிச யாகத்தாலும், இந்திர வைமிருத தேவதையுடன் கூடிய பூர்ணமாச யாகத்தாலும் வேட்பேனாக" அதாவது "அமாவாசை, பௌர்ணமிகளிற் செய்யத்தக்க வேள்விகளாற் பரமேசுரனை வழிபடுவேனாக" என்று சங்கற்பித்துக்கொண்டு,

विद्युदसि विद्यमे पाप्मानमृतात्सत्यमुपैमि ।

என்னும் மந்திரத்தை ஓதி, நீரைக் கையிற் றொட்டுக்கொண்டு,

अस्यां दर्शेष्ट्यां अध्वर्युं त्वामहं वृणे ।

"அமாவாசையிற் செய்யும் இந்த யாகத்திற் (இஷ்டிக்) கு உன்னை யான் அழைக்கின்றேன்" என்று அத்வர்யுவை, அதாவது எசுர்வேதம் பயின்று யாகஞ் செய்யத்தக்கானை அழைத்தல் வேண்டும்.

இவ்வாறே, பிரமனையும், அதாவது சாட்சியாயிருந்து யாகத்தை முடித்து வைப்போனையும், ஹோதா என்னும் இருக்கு ஓதுவோனையும், ஆக்னீத்ரன் என்னும் அத்வர்யுவிற்குத் துணைவனையும் அழைத்தல் வேண்டுமென்பதை யுணர்க.

மற்றும், இதைப்போலவே பூரணமாச இஷ்டியி (யாகத்தி) லும் செய்தல் வேண்டும்.

வேட்போன் (அத்வர்யு) செயற்பாலன:

"நின்னால் அழைக்கப்பெற்ற யான், யாகக் கிரியைகளை இனிது செய்வேனாக" என்று சொல்லுதல் வேண்டும்.

இவ்வாறே அழைக்கப்பட்டவர்களான இருத்துவிக்குகள் (வேள்விச் செயலாளர்கள்) அனைவருஞ் சொல்லுதல் வேண்டும்.

அதன் பின்னர், வேட்போன், ஆகவனீயத் தீயோம்புதற் பொருட்டு, எரிந்துகொண் டிருக்கின்ற காருகபத்திய மென்னுந் தீயிலிருந்து சிறிது தீயை எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

இவ்வாறே, தக்ஷிணாக்கினியை யோம்புதற் பொருட்டும் அதிலேயே சிறி தளவு தீயை எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

இவ்வாறு எடுத்த அக்கினிக்குள், தக்ஷிணாக்கினியின் பொருட்டு எடுத்த தீயை, முதலில், காருகபத்திய மென்னும் அக்கினிக்குத் தென்புறத்தில் அதற் குரித்தா யமைத்த குண்டத்தில் வைத்துவிட்டு, பின்னர், ஆகவனீய அக்கினி யின் பொருட்டு எடுத்துள்ள தீயை, காருகபத்திய மென்னும் அக்கினிக்குக் கீழ்ப்புறத்தில், அதற்குரித்தாய் அமைத்துள்ள குண்டத்தில் வைத்தல் வேண் டும்.

அதன் பின்னர், அக்கினி விஹாரத்திற்கு வடபுறமாய் உட்கார்ந்து கொண்டு,

**देवागातु विदोगातुं यज्ञाय विन्दत ।**
**मनसस्पतिना देवेन वाताद्यज्ञः प्रयुज्यताम् ॥** பிராமணம் 3–7–4.

என்பதைச் செபித்துவிட்டு,

**ममाग्ने वर्चः ।** சங்கிதை 4-7-14.

என்பது முதலான மந்திரத்தால் ஆகவனீயம் என்னுந் தீயை, பெரிய யாகத்திற்குரிய சமித்துக்க (விறகுக)ளால் இனிது வளருமாறு செய்தல் வேண் டும் என்பன.

வேள்வித்தலைவன் செயற்பாலன:

**अग्निं गृह्णामि सुरथम् ।** பிராமணம் 3-7-4.

என்பது முதலாய், '**हविरिद मेषामयि**' என்பதை முடிவாயுள்ள மந்திரத்தை, ஆகவனீயத் தீயைப் பிரித்து வைக்குங் காலத்தில் செபித்துக்கொண் டிருத்தல் வேண்டும். இவ்வாறு செபித்தலும் முறையாய் யாகப் பொருள்களைத் தேடும் பட்சத்திலாம். சத்ய: காலபட்ச மெனிலோ! அதாவது வேள்வியைத் தொடங்கும் அப்போதிலேயே வேள்விக்குரிய பொருள்களைத் தேடல் வேண் டும் என்னும் பட்சத்திலோ! '**वसून्**' என்பது முதலாகிய மந்திரம் ஒன்றே, செபிக்கத்தக்கதாம் என்பதை யுணர்ந்துகொள்க.

பின்னர், '**अन्तराग्निपशवः**' என்பது முதலிய மந்திரத்தை, காருகபத்தியத் தீக்கும், ஆகவனீயத் தீக்கும் இடையில் நின்றுகொண்டு செபித்தல் வேண்டும். இவ்வாறே விகுருதி யாகங்களிலும் யூகித்துக்கொள்க.

வேட்போன்:

**मम देवाः ।** சங்கிதை கா–4, பிர–7, அநு–14.

என்னுமிதை முதலாகக் கொண்ட மந்திரத்தால், காருகபத்திய மென்னுந் தீயை, பெருத்த சமித்துக்களைக்கொண்டு இனிது வளர்த்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன் :

इह प्रजा विश्वरूपाः । பிராமணம் 3-7-4.

*என்பது முதலாகிய மந்திரத்தை ஒதிக்கொண்டு, வெவ்வேறு தீக்களாகப் பிரித்து வைப்பதற்கு நிமித்தமாயுள்ள, காருகபத்தியம் என்னுந் தீயைப் போற்றுதல் வேண்டும்.*

வேட்போன் :

मयि देवाः । சங்கிதை கா-4, பிர-7, அநு-14.

*என்பது முதலாகிய மந்திரத்தால், தட்சிணாக்கினியை, பெரிய சமித்துக்களால் நன்றாக வளர்த்தல் வேண்டும்.*

வேள்வித்தலைவன் :

अयं पितृणाम् । பிராமணம் 3-4-7.

*என்பதை முதலாகக் கொண்ட மந்திரத்தால், அந்வாஹார்யபசனத்தை, அதாவது தட்சிணாக்கினியை வாழ்த்திக் கொண்டு,* 'अग्निविहारम्' *என்னும் தீயோம்புமிடத்திற்கு வடபுறத்தில் உட்கார்ந்து,*

इदमहमग्निज्येष्ठेभ्यः । பிராமணம் 3-7-4.

*என்பதை முதலாகக்கொண்ட மந்திரத்தைச் செபித்தல் வேண்டும்.*

*ஈண்டு, சோமயாகஞ் செய்யாதோன், அமாவாசையிலும் பௌர்ணமியிலும் புரசங் கொம்பை வெட்டுதல் முதற்கொண்டு, அக்கிளையை மேலே செருகி வைத்தல் முடிவாகிய கருமத் தொகுதியைச் செய்தல் கூடாது. ஏனெனின்? 'சாம்நாய்யம்' என்னும் பாலுந் தயிரும், ஈண்டு இல்லாமையின் என்க.*

*சோமயாகஞ் செய்தோனும், பௌர்ணமியில் அக் கருமத்தொகுதியைச் செய்தல் கூடாது. ஏனெனின்? பௌர்ண மாசத்திலும், பாலும், தயிரும் இல்லாததா லென்க.*

*மற்றும், இங்குணரற்பாலதோர் குறிப்பு :—சோமயாகத்தைச் செய்யாதவனு யிருப்பினும் அமாவாசையிற் செய்கின்ற யாகத்தில்,* 'पयस्वतीः' *என்பதை முதலாகக் கொண்டதும், ஆதித்யோபஸ்தானத்தை ஈறாகக் கொண்டதுமாகிய கருமத் தொகுதிகளை,* 'आदित्येभ्यो यज्ञं प्रब्रवीमि' *என்பதைச் செபித்துக்கொண்ட பின்னரே செய்தல் வேண்டும் என்பதாம்.*

*இதுகாறுங் கூறிய கருமத்தொகுதியானது, தொடர்பு பற்றி, ஏனைய பிராமணங்களாலும், சூத்திரங்களாலும் நியமிக்கப் பெற்றதாம். இனி மந்திர விநியோகம்.*

---

## முதல் அநுவாகம்.

---

### விடயச் சுருக்கம்.

इषे शाखां छिनत्यूर्जे मार्ष्टि वायेति वत्सकान्
अपाकृत्याथ देवो गाः प्रस्थाप्याऽऽप्येति गाः स्पृशेत् ॥ १ ॥
रुद्रस्येत्यभिमन्त्र्यैता ध्रुवेति गृहमाव्रजेत् ।
यजेति शाखोपगूह इत्यष्टा वनुवाकगाः ॥ २ ॥

வேட்போன், புரசங் கொம்பை வெட்டி, கொண்டுவந்து, துடைத்து, அதனுல், பால் கறப்பதை முன்னிட்டு கன்றுகளைப் பசுக்களினின்றும் வேறு பிரித்து, புல்லருந்துமாறு, வெளியிற் செலுத்திவிட்டு, பசுக்களையுஞ் செலுத்தி விட்டு, அவைகள் துன்புறுவண்ணம், வாழ்த்தி போற்றி, துட்ட தேவதையால் பீடையுறுமற் பாதுகாத்து, மாலையில் வேள்வித்தலைவன் வீட்டை யடையுமாறு செய்து விட்டு, அப் புரசங் கொம்பை மேலே செருகி வைத்தல் வேண்டும் என்பதாம்.

இது அத்வர்யு காண்டமாம்.

'வாகம்'—மந்திரப் பகுதி.

அநுவாகம்—அதைப் பின்பற்றிய வுரையாகிய பிராமணப் பகுதி.

இவ்வநுவாகம், தரிசபூரணமாச யாகப் பிரகாணத்துள், தரிச யாகத்தின் அங்கமாகிய 'வத்ஸாபகரணம்', அதாவது கன்றுகளைப், பசுக்களினின்று வேறு பிரித்தலாம். இவ் வத்ஸாபகரணத்திற்குரிய கருமத் தொகுதியின் பொருட்டாய் உள்ள மந்திரங்களை மேற்கொண்டதாம்.

மற்றும், இது, நாற்பத்து மூன்று பதங்களைக் கொண்டு முடிந்ததாம்.

ஐம்பது பதங்கள் கொண்டதே 'ஒரு பஞ்சாதி' எனப்படினும், குறைந்த பதங்களைக்கொண்டு இவ் வநுவாகம் முடிவுற்றமையின் ஒரு பஞ்சாதி எனவே வழங்கப்பெற்றது. மேலும் இவ்வாறே காண்க.

ஈண்டு, 'காண்டம்' என்பது வைதிகத்தில், அஷ்டகம், எனப் பலவகையாக வழங்கப் பெறினும், பாடியத்தைத் தழுவி, காண்டம் என வழங்கலே பொருத்த முடையதாம் எனக் கொள்ளப்பட்டது.

---

## முதற் காண்டம் - முதலாம் பிரபாடகம்.

### முதலாம் அநுவாகம்.

நாற்பத்து மூன்று பதங்களைக் கொண்டது.

---

கன்றுகளைப் பிரித்துச் செலுத்தற்குரிய மந்திரங்கள்.

**हरिः ओं । इषे त्वोर्जे त्वा वायवः स्थोपायवः स्थ देवो वः सविता प्रार्पयतु श्रेष्ठतमाय कर्मण आप्यायध्व मघ्निया देवभाग मूर्जस्वतीः पयस्वतीः प्रजावतीरनमीवा अयक्ष्मा मा वः स्तेन ईशत माघशꣳसो रुद्रस्य हेतिः परि वो वृणक्तु ध्रुवा अस्मिन् गोपतौ स्यात बह्वीर्यजमानस्य पशून् पाहि ॥**

முதல் விநியோகம்.

அத்வர்யு புரசமரக் கொம்பை வெட்டிக்கொண்டு வருதல்.

மந்திரம் :

**इषे त्वा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे पलाशशाखे !) | (புரசமரக் கொம்பே!) |
| त्वा | உன்னை |
| इषे | தேவர்களின் அவிர்ப்பாகமாகிய தயிரின்பொருட்டு |
| (आच्छिनद्मि) | (வெட்டுகின்றேன்.) |

சாயணபாடியக் கருத்து.

*இந்த மந்திரத்தை ஓதிக்கொண்டு, புரச மரத்தின், கிழக்கில், அல்லது, வடக்கில் சென்றிருப்பதும், நுனி உலராததும், பசிய இலைகளை யுடையதுமாகிய ஒரு கொம்பை வெட்டல் வேண்டும் என்பது.*

*அல்லது, அத்தகைய வன்னிமரக் கொம்பையேனும் வெட்டல் வேண்டும் என்பது முணாற்பாலது.*



---

## இரண்டாம் விநியோகம்.

### புரசங் கொம்பைத் துடைத்தல்

மந்திரம் :

**ऊर्जे त्वा ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| ऊर्जे | { தேவர்கட்கு வன்மையைக் கொடுக்கும் இரசத்தின் பொருட்டும், |
| त्वा | உன்னை |
| (अनुमार्ज्मि) | (துடைக்கின்றேன்.) |

### சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், புரசங் கொம்பிலுள்ள தூசைத் துடைத்தல் வேண்டும், அல்லது, அதை நோக்கல் வேண்டும் என்பதாம்.* 2

---

*இனி, இவ்வாறு வெட்டிய புரசமரக் கொம்பை,*

**इमां प्राचीमुदीचीम् ।** பிராமணம் 3-4-7-8.

*என்பது முதலான மந்திரத்தை ஓதிக்கொண்டு, எடுத்துக்கொண்டு வரல் வேண்டும்.*

*பௌர்ணிமை யாகத்தில், புரசங் கொம்பை வெட்டுதல் இல்லை.*

*இவ்வாறு கொண்டுவந்த புரசமரக் கொம்பின் அடியை ஒரு துண்டாக்கி வைத்துக்கொள்ளல் வேண்டும். ஏனெனின்? மேல், அதுவே, 'உபவேஷம்' எனப் பெயர்பெற்று, தணல்களைத் தள்ளி விடுவதற்குரிய ஒரு கருவியாகின்றதா லென்க.*

*அக் கொம்பு, உலராதிருத்தலும், இலைகளுட னிருப்பதும் எதற்காமெனின்? பசுங் கன்றுகளை, அதனால் தட்டி யோட்டுங்கால் அவைகட்கு யாதொரு துன்பமும் உண்டாகா திருத்தற்பொருட்டா மென்க.*

*இக் கருத்தையே, பிராமண மென்னும் வேதப் பகுதியுங் கூறுகின்றது.*

*புரச மரத்தைப் போற்றுகின்ற பிராமண மென்னும் வேதப் பகுதிகளிற் சில வருமாறு:*

**तत्पर्णोऽभवत् । तत्पर्णस्य पर्णत्वम् ।** பிராமணம் 3–2–1.

**यत्पर्णशाखया वत्सा नपाकरोति ।**

**वैराजा गन्धर्वेष्वासीत् ।**

என்னும் இருக்குவேதப் பிராமண முதலானவைகள்.

அதாவது, 'காயத்திரி' என்னும் ஒருவகை வடமொழிச் சந்தமானது, கருட வடிவு பூண்டு, வானுலகிற் சென்று அங்குள்ள சோமத்தைக் கொண்டு வருங்கால், அதின் இலை, ஒன்று, கீழே விழுந்துவிட்டது ; அந்த இலையே புரச மர மாயிற்று. அதன் கொம்பால், பசுங்கன்றுகளைச் செலுத்துவோன் நல மடைகின்றனன் என்பதாம்.

மற்றும், இவ்வாறே, புரசமரத்தைச் சிறப்பித்துப் போற்றும் வேதப் பகுதிகள் பற்பல என்பது உணரற்பாலது.

இனி, இம் மந்திரத்தைப்பற்றிய சில குறிப்புகள் வருமாறு :

வினியோகத்தொடர்புபற்றி அவாநிலையால் 'வெட்டுகின்றேன்' என்னும் கிரியாபதம் (வினைச்சொல்) வருவித்துரைக்கப்பட்டது.

இரண்டு மந்திரமெனக் கொண்டு, வினியோகத்தின்படி, இரசத்தின் பொருட்டு உன்னை, '**अनुमार्ज्मि**', 'கீழிருந்து மேல்வரை துடைக்கின்றேன்' என்னும் வினைச்சொல்லை வருவித்துக் கொள்ளப்பட்டது. அதாவது புரச மரக் கொம்பின் மேற்படிந்துள்ள தூசைத் துடைக்கின்றேன் என்பதாம்.

(போதாயன சூத்திரம்) இவ்விரண்டு வினியோகங்களையும் ஒரே வினியோக மாகச் செய்து புரசமரக் கிளையை வெட்டுவதற்கே உபயோகப்படுத்தல் வேண்டு மென்பதாம். 2

---

ஈண்டு, கருமச் செயல்களின் முறைமைத் தொடர்புபற்றி, வேள்வித் தலைவன் செயற்பாலதைக் காட்டுவாம் :

வேள்வித்தலைவன் :

**पयस्वती रोषधयः ।** பிராமணம் 3-7-4.

என்பது முதலாகிய மந்திரத்தை ஓதி, ஒரு முறை ஆசமனஞ் செய்து கொண்டு, புநிதமாம்படி மற்றொரு முறையும் ஆசமனம் பண்ணிக்கொண்டு, ஆகவனீயத் தீக்கு மேல்புறத்தில், வேதிகையைத் தாண்டிச் சென்று, அதற்குத் தென்புறமாய் வடக்கு முகமாய் உட்கார்ந்து கொண்டு, விரதத்தை அநுட்டிக்கின்றவனுப்ச் சமுத்திரத்தையும் அக்கினியையுஞ் சிந்திப்பதுடன்,

**अग्ने व्रतपते व्रतं चरिष्यामि ।** பிராமணம் 3-7-4.

என்பது முதலிய மந்திரத்தைச் செபித்துக் கொண்டிருத்தல் வேண்டும்.

வேண்டிய மந்திரங்கள்)

அதன் பின்னர், 'सम्राडसि' என்பது முதலாகிய மந்திரத்தால், சூரிய தேவதையை வழிபடுதல் வேண்டும்.

இவ்வாறு செய்வது 'விரதாசாரம்' எனப்படும். இதைச் சிலர், மூன்றும் விநியோகத்திற்குப் பின்னருஞ் செய்கின்றனர் என்பதை யுணர்க.

---

### மூன்றும் விநியோகம்.

#### பசுவின் கன்றுகளைப் பிரித்துச் செலுத்துதல்.

மந்திரம் :

**वायवः स्थोपायवः स्थ ।**

என்பது.

#### பதவுரை.

| | |
|---|---|
| (हे वत्साः !) | (பசுவின் கன்றுகளே ! நீங்கள்) |
| वायवः | புல்லருந்துவதற்கு, காலையில், வனஞ் செல்கின்றவர்களாக |
| स्थ | இருக்கின்றீர்கள். |
| उप | மாலையில், எஜமானனுடைய இல்லத்திற்கு |
| आयवः | திரும்பி வருகின்றவர்களாகவும் |
| स्थ | இருக்கின்றீர்கள். |

#### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன், இரவில், பால் கறத்தற்பொருட்டு, புரசங்கொம்பால் தட்டி, பசுக்களினின்றும் கன்றுகளை வேறு பிரித்து, புல்லுள்ள இடத்திற்குச் செலுத்தல் வேண்டும் என்பது.

மற்றும், இவ்வாறே, ஆறு பசுவின் கன்றுகளைச் செலுத்தல் வேண்டும்.

அல்லது, பாற்குடம் நிறையுமாறு பால் கறத்தற்கு வேண்டிய கன்றுகளைச் செலுத்தல் என்பதும் அமையுமென்க.

இம் மந்திர மொழிகளைப்பற்றிய சில குறிப்புக்கள் வருமாறு :

'वायवः' என்னும் வடசொல், ஈண்டுச் 'செல்கின்றவைகள்' என்னும் பொருளையும், 'आयवः' என்பது 'வருகின்றவைகள்' என்னும் பொருளையும் தந்து நிற்கின்றன.

அல்லது, வாயுவால் மேகங்கள் செலுத்தப்பட்டு, மழை பெய்ய, புல்லுண்டாகியதனுற் பசுக்கள் வாழ்வனவாம்; ஆதலின், பசுக்களையே 'வாயுக்கள்' என்று உபசரித்துக் கூறியதாம்.

அல்லது, வாயுவானது, பசுக்களுக்கு வான் வழியாய் அதிட்டான தேவதையா மாதலின், அத்தகைய வாயு தேவதையினிடத்தில், பசுவின் கன்றுகளை ஒப்புவித்தல் எனினுமாம்.

இதன் விரிவை சதபதப் பிராமண மென்னும் வேதப் பகுதியிற் காண்க.

மற்றும், வாயுவானது, எச்சிலுமிழ்தல் முதலான குற்றங்களைப் போக்குதல் போன்று, பசுக்களும், தோஷங்களைப் போக்கலின் வாயு என்று கூறப்பட்டன.

அல்லது, வாயுவாற் பாதுகாக்கப்படுதலின் வாயு எனப்பட்டன.

அல்லது, வாயுவைப் போன்று மிக விரைவாய்ச் செல்லுதலால் வாயுவெனப்பட்டன என்பன முதலாகப் பல்வகைப் பொருள்களையும் ஈண்டு யூகித்துணர்ந்து கொள்க.

இதுபற்றி யன்றோ, 'वा' என்னுஞ் சொல், 'செல்லுதல்' என்னும் பொருள்கொண்ட வடமொழிப் பகுதி யென்ப.

இப் பொருள், பிராமணம், காண்டம், 3-2-1-ல் விரித்துக் கூறப்பட்டிருக்கின்றது ஆண்டுக் காண்க. 3

---

### நான்காம் விநியோகம்.

பால் கறக்கும் பசுக்களை வெளியிற் செலுத்துதல்.

மந்திரம் :

**देवो वः सविता प्रार्पयतु श्रेष्ठतमाय कर्मणे ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **(हे गावः !)** | (பசுக்களே !) |
| **वः** | உங்களை |
| **सविता देवः** | எல்லாவற்றையுஞ் செலுத்துகின்ற ஈசுரன் |
| **श्रेष्ठतमाय** | மிகச் சிறப்புற்ற |
| **कर्मणे** | வேள்விக்கிரியைக்கு (பால் தயிரின் பொருட்டு) |
| **प्रार्पयतु** | புல்லருந்த வெளியிற் செலுத்தி யருள்வானாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன், புரசமரக் கொம்பால், பசுக்களை வெளியே சென்று புல்லிருக்கும் வன முதலான விடங்களிற் புல்லருந்தி வரும்படி செலுத்தல் வேண்டும் என்பதாம்.

இதற்கு, இந்திரன், அல்லது, மஹேந்திரன் தேவதையாவன்.

ஈண்டுக் கருமங்கள், தீயது, நல்லது, சிறந்தது, மிகச் சிறந்தது என நால் வகைப்படுவனவாம். அவற்றுள் கொலை, களவு முதலானவைகள் தீயவைகள், சுற்றத்தாரைப் பாதுகாத்தல் முதலானவைகள் நல்லவைகள். குளம் வெட்டுதல், கிணறு கெல்லுதல் முதலானவைகள் சிறந்தவைகள், மறைகள் உணர்த்தும் வேள்விக் கருமங்கள் மிகச் சிறந்தன என்பதை யுணர்க. 4

இதை, பிராமணம், கா-3, பிர-2, அநு-1-ல் காண்க.

---

ஐந்தாம் விநியோகம்.

பசுக்கள் துன்புறவண்ணம் வாழ்த்தல்.

மந்திரம் :

**आप्यायध्व मघ्निया देव भाग मूर्जस्वतीः पयस्वतीः प्रजावती रनमीवा अयक्ष्मा मावः स्तेन ईशत माऽघशꣳ सः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे अघ्निया !** | துன்பஞ் செய்யாத பசுக்களே ! நீங்கள் |
| **देव भागं** | இந்திர தேவதைக்குரிய பாலை |
| **आप्यायध्वं** | பெருகச் செய்வீர்களாக. |
| **ऊर्जस्वतीः** | மற்றும், வலிமை யுடையவர்களும், |
| **पयस्वतीः** | நிறையப் பாலுடையவர்களும், |
| **प्रजावतीः** | வளருங் கன்றுகளை யுடையவர்களும், |
| **अनमीः** | பொதுவாகிய பிணியில்லாதவர்களும், |
| **अयक्ष्मा** | இரைப்புமுதலான நோயிலாதவர்களுமாவீர்களாக. |
| **वः** | உங்களை, |
| **स्तेनः** | திருடன் |
| **मा ईशत** | கவர்ந்துகொள்ள முடியாதவனுருக. |
| **मा अघशंसः** | கொல்லுந் தொழிலையே மேற்கொண்ட புலி முதலானவைகளும் துன்புறுத்தாதவைகளாருக. |

சாயணபாடியக் கருத்து.

வெளியிற் செலுத்தப்பட்ட பசுக்களுக்கு, யாதொரு இடையூறும் வாராதபடி இம் மந்திரத்தால் வேட்போன் வாழ்த்தல் வேண்டும் என்பதாம். 5

---

ஆறும் விநியோகம்.

பசுக்கள், கொடிய தேவதைகளாலும் துன்புறவண்ணஞ் செய்தல்.

மந்திரம் :

**रुद्रस्य हेतिः परिवो वृणक्तु ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **(हे गावः !)** | (பசுக்களே) |
| **वः** | உங்களை |
| **रुद्रस्य** | உருத்திர னென்னும் துட்ட தேவதையின் |
| **हेतिः** | ஆயுதம் |
| **परि** | எவ்வகையாலும் |
| **वृणक्तु** | துன்புறுத்தாததாகுக. |

சாயணபாடியக் கருத்து.

வேட்போன், வனத்திற் சென்ற பசுக்கள், அங்குள்ள துட்ட தேவதைகளாலும் பீடையுறாதவாறு இம் மந்திரத்தால் வாழ்த்தல் வேண்டும் என்பதாம்.

இப்பொருள், பிராமணம், கா-3-2-1-ல் கூறப்பட்டிருக்கின்றது என்பதையுணர்க.

(போ - சூ.) இம் மூன்று விநியோகங்களையும் ஒரே விநியோகமாகச் செய்து, தாய்ப் பசுக்களை ஏவுதல் வேண்டுமென்பதாம். 6

---

ஏழாம் விநியோகம்.

வேட்போன், புல்லருந்தி வந்த பசுக்களை, வேள்வித்தலைவன் வீட்டையடையும்படி செய்தல்.

மந்திரம் :

**ध्रुवा अस्मिन् गोपतौ स्यात बह्वीः ।**

என்பது.

வேண்டிய மந்திரங்கள்)

பதவுரை.

| | |
|---|---|
| **(हे गावः!)** | *(பசுக்களே! நீங்கள்)* |
| **अस्मिन् गोपतौ** | *பசுக்கட்குத் தலைவனுகிய இவனிடத்தில்* |
| **ध्रुवा स्यात** | *நிலைத்த அன்புடையவர்கள் ஆவீர்களாக.* |
| **बह्वीः** | *மற்றும், தழைத்துப் பெருகுவீர்களாக.* |

சாயணபாடியக் கருத்து.

*வேட்போன், பசுக்களை, இவ்வாறு வாழ்த்தி, இம் மந்திரத்தால், வேள்வித் தலைவன் வீட்டைச் சேருமாறு செய்தல் வேண்டும் என்பதாம்.*

*ஈண்டு, நிலைத்த அன்பு என்பதற்கு, நிலையாய்ப் பெருகுவீர்களாக என் பாரு முளர்.*　　7

(போ-சூ.) *இம் மந்திரத்தால் வேள்வித்தலைவனைப் பார்த்தல் வேண்டு மென்பது.*

---

எட்டாம் விநியோகம்.

வேட்போன், இவ்வாறு பசுக்களையும் கன்றுகளையுஞ் செலுத்துவித்த புரசமரக்கோம்பை மேலே செருகிவைத்தல்.

மந்திரம்:

**यजमानस्य पशून् पाहि ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **(हे पलाशशाखे !)** | *(புரச மரத்தின் கொம்பே! நீ)* |
| **यजमानस्य** | *வேள்வித்தலைவனுடைய* |
| **पशून्** | *பசுக்களை* |
| **पाहि** | *பாதுகாத்துக் கொள்வாயாக.* |

சாயணபாடியக் கருத்து.

*காருகபத்தியம், என்னும் வேள்வித்தீக்கு மேற்குப் புறமாய் நிற்கும் நெல் வண்டியில், கிழக்காக வந்து மேற்கில் நுனி யிருக்கும்படியேனும், அல்லது, மேற்காய் வந்து கிழக்கில் நுனி யிருக்கும்படியேனும், புரச மரத்தின் கொம்பைச் செருகி வைத்தல் வேண்டும், அல்லது, வேள்விச்சாலையின் மேல் அவ்வாறு செருகி வைத்தல் வேண்டும் என்பதாம்.*

(தருப்பையைக்

ஈண்டு, புரசமரக் கொம்பைக் கூப்பிட்டுக் கூறுதல், அக் கொம்பு சடமாதலின் அதன் அபிமானி தேவதையைப்பற்றிய தென்க.

புரசமரக் கொம்பை மேலே செருகி வைக்கின், வேள்விக்தலைவன் மேலுலகை யடைவான் என்பது பாவனையாம். 8

முதல் மந்திரத்தை, இரண்டு விநியோகமாய்க் கொண்டதால் இவ் வநுவாகம் எட்டுப் பிரயோகங்களைக் கொண்டதென்பது உணரற்பாலது.

வத்ஸாபாகரணம் என்னும், கன்றைப் பிரித்தலைக் கூறும்

முதலாம் அநுவாகம் முடிந்தது.

---

## இரண்டாம் அநுவாகம்.

---

விடயச் சுருக்கம்.

यज्ञस्येत्यग्निमामन्त्र्य प्रत्युदात्रस्य तापनम् ।
प्रेयं जपति देवानां दर्भं सीताऽथमुष्टितः ॥ १ ॥
देवेति दर्भान्संयम्य पर्वसंस्थाप्यदात्रकम् ।
आच्छेच्छिन्द्याद्देवमूलं स्पृशेत्स्वंचसहेत्यतः ॥ २ ॥
पृथिव्युपर्यवस्थाप्यादित्यै रज्जुं प्रसारयेत् ।
सुसंभृद्दर्भाः संभार्या इन्द्राण्या इति बन्धनम् ॥ ३ ॥
पूषा ग्रन्थिः सते गूह इन्द्रोद्यस्य बृहस्पतेः ।
मूर्ध्न्याधायोर्वेत्य चोर्ध्वं स्थापयेद्देव मित्यतः ॥ ४ ॥
अनुवाके द्वितीयेऽस्मिन्नुक्ता एकोनविंशतिः ।

தீயைப் போற்றுதல், கத்தியைக் காய்ச்சுதல், கிழக்கிற் செல்லல், தருப்பைகளை இவ்வளவென்று வரைவு பருத்திக் கொள்ளல், தருப்பைக் குச்சில்களை வளைத்துப் பிடித்துக் கொள்ளல், கணுவில் கத்தியை வைத்தல், தருப்பையைக் கொய்தல், அறுத்ததை வைத்தல், அடியைத் தொட்டுப் போற்றுதல், தன்னையும் போற்றிக்கொள்ளுதல், கயிற்றைப் போடுதல், தருப்பைப் பிடிகளைத் தருப்பைக் கயிற்றின்மீது வைத்தல், கயிற்றைச் சேர்த்தல், முடிதல், முடிச்சைச் செருகல், கட்டை மேலே யெடுத்தல், தலையில் வைத்துக்கொள்ளல், திரும்பி வருதல், கொண்டுவந்து வைத்தல் என்பது.

---

## முதற் காண்டம் - முதற் பிரபாடகம்.

## இரண்டாம் அநுவாகம்.

இது, ஒரு பஞ்சாதிக்கு மேல் முப்பத்தெட்டுப் பதங்களைக் கொண்டது.

---

தருப்பையைக் கொண்டு வருதற்குரிய மந்திரங்கள்.

यज्ञस्य घोषदसि प्रत्युष्टꣳ रक्षः प्रत्युष्टा अरातयः प्रेयमगाद्धिषणा बर्हिरच्छ मनुनाकृता स्वधया वितष्टात आ वहन्ति कवयः पुरस्ताद्देवेभ्यो जुष्टमिह बर्हि रासदे देवानां परिषूतमसि वर्ष वृद्धमसि देव बर्हिर्मात्वाऽन्वङ् मातिर्यकपर्वते राध्यास माच्छेत्ता ते मारिषं देव बर्हिः शत वल्शं विरोह सहस्र वल्शाः ॥ १ ॥ विवयꣳ रुहेम पृथिव्याः संपृचः पाहि सुसंभृता त्वा संभराम्यदित्यै रास्नाऽसीन्द्राण्यै संनहनं पूषाते ग्रन्थिं ग्रथ्नातु सते माऽऽस्थादिन्द्रस्य त्वा बाहुभ्या मुद्यच्छे बृहस्पतेर्मूर्ध्ना हराम्युर्वन्तरिक्षमन्विहि देवं गममसि ॥

ஈண்டு, வேட்போன், 'देवस्य त्वा सवितुः' என்பது முதலிய மந்திரத்தை ஓதி, காருகபத்தியத்திற்கு வடக்கில் வைத்திருக்கின்ற அசுவ பர்சை (குதிரையின் விலாப்புறத் தெலும்பை) அல்லது, கத்தியை, முதலில் எடுத்துக் கொண்ட பின்னர்,

---

முதலாம் விநியோகம்.

கத்தியை யேனும், காருகபத்தியத் தீயை யேனும் வாழ்த்துதல்.

மந்திரம் :

यज्ञस्य *घोषदसि ।

என்பது.

---

* गोसदसि என்பது பாடபேதம்.

### பதவுரை.

| | |
|---|---|
| **अश्वपर्शोः** | கத்தியே! நீ |
| **यज्ञस्य** | வேள்வியின், |
| **घोषत्** | தனமாக |
| **असि** | இருக்கின்றாய். |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் கத்தியைத் தொட்டு போற்றல் வேண்டுமென்பதாம்.

குறிப்புக்கள் :—ஈண்டு, காருகபத்தியத் தீயே! நீ, வேள்விக்கு ஒரு தனமாக இருக்கின்றாய் எனப் பொருள் கொள்ளினும் அமையுமென்றுணர்க.

'கத்தி' என்றதால் குதிரை யெலும்புங் கொள்ளற்பாலதாம். என்னை? குதிரையின் விலாப்புறத் தெலும்பானது அரிவாள் போன்று தருப்பையை அறுப்பதற்கு உரியதா யிருத்தலின் என்க. இது பண்டைக் காலத்திய வழக்கென்று தோன்றுகின்றது. தனம் = முக்கிய சாதனம்.

இடபத்தின் எலும்பையுங் கொள்ளுதல் கூடுமென்பது ஈண்டுணர்ந்து கொள்ளற்பாலது.

கத்தியையேனும் காருகபத்தியத் தீயையேனும் போற்றலா மென்பது ஆபத்தம்பருக்கும் உடன்பாடாம். 1

(போ-சூ.) இம் மந்திரத்தால் அசுவ பரசுவை அபிமந்திரணஞ் செய்தல் வேண்டுமென்பது.

---

### இரண்டாம் விநியோகம்.

கத்தியை, காருகபத்தியத் தீயிற் காய்ச்சுதல்.

மந்திரம் :

**प्रत्युष्टँ रक्षः प्रत्युष्टा अरातयः ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **रक्षः** | அசுரர்கள் எல்லாரும் |
| **प्रत्युष्टं** | எரிந்தனர். |
| **अरातयः** | தனத்தைக் கெடுக்கின்ற பகைவர் அனைவருங் |
| **प्रत्युष्टाः** | கொளுத்தப்பட்டனர். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இரும்புக் கத்தியை, காருகபத்திய மென்னுந் தீயிற் காய்ச்சிக் கூராக்கிக்கொள்ளல் வேண்டு மென்பதாம்.

குறிப்புக்கள் :—ஈண்டு, இரும்புக் கத்தி என்றதால், குதிரை யெலும்பா யின் காய்ச்சுதல் கூடாதென்பதை யுணர்க. இடபத் தெலும்பெனினும் இத் தன்மைத்தேயாம்.

காருகபத்தியத் தீயிலேனும் ஆகவனீயத் தீயிலேனுங் காய்ச்சுதல் கூடு மென்க.

காய்ச்சுதலின் பயன், அசுரர் நீங்குதலும் கூராதலுமாம். கத்தியுடன், கமண்டலத்தையும் எடுத்துக் கொள்ளல் வேண்டும். இக்கால வழக்கிலோ, தருப்பையையுங் கொண்டு போகின்றனர். 2

---

மூன்றும் விநியோகம்.

வேதிகையை நோக்கிக்கொண்டு கிழக்கே செல்லுதல்.

மந்திரம் :

**प्रेयमगाद्धिषणा बर्हिरच्छ मनुना कृता स्वधया वितष्टात आवहन्ति कवयः पुरस्ताद्देवेभ्यो जुष्टमिह बर्हिरासदे ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **धिषणा** | வித்தை யுடையதும், |
| **स्वधया** | அன்னத்தால் |
| **वितष्टा** | நன்கு கூராக்கப் பெற்றதும், |
| **मनुना** | பிரசாபதியாகிய மநுவால் |
| **कृता** | செய்ததுமாகிய, |
| **इयं** | இந்த அரிவாள், |
| **बर्हिः** | தருப்பையைக் |
| **अच्छ** | கொண்டு வருதற் பொருட்டு, |
| **प्र अगात्** | கிழக்கே செல்கின்றது. (எதனால் கிழக்காகவே செல்கின்றதெனின் ?) |
| **ते कवयः** | வேள்வியை இனிதுணர்ந்த அவ்வறிஞர்கள், |

| | |
|---|---|
| **पुरस्तात्** | முன்னர், கிழக்கிலிருந்தே, |
| **बर्हिः आवहन्ति** | { தருப்பையைக் கொண்டு வந்தனர் ; ஆதலினென்க. (இவ்வண்ணங் கொண்டுவந்த தருப்பை) |
| **देवेभ्यः** | தேவர்கட்குப் |
| **जुष्टं** | பிரியமுடையது. |
| **इह** | இவ்வேதிகையில், (கொண்டு வந்த தருப்பையை,) |
| **आसादे** | வைத்தல் வேண்டும். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தருப்பையைக் கொய்வதன் பொருட்டுக் கிழக்கே செல்லல்வேண்டு மென்பதாம்.

**குறிப்புக்கள் :**—காருகபத்தியத் தீயினிடத்திலிருந்து புறப்பட்டு வேதிகையையும் பார்த்துக்கொண்டு, ஆகவனீயத் தீக்கருகாய்க் கிழக்கே போகல் வேண்டும்.

தருப்பை யிருக்குமிடஞ் செல்லல் வேண்டு மென்பது மொன்று. வடக்கினுஞ் செல்லலாம்.

பிரயோககாரர், '**उर्वन्तरिक्षमन्विहि**' அதாவது, 'வான் பெரிது இனிது செல்வாயாக' என்பதையும் ஈண்டுச் சேர்த்துள்ளார் என்பதையு முணர்க. 3

**(போ-சூ.)** இம் மந்திரத்தை, '**प्रेयमगत्............जुष्टं**' என்னும் வரை ஒரு மந்திரமாகப் பிரித்து, அதனால் ஆகவனீயத்தை நோக்கிச் சென்று '**इह बर्हिरासदे**' என்னும் வரை, மற்றொரு மந்திரமாகப் பிரித்து அதனால் வேதிகையைத் திரும்பிப் பார்த்தல் வேண்டுமென்பது.

---

நான்காம் விநியோகம்.

அறுத்துக்கொள்ள வேண்டிய தருப்பைகளை, வரைவுப்படுத்திக் கொள்ளல்.

மந்திரம் :

**देवानां परिषूतमसि वर्षवृद्धमसि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे दर्भ !** | தருப்பையே ! நீ, |
| **देवानां** | தேவர்களின் பொருட்டு, |
| **परिषूतं** | இனிது கொள்ளத்தக்கதாக |
| **असि** | இருக்கின்றாய். மற்றும், |
| **वर्षवृद्धं** | மழையால் வளருவதாகவும் |
| **असि** | இருக்கின்றாய். |

கொண்டு வருதல்)

### சாயணபாடியக் கருத்து

அரசன் ஆணையால் ஒரு கிராமத்தில் பால் தயிர் முதலியவைகளைக் கவர்வது போன்று, 'தேவர்களின் பொருட்டாகவே உன்னைக் கொள்ளுகின்றேன்' என்னும் இம் மந்திரத்தால் அறுக்க வேண்டிய தருப்பைகளை வரம்பிட்டு வளைத்துக்கொள்ளல் வேண்டும் என்பதாம்.

**குறிப்புக்கள் :**—தருப்பை, என் பொருட்டாகாமையின், அதை அறுத்துக் கொள்ளுதலால் தோஷமில்லை யென்பது கருத்து.

இக்கால வழக்கில், தருப்பைகளைக் கொண்டே வரப்பு படுத்திக் கொள்கின்றனர்.

வேண்டிய தருப்பைகளை, ஒரு குறிப்பிட்டுக் கவர்ந்து கொள்ளல் வேண்டுமென்பது உட்கிடை.

**(போ-சூ.)** இம் மந்திரத்தை, '**देवानां परिषूतमसि**' என்னும் வரை, ஒரு மந்திரமாகப் பிரித்து, அதனால் பரிஸ்தரணம் என்னும் தருப்பை முடிச்சுக்கு வேண்டிய அளவு தருப்பையைப் பிடித்துக்கொண்டு, '**वर्ष वृद्धमसि**' என்னும் வரை, மற்றொரு மந்திரமாகப் பிரித்து அதனால், அத் தருப்பையை மேல் நோக்கித் துடைத்தல் வேண்டும் என்பது.

---

ஈண்டு, சூத்திர விநியோக முறையைத் தழுவி, '**अतिसृष्टो गवां भागः**' அதாவது பசுக்களின் பாகம் விடப்பட்டிருக்கின்றது, என்று கூறிவிட்டு, ஒன்று அல்லது, இரண்டு, அல்லது, மூன்று தருப்பைகளை அங்கு அறுக்காது விட்டு விடல் வேண்டும்.

பின்னர், கையில் தண்ணீரைத் தொட்டுக் கொண்டு, '**इदं देवानां**' இது தேவர்கட்கு என்று, கவர்ந்து வைத்துள்ள தருப்பைகளின் மீது கையை வைத்தல் வேண்டும்.

அதன் பின்னர், இது பசுக்கட்கு என்று, விட்டு வைத்த தருப்பைகளையுந் தொடல் வேண்டும். 4

பின்னர், '**देवस्य त्वा सवितुः**' (அந்தரியாமியின் ஏவுதலால்) என்பது முதலிய மந்திரத்தால், தருப்பைகளின் கிளைகளை வலது கையாற் பற்றிக்கொள்ளல் வேண்டும்.

ஐந்தாம் விநியோகம்.

தருப்பைக் குச்சுகளைச் சேர்த்துப் பிடித்துக் கொள்ளல்.

மந்திரம் :

**देव बर्हिर्मा त्वाऽन्वङ् मा तिर्यक् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **देव बर्हिः** | தேவ தருப்பையே ! |
| **त्वा** | உன்னை |
| **मा अन्वक्** | நீள வசத்திலும் அறுக்கமாட்டேன். |
| **मातिर्यक्** | குறுக்கு வசத்திலும் அறுக்கமாட்டேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தருப்பைகளைச் சேர்த்து இடது கையால் ஒரு பிடியாகப் பிடித்துக்கொள்ளல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :— நெட்டையிலும் குட்டையிலும் அறுக்கில் வளராதென்பது கருத்து. 5

---

ஆறும் விநியோகம்.

கணுவைப் பார்த்துக் கத்தியை வைத்தல்.

மந்திரம் :

**पर्वं ते राध्यासम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे देवबर्हिः !** | தருப்பையே ! (உன்னை யறுப்பதற்கு,) |
| **ते पर्वं** | உன்னுடைய கணுக்களில், |
| **राध्यासं** | (நீ கெடாதிருக்குமாறு) கத்தியை வைக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கணுவில் கத்தியை வைத்தல் வேண்டும் என்பதாம். 6

குறிப்பு :— கணுவில் அறுக்கில், கேடின்றித் தளிர்க்கும் என்பது கருத்து.

(போ-சூ.) இவ்விரண்டு விநியோகங்களையும் ஒரே விநியோகமாக்கி, கத்தியை வைப்பதற்கே உபயோகப்படுத்தல் வேண்டுமென்பது.

---

(கொண்டு வருதல்)

## ஏழாம் விநியோகம்.

ஒரு பிடி தருப்பையைக் கொய்தல்.

மந்திரம் :

**आच्छेत्ता ते मा रिषम् ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **हे दर्भ !** | தருப்பையே ! |
| **ते** | உன்னை, |
| **आच्छेत्ता** | அறுக்கின்றவனே யாயினும், |
| **मा रिषं** | அறுக்காதவனே யாகின்றேன். |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஒரு பிடி தருப்பையை அறுத்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—சாத்திர முறையைத் தழுவியே யறுத்தலின் அறுக்காததை ஒக்கும் என்பது கருத்து.　7

அறுத்து விட்டு, கையால் தண்ணீரைத் தொடல் வேண்டும்.

---

## எட்டாம் விநியோகம்.

கொய்த தருப்பையை ஒரு ஆசனத்தின் மீது வைத்தல்.

மந்திரம் :

**पृथिव्याः संपृचः पाहि ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **भोः तृणकाष्ठाद्याधार !** | தருப்பையைத் தாங்கிக் கொண்டிருக்கின்ற ஆசனமே! நீ, |
| **पृथिव्याः** | தரையில், |
| **संपृचः** | படுவதினின்றும் (இத்தருப்பையை,) |
| **पाहि** | பாதுகாத்துக் கொள்வாயாக. |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அறுத்த தருப்பைப் பிடியை ஒரு பீடத்தின் மீதேனும், தருப்பையின் மீதேனும் வைத்தல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :— பாதுகாத்தல் : தருப்பை, தரையிற்படில், வேள்விக்குரித்தலாகதா மாதலின், தரையிற் படலால் வரும் குற்றத்திலிருந்து காப்பாற்றுதல்.

சூத்திரப் பிரயோகத்தைத் தழுவி, இம் மந்திரம் முன்னர்ச் சேர்க்கப்பட்டிருக்கின்றது. தருப்பையைக் கொய்தவுடன் அதை வைக்கவேண்டியதே தொடர்பா மாதலின் என்க.

இவ்வாறு, மந்திரத்துடன் அறுத்து வைத்த தருப்பைப் பிடிதான், பிரஸ்தர மெனப்படும். இப்பிடியை ஒன்றுடனுஞ் சேர்க்காமல் தனித்தே வைத்தல் வேண்டும்.

மற்றும், ஈண்டு, 'देवस्य त्वा' என்பது முதலிய மந்திரங்களை முர்முறை மறித்தும் மறித்தும் ஓதிக்கொண்டு, மூன்று பிடிகள் கொண்ட மூன்று கத்தைகளை மும்முறையாக அறுத்து வைத்தல் வேண்டு மென்பதையு முணர்க. 8

---

ஒன்பதாம் விநியோகம்.

அறுத்துவிட்ட அடிக்கட்டைகளின் மீது, கையை வைத்து வாழ்த்தல்,

மந்திரம் :

**देवबर्हिः शतवल्शं विरोह ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **देवबर्हिः** | தேவ தருப்பையே! நீ, |
| **शतवल्शं** | நூற்றுக்கணக்கான தளிர்களாய்த் தளிர்த்து, |
| **विरोह** | இனிது தழைப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அடிக்கட்டையின் மீது கையை வைத்து வாழ்த்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—அறுத்தவுடன், கையால் தண்ணீரைத் தொட்டுக் கொள்ளலும் வேண்டும். 9

---

பத்தாம் விநியோகம்.

தன்னை வாழ்த்திக்கொள்ளல்.

மந்திரம் :

**सहस्रवल्शा विवयꣳ रुहेम ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **वयं** | யாம், |
| **सहस्रवल्शाः** | ஆயிரக்கான வகைகளால், |
| **विरुहेम** | இனிது தழைத்தோங்குவோமாக. |

கொண்டு வருதல்)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தன்னைத் தொட்டு வாழ்த்திக் கொள்ளல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—தருப்பையை, துன்புறுத்தாது அறுத்து, தேவர்கட்கு இனிய இடமாகச் செய்தலின் யானும் பலவித மக்கட்பேறுகளுடன் தழைப்பேனாக என்பது கருத்து. 10

ஈண்டும், நீரைக் கையால் தொட்டுக்கொள்ளல் வேண்டும்.

ஈண்டுப் பிரயோக சூத்திரங்களைத் தழுவி, மேல் வரும் 'अदित्यै रास्नासि' என்னும் மந்திரத்தையே ஓதிக்கொண்டு, மூன்று, அல்லது, ஐந்து தருப்பைகளை எடுத்துக்கொள்ளல் வேண்டும். பின்னர், 'अयुपिता योनिः' என்பதை மறித்தும், மறித்துஞ் சொல்லிக்கொண்டு, மும்முறையேனும், ஐந்து முறையேனும் அதைக் கயிறாகத் திரித்துக்கொள்ளல் வேண்டும்.

---

பதினோராம் விநியோகம்.

**தருப்பைக் கயிற்றை, தரையின்மீது, வடக்கு நுனியாய்ப் போடுதல்.**

**மந்திரம் :**

**अदित्यै रास्नाऽसि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे रज्जो !** | தருப்பைக்கயிறே! நீ, |
| **अदित्यै** | பூமியின், |
| **रास्ना** | மேகலைக் கயிறாக |
| **असि** | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கயிற்றைத் திரித்து, தரையின்மீது வடக்கு நுனியாய் விரித்து விடல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—இம் மந்திரம், பாடமுறையில் பின்னிருக்கின்றது. இருப்பினும், கயிறின்றிக் கட்டுதல் அமையாமையின் முன் வைக்கப்பட்டிருக்கின்றது. 11

---

பன்னிரண்டாம் விநியோகம்.

கயிற்றின்மேல், தருப்பைப் பிடிகளைச் சேர்த்து வைத்தல்.

மந்திரம் :

**सुसंभृता त्वा संभरामि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे दर्भ !** | தருப்பையே ! |
| **त्वा** | உன்னை, |
| **सुसंभृता** | நன்கு கட்டத்தக்க கயிற்றுடன் |
| **संभरामि** | இனிது சேர்த்து வைக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மந்திரங்களை மறித்தும் மறித்தும் படித்துக்கொண்டு அறுத்த முறையாகவே தருப்பைப் பிடிகளை வெவ்வேறாய் கயிற்றின்மேல் வைத்தல் வேண்டு மென்பதாம்.

குறிப்புகள் :—பாடமுறையில் இம் மந்திரம் முன் மந்திரம்.

ஒவ்வொரு பிடியை எடுத்து வைக்கும்போதும் மந்திரஞ் சொல்லல் வேண்டும் என்பது கருத்து.

ஈண்டு, சூத்திர முறையைத் தழுவி, 'असुभिता योनिः' என்னும் மந்திரத்தால் அவற்றின் மேல் முதலாவது அறுத்த தருப்பைப் பிடியை (பிரஸ்தரத்தை) மேலே எடுத்துவைத்தல் வேண்டும். 12

---

பதின்மூன்றும் விநியோகம்.

கயிற்றின் நுனிகளைச் சேர்த்தல்.

மந்திரம் :

**इन्द्राण्यै संनहनम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **इन्द्राण्यै** | { இந்திரன் மனையாளின்பொருட்டு, அதாவது இந்திராணி போன்ற செல்வத்தை யடைதற்பொருட்டு |
| **संनहनम्** | நன்கு முடிதல். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தருப்பைக் கயிற்றின் இருதலைகளையும் ஒன்றாய்ச் சேர்த்தல் வேண்டும் என்பதாம். அதாவது கட்டாகச் சுற்றுதல்.

கொண்டு வருதல்)

குறிப்புக்கள் :—இந்திரன் நூற்றுக் கணக்கான வேள்வி செய்தபோது, வேட்போன், இந்திராணியின் இடுப்பில் கட்டிய தருப்பைக் கயிறென்று பாவித்தல் வேண்டு மென்பது உட்கிடை.

இதனால், இக்கயிறு இந்திராணியைப் போன்றுள்ள செல்வத்திற்குக் காரணமா மென்பதுங் குறிக்கப்பட்டமை காண்க. 13.

---

பதினான்காம் விநியோகம்.

தருப்பைக் கயிற்றின் நுனிகளை முடிதல்.

மந்திரம் :

*** पूषाते ग्रन्थिं ग्रथ्नातु ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **रज्जो !** | தருப்பைக் கயிற்றின் நுனியே ! |
| **ते ग्रन्थिं** | உனது முடிச்சை |
| **पूषा** | பூஷன் என்னுஞ் சூரியன், |
| **ग्रथ्नातु** | முடிவானாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பூஷா தேவதை முடிவதாகப் பாவித்துக்கொண்டு, அத் தருப்பைக் கயிற்றின் நுனிகளைச் சேர்த்து முடிச்சுப் போடல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—தருப்பையே ! உன்னை, பூஷா தேவதை முடிச்சுப்போடுக என்பதுமாம். 14

---

பதினைந்தாம் விநியோகம்.

முடிச்சைச் செருகி வைத்தல்.

மந்திரம் :

**सते माऽऽस्थात् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे दर्भ !** | தருப்பையே ! |
| **स ते** | அத்தகைய உனது கட்டு, |
| **मा अस्थात्** | நெடும்போது இராததாகுக. |

* பூஷா தேவதை போஷக தேவதை எனப்படும்.

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால் அம் முடிச்சை, கிழக்கிலிருந்து மேற்காய்ச் செருகல் வேண்டும் என்பதாம்.*

குறிப்பு :—*இது அவிழாதிருத்தற் பொருட்டாம். துன்புருவண்ணம் போற்றுதலாம்.*

*ஈண்டு, சூத்திரப் பிரயோகத்தைத் தழுவி,* 'आपस्त्वा मश्विनौ त्वा' *என்பது முதலிய மந்திரத்தைப் படித்துக்கொண்டு, தருப்பைக் கட்டைப் பிடித்துக் கொள்ளல் வேண்டும். பின்னர்,* 15

---

பதினாறும் விநியோகம்.

தருப்பைக் கட்டை மேலே தூக்கல்.

மந்திரம் :

**इन्द्रस्य त्वा बाहुभ्या मुद्यच्छे ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **हे दर्भ !** | *தருப்பைக் கட்டே !* |
| **त्वा** | *உன்னை,* |
| **इन्द्रस्य** | *இந்திரனுடைய,* |
| **बाहुभ्यां** | *கைகளால்,* |
| **उद्यच्छे** | *மேலே தூக்குகின்றேன். (எனது கைகளாலன்று.)* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், இந்திரன் கைகளால் எடுப்பதாகப் பாவித்துக்கொண்டு அக்கட்டை எடுத்தல் வேண்டு மென்பதாம்.*

குறிப்பு :—*இந்திரன், கையின் அதிட்டான தேவதையாவன் ஆதலின், அவன், வன்மையைக் கொடுக்கின்றமைபற்றி, இது அவனுக்குப் பொருந் துமா றுணர்க.* 16

---

பதினேழாம் விநியோகம்.

தலையின் மீது வைத்துக் கொள்ளல்.

மந்திரம் :

**बृहस्पतेर्मूर्ध्ना हरामि ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **हे दर्भ !** | *தருப்பைக் கட்டே !* |
| **ते** | *உன்னை* |
| **बृहस्पतेः** | *பிருகற்பதியின்,* |
| **मूर्ध्ना** | *தலையால்,* |
| **हरामि** | *எடுத்துக்கொள்கின்றேன்.* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், பிருகற்பதி, தனது தலையின்மீது சுமப்பதாகப் பாவித்துக்கொண்டு, தருப்பைக் கட்டைத் தலையின்மீது வைத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.* 17

*இங்கு முன்போன்று, 'प्रेयमगात्' என்பது முதலிய மந்திரங்களை ஓதுக.*

---

பதினெட்டாம் விநியோகம்.

தருப்பையை எடுத்துக்கொண்டு திரும்பி வருதல்.

மந்திரம் :

**उर्वन्तरिक्षमन्विहि ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **हे दर्भ !** | *தருப்பையே ! நீ* |
| **अन्तरिक्षं** | *வானம்,* |
| **उरु** | *பரந்ததாயிருக்கின்றது ; ஆதலின்,* |
| **अन्विहि** | *இனிது செல்வாயாக.* |

சாயணபாடியக் கருத்து.

*இதனால், தருப்பைக் கட்டை யெடுத்துக்கொண்டு வரல் வேண்டும்.*

குறிப்பு :—*வான், அசுரர்களால் நிறையப் பட்டிருத்தலின், இதனால் செல்லுதற் கிடையூறுயுள்ள அசுரர் நீக்கப்பட்டனர் என்பது கருத்து.* 18

*ஈண்டுச் சூத்திரப் பிரயோக முறையாய், '***अदित्यास्त्वोपस्थे सादयामि***' என்னும், மேல் வரும் பிரயோகத்தைக்கொண்டு, அந்தர்வேதியில், பரிதி போட வேண்டிய இடத்தில் தருப்பைக்கட்டை வைத்தல் வேண்டும். பௌர்ணமியில் விரதம் ஒழுகுதல் வேண்டும். வேட்போன், '***बर्हिरसि देवं गमं***' என்று போற்றிக் கொள்ளல் வேண்டும்.*

---

பத்தோன்பதாம் விநியோகம்.

தருப்பையை யெடுத்து, காருகபத்தியத்திற்கு வடக்கில், மேலே வைத்தல்.

மந்திரம்:

**देवं गममसि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे दर्भ !** | தருப்பையே ! நீ, |
| **देवं गमं** | தேவர்களை யடைவோனாக, |
| **असि** | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

*இதனால், தருப்பைக் கட்டை யெடுத்து, காருகபத்தியத் தீக்கு வடக்கில், மேலே ஓரிடத்தில் வைத்தல் வேண்டு மென்பதாம்.*

குறிப்பு:—*மறு தினத்தில், கிழக்கு நோக்கி அத் தருப்பையை எடுத்துக் கொண்டு வருவதன் பொருட்டு இவ்வாறு வைத்தல் என்பதை யுணர்க.* 19



## தருப்பையைக் கொண்டு வருகின்றதின் சேடம்.

*அதன் பின்னர், வேட்போன், மந்திரத்தை ஓதாமலே தருப்பை யிருக்கு மிடத்தை யடைந்து,*

**या जाता ओषधयो देवेभ्य स्त्रियुगं पुरा ।**

**तासां पर्वराध्यासं परिस्तरमा हरन् ॥** பிரா. 3-7-4-9.

*என்னும் மந்திரத்தால், பரிஸ்தரணத்தை (வேதிகை முதலியவற்றில் பரப்புதற்குரிய தருப்பைகளை) கைகளால் வளைத்துப் பிடித்துக்கொண்டு கணுவைப் பார்த்து, அதின் மீது கத்தியை வைத்து,*

**अपां मे ध्यं यज्ञियᳪं स देवᳪं शिवमस्तु मे ।**

**आच्छेत्ता वो मारिषं जीवानि शरदः शतम् ॥** பிரா. 3-7-4-9.

*என்னும் மந்திரத்தை ஓதி, அறுத்துக் கொண்டு, கையில் நீரைத் தொட்டுவிட்டு,*

**अपरिमितानां परिमिताः संनह्ये सुकृताय कम् ।**

**एनोमानि गां कतमच्चनाहं पुनरुत्थाय बहुला भवन्तु ॥** பிரா. 3-7-4-10.

*என்னும் மந்திரத்தை ஓதிக்கொண்டு, அவற்றை ஒன்றாய்ச் சேர்த்துக் கட்டிக்கொள்ளல் வேண்டும்.*

கொண்டு வருதல்)

பின்னர், ஆசனங்கட்கும், வேதிகையிற் பரப்புவதற்குமே உரியதான, பரிபோசனீ, உலபராஜி என்னும் இரண்டு தருப்பைக் கத்தைகளையும் அறுத்துக் கொள்ளல் வேண்டும். உடனே நீரால் கையை நனைத்துக்கொண்டு, எல்லாத் தருப்பைகளையும் ஒருங்கே சேர்த்து வைத்துக்கொள்ளல் வேண்டும்.

பின்னர், மந்திரம் ஓதாமல், மூன்று, அல்லது, ஐந்து தருப்பைகளை யெடுத்துக் கயிறாகத் திரித்துக் கொள்ளல் வேண்டும்.

முன் போன்றே, 'अदित्यै रस्नाऽसि' என்று, வடக்கில் நுனியாக அக் கயிற்றை விரித்து விடல் வேண்டும்.

இரண்டு ஒட்டைச்சாண் அளவுகொண்ட 'சாமிதேனிகள்' என்னும் பதி னைந்து சமித்துக்களையும், இரண்டு ஆகார சமித்துக்களையும், அநுயாஜ சமித்து ஒன்றையும், அதாவது இப் பதினெட்டையும், மூன்று ஒட்டைச்சாண் அளவு கொண்ட, 'பரிதிகள்' என்னும் மூன்று விறகுகளையும் (ஆக இருபத்தொன் றையும்) கருங்காலி மரத்திலேனும், புரச மரத்திலேனும், மந்திர மோதாமலே வெட்டிக் கொள்ளல் வேண்டும்.

உடனே, நீரால் கையை நனைத்துக்கொண்டு,

**यत्कृष्णो रूपं कृत्वा ।** பிரா. 3–7–4–7.

என்பது முதலிய மந்திரங்களை ஓதிக்கொண்டு, தருப்பைக் கயிற்றின்மீது தருப்பைகளையும், சமித்துக்களையும் ஒன்றாய்ச் சேர்த்து வைத்து, 'कृष्णोस्यारवरेष्ठः' என்பது முதலிய மந்திரத்தாற் கட்டி, கிழக்கிலிருந்து மேற்காகவேனும், மேற் கிலிருந்து கிழக்காகவேனும் முடிச்சைச் செருகி' சமித்துக் கட்டை எடுத்துக் கொண்டு வந்து மேலே ஒரு இடத்தில் வைத்து விடல் வேண்டும்.

சமித்துக்களை வெட்டும்போது, விழுந்த தூள்களையுங் கொண்டுவந்து, முன்னர் தருப்பை வைத்த விடத்திலேயே வைத்தல் வேண்டும்.

அதன் பின்னர், வேதஞ் செய்தல்.

**त्वया वेदिं विविदुः ।** பிரா. 3-7-4-12.

என்பது முதலிய மந்திரத்தால், தருப்பைகளை யெடுத்துச் சேர்த்து, கன் றின் முழங்கால் போன்று முப்முறை முறுக்கி தருப்பையாற் கட்டி, கட்டிற்கு வெளியிலுள்ள தருப்பை நுனிகளை யறுத்து விடல் வேண்டும்; அதைத் துடைப்பதன் பொருட்டு வைத்துக்கொள்ளல் வேண்டும். இத் தருப்பை முடிச்சே 'வேதம்' எனப்படுகின்றது.

பின்னர், கையை நீரால் நனைத்துக்கொண்டு, அறுத்த தருப்பை நுனி களைச் சேர்த்து, ஒரு கட்டாகக் கட்டி வைத்துக் கொள்ளல் வேண்டும்.

பின்னர், 'देवस्य त्वा' என்பது முதலிய மந்திரத்தால், வேதிக்குரிய பூமியை, இரு முறை அசுரரிடத்திலிருந்து பெற்றுக்கொண்டு, மேல் வருமாறு வேதிகை போடல் வேண்டும்.

அதன் பின்னர், பலாசமரக் கொம்பை, வேதிகையின் மீது நட்டி, அதி லுள்ள சில இலைகளை உதிர்த்து விட்டு, அதன் அடியிலுள்ள சிறிய கிளைகளை எடுத்துவிட்டு,

उपवेषोऽसि यज्ञाय त्वाम् । பிரா. 3-7-4-13.

என்பது முதலிய மந்திரத்தால், தணலைத் தள்ளிவிடுவதற்கு ஒரு தடியாக அதைச் செய்து வைத்துக் கொள்ளல் வேண்டும். இதுவே 'உபவேஷம்' எனப்படும்.

ஈண்டுச் சோமயாகஞ் செய்யாதவன், வேள்விக்குரிய ஒரு மரத்தால் இதைச் செய்து கொள்ளல் வேண்டு மென்பதை யுணர்க.

பின்னர்,

तृतीयस्यै दिवः । பிரா. 3-7-4-1.

என்பது முதலிய மந்திரத்தை ஓதிக்கொண்டு, அப் புரச மரத்தின் தடி யின் மீதுள்ள மேற் புரணியை (பட்டையை) எடுத்து வைத்துக் கொள்ளல் வேண்டும். இது பின்னர், பால் நன்கு உறையுமாறு, அதில் போடுவதன் பொருட்டென்றுணர்க. புரசம் பட்டையைப் பாலில் போட்டு உறைக் குத்தல் பண்டைக் காலத்திய வழக்கெனத் தோன்றுகின்றது.

பின்னர், மூன்று தருப்பைகளை (இரண்டென்பர் சிலர்) எடுத்து, பவித்திர மாக செய்து, 'वसूनां पवित्रमसि' என்பது முதலிய மந்திரத்தால் சிறிய புரசங் கொம்புகளில், அடியிலிருந்து தருப்பையின் அடிகளைச் சுற்றிக்கொண்டு நுனியை விட்டுவிடல் வேண்டும், முடிதல் கூடாது. இது, பாலை வடிக்கும் 'சாகா பவித் திர' மெனப்படும்.

ஈண்டு, வேள்வித்தலைவன்,

त्रिवृत्पलाशे दर्भः । பிரா. 3-7-4-11.

என்பது முதலிய மந்திரத்தால், தருப்பை சுற்றியுள்ள புரசங் கொம்பைப் போற்றல் வேண்டும்.

பின்னர், வேள்வித்தலைவன், ஒன்று சேர்ந்து (வேட்போன் பத்தினி முதலானவர்களுடன் கூடி) வேதிகைப் பூமியை, கோமயத்தால் மெழுகல் வேண்டும்.

அதன் பின்னர், வேள்வித்தலைவனும், பத்தினியும் நன்கு அலங்கரித்துக் கொண்டு, புதிய பாற்பானையின் மேல், கோமயத்துடன் மண்ணையுஞ் சேர்த் துப் பூசி வைத்தல் வேண்டும்.

கொண்டு வருதல்)

கூறிப் போந்தவைகள், அந்வாதான நாளின் முற்பகலிற் செய்ய வேண்டிய கருமங்கள்.

இனி, அமாவாசைத் தினத்தின் பிற்பகலிற் செய்யவேண்டிய காரியங்கள் :

பின்னர், ஆசுவலாயன சூத்திர விநியோகப்படி, பிண்டப் பிதிருயக்ஜஞ் செய்தல் வேண்டும். இது ஆபத்தம்பருக்கும் உடன்பாடா மென்பதை யுணர்க.

பின்னர், உழுந்து, ஊன், எள் முதலிய உணவுப் பொருள்களை நீக்கி, அன்ன முண்ணல் வேண்டும்.

அருந்துங்கால், வேள்வித்தலைவன் 'பிராணாய ஸ்வாஹா' என்று, பிராண அக்கினிகட்கு ஆகுதி செய்யுங்கால், 'पयस्वतिरोषधय:' என்பது முதலிய மந்திரத்தால் பிதிருயக்ஞ பிண்டத்தில், முதலாவது ஒரு பிடி யன்னத்தை யுண்ணல் வேண்டும். பத்தினியும் அவ்வாறே உண்ணல் வேண்டும்.

பின்னர், பருவத்தில், பாலைக் கொண்டேனும், கஞ்சியை (யவாக்கை)க் கொண்டேனும் தானகவே அக்கினி ஹோத்திரஞ் செய்தல் வேண்டும். மீந்த கஞ்சியைப் பாதுகாப்புடன் வைத்துக் கொள்ளல் வேண்டும். இது, பால் உறைக் குத்துவதற்குப் பாலுடன் சேர்க்கப்படுகின்றதென்பதை யுணர்க.

ஈண்டுக் கஞ்சியைக் கொண்டேனும், பாலைக் கொண்டேனும் என்னும், விகல்பச்சொல், சோமயாகஞ் செய்த வேள்வித்தலைவன் கஞ்சியைக் கொண்டே ஹோமஞ் செய்தல் வேண்டுமென்னும், தேற்றப் பொருளைத் தந்து நிற்கின்றதென்ப துணரற்பாலது.

மாலையில் தீயோம்பிய பின்னர், பால் கறத்தல் வேண்டும். அவ்விரவில் மாத்திரம் குழந்தைகட்குஞ் சிறிதும் பால் கொடுத்தல் கூடாது. இவ்வாறு அந்வாதான தினத்திற் செய்ய வேண்டிய கருமங்கள் முடிந்தன.

இரண்டாம் அநுவாகம் முடிந்தது.

—∞:∞—

## மூன்றும் அநுவாகத் தொடக்கம்.

வேட்போன் :

ஆகவனீயத் தீயைச் சுற்றும், தருப்பையைப் பரப்பிவிட்டு, சாங்நாய்ய பாத்திரத்தை (பாற்பானையை)க் கழுவிக்கொண்டு, ஆகவனீயத் தீக்கு வடக்கில் தருப்பையை விரித்து, அதன் மீது, பாற்பானே, தருப்பை சுற்றியுள்ள புரசங் கொம்பு, (சாகா பவித்திரம்) பசுக்காலேக் கட்டுகின்ற கயிறு, கன்றைக் கட்டுங் கயிறு, பால் கறக்கும் மரக்கலசம், மூடுகின்ற இருப்பகல், அல்லது மரவகல், கை பிடியுள்ள மர அகப்பை விசேடம் (அக்கினி ஹோத்திர ஹவணீ) உபவேஷம் (தணலேத் தள்ளிவிடும் தடி) புரசம்பட்டை, புற்கள் என்பவற்றை அதாவது முன்னுள்ள பத்துப் பொருள்களேயும் இரண்டிரண்டாகத் தனித் தனியே கவிழ்த்து வைத்தல் வேண்டும்.

பின்னர், ஒட்டைச்சாண் அளவுகொண்ட இரண்டு தருப்பைகளே யெடுத்து ('पवित्रेस्थो वैष्णवी' என்பது முதலிய மந்திரத்தால், முடிந்து கொண்டென்பர் சிலர்) இரண்டின்நடுவில் ஒரு துரும்பையேனும் குச்சையேனும் வைத்து தனித் தனியே நுனிகளேக் கத்தியால் அறுத்துவிட்டு (நகத்தால் கிள்ளுதல் கூடாது.) அதை, 'विष्णोर्मनसा पूतेस्थः' என்னும் மந்திரத்தால் நீரைக்கொண்டு கழுவி, அக்கினி ஹோத்திர ஹவணீ, என்னும் மரப் பாத்திரத்திற்குட் போட்டு, அதில் நிறையத் தண்ணீரை யெடுத்துக் கொண்டு வந்து, அப் பவித்திரத்தை வடக்கு நுனியாக, கட்டை விரலாலும் பவித்திர விரலாலும் பிடித்துக்கொண்டு,

'देवो वः सवितोत्पुनातु' (அந்தரியாமி உன்னேப் புநிதமாக்குக) என்று, அத் தருப்பைகளால் அந் நீரை யலேத்தல் வேண்டும்.

பின்னர், 'अच्छिद्रेण पवित्रेण' (கெடாத பவித்திரத்தால்) என்று இரண்டாம் முறையும் அலேத்து,

'वसोः सूर्यस्य रश्मिभिः' (சூரியனுடைய புநிதமான கிரணங்களால்) என்று மூன்றும் முறையும் அலேத்து,

'आपो देवी रग्रेपुवः' (நீராகிய தேவியே! நீ முன்னரேயே புநிதமா யிருக்கின்றனே) என்பது முதலிய மந்திரத்தால் நீரைப் போற்றிக்கொண்டு, முன்னர்க் கவிழ்த்து வைத்துள்ள பாத்திரங்களே நிமிர்த்து வைத்தல் வேண்டும் என்பதாம். சூத்திர விநியோகப்படி முன் எஞ்சி நின்றவை முடிந்தன.

## மூன்றும் அநுவாகம்.

---

விடயச் சுருக்கம்.

शुन्धसां नाय्यपात्राणि प्रोक्ष्यमातेति कुम्भिकाम् ।
संस्थाप्याग्नौ वसूशाखा पवित्रं तत्र निक्षिपेत् ॥ १ ॥
हुतबिन्दून्सेतिगाश्च दुग्धास्तिस्रोऽभिमन्त्रयेत् ।
संपृ संक्षालनं क्षिप्त्वा सोमे दध्नाऽऽतनक्तिहि ॥ २ ॥
विष्णोऽनधो दधात्यास्मिं स्तृतीये दशवर्णिताः ।

வேள்வித் தீக்கருகில் தருப்பைகளை பரப்பி அதன்மேல் பாற்பானை முதலான பாத்திரங்களைக் கழுவி வைத்துவிட்டு, தணலைத் தள்ளிவிடும் தடியையும், பால் வடிக்கும் தருப்பை சுற்றிய புரசங் கொம்பையுஞ் செய்துகொண்டு, நீரைப் புநிதமாக்கிப் போற்றிக்கொண்டு, பாத்திரங்களின் மேல் நீர் தெளித்துப் புநிதமாக்கி, பாற்பானையின் மேலே மண்பூசி வேள்வித் தீயின் தணல்மேல் வைத்து, பால் கறப்போனைக் கொண்டு மூன்று பசுக்களைப் பால் கறந்து, தனித்தனியே வேட்போன் கொண்டு போய் வடிக்கும் புரசங்கொம்பு வழியாய் ஒழுமாறு பாற்பானையில் வார்த்து, வேள்வித்தலைவன் பசுக்களை வாழ்த்தி, சிதறிய பாற்றுளிகளை முப்முறை யருப்பித்து, பாற் கலசத்தைக் கழுவி, பாலுடன் சேர்த்து காய்ச்சி ஆறவைத்து புரசம்பட்டை, கஞ்சி முதலியவற்றுடன் தயிரையும் உறைக்குத்தி மூடி உறியின் மேல் வைத்தல் என்பதாம்.

---

### முதற் காண்டம் - முதற் பிரபாடகம்.

### மூன்றும் அநுவாகம்.

இது, ஒரு பஞ்சாதிக்கு மேல், எட்டுப் பதங்களைக் கொண்டது.

---

தோஹனத்திற் (பால் கறத்தற்) குரிய மந்திரங்கள்.

**शुन्धध्वं दैव्याय कर्मणे देवयज्यायै मातरिश्वनो घर्मोऽसि
द्यौरसि पृथिव्यसि विश्वधाया असि परमेण धाम्ना दृꣳहस्व माह्वा-
र्वसूनां पवित्रमसि शतधारं वसूनां पवित्रमसि सहस्रधारꣳ हुतः
स्तोको हुतो द्रप्सोऽग्नये बृहते नाकाय स्वाहा द्यावापृथिवीभ्याꣳ**

सा विश्वायुः सा विश्वव्यचाः सा विश्वकर्मा संपृच्यध्वमृतावरी रूर्मिणी मधुमत्तमा मन्द्रा धनस्य सातये सोमेन त्वाऽऽतनच्मीन्द्राय दधि विष्णो हव्यं रक्षस्व ॥

முதல் விநியோகம்.

வேட்போன், பாற் பாத்திரங்களின் மேல் நீரைத் தெளித்தல். (புரோட்சித்தல்.)

மந்திரம் :

शुन्धध्वं दैव्याय कर्मणे देवयज्यायै ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे पात्राणि !** | *பால் வைத்தற்குரிய பாத்திரங்களே! நீங்கள்* |
| **देवयज्यायै** | *தேவாராதனை யென்னும்* |
| **दैव्याय कर्मणे** | *திவ்யமாகிய கருமத்தின் பொருட்டே* |
| **शुन्धध्वम्** | *புநிதமாவீர்களாக.* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், பாத்திரங்களின்மீது புநிதமாக்கிய நீரைத் தெளித்துப் புநிதஞ் செய்தல் வேண்டுமென்பதாம்.*

குறிப்பு :—*பாத்திரங்கட்கு அநுட்டான தேவதை பிரசாபதியாவர் என்க. ஈண்டு, கருமத்தின் பொருட்டே என்றதால், (நோன்பு, ஈகை முதலியவற்றின் பொருட்டன்று) என்பது பெறப்பட்டது.*

*புநிதமென்பது, வேட்போன், பவித்திர மென்னுந் தருப்பையைக் கையில் வைத்துக்கொண்டு, மந்திரமோதி ஒரு முறையும், மந்திர மோதாமல் இரு முறையும், அப் பாத்திரங்களின்மீது நீர் தெளித்துப் புநிதமாக்கலென்றுணர்க.*

*பின்னர், அப் பவித்திரம் என்னும் தருப்பைகளைப் பாதுகாப்புடன் வைத்துக் கொள்ளல் வேண்டும்.*

*ஈண்டு, வேள்வித்தலைவன் செபலாவது,* ‘आपो देवीः शुद्धास्थेमा पात्राणि शुन्धत’ *என்பது முதலிய மந்திரத்தால் அப் பாத்திரங்களைப் போற்றுதலும்,* ‘एता आचरन्ति मधुमद्दुहानाः’ *என்பது முதலிய மந்திரத்தை ஓதிக்கொண்டு, பால் கறப்போன் ஓட்டிக்கொண்டு வரும் பசுக்களைப் பார்த்தலுமா மென்றுணர்க.* 1

---

### இரண்டாம் விநியோகத் தொடக்கம்.

வேட்போன், 'निष्टप्तं रक्षः' (அசுரர் ஒழிந்தனர்) என்பது முதலிய மந்திரத்தால், ஆகவனீயத் தீயின்கண், பால் தயிர்ப் பாத்திரங்களை (தயிர்க்குடம், சாகா பவித்திரம், தணலைத் தள்ளும் தடி, பால் கறக்கும் மரப் பாத்திரம் என்பவைகளை) சூடுகாட்டிக் கொள்ளல் வேண்டும்.

பின்னர், 'धृष्टिरसि ब्रह्म यच्छ' என்னும் மந்திரத்தால், உபவேஷத்தை (தணலைத் தள்ளிவிடும் புரசந்தடியை) யெடுத்துக்கொண்டு, 'निरूढं जन्यं भयं' என்பது முதலிய மந்திரத்தால், ஆகவனீயத் தீக்கு வடக்கில் அதற்கருகிலேயே, அத்தடியால் தணலைச் சிறிது வெளியிற்றள்ளி வைத்துக் கொள்ளல் வேண்டும்.

### இரண்டாம் விநியோகம்.

**பால் காய்ச்சும் பானையைத் தணலின் மீது வைத்தல்.**

மந்திரம் :

**मातरिश्वनो घर्मोऽसि द्यौरसि पृथिव्यसि विश्वधाया असि**
**परमेण धाम्ना दृंहस्व माह्वाः ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **हे कुम्भ !** | பால் காய்ச்சுதற்குரிய பானையே ! நீ, |
| **मातरिश्वनः** | காற்றிற்கு ஆதாரமாகிய |
| **घर्मः** | வானகை |
| **असि** | இருக்கின்றாய். |
| **द्यौः** | சுவர்க்கமாகவும் |
| **असि** | இருக்கின்றாய். |
| **पृथिवी** | தரையாகவும் |
| **असि** | இருக்கின்றாய். |
| **विश्वधायाः** | உலகத்தைத் தாங்குகின்ற மழையாகவும் |
| **असि** | இருக்கின்றாய். |
| **परमेण धाम्ना** | பேராற்றலுடன் கூடியதாய் |
| **दृंहस्व** | உறுதிப்படுவாயாக. (மற்றும்) |
| **माह्वाः** | உடையாதிருப்பாயாக. |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பால் காய்ச்சுதற்குரிய பானையை, முன்னர்த் தள்ளி வைத்த தணலின் மீது வைத்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :— பானையினுள், காற்று உலாவுதற்கு இடமிருத்தலின், வானென்றும், வானின் மழையாற் செய்யப்பட்டிருத்தலின் சுவர்க்கமென்றும், மண்ணாலாக்கப்பட்டமையின் தரையென்றும் இப்பானை உபசரிக்கப்பட்டதென்பதை யுணர்க. இவ்வண்ணத்ததா யிருத்தலின் உடையாது உறுதியுட னிருப்பதாகுக என்பது உட்கிடை.

பட்டபாஸ்கரர் முற்பகுதி மந்திரத்தை ஆகவனீய மென்று கொண்டு, பின்னுள்ள இருபகுதி மந்திரங்களால், பாற் பானையைத் தணல்மீது வைத்தலாகிய விநியோகத்தைக் கூறியுள்ளார்.

'घर्मः' என்பது முன் பின் தொடர்புபற்றி வானைக் குறித்து நின்றது.

ஈண்டு, பானையைத் தணலின் மீது வைத்த பின்னர், 'भृगूणा मङ्गिरसां तपसा तप्यस्व' (பிருகுவின் புத்திரர்களான ஆங்கிரசர்களின் தவத்தால் காய்ச்சப்படுவாயாக) என்று, அப்பானையைச் சுற்றி நாற்புறத்தும், தணலை எடுத்து வைத்தல் வேண்டும். 2

(போ-சூ.) இம் மந்திரத்தை, 'मातरिश्वनो घर्मोसि' என்னும் வரை, ஒரு மந்திரமாகப் பிரித்துக்கொண்டு, அதனால், காருஹபத்தியத்திற்கு வடக்கில் உபவேஷத்தால் தணலைத் தள்ளிக்கொண்டு, 'द्यौरसि.........माहाः' என்னும் வரை மற்றொரு மந்திரமாகப் பிரித்துக்கொண்டு, இம் மந்திரத்தால், தள்ளிய தணலின் மீது, பால் காய்ச்சும் கும்பியை வைக்கல் வேண்டுமென்பது.

---

### மூன்றும் விநியோகம்.

அதன் பின்னர், வேட்போன், சாகாபவித்திரத்தை (தருப்பைகளைச் சுற்றியுள்ள புரசங் கோம்பை) பாற் பானையினுடைய வாயின்கண் வைத்தல்.

மந்திரம் :

**वसूनां पवित्रमसि शतधारं वसूनां पवित्रमसि सहस्रधारम् ।**

என்பது.

#### பதவுரை.

| | |
|---|---|
| **भोः शाखा पवित्र !** | சாகா பவித்திரமே ! நீ |
| **वसूनां** | பால்களை |
| **शतधारं** | நூற்றுக்கணக்கான விதங்களாய் |
| **पवित्रं** | புனிதஞ் செய்கின்றவனாக |
| **असि** | இருக்கின்றாய். மற்றும், |
| **वसूनां** | தனங்களென்னும் பால்களை |
| **सहस्रधारं** | ஆயிரக்கான வகைகளாய்ப் |
| **पवित्रं** | புனிதஞ் செய்கின்றவனாகவும் |
| **असि** | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தருப்பைகளைச் சுற்றியுள்ள புரசங் கொம்பை, கிழக்கு நுனியாக, பாற் பானையினுடைய வாயின்கண் வைத்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—இது முதற்கொண்டு வேள்வித்தலைவன், வீண் வார்த்தை பேசுதல் கூடாது. பவித்திரத்தைக் கையில் வைத்துக் கொண்டிருத்தல் வேண்டும் என்பது உணரற்பாலது. 3

இவ்வாறு வடித்தல் செய்தல், பாலில் தூசு விழாதிருத்தற் பொருட்டாம்.



நான்காம் விநியோகத் தொடக்கம்.

ஈண்டு, பால் கறப்போன், '**अदित्यै रास्नासि**' என்று, பசுவின் கால்களைக் கட்டும் கயிற்றையும், மந்திரமின்றி, பசுங்கன்றைக் கட்டும் கயிற்றையும் எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

மற்றும், வேள்வித்தலைவன், '**त्रयस्त्रिंशोसि**' என்பது முதலிய மந்திரத்தால், எடுத்த கயிறுகளைப் போற்றல் வேண்டும்.

பால் கறப்போன், '**पूषाऽसि**' என்று, கன்றைக் கட்டல் வேண்டும்.

வேட்போன், '**उपसृष्टां मे प्रब्रूतात्**' 'கன்றை விடுவதை எனக்குச் சொல்வாயாக' என்று, பால் கறப்போனை ஏவுதல் வேண்டும்.

பால் கறப்போன், '**उपसृजामि**' 'கன்றை விடுகின்றேன்' என்று, வேட்போனுக்கு உணர்த்திவிட்டு, '**अयक्ष्मा वः प्रजया**' என்பது முதலிய மந்திரத்தால் கன்றை அவிழ்த்து விடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், '**अयक्ष्मा वः प्रजया**' என்பது முதலிய மந்திரத்தால் அவிழ்த்து விட்ட கன்றைப் போற்றல் வேண்டும்.

வேட்போன், '**गां चोपसृष्टां**' பசுவும் விடப்பட்டிருக்கின்றது. பாலைக் குறைக்கமாட்டான்; உள்ளே பிறர் போக வேண்டாம் என்று, வேள்வித்தலைவன், பால் கறப்போனை அனுப்பல் வேண்டும்.

பால் கறப்போன், '**उपसीदामि**' 'யான், பால் கறத்தற் பொருட்டு உட்காருகின்றேன்' என்று வேள்வித்தலைவனை விளித்து ஆணை பெற்றுக்கொண்டு, '**अयक्ष्मा वः प्रजया**' என்பது முதலிய மந்திரத்தால், உட்கார்ந்து, மரப் பாத்திரத்திற் பாலைக் கறத்தல் வேண்டும். ஈண்டு, சூத்திரனும் பால் கறத்தலாமென்று ஆணை தரலின் அவனுக்கும் மந்திரங்கள் உண்டு என்பது உணரற்பாலது.

வேள்விக்தலைவன் 'द्यौश्चेमं यज्ञं' என்பது முதலிய மந்திரத்தால், பால் கறப்போனை வாழ்த்தல் வேண்டும்.

அதன் பின்னர், 'उत्सं दुहन्ति' என்பது முதலிய மந்திரத்தால், பால் விழும் தாரைகளின் ஒலியைப் போற்றல் வேண்டும்.

பால் கறந்தோன், 'கறந்த பாலைக் கொண்டுபோவீராக' என்று வேட்போனிடஞ் சொல்லல் வேண்டும்.

வேட்போன், 'कामधुक्षः' எப் பசுவைக் கறந்தனை? என்று வினவுதல் வேண்டும்.

பால் கறக்கின்றவன், 'गङ्गां' (கங்கை யென்னும் பெயர்பூண்ட பசுவை) என்று பெயர் கூறி, 'यस्यां देवानां' என்பது முதலிய மந்திரத்தால், அதற்கு விடை யளித்தல் வேண்டும். அதாவது, எதன் பால், மக்கட்கும், தேவர்கட்கும் இனியதோ, அதன் பாலைக் கறந்தேன் என்பதாம்.

### நான்காம் விநியோகம்.

*இது மூன்று விநியோகங்களைக் கொண்டது.*

அதன் பின்னர், வேட்போன், அப் பசுக்களை, பெயர் சொல்லி வாழ்த்தல்.

மந்திரம் :

**सा विश्वायुः । सा विश्व व्यचाः । सा विश्वकर्मा ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **सा** | அப் பசுவானது |
| **विश्वायुः** | உலகிற்குயிராம். |
| **सा** | அப் பசுவானது, |
| **विश्व व्यचाः** | உலக நிறைந்ததாம். |
| **सा** | அப் பசுவானது, |
| **विश्वकर्मा** | உலக கருமங்களின் பயனும். |

### சாயணபாடியக் கருத்து

இதனால், முதற் பசுவைப் பூமியென்றும், இரண்டாவது பசுவை வானம் என்றும், மூன்றாவது பசுவைச் சுவர்க்க மென்றும், வேள்விக்தலைவன் அவைகள் மீது கையை வைத்து வாழ்த்தல் வேண்டும் என்பதாம். 4, 5, 6

குறிப்பு:—உலக வுயிர் என்பதால் அவற்றிற்கு ஈண்டு ஆதாரமாகிய பூமியும், உலக நிறைந்தது என்பதால் வானும், உலகக் கருமம் என்பதால் பயனை அருந்துதற்குரிய இடமாகிய சுவர்க்கமுங் கொள்ளப்பட்டன.

மந்திரங்கள்)

பாட முறையில் இவை பின்னர் இருக்கின்ற மந்திரங்கள்.

ஈண்டு, மற்றைய இரண்டு பசுக்களையுங் கறத்தல், முற்கூறிய முறையே யாகும். ஆனாலும்,

பால் கறக்கின்றவன், இரண்டாம் பசுவை ('யமுனை') என்றும், மூன்றாம் பசுவை 'சரஸ்வதி' என்றும் சொல்லிய பின்னர்,

வேட்போன், இரண்டாம் பசுவை, அது உலகம் நிறைந்தது என்றும், மூன்றாம் பசுவை அது உலகத்திற்குப் பயன்றரும் சுவர்க்கம் என்றும் வாழ்த்தல் வேண்டும் என்பதுணரற்பாலது.

இவ்வாறு கறந்த பாலை, தனித்தனியே, 'देवस्त्वा सविता' என்பது முதலிய மந்திரத்தால், வடித்தற்கு வைத்துள்ள, தருப்பை சுற்றிய புரசங் கொம்பின் வழியாய், விழும்படி, பாற் பானையில் வார்த்தல் வேண்டும்.

(போ-சூ.) இம் மந்திரத்தால், பாலைக் கறக்கும்போது போற்றல் வேண்டுமென்பது.

---

### ஏழாம் விநியோகம்.

வேட்போன் கீழ்விழுந்த பாலின் துளிகளை யருப்பித்தல்.

மந்திரம் :

**हुतः स्तोको हुतो द्रप्सोऽग्नये बृहते नाकाय स्वाहा
द्यावा पृथिवीभ्याम् ।**

என்பது.

#### பதவுரை.

| | |
|---|---|
| **स्तोकः** | கீழே சிதறி விழுந்த சிறிய பாற்றுளிகள் |
| **बृहते** | பெரிதாகிய |
| **नाकाय अग्नये** | 'நாகம்' என்னுந் தீயின் பொருட்டு |
| **हुतः** | அருப்பணமாயின. |
| **द्रप्सः** | பெரிய பாற்றுளிகள் |
| **द्यावा पृथिवीभ्यां** | வானுலக மண்ணுலகங்களின் பொருட்டு |
| **स्वाहा** | அருப்பணமாகுக. |

#### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பாற்பானையில் பாலை விடும்போது சிதறிக் கீழே விழுந்த துளிகளை, இதர தேவதைகட்கு அருப்பணஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—இது, ஏனைய தேவதைகளால், பால் கேடுறுதிருத்தற் பொருட்டாம்.

ஈண்டு, 'ஸ்வாஹா' என்னுஞ் சொல்லால், அருப்பண மாகாவிடினும் 'வஷட்காரம்' என்பதால் ஆகுதியாயினமை காண்க.

இம் மந்திரம், பாடம் ஓதுமுறையில் முன்னுள்ளது.

---

### எட்டாம் விநியோகத் தொடக்கம்.

வேள்வித்தலைவன், 'अग्नये बृहते नाकायेदं न मम' என்பது முதலிய மந்திரத்தால், முன்னர், மூன்று பசுக்களையும், பால் கறத்தற்கு ஏவியது போன்று மற்றும், மூன்று பசுக்களைக் கறப்பதற்கும் ஆணை கொடுத்துவிட்டு, வாய் பேசாது இருத்தல் வேண்டும்.

அதன் பின்னர், பால் கறப்போன், மந்திரமின்றி மூன்று பசுக்களையுங் கறந்து அப்பாலையுஞ் சேர்த்த பிறகு, பாற் கலசத்தில், சிறிது நீர் விட்டுக் கழுவிக்கொள்ளல் வேண்டும்.

### எட்டாம் விநியோகம்.

**பாற் கலசத்தைக் கழுவிய நீரைப் பாலுடன் சேர்த்தல்.**

மந்திரம் :

**संपृच्यध्वमृतावरी * रूर्मिणीर्मधुमत्तमा मन्द्रा धनस्य सातये ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **हे आपः !** | பாற்கலசத்தைக் கழுவிய தண்ணீரே ! நீ, |
| **ऋतावरीः** | உண்மையாகிய பயனுடையதும் |
| **मधुमत्तमा** | மிகுந்த இன்சுவை யுடையதும், |
| **ऊर्मिणीः** | அலை யுடையதும் |
| **मन्द्रा** | களிப்பைக் கொடுப்பதுமாக இருக்கின்றாய். அத்தகைய நீ, |
| **धनस्य** | தயிராகிய தனத்தை |
| **सातये** | யாம் அடைதற் பொருட்டு, |
| **संपृच्यध्वम्** | பாலுடன் கலந்து கொள்வாயாக. |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன், பாற் கலசத்தைக் கழுவிய நீரைப் பாலுடன் வார்த்து விடல் வேண்டும் என்பதாம்.



---

* ऊर्मिणी என்பது பாடபேதம்.

குறிப்பு :—நீர்கள் என்னும் பன்மை, தென்மொழியை நோக்கி, தண்ணீர் என ஒருமையாயிற்று. தயிருறைதல் பயனும். தண்ணீர், பாலுக்கு ஒப்பானதால், சிறிது தண்ணீர் கலந்து காய்ச்சில், தயிர் இனிது உறையும் என்பது கருத்து. இக் காலத்திய உலக வழக்கிலும் இது காணப்படுகின்றது.



ஒன்பதாம் விநியோகத் தோடக்கம்.

இவ்வாறு, மந்திரத்துடன் கறந்த மூன்று பசுக்களின் பாலையும், மந்திரமிலாமற் கறந்த மூன்று பசுக்களின் பாலையும் ஒன்று சேர்த்து, பானையில் வார்த்து, பொங்கி வழியாதிருக்குமாறு நன்கு காய்ச்சல் வேண்டும்.

பௌர்ணமி வேள்வியில் பால் காய்ச்சுதல் இல்லை. அதன் பின்னர், பால் காய்ந்தவுடன், 'दृंह गा दृंह' என்பது முதலிய மந்திரத்தால், கிழக்கிலேனும், வடக்கிலேனும், அல்லது, ஈசானத்திலேனும், கீழே கவிழ்ந்து போகாவண்ணம் இறக்கி வைத்தல் வேண்டும். அப் பால் சிறிது சூடு தணியுமாறு செய்து கொள்க.

ஒன்பதாம் விநியோகம்.

தயிர் உறைய வைத்தல்.

மந்திரம் :

**सोमेन त्वाऽऽतनच्मीन्द्राय दधि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे क्षीर !** | பாலே ! |
| **त्वा** | உன்னை |
| **सोमेन** | சோமமென்னுந் தயிரால் |
| **आतनच्मि** | உறையச் செய்கின்றேன். |
| **दधि** | அத் தயிர், |
| **इन्द्राय** | இந்திரன் பொருட்டாம். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், காய்ச்சிய பாலில், உறையிடல் வேண்டு மென்பதாம்.



குறிப்பு :—இத்தயிர், இந்திரனுக்கு அவிகொடுத்தற் குரியதாம். தயிரைச் சோமமென்றது பாவனை.



பத்தாம் விநியோகத் தொடக்கம்.

ஈண்டு, ‘**यज्ञस्य संततिरसि**’ என்பது முதலிய மந்திரத்தால், முன்னர், அக்கினி ஹோத்திரஞ் செய்து மீந்திருந்த கஞ்சியையும், அப் பாலில் வார்த்தல் வேண்டும்.

மற்றும், ‘**अयं पयः सोमं कृत्वा**’ என்பது முதலிய மந்திரத்தால், முன்னர் எடுத்து வைத்திருந்த புரச மரத்தின் புரணியையும் அப்பாலில் போடல் வேண்டும். இவை, தயிர் நன்கு உறைதற் பொருட்டே யென்று தோன்றுகின்றது.

பின்னர், ‘**आपो हविष्षु जाग्रत यथादेवेषु**’ என்பது முதலிய மந்திரத்தால், இருப்புப் பாண்டத்தையேனும் அல்லது, மரப் பாண்டத்தையேனும் கையினால் எடுத்து, ‘**अदस्तमसि विष्णवे त्वा**’ என்பது முதலிய மந்திரத்தால், அதில் தண்ணீர் நிறைத்து, அதனால், பாற் பானையை மூடி வைத்தல் வேண்டும்.

ஈண்டு, வேள்வித்தலைவன், ‘**अमृण्मयं देवपात्रं**’ என்பது முதலிய மந்திரத்தைச் செபித்துக் கொண்டிருத்தல் வேண்டும். மண்மூடியா யிருக்கின் புல்லையேனும், கட்டையையேனும் இடையில் வைத்து மூடல் வேண்டும்.

பத்தாம் விநியோகம்.

உறியின் மேல், பாலை எடுத்து வைத்தல்.

மந்திரம் :

**विष्णो हव्यँ रक्षस्व ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **विष्णोः** | பாதுகாப்புக் கடவுளே ! நீ, |
| **हव्यं** | ஆகுதி செய்யத்தக்க தயிரை |
| **रक्षस्व** | பாதுகாத்துக் கொள்ளுவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பாற் பானையை, உறியின் மேலே எடுத்து வைத்தல் வேண்டும் என்பதாம். 10

குறிப்பு :— இது, அசுரர், தயிரைக் கவராதிருத்தற் பொருட்டென்ப. தயிர், இனிது, உறைதற் பொருட்டென்பதுமாம்.

விநியோக பரிசேடம்.

ஈண்டுச் சூத்திரங்களின் விநியோக முறையைத் தழுவி, ‘**इमौ पर्णं च दर्भं च**’ என்பது முதலிய மந்திரத்தால், சாகா பவித்திரத்தைப் பாதுகாப்புடன் ஒரு விடத்தில் வைத்திருத்தல் வேண்டும்.

பின்னர், முன்போல், 'वायव: स्थोपायव: स्थ' என்னும் மந்திரத்தால், புரசங் கொம்பைக் கொண்டேனும், தருப்பைக் குச்சைக் கொண்டேனும், காலையில், பால் கறத்தற் பொருட்டு, முன் போல், ஆறு கன்றுகளைப் பசுக்களினின்றும் பிரித்து, புல்லருந்தி வருமாறு செலுத்திவிட்டு, 'परिस्तृणीत परिधत्ताग्निं' என்பது முதலிய மந்திரத்தால், வேட்போனுக்கு உதவிச் செயலாளனை (ஆக்னீத்ரனை) தருப்பைகளைப் பரப்புமாறு ஏவல் வேண்டும்.

பின்னர், ஆக்னீத்ரன், மந்திர மோதாமல், முத்தீக்களைச் சுற்றிலும், வடக்கு, அல்லது, கிழக்கு நுனியாகவேனும், அல்லது, வடக்குங் கிழக்கும் நுனியாகவேனும், தருப்பைகளைப் பரப்பல் வேண்டும்.

அல்லது, வேட்போனைத் தவிர்த்து மற்றொருவன் பரப்பல் வேண்டு மென்று கூறப்படாமையின், தானே ஆன்மாவை யறிதல் வேண்டுமென்றாற் போல, தனதான்மாவைப் புநிதப்படுத்துதற் பொருட்டே ஏவுகின்ற மந்திர மாதலின், வேட்போன், தானுகவே அம்மந்திரத்தை ஓதிக்கொண்டு மேற்கூறிய வாறே மூன்றக்கினிகளைக் கோலி, தருப்பைகளைப் பரப்புதல் வேண்டும்.

அல்லது, முற்கூறிய மந்திரத்தை, மறித்தும் மறித்தும் ஓதிக்கொண்டு ஒவ்வொரு தீயைச் சுற்றிலும் முன்போன்றே தருப்பையைப் பரப்பல் வேண்டு மென்பதையு முணர்க.

இனி வேள்வித்தலைவன்: 'उभावग्नी उपस्तृणुते देवता' என்பது முதலிய மந் திரத்தைச் செபித்துவிட்டு, 'देवा देवेषु पराक्रमध्वम्' என்பது முதலிய மந்திரத்தை யுஞ் செபஞ் செய்துகொண்டு உபவாசஞ் செய்தல் வேண்டும்.

அதாவது: தேன், தண்ணீர், கடலை, பயறு முதலியவைகளை யுணவாக அருந்தல், தூங்காதிருத்தல், தூங்கல் வேண்டுமெனின்; காருகபத்தியம், அல்லது, ஆகவனீயத்திற்கருகில் தூங்கல், ஆபத்தம்ப சூத்திரப்படி, வேள்வித் தலைவன் வீண் வார்த்தை பேசில், 'மயி தக்ஷக்ரது' என்னும் மந்திரத்தைச் செபித்தல், ஆசுவலாயனப்படி, தும்மல், கொட்டாவிக் கொள்ளல், தீ நாற் றத்தை முகத்தல், கண்ணீரொழுகல், காதடைத்தல் என்பன முதலான உண் டாகில் மந்திரத்தைச் செபித்தல் என்பவைகளாம்.

ஆயினும், ஈண்டு, ஒன்று அறிதற்பாலதாம். அது, சத்யஸ்கால பட்சத்தில், அதாவது வேள்வித் தினத்தன்றே அதற்குரிய சாதனங்களைத் தேடிக்கொள் ளல் வேண்டும் என்று உடன்படில், 'देवा देवेषु' என்பது முதலிய மந்திர மொன்றையே ஓதல் வேண்டும். 'उभावग्नी' என்பது முதலிய மந்திரம் ஓதற் பாலதன்று என்பதாம்.

மற்றும், ஈண்டு, அந்வாதான தினத்தில், அதாவது அக்கினியை மூன் றாய்ப் பிரிக்குந் தினத்தில், அன்றிரவு, அக்கினிகளைச் சுற்றிலும் தருப்பை

பரப்பாதிருக்கில், வேள்விச்செய்யும் அந்நாளிலேயே கையைக் கழுவிக்கொண்ட பின்னர், மேலே கூறிய வகைகளுள் யாதானு மொருவிதமாய்த் தருப்பைகளைப் பரப்பிக் கொள்ளல் வேண்டுமென்பதும் உணரற்பாலது. இவை இரவிற் செயற்பாலனவாய கருமங்கள். இவ்வாற்றால் அந்வாதானத்தன்று செயற்பாலனவாகிய கருமங்கள் முடிந்தன.

மூன்றும் அநுவாகம் முற்றிற்று.

---

## நான்காம் அநுவாகத் தொடக்கம்.

மூன்று அனுவாகங்களால், பருவத்திற் செய்ய வேண்டியவைகள் கூறி முடிந்தன. மேல்வரும் பத்து அனுவாகங்களால், பிரதமையிற் செய்யவேண்டியவைகள் கூறற்பாலன. அவற்றுள், இம் முதல் அனுவாகம், அவி (நெல்) யெடுத்தலைக் கூறுகின்றது.

விடயச் சுருக்கம்.

कर्मणे हस्तयोः शुद्धिर्वैषा शूर्पपरिग्रहः ।
प्रत्युष्टमिति संतप्य धूः स्पृशेच्छकटे धुरम् ॥ १ ॥
त्वमीषां संस्पृशे दृꣳह शकटं त्वधिरोहति ।
उर्वन्तर्धिमपच्छाद्य मित्रेति हविरीक्षते ॥ २ ॥
देवेति निर्वपेदग्नीत्यपि पूर्वानुषञ्जनात् ।
इदं निरस्तत्च्छेषौ स्पृशेत्स्फात्यभिमन्त्रणम् ॥ ३ ॥
सुवर्विहारं वीक्ष्याथ वैश्वा पूर्वाग्निवीक्षणम् ।
दृꣳहावरुह्योरु गच्छेदादि भूमौ हि सादयेत् ॥ ४ ॥
अग्नेऽभिमन्त्रणं मन्त्रा उक्ता एकोनविंशतिः ।

கையைக் கழுவிக்கொண்டு, காருகபத்தியத் தீயிலிருந்து ஆகவனீயம் வரையில் தொடர்பாய் மூன்று வரிசைகளாகத் தருப்பையைப் போட்டுவிட்டு ; பிரமனுக்கும் வேள்வித்தலைவனுக்கும் ஆசனங்களாகவும் தருப்பையை விரித்து ; காருகபத்தியத்திற்கும், ஆகவனீயத்திற்கும் வடக்கில் தருப்பைகளின் மேல் பாத்திரங்களை வைத்துவிட்டு, பிரமனையும் அழைத்துக் கொண்டு, 'பிரணீதாப் பிரணயனம்' என்னும் சமசத்தைத் தண்ணீரால் நிரப்பி வைத்துவிட்டு, அக்கினி ஹோத்திர ஹவணியை (மர அகப்பை விசேடத்தை) யெடுத்துக்கொண்டு முறத்தை யெடுத்து, தீயிற் சூடுகாட்டி, நெல்லிருக்கும் வண்டியின் மீதேறி, திறந்து பார்த்து, அதில் காற்றுப்படுமாறு செய்து, நெல்லை யெடுத்து, அக்கினி ஹோத்திர ஹவணி வாயிலாக முறத்தில் போட்டு, எடுத்ததையும் மீதியையும் வாழ்த்தி, கிழக்கையும், வேதியையும், வீட்டையும் நோக்கிக்கொண்டு வண்டியி

மந்திரங்கள்)
விருந்து கீழிறங்கி, நெல்லை எடுத்துக்கொண்டு வந்து, காருகபத்திய மென்னும் தீக்கு மேற்கிலாவது, அல்லது ஆகவனீயத் தீக்கு மேற்கிலாவது வைத்து விட்டு, அக்கினியைப் போற்றல் வேண்டு மென்பதாம்.

---

## முதற் காண்டம் - முதற் பிரபாடகம்.

## நான்காம் அநுவாகம்.

இது, ஒரு பஞ்சாதிக்கு மேல், 46 பதங்களைக் கொண்டது.

---

புரோடாசத்திற்கு நெல் லெடுத்தற்குரிய மந்திரங்கள்.

**कर्मणे वां देवेभ्यः शकेयं वेषाय त्वा प्रत्युष्टꣳ रक्षः प्रत्युष्टा अरातयो धूरसि धूर्व धूर्वन्तं धूर्व तं योऽस्मान्धूर्वति तं धूर्वयं वयं धूर्वामस्त्वं देवानामसि सस्नितमं पप्रितमं जुष्टतमं वह्नितमं देवहूतम महुतमसि हविर्धानं दृꣳहस्व मा ह्वार्मित्रस्य त्वा चक्षुषा प्रेक्षे मा भेर्मा सं विक्था मा त्वा (१) हिꣳसिषमुरु वाताय देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्यामग्नये जुष्टं निर्वपाम्यग्नीषोमाभ्यामिदं देवानामिदमु नः सह स्फात्यै त्वा नारात्यै सुवरभि वि ख्येषं वैश्वानरं ज्योतिर्दृꣳहन्तां दुर्या द्यावापृथिव्योरुर्वन्तरिक्षमन्वि ह्यादित्यास्त्वोपस्थे सादयाम्यग्ने हव्यꣳ रक्षस्व ॥२॥**

---

முதல் விநியோகத் தொடக்கம்.

வேள்வித்தலைவன், அமாவாசையில் சூரிய உதயத்திற்கு முன்னர் இக் கிரியைகளைச் செய்யத் தொடங்கல் வேண்டும். கிரியைகளைச் செய்யத் தொடங்கினும், அதற்குரிய காலத்தில் அக்கினி ஹோத்திரமுஞ் செய்தல் வேண்டும்.

முதல் விநியோகம்.

வேட்போன், கைகளைக் கழுவிக் கொள்ளல்.

மந்திரம் :

**कर्मणे वां देवेभ्यश्शकेयम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे हस्तौ ! | கைகாள் ! |
| वां | உங்களை |
| देवेभ्यः | தேவர்கட்குரிய |
| कर्मणे | கருமத்தைச் செய்தற் பொருட்டு (நியமிக்க) |
| शकेयं | வன்மை யுடையவனு யிருக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன், முதலாவது, தனது கைகளைக் கழுவிக் கொள்ளல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :— இதனுல், இரவியின் கிரணம் படுவதால், தண்ணீர் இயற்கையிற் புநிதமா மாதலின், அதனுல், அனைத்தும் புநிதமாகும் என்ப துண ரற்பாலது.

இங்கு, வேள்வித்தலைவன் செய்ய வேண்டிய கிரியைகள், சூத்திரங்களைத் தழுவிப் பலவகையான பேதங்களை யுடையன.

தண்ணீர், எல்லாத் தேவர்களின வடிவமா மென்பது சுருதியின் கதையா லுணரப்படுகின்றது.

(போ-சூ.) இம் மந்திரத்தால், காலையில் அக்கினி ஹோத்திர ஹோமஞ் செய்த பின்னர், கைகளை துடைத்துக் கொள்ளல் வேண்டுமென்பது. 1



இரண்டாம் விநியோகத் தொடக்கம்.

ஈண்டு, சூத்திர விநியோகத்தைத் தழுவி,

**यज्ञस्य सन्ततिरसि ।** பிராமணம் 3-2-4-4.

என்பது முதலிய மந்திரத்தால், 'உலபராசி' என்னும், தருப்பைகளை யெடுத்து, காருகபத்தியத் தீயிலிருந்து ஆகவனீயத் தீ வரை இடைவிடாது விரித்துவிடல் வேண்டும், விரித்தவற்றின் நுனிகளின் மேல், மற்றவைகளின் அடிகள் தொட்டுக் கொண்டிருக்குமாறு பரப்பல் வேண்டும்.

மற்றும், மந்திரம் ஓதாமல், விரித்துள்ள தருப்பைக்குத் தெற்கிலும் வடக்கிலும் தருப்பையைப் பரப்புதல் வேண்டும். பரப்பிவிட்டு, ஆகவனீயத்திற்குத் தெற்கில், முதலாவது (கிழக்கில்) பிரமனுக்கும், பின்னர் (மேற்கில்) வேள்வித் தலைவனுக்கும் ஆசனமாகத் தருப்பைகளை விரித்துவிட்டு, காருகபத்தியத்திற்கும் ஆகவனீயத்திற்கும் வடக்கில், (பாத்திரங்களை வைத்தற் பொருட்டும்) தருப்பைகளை விரித்துவிடல் வேண்டும்.

மந்திரங்கள்)

பின்னர், மாக்கத்தி, அகல்கள் (30), அக்கினிஹோத்திரஹவணீ யென்னும் மரப் பாத்திர விசேடம், முறம், மான் தோல், ஒரு தடி, (சம்மியை) உரல், உலக்கை, அம்மி, குழவி என்னும் இவற்றையும், இரண்டிரண்டாய்ச் சேர்த்து, காருகபத்தியத்திற்கு வடக்கில் (விரித்துள்ள தருப்பையின் மேல்) வைத்தல் வேண்டும். அமாவாசையில் அகல்கள் எட்டேயாம். சோமயாகஞ் செய்யாதவனுக்கு 19 அகல்கள். இவை பின் பத்தாம்.

பின்னர், சுருவம், சுரு, உபபிருது, துருவா, வேதம், (தருப்பை முடி,) பாத்திரம், நெய்ப் பாத்திரம், பசுவின் காது போன்ற தொன்னை, இடா பாத்திரம் (புரோடாசம் வைக்கும் தட்டு), தண்ணீர் வைக்கும் மரப்பாத்திர விசேடம், (பிரணீதா ப்ரணயனம்) என்னும், முன் பத்துப் பாத்திரங்களையும், இரண்டிரண்டாய், ஆகவனீயத் தீக்கு வடக்கில் (விரித்துள்ள தருப்பையின் மீது) வைத்தல் வேண்டும்.

பின்னர், கயிறு, வெந்நீர்ப் பாத்திரம், காண்டி, தருப்பைகளின் நுனிகள், அன்னஞ் சமைக்கும் பாத்திரம், தணலைத் தள்ளிவிடும் தடி, பால் கறப்பதுக்குரிய பாத்திரங்கள், அம்மியில் ஒட்டிய மாவையும் தவிட்டையும் வைப்பதற்குரிய பாத்திரம், இத்மம் (விறகு) வெட்டும்போது விழுந்த துண்டுகள், என்பவைகளை அவைகட்கு வடக்கில் இரண்டிரண்டாய்ச் சேர்த்து வைத்தல் வேண்டும் என்பதாம்.

**ஈண்டுக் குறிப்பு** :—சோமயாகம் பண்ணினவனு யிருப்பினும், அல்லது, சோம யாகஞ் செய்யாதவனு யிருப்பினும் அவன் பௌர்ணமியிலும் ; சோம யாகஞ் செய்யாதவன் அமாவாசையிலும் ; அம்மியிலொட்டியுள்ள மாவையும் தவிட்டையும் வைப்பதற்குரிய பாத்திரத்தையும், தருப்பையையும் வைத்தல் வேண்டும். பாற்பானை முதலிய பாத்திரங்களை வைத்தல் வேண்டாம். ஏனெனின்? பால் தயிர் இன்மையின் என்க. பாத்திரங்களை வைத்த பின்னர், பவித்திரத்தைச் செய்து, அதை நீரால் கழுவிக் கொண்டு, வேள்வித்தலைவனும், வேட்போனும் பிரமனை அழைத்தல் வேண்டும். பவித்திரஞ் செய்தலும் வேட்போன் ஒருவனே செயற்பாலதாம்.

சோமயாகம் பண்ணினவர்களுக்கு, முன்னுள், பால் கறத்தற் பொருட்டுச் செய்த பவித்திரத்தையே வைத்துக் கொள்ளல் வேண்டும். சோமயாகம் பண்ணினவனுக்கும் பண்ணுதவனுக்கும், பௌர்ணமியிலும் ; சோமயாகம் பண்ணுதவனுக்கு அமாவாசையிலும் இப்பொழுதேதான் பவித்திரஞ் செய்து கொள்ளல் வேண்டும்.

அதன் பின்னர், வேள்வித்தலைவனும் வேட்போனும்,

भूपते भुवनपते महतो भूतस्यपते ब्रह्माणं त्वा वृणीमहे । பிரா. 3-7-6-2.

அதாவது, பூபதியும், புவனபதியும், மகத்திற்குப் பதியுமாகிய பிரமனே ! (பிரமன் என்னும் பெயர்பூண்டு வேள்வியைக் குற்றமின்றி நடத்துபவனே !) உன்னை யழைக்கின்றோம், என்றழைத்தல் வேண்டும் என்பதாம்.

இவ்வாறு அழைக்கப் பெற்ற பிரமன், வேதிகையின் வடபுறத்தி லுட்கார்ந்து கொண்டு,

**अहं भूपतिः अहं भुवनपतिः ।** பிராமணம் 3-7-6-3.

என்பது முதலிய மந்திரங்களைச் செபித்துக்கொண்டு ஆகவனீயத்திற்கு மேற்கில் வேதிகையை வலது காலால் தாண்டித் தெற்கே போய், வடக்கு முகமாய் நின்று, '**निरस्तः परावसुः**' என்பது முதலிய மந்திரத்தால், கட்டை விரல் பெருவிரலிரண்டாலும் ஆசனத்திற்கு விரித்துள்ள தருப்பைகளுள் ஒரு தருப்பையை எடுத்து நிருதி மூலையில் எறிந்துவிட்டு, கையை நீரால் நனைத்து விட்டு, '**इदमहमर्वावसोः**' என்பது முதலிய மந்திரத்தை ஓதிக்கொண்டு வடக்கு நோக்கி அதில் உட்காரல் வேண்டும்.

பின்னர், உட்கார்ந்து, ஆகவனீய அக்கினியை நோக்கிக் கொண்டிருத்தல் வேண்டும். ஒவ்வொரு கருமத் தொடக்கத்திலும் வாக்கை யடக்கிக் கொள்ளல் வேண்டும். பேசில் 'இதம் விஷ்ணு:' என்பது முதலிய மந்திரத்தை, பூர்புவ: ஸ்வ: என்பவைகளுடன் சேர்த்துச் செபித்தல் வேண்டும்.

குறிப்பு :—ஆசுவலாயன சூக்திரத்தைத் தழுவிலோ, பிரமன், ஆகவனீயத்திற்கு ஈசானதிசையில் பூணூலுடன் இருந்து ஆசமனஞ் செய்துகொண்டு, அதற்குத் தென் புறமாகவே வந்து, விரித்துள்ள தருப்பை யாசனத்தில், கட்டை விரல் பெருவிரல் இரண்டையுங் கொண்டு ஒரு தருப்பையை மாத்திரம் எடுத்து நிருதி திக்கில் (அசுரரின் பொருட்டு) எறிந்து விட்டு, கையால் நீரைத் தொட்டுக்கொண்டு, '**इदमहमर्वावसोः**' என்பது முதலிய மந்திரத்தை ஓதிக் கொண்டு ஆசனத்தி லமர்ந்து, 'பிருகஸ்பதிர்பிரமா' என்பது முதலான மந்திரங்களைச் செபித்தல் வேண்டுமென்பதையுங் காண்க.

வேள்வித் தலைவனே, வாய் பேசாது, தனது ஆசனத்தில் ஒரு தருப்பையை எடுத்தெறிந்து விட்டு அவ்வாசனத்தின் மீது உட்காரல் வேண்டும்.

பின்னர், 'வானஸ்பத்யோஸி', என்பது முதலிய மந்திரத்தால், பிரணீதாப் பிரணயனம் என்னும் சமசத்தை (கை பிடி வைத்த மரப் பாத்திரத்தை) எடுத்துக் கழுவி, மாலையில், பால் கறக்கும்போது செய்த பவித்திரத்தை அதனுட்போட்டு, '**अनया पृथिव्यापः**' என்பது முதலிய மந்திரத்தால் பூமியை மனத்தாலெண்ணிக்கொண்டு, '**को वो गृह्णाति**' என்பது முதலிய மந்திரத்தால், சிறிது குறைவாக அதில் நீரை நிறைத்து, மற்றும், மந்திரத்துடன் பூமியை நினைத்துக்

கொண்டு, ' देवो वः सवितोत्पुनातु ' என்னும் மந்திரத்தால், அப் பவித்திரத்தை (தருப்பையை) இரு விரலாற் பற்றிக்கொண்டு அந்நீரை அத் தருப்பையால் அலைக்க (கலக்க) ல் வேண்டும்.

மற்றும், ' अच्छिद्रेण पवित्रेण ' என்று இரண்டாம் முறையும், ' वसोः सूर्यस्य रश्मिभिः ' என்பது முதலிய மந்திரத்தால் மூன்றும் முறையும் அவ்வாறே அலைத்தல் வேண்டும்.

பின்னர், ' आपो देवी रग्रेपुवः ' என்பது முதலிய மந்திரத்தால் அதைப் போற்றிக்கொண்டு,

' ब्रह्मन्नपः प्रणेष्यामि यजमान वाचं यच्छ ' ' பிரமனே! யான் அத்தகைய நீரை யெடுத்துக்கொண்டு செல்கின்றேன். வேள்வித்தலைவ! நீ வாக்கை யடக்கிக் கொள்வாயாக' என்று பணித்தல் வேண்டும். பணித்த பின்னர், பிரமன் ' प्रणय यज्ञं ' என்பது முதலிய மந்திரத்தை மெல்ல ஓதிக்கொண்டு, ஓம், ப்ரணய (ஆம் கொண்டு போவாயாக) என்று வாக்குக் கொடுத்த பின்னர், வேட்போனும் வேள்வித்தலைவனும், அந் நீரைக் கொண்டு போதல் வேண்டும். நீரைக் கொண்டு போவதிலிருந்து ' ஹவிஷ்கிருதேஹி ' என்னும் மேல் வரும் நியம மந்திரத்தைச் சொல்லும் வரை ஏனைய வார்த்தை பேசுதல் கூடாது.

ஈண்டு ஆசுவலாயன சூத்திரத்தைத் தழுவிலோ, பிரமன், ' பூர்புவ: சுவ: பிருகஸ்பதி: பிரகுத: ' என்னும் மந்திரத்தைச் செபித்து, ஆக்ஞை கொடுத்தல் வேண்டு மென்பதை யுணர்க.

அதன் பின்னர், வேட்போன், ' को वः प्रणयति ' என்பது முதலிய மந்திரத்தால், ' ஸ்ப்யம் ' என்னும் மரக் கத்தியை அப் பாத்திரத்தின் மேல் வைத்து ஒன்றாய்ச் சேர்த்துப் பிடித்துக்கொண்டு அந்நீர்ப் பாத்திரத்தை மூக்கு வரை மேலே தூக்கிக்கொள்ளல் வேண்டும். அப்போது, ' अनया पृथिव्यापः प्रणयानि ' என்று பூமியைத் தியானித்தல் வேண்டும்.

இங்கு வேள்வித்தலைவன், ' भूश्च कश्च ' என்பது முதலிய மந்திரத்தால் ' பிரணீதா பிரணயனம் ' என்னும் நீர் நிறைந்துள்ள அம் மரப்பாத்திரத்தைப் போற்றல் வேண்டும்.

பின்னர் வேட்போன், ' को वो युनक्ति ' என்பது முதலிய மந்திரத்தால் மெல்ல அப் பாத்திரத்தைக்கொண்டு போய் ஆகவனீயத்திற்கு வடக்கில் தருப் பையின் மீது அசையாமல் வைத்து, அதைத் தருப்பையால் மூடி வைத்தல் வேண்டும்.

ஈண்டு, நீர் நிறைந்துள்ள அப்பாத்திரம், ' को वो योक्षित्सवो विमुञ्चतु' என்னும் மந்திரத்தால், இனிமேல் மௌனத்தை விடும் வரை, இருந்த இடத்திலேயே

யிருத்தல் வேண்டும் ; வேறோரிடத்திற்குக் கொண்டு போதலும், அசைத்தலும் நகர்த்தலுங் கூடாதென்க.

பின்னர், வேட்போன், பவித்திரக் கையுடன், ' सं विशन्तां ' என்றற்றொடக்கத்து மந்திரத்தால் பாத்திரங்களைத் தொடல் வேண்டும். அத்தருணம் தொட முடியாத பாத்திரங்களை, மற்றொரு முறை மந்திரத்தை ஓதிக்கொண்டு பின்னர்த் தொடல் வேண்டும்.

பின்பு, ' वानस्पत्योसि ' என்பது முதலிய மந்திரத்தால் ' அக்கினிஹோத்திர ஹவணீ ' என்னும், நீண்ட கைப்பிடியுள்ள ஒரு மர அகப்பை விசேடத்தை யெடுத்துக் கொள்ளல் வேண்டும்.

### இரண்டாம் விநியோகம்.

வேட்போன், முறத்தை யெடுத்துக் கோள்ளல்.

மந்திரம் :

**वेषाय त्वा ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **भोः शूर्प !** | முறமே ! |
| **त्वा** | உன்னை, |
| **वेषाय** | வேள்வியின்பொருட்டு எடுத்துக் கொள்கின்றேன். |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முறத்தையும் கையில் எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—காபில சங்கிதை, மைத்திரேய சங்கிதைகளில், இம் மந்திரத்தால் அக்கினி ஹோத்திர ஹவணியை எடுத்தலே கருத்தாக இருக்கின்றது. ஆங்கிலம், கீத்து.

இம் மந்திரத்தால், வலது கையால் அக்கினிஹோத்திர ஹவணியையும், இடது கையால் முறத்தையும் எடுத்துக்கொள்ளல் வேண்டுமென்பது கல்ப சூத்திரம். 2

---

### மூன்றும் விநியோகம்.

எடுத்த அக்கினிஹோத்திர ஹவணியையும், முறத்தையுந் தீயிற் காய்ச்சுதல்.

மந்திரம் :

**प्रत्युष्टँ रक्षः प्रत्युष्टा अरातयः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **रक्षः** | *அசுரர்கள்* |
| **प्रत्युष्टं** | *முழுதும் எரிக்கப்பட்டனர்* |
| **अरातयः** | *தனத்தின் வருவாயின்றிக் கெடுக்கும் பகைவர்* |
| **प्रत्युष्टाः** | *முழுதுங் கொளுத்தப்பட்டனர்.* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், அக்கினிஹோத்திர ஹவணியையும், முறத்தையும், காருகபத்தியத் தீயிலேனும், ஆகவனீயத் தீயிலேனுங் காய்ச்சுதல் வேண்டும் என்பதாம்.*

குறிப்பு :—*இது அசுரர்கள் நீங்குதற் பொருட்டென்பதை யுணர்க.* 3

---

நான்காம் விநியோகத் தொடக்கம்

*ஈண்டு, வேட்போன், '* यजमान हविर्निर्वप्स्यामि *' வேள்வித்தலைவ! 'யான் அவியை (நெல்லை) யெடுத்துக் கொள்கின்றேன்' என்று ஆணை கேட்குதல் வேண்டும்.*

*அதற்கு, வேள்வித்தலைவன், 'ஓம் நிர்வப' (எடுத்துக் கொள்வாயாக) என்று, உரத்துக் கூறி ஆணை கொடுத்தல் வேண்டும்.*

*பின்னர், வேட்போன், '* उर्वन्तरिक्षमन्विहि *' என்னும் மந்திரத்தை ஓதிக் கொண்டு காருகபத்தியத்திற்கு மேற்கிலேனும், வடக்கிலேனும், பூட்டிய நுகத்தடியுடன் நிற்கும் நெல் வண்டியின்பாற் செல்லல் வேண்டும்.*

நான்காம் விநியோகம்.

**நுகத்தடியின் நுனியைத் தொட்டு, அதிலுள்ள அக்கினியைப் போற்றல்.**

மந்திரம் :

**धूरसि धूर्व धूर्वन्तं धूर्व तं योऽस्मान् धूर्वति तं धूर्व यं वयं धूर्वामः ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **भो वह्ने !** | *நுகத்தடியின் மீதுள்ள அக்கினியே! நீ,* |
| **धूः** | *துன்புறுத்துவதாக* |
| **असि** | *இருக்கின்றாய். ஆதலின்,* |
| **धूर्वन्तं** | *துன்புறுத்தும் பகைவர்களை* |

| | |
|---|---|
| धूर्व | கொல்லுவாயாக. மற்றும், |
| यः | யாதொருவன் |
| अस्मान् | எம்மை |
| धूर्वति | துன்புறுத்துகின்றானோ |
| तं | அவனை |
| धूर्व | நாசமாக்குவாயாக. |
| यं | யாதொரு சத்துருவை |
| वयं | யாம் |
| धूर्वामः | கொல்லுதற்கெண்ணுவோமோ |
| तं | அப் பகைவனை |
| धूर्व | ஒழிப்பாயாக, |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நுகத்தடியைத் தொட்டுப் போற்றல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :— வண்டியின் நுகத்தடியில், காளைகளின் கழுத்துப்பட்டு இழுக்குமிடத்தில், சாத்திர நோக்கால் துன்ப வடிவாகிய ஒரு வகை அக்கினியுண்டு என்பதை யுணர்க. இம் மந்திரத்தால், நுகத்தடியின் வடக்கு நுனிப்பக்கத்தில் கையை வைத்துக்கொண்டு அவ்வக்கினியைப் போற்றல் வேண்டும். இது வேட்போனும் வேள்வித்தலைவனும் தாபமுறாதிருத்தற் பொருட்டாம். நுகத்தடியின் இருதலையையுந் தொடலென்பர் சிலர். வண்டியின் அச்சைத் தொட்டு மையிட்டு அதை வலியுறுத்தலென்பர் ஒரு சாரார். குதிரில் நெல்லெடுக்கும் பட்சத்தில் 'உரு வாதாய' என்பது முதலிய மந்திரம் இல்லை.

பண்டைக் காலத்து ஆரியர்களின் வீட்டில், காருகபத்திய மென்னும் இல்லறத்தானோம்புந் தீக்கு அருகில் வண்டியில் நெல்லிருக்கு மென்பது குறிப்பால் உணரற்பாலது. 4

---

### ஐந்தாம் விநியோகம்.

வடக்குக் கடையாணிக் குச்சைப் பிடித்துக்கொண்டு செபித்தல்.

மந்திரம் :

**त्वं देवानामसि सस्नितमं पप्रितमं जुष्टतमं वह्नितमं देवहूतम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| भो शकट ! | வண்டியே ! |
| त्वं | நீ |
| देवानां | தேவர்கட்குச் சம்பந்த முடையவனாக |
| असि | இருக்கின்றாய் |
| सस्नितमं | மிகப் புநிதமுடையதாயும் |
| (असि) | (இருக்கின்றாய்) |
| पप्रितमं | நெல் நிறையப்பெற்றதாகவும் |
| (असि) | (இருக்கின்றாய்) |
| जुष्टतमं | மிகப் பிரிய முடையதாகவும் |
| वह्नितमं | நெல்லைத் தாங்குவதாகவும் |
| (असि) | (இருக்கின்றாய்) |
| देवहूतमं | தேவர்களை யழைப்போனாகவும் |
| (असि) | (இருக்கின்றாய்.) |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நெல்லெடுப்பதன் பொருட்டு வண்டியின் மேல் ஏறும் போது அது முறிந்து விடாதிருக்குமாறு அதைப் போற்றல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—இது, நெற்சுமைகளைத் தாங்குவதுடன் வேட்போனும் ஏறில் பாரம் மிகுதியாயின் முறிந்து விடுமோ, என்று ஐயுற்றுப் போற்றுதலாம். 5

---

ஆறும் விநியோகத் தொடக்கம்.

பின்னர், ‘विष्णुस्त्वाऽक्रꣳस्त’ என்று, வலது பக்கத்துச் சக்காத்தின் மீது, இடது காலை எடுத்து வைத்தல் வேண்டும்.

ஆறும் விநியோகம்.

வேட்போன், வண்டியின்மீது ஏறல்.

மந்திரம் :

**अह्रुतमसि हविर्धानं दृꣳहस्व माह्वाः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| भो शकट ! | வண்டியே ! நீ |
| अह्रुतं | வளைந்துபோகாமல் |

| | |
|---|---|
| हविर्धानं | நெற் பாரத்தைத் தாங்குவோனுக |
| असि | இருக்கின்றுய். ஆதலின், |
| दृꣳहस्व | வலியுடையதாகுவை |
| माह्वाः | முறிந்து விடாதே. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன், அவ் வண்டியின் மீது ஏறிக்கொள்ளல் வேண்டும் என்பதாம்.

குறிப்புகள் :— வண்டி முறிந்து விடுமோ, என்று ஐயுற்று அதைப் போற்றுதல்.

இவ்விரண்டு விநியோகங்களாலும் வண்டியைப் போற்றல் வேண்டுமென்பது கல்ப சூத்திரம் 6



ஏழாம் விநியோகம்.

காற்றுப்படுமாறு நெல்லைத் திறந்து வைத்தல்.

மந்திரம் :

**उरु वाताय ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे द्वार ! | சிறிய துவாரமே ! நீ |
| वाताय | நெல்லின்மீது காற்றுப்படுமாறு |
| उरु | பெரிதாகுவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நெல்லின்மேல் காற்றுப்படுமாறு, நெல்லை மூடி வைத்துள்ள, பாய், வைக்கோல் முதலானவற்றை நன்றாய்த் திறந்துவிடல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு :—பாய் முதலியவற்றால், வண்டி மூடப்பட்டிருத்தலின் பிராணனற்றது போன்றதாய் வருண தேவதைக்குட்பட்டு தேவர்கட்கு அவியாதற்கு உரித்தலாததாய்விடும் ஆதலின் இவ்வாறு செய்தல் என்பதை யுணர்க. இவ் விநியோகம், பாட முறையில் பின்னுள்ளது. 7



## எட்டாம் விநியோகம்.

நெல், புரோடாசத்திற்குரியதா? என்று நோக்கல்.

மந்திரம் :

**मित्रस्य त्वा चक्षुषा प्रेक्षे मा भे र्मा संविक्था मा त्वा हिं॒सिषम् ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **हे व्रीहिसमूह !** | நெற் குவியலே ! |
| **त्वा** | உன்னை |
| **मित्रस्य** | மித்திரனென்னும் இரவியின் |
| **चक्षुषा** | கண்ணால் |
| **प्रेक्षे** | பார்க்கின்றேன். |
| **मा भेः** | பயமுறாதே |
| **मा संविक्थाः** | நடுங்கற்க. |
| **त्वा** | உன்னை |
| **मा हिंसिषम्** | துன்புறுத்தமாட்டேன். |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், புரோடாசத்திற்குரிய நெல்லை, நன்கு பார்த்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—பகைமை கொண்டு பார்க்காமல், நட்புற்ற நோக்காற் பார்க்கின்றேன் ; ஆதலின், நீ பயமடையற்க என்பது கருத்து. அதாவது, உன்னை, தேவர்கட்கு உணவாகச் செய்து இந்நிலையை யடைவிப்பேன் என்பதாம். 8



## ஒன்பதாம் விநியோகத் தொடக்கம்.

ஈண்டு ' **निरस्तं रक्षः** ' என்பது முதலிய மந்திரத்தால், நெல்லினுள்ள தூசு, பதர் முதலானவைகளை யொதுக்கிய பின்னர், கையில் நீரைத் தொட்டுக் கொண்டு, ' **ऊर्जाय वः पयो मयि धेहि** ' என்னும் மந்திரத்தால், சுத்தஞ்செய்த நெல்லைப் போற்றல் வேண்டும்.

பின்னர், ' **चित्तिः स्रुक् चित्तमाज्यं** ' என்பது முதலிய ' தச ஹோதாரம் ' என்னும் மந்திரத்தை விரித்துக் கூறிவிட்டு, முறத்தின்மீது பவித்திரத்தை வைத்தல் வேண்டும்.

அதன்பின்னர், 'यच्छन्तां पञ्च' என்னும் மந்திரத்தால், வாற்கோதுமையை யேனும், நெல்லையேனும், ஒரு பிடிகொண்ட அளவு எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

ஒன்பதாம் விநியோகம்.
முறத்தில் நெல்லை வைத்தல்.

மந்திரம் :

**देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्यामग्नये जुष्टं निर्वपामि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **सवितुः** | அனைத்தையுஞ் செலுத்துகின்ற |
| **देवस्य** | பரமான்ம தேவதையின் |
| **प्रसवे** | ஏவலைக்கொண்டு |
| **अश्विनोः** | அசுவினிகளின் |
| **बाहुभ्यां** | கைகளாலும் |
| **पूष्णः** | போஷக தேவதையின் |
| **हस्ताभ्यां** | கைகளாலும், |
| **अग्नये** | அக்கினியின் பொருட்டு, யான் |
| **त्वा** | நெல்லே! உன்னை |
| **जुष्टं** | வேண்டிய வளவாக |
| **निर्वपामि** | எடுத்துக்கொள்ளுகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நெல்லை யெடுத்து அக்கினிஹோத்திர ஹவணியின் வாயிலாக அந் நெல்லை முறத்திற் போடல்வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—முறத்தின் மீது, பவித்திரத்தை வைத்து, அதன்மீது அக்கினி ஹோத்திர ஹவணியை வைத்து, அதில் நெல்லைப் போட்டு, அதனால் நெல்லை எடுத்து முறத்திற் போடல் வேண்டும். அசுவினி தேவதையானது தேவர் கட்கு வேட்கத்தக்கதா மாதலானும், பூஷா தேவதை தேவர்களின் பாகத்தை ஈவதா மாதலானும் அவர்கள் கைகளால் எடுப்பதாகப் பாவித்தல் வேண்டு மென்பது கருத்து.

இம் மந்திரத்தால் மூன்று பிடி நெல்லும், மந்திரமில்லாமல் ஒரு பிடி நெல் லும் எடுத்து 'அக்கினிஹோத்திர ஹவணீ' என்னும், நீண்ட கைப் பிடியுள்ள ஒரு மரப் பாத்திர விசேடவாயிலாக முறத்திற் போடல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, அக்கினிஹோத்திர ஹவணி யென்பதின்மேல் தருப்பையை (பவித்திரத்தை) வைத்து அதனால் நெல்லெடுத்தலு முண்டு. இது நிர்வாப மெனப்படும். இவ்வாறே, நான்குமுறை நெல் எடுத்தல் வேண்டும் என்க. மற்றும், எடுத்த நெல்லுடன் வேண்டியவளவு வேறு நெல்லையுஞ் சேர்த்துக் கொள்ளுக. 9

---

பத்தாம் விநியோகம்.

வேட்போன், அக்கினி சோமன் என்னும் இருவர்களின் பொருட்டு நெல்லை யெடுத்தல்.

மந்திரம் :

**अग्नीषोमाभ्यां (जुष्टं निर्वपामि) ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **अग्नीषोमाभ्यां** | அக்கினி சோமம் என்னும் இருவர்களின்பொருட்டு |
| **(जुष्टं)** | (வேண்டிய வளவாக) |
| **(निर्वपामि)** | (நெல்லை எடுத்துக் கொள்ளுகின்றேன்.) |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அக்கினியின் பொருட்டும், சோமன் பொருட்டும், அக்கினி 'ஹோத்திரஹவணி' என்னும் மரப்பாத்திர வாயிலாக, மந்திரத்துடன் மூன்று பிடி நெல்லும், மந்திரமிலாது ஒரு பிடி நெல்லும் முன்போல் எடுத்துக்கொள்ளல் வேண்டு மென்பதாம்.

குறிப்புகள் :— அக்கினி, சோமன் என்பவர்கட்கு நெல்லெடுக்கும் போது, முன் மந்திரத்தில் 'அக்கினி' என்பதை நீக்கி, அக்கினி சோமர்கள் என்பதைச் சேர்த்துக் கொள்ளல் வேண்டு மென்பதாம். "இந்திர வைமிருதத்தின் பொருட்டும் எடுக்கின்றேன்" என்னல் வேண்டும் என்பதையு முணர்க.

வேள்வித்தலைவன், 'अग्निं होतारमिह' என்பது முதலிய மந்திரத்தால் எடுத்த நெல்லைப் போற்றல் வேண்டும். இது பௌர்ணிமையி லென்றுணர்க. இங்கு, எனக்கு நெல்லெடுப்பாயாக, எனக்கு நெல்லெடுப்பாயாக என்று, கலகம் விளைவிக்காமையின் பொருட்டு ஒரு தேவதையின் பெயரால் நெல்லை யெடுத்தலென்பது உணரற்பாலது.

ஈண்டு, ஆபஸ்தம்ப சூத்திரப்படி சோமயாகஞ் செய்யாதவனுக்கு, அக்கினி, சோமன் என்பவர்கட்குப் புரோடாசம் இல்லை.

அமாவாசையில் சோமயாகஞ் செய்யாதவனுக்கு இருவகைச் சூத்திரங்களையுந் தழுவி அக்கினி சோம புரோடாசமும், இந்திர வைமிருத புரோ

டாசமும் கிடையாது. இந்திராக்கினி தேவதைக்கும் மேற்கூறியவாறே நெல்லை யெடுத்தல் வேண்டு மென்பதையு முணர்க. ஈண்டு, வேள்வித்தலைவன் '**अग्निं होतारं**' என்பது முதலிய மந்திரத்தால் எடுத்த நெல்லைப் போற்றல் வேண்டு மென்பதாம். 10

---

## பதினோராம் விநியோகம்.

எடுத்த நெல்லின்மேல் கையை வைத்து நியமித்தல்.

மந்திரம் :

**इदं देवानाम् ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **इदं** | இந்த நெல் |
| **देवानाम्** | தேவர்களின் பொருட்டேயாம். |

### சாயணபாடியக் கருத்து.

இதனால், தேவர்கட்கு எடுக்கப்பட்டது இந்த நெல் என்று, நெல்லைத் தொடல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—'இந்த நெல் இன்ன தேவதைக்கு, இந்த நெல் இன்னதேவதைக்கு' என்று, நியமித்தல் வேண்டும் என்பது கருத்து. 11

---

## பன்னிரண்டாம் விநியோகம்.

வண்டியில் மீந்துள்ளதைத் தொட்டு நியமித்தல்.

மந்திரம் :

**इदमु नः सह ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **इदमु** | வண்டியிலுள்ள இந்த நெல் |
| **नः सह** | எம்மோடுகூட (தேவர்கட்குமாம், என முடித்துக் கொள்க.) |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வண்டியில் மீந்துள்ள நெல்லின்மீது கையை வைத்து நியமித்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—யாம், மேலும் வேள்வியைச் செய்வோமாதலின் வண்டியில் மீந்துள்ள இந்த நெல், தேவர்கட்கும் எமக்குமாமென்பது கருத்து. 12

பதின்மூன்றாம் விநியோகம்.

எடுத்த நெல்லைத் தொட்டுப் போற்றல்.

மந்திரம் :

**स्फात्यै त्वा नारात्यै ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे हविः !** | அவியாகிய நெல்லே ! |
| **त्वा** | உன்னை |
| **स्फात्यै** | வளருதற் பொருட்டுப் போற்றுகின்றேன். வளர்தலும், |
| **नारात्यै** | கொடுக்காதிருத்தற் பொருட்டன்று. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், எடுத்து வைத்திருக்கின்ற நெல்லின்மீது கையை வைத்துப் போற்றல் வேண்டும் என்பதாம்.

**குறிப்பு:**—அவி செய்வதால், குறையாதிருப்பதுமன்றி, நெல்லே ! நீ வளர்வாயாக என்பது துதியாம்.

பின்னர், '**इदमहं निर्वरुणस्य पाशात्**' என்று, வண்டியின் முன்பக்கமாக நகர்ந்து வரல் வேண்டும் ; வந்து, '**स्वरभि व्याख्यं**' என்னும் மந்திரத்தால், கீழ்த்திசையை நோக்கல் வேண்டும். 13

பதினான்காம் விநியோகம்.

வேள்வி செய்யும் இடம் முழுமையும் பார்த்தல்.

மந்திரம் :

**सुवरभि विख्येषम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **सुवः** | (வேள்வியாற்று மிடத்தை) சுவர்க்கமாக |
| **अभि विख्येषं** | இனிது நோக்குகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், வேள்விசெய்யும் இடத்தைப் பார்த்தல் வேண்டும் என்பதாம்.*

குறிப்பு :—*வண்டியின் மேற்புறம், பாய் முதலியவைகளால் மறைத்திருத்தலின் நெல்லெடுத்துக்கொண்ட வேட்போனுக்கு, உள் இருளாய் இருந்ததால் வேள்விக் கிடமாகியதைப் பார்த்தல் பொருந்துமாறுணர்க.* 14

---

பதினைந்தாம் விநியோகம்.

ஆகவனீய மென்னும் தீயைப் பார்த்தல்.

மந்திரம் :

**वैश्वानरं ज्योतिः ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **वैश्वानरं** | *(ஆகவனீயத் தீயை) சுவர்க்கத்தை விளக்கும்* |
| **ज्योतिः** | *சோதியாமென்று பார்க்கின்றேன்.* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், ஆகவனீயத் தீயை நோக்கல் வேண்டுமென்பதாம்.*

குறிப்பு :—*உள்ளே இருளாதலின், வேள்வித் தீயையும் நோக்கல் ஒருதலையாய் வேண்டுமென்பது. பின்னர், ' स्वाहा द्यावा पृथिवीभ्यां ' என்று, கீழே சிந்தின நெற்களை அருப்பித்துவிடல் வேண்டும்.*

(போ-சூ.) *இவ் விரண்டு விநியோகங்களையும் ஒரே விநியோகமாகச் செய்து ஆகவனீயத்தைப் பார்த்தல் வேண்டுமென்பது.* 15

---

பதினாறும் விநியோகம்.

வண்டியிலிருந்து கீழே யிறங்கல்.

மந்திரம் :

**दृꣳहन्तां दुर्या द्यावा पृथिव्योः ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **दुर्याः** | *(என்னுடைய) வீடுகள்* |
| **द्यावा पृथिव्योः** | *வானிலும், மண்ணிலும்* |
| **दृꣳहन्तां** | *நிலைத்திருப்பனவாகுக.* |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வண்டியிலிருந்து கீழே யிறங்கல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு :—நெல்லை யெடுத்துக்கொண்டு கீழே யிறங்கும்போது, அசைந்து வண்டி வீழ்ந்துவிடுமோ, என்னும் ஐயப்பாடு நீங்கவும், வானுலக, மண்ணுலக தேவதைகட்கு, நெல்லை (அவியை) க்கொண்டு எதைக் குறித்து வேட்பேன்? எங்கட்குக் கேடுதான் வருமோ? என்னும் அறியாமையை நீக்குதற் பொருட்டும், இங்குப் போற்றுதலும், நோக்குதலுமா மென்றுணர்க.

இதனால், போகத்தை நுகர்தற் பொருட்டு இரண்டுலகத்தும், எனது மனைகள் நிலைபெற்றனவா யிருக்கற்பாலன என்பது உட்கருத்து. 16

(போ-சூ.) இம் மந்திரத்தால், வீட்டைப் பார்த்தல் வேண்டுமென்பது.

---

பதினேழாம் விநியோகம்.

அவியை (நெல்லை) எடுத்துக் கொண்டு செல்லல்.

மந்திரம் :

**उर्वन्तरिक्षमन्विहि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **अन्तरिक्षं** | வான் |
| **उरु** | விரிந்துள்ளது |
| **अन्विहि** | செல்வாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நெல்லை, காருகபத்திய மென்னுந் தீ யிருக்கு மிடத்திற்குக் கொண்டு போதல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—வெளியானது பரந்திருந்தலின் உன்னைத் தடை செய்யமாட்டாது, ஆதலின், இனிது செல்வாயாக என்பது கருத்து. 17

---

பதினெட்டாம் விநியோகம்.

நெல்லை (அவியை)க் கொண்டு போய்க் காருகபத்தியத் தீக்கருகில் பூமியின்மீது வைத்தல்.

மந்திரம் :

**अदित्यास्त्वोपस्थे सादयामि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे हवि ! | அவியாகும் நெல்லே ! |
| त्वा | உன்னை |
| अदित्याः | பூமி (தேவி) யின் |
| उपस्थे | மார்பின் மீது |
| सादयामि | வைக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், காருகபத்தியத்திற்கு மேற்கில் தரையின்மீது அந் நெல்லை வைத்தல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு :—ஆகவனீயத் தீயில், புரோடாசங்களைப் பக்குவஞ் செய்யிலோ, அதற்கு மேற்கில் வைத்தல் வேண்டுமென்பது முணரற்பாலது.

அன்னையானவள், குழந்தையை, மார்பின்மீது வைத்துக்கொள்ளுதல் போன்று பூமிதேவியின் மார்பில் அவியை வைத்ததாகப் பாவிக்கில், பூமி பாது காத்துக்கொள்ளுமென்பது கருத்து.

அக்கினியே! நீ அவி கொடுத்தற்குரியதைப் பாதுகாப்பாயாக. அக் கினி, சோமன் என்பவர்களே! நீவிர், அவியைப் பாதுகாப்பீர்களாக. இந் திர வைமிருத! நீ அவியைப் பாதுகாப்பாயாக, என்பது பௌர்ணமியில், சிறப்பாம். அதாவது விசேடமாம்.

அமாவாசையில், அக்கினி, சோமன் இந்திரம் வைமிருதம் என்பவைகள் இல்லை. சோமயாகஞ் செய்யாதவனுக்கு இந்திராக்கினியைச் சேர்த்துக் கொள்க. 18

---

பத்தோன்பதாம் விநியோகம்.

அவியைப் பாதுகாக்குமாறு, காருகபத்தியத் தீயை வேண்டல்.

மந்திரம் :

**अग्ने हव्यं रक्षस्व ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अग्ने | காருகபத்தியத் தீயே ! நீ, |
| हव्यं | அவியாதற்குரிய நெல்லைப் |
| रक्षस्व | பாதுகாத்துக்கொள்வாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், காருகபத்தியத் தீயைப் போற்றல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு:—தூங்கிய குழந்தையை, அன்னையானவள் பாதுகாத்துக் கொள்வது போன்று, நெல்லைப் பாதுகாத்துக்கொள்ளுமாறு வேண்டல் என்பதுணரற்பாலது.

வேள்வித்தலைவன், 'कस्त्वा युनक्ति' என்பது முதலிய மந்திரத்தால் யாகசாலை முழுதையும் பார்த்தல் வேண்டும் என்பது கருத்து. 19

நான்காம் அநுவாகம் முடிந்தது.



## ஐந்தாம் அநுவாகம்.



விடயச் சுருக்கம்.

देवो व उत्पुनात्वयंशैस्त्रिभिरापोऽनुमन्त्रयेत् ।
अग्नयेऽग्नी हविः प्रोक्ष्य शुन्धोक्षेद्यागपात्रकम् ॥ १ ॥
अव चर्मोत्करे धुरत्रा ह्यदित्याश्चर्मसंस्तृतिः ।
अध्युलूखलमादध्यादग्नेस्तत्र हविः क्षिपेत् ॥ २ ॥
अद्रिर्मुसल मादत्त इषं दृषदि वादनम् ।
वर्षं शूर्पमुपोह्यात्व प्रतिस्त्वा हविरावपेत् ॥ ३ ॥
पराव्रीहीन्परापूय रक्षसामिति चर्मणः ।
अधस्तुषं कपालेन क्षिपेद्वायुर्विविच्यते ॥ ४ ॥
देवः क्षिपेद्धविः पात्र्यां मन्त्राः सप्तदशेरिताः ।

நீரைப் புநிதமாக்கி, நெல்லின்மேல் தெளித்து, பாத்திரங்களின் மீதுந் தெளித்துவிட்டு, மான் தோலையெடுத்து உதறி, பூமியில் விரித்து, அதன்மேல் உரலை வைத்து, அதில் நெல்லைப்போட்டு, உலக்கையை யெடுத்துக் குத்தி, சம்மியை யென்னுந் தடியால் அம்மியையுங் குழவியையுந் தட்டிவிட்டு, முறத்தை யெடுத்து, குத்திய நெல்லை அதில் போட்டுப் புடைத்து, உமியை யெடுத்து வைத்துவிட்டு, நெல்லைப் பொறுக்கி, அரிசியை ஒரு பாத்திரத்தில் பாதுகாப்புடன் வைத்தல் வேண்டு மென்பதாம்.



## முதற் காண்டம் - முதற் பிரபாடகம்.

## ஐந்தாம் அநுவாகம்.

இது, இரண்டு பஞ்சாதிக்குமேல், 11 பதங்களைக்கொண்டது.

(வ்ரீஹி அவஹனனம்)

நெற் குத்துதற்குரிய மந்திரங்கள்.

देवो वः सवितोत्पुनात्वच्छिद्रेण पवित्रेण वसोः सूर्यस्य रश्मिभिरापो देवीरग्रेपुवो अग्रे गुवोऽग्र इमं यज्ञं नयताग्रे यज्ञपतिं धत्त युष्मानिन्द्रोऽवृणीत वृत्रतूर्ये यूयमिन्द्र मवृणीध्वं वृत्रतूर्ये प्रोक्षिताः स्थाग्नये वो जुष्टं प्रोक्षाम्यग्नीषोमाभ्याᳪ शुन्धध्वं दैव्याय कर्मणे देवयज्याया अवधूतᳪ रक्षोऽवधूता अरातयोऽदित्यास्त्वगसि प्रति त्वा (१) पृथिवी वेत्त्वधिषवणमसि वानस्पत्यं प्रति त्वाऽदित्या स्त्वग्वेत्त्वग्नेस्तनूरसि वाचो विसर्जनं देववीतये त्वा गृह्णाम्यद्रिरसि वानस्पत्यः स इदं देवेभ्यो हव्यᳪ सुशमि शमिष्वेषमा वदोर्जमा वद्द्युमद्वदत वयᳪ संघातं जेष्म वर्षवृद्धमसि प्रति त्वा वर्ष वृद्धं वेत्तु परापूतᳪ रक्षः परापूता अरातयो रक्षसां भागोऽसि वायुर्वो विविनक्तु देवो वः सविता हिरण्यपाणिः प्रतिगृह्णातु ॥ २ ॥

---

முதல் விநியோகத் தொடக்கம்.

*நெல்லெடுக்கும்போது அதிற் படிந்துள்ள தூசுடன் ' அக்கினிஹோத்திர ஹவணி ' என்னும் நீண்ட கைப்பிடியுள்ள ஒரு மரப் பாத்திரத்தில் முதலாவதாக, தண்ணீர் நிறைத்து வைத்துக்கொள்ளல் வேண்டும்.*

முதல் விநியோகம்.

நீரைச் சுத்தப்படுத்தல்.

மந்திரம் :

देवो वः सवितोत्पुनात्वच्छिद्रेण पवित्रेण वसोः सूर्यस्य रश्मिभिः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे आपः ! | தண்ணீரே ! |
| वः | உன்னை |
| सविता | அனைத்தையுஞ் செலுத்துகின்ற |
| देवः | பரமான்ம தேவன் |
| अच्छिद्रेण | கேடிலாத |
| पवित्रेण | பவித்திரத்தால் |
| उत्पुनातु | நன்கு புநிதஞ் செய்வானாகை. மற்றும், |
| वसोः | உலகம் வாழ்தற்குரிய |
| सूर्यस्य | இரவினுடைய |
| रश्मिभिः | கிரணங்களால் |
| उत्पुनातु | இனிது புநிதஞ் செய்வானாகை. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தின், மூன்று பகுதிகளாலும், மும்முறை பவித்திரத்தால் நீரை யறைதல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு :—பவித்திரத்தை, இரவியாகவும், தருப்பையின் அவயவங்களைக் கிரணங்களாகவும் பாவித்துக் கூறல்.

ஒரே நீளமுள்ள இரண்டு தருப்பைகளை, வடக்கே நுனியாக, கட்டை விரலாலும் பவித்திர விரலாலும் பிடித்துக்கொண்டு, தண்ணீரில், மேற்கிலிருந்து கிழக்கு வரை அலைத்துக்கொண்டு போதல் வேண்டும் என்பதை யுணர்க. இது 'உத்பவனம்' எனப்படும். நீர்கள் என்னும் பன்மை, தென்மொழியை நோக்கி ஒருமையாயிற்று.

ஈண்டு, விருத்திரன் நீரையே நோக்கிக்கொண்டு உயிர் துறந்தனன் ஆதலின் அவன் நீரில் இரசமாய்க் கலந்தனன். அத்தகைய நீரின் சாரங்களெலாம் திரண்டு ஒரு தருப்பையாய் வந்தமையின் தருப்பையால் நீர் புநிதமா மென்பதை யுணர்க. 1

---

இரண்டாம் விநியோகம்.

புநிதஞ் செய்துள்ள நீரைப் போற்றல்.

மந்திரம் :

आपो देवी रग्रे पुवो अग्रे गुवोऽग्र इमं यज्ञं नयताग्रे यज्ञपतिं
धत्त युष्मानिन्द्रोऽवृणीत वृत्रतूर्ये यूयमिन्द्र मवृणीध्वं
वृत्रतूर्ये प्रोक्षिताः स्थ ।

என்பது.

## பதவுரை.

| | |
|---|---|
| **अग्रेपुवः** | முன்னரே இயற்கையாய்ப் புநித முடையவளும் |
| **अग्रेगुवः** | அனைத்திற்கும் முன்னர்ச் செல்கின்றவளுமாகிய |
| **आपो देवीः !** | நீரபிமானியாகிய தேவியே ! நீ |
| **इमं यज्ञं** | இவ் வேள்வியை |
| **अग्रे नयत** | முன்னேற்றுவாயாக. |
| **यज्ञपतिं** | வேள்வித்தலைவனையும் |
| **अग्रे धत्त** | முன்னேறச் செய்வாயாக. |
| **युष्मान्** | உன்னை |
| **इन्द्रः** | இந்திரன் |
| **वृत्रतूर्ये** | விருத்திரனுடைய போரில் |
| **अवृणीत** | அழைத்தனன். |
| **यूयं** | நீயும் |
| **वृत्रतूर्ये** | விருத்திரனைக் கொல்வதின் பொருட்டு |
| **इन्द्रं** | இந்திரனை |
| **अवृणीध्वं** | அழைத்தனை. மற்றும், நீயும் |
| **प्रोक्षिताः** | இயற்கையாய்ப் புரோக்ஷிக்கப்பட்டதாகவே (புநித மாகவே) |
| **स्थ** | இருக்கின்றாய். |

## சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்னர்ப் புநிதஞ் செய்துள்ள (அக்கினிஹோத்திர ஹவணியிலுள்ள) நீரைப் போற்றல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—வடமொழியில், தண்ணீர் என்பது தண்ணீர்கள் என பன்மைச்சொல்லா மாதலின் தேவியையும் பன்மையாய்க் கூறப்பட்டிருக்கின்றது.

இம் மந்திரத்தை ஓதுவதே, தண்ணீர்க்கு நீர் தெளித்துப் புநிதமாக்குதலாம். மற்றவைகளோ, நீராலும், நீரின் மந்திரத்தாலும் புரோக்ஷிக்கப்படுவனவாம். அதாவது நீர் தெளித்துப் புநிதப்படுத்துவனவாம்.

இந்திரன், வச்சிராயுதத்தை நீரிற் கழுவிக்கொண்டு விருத்திரனைக் கொன்றனனாதலின், இந்திரனுக்கும், நீருக்கும் அவாவுடைமை காண்க.

(போ-சூ.) இம் மந்திரத்தை 'वृत्रतूर्ये' என்னும் வரை ஒரு மந்திரமாகப் பிரித்து இம் மந்திரத்தால், நீரை உத்பவனஞ் செய்துக்கொண்டு எழுந்து நின்று

'प्रोक्षितास्थ' என்பதை மற்றொரு மந்திரமாகப் பிரித்துக்கொண்டு அதையே மும்முறை ஓதி, வேறு ஜலத்தை அந்த நீரின்மேல் மும்முறை தெளித்தல் வேண்டு மென்பது. 2

---

மூன்றும் விநியோகத் தொடக்கம்.

பிரமனே! 'நீரைத் தெளிக்கின்றேன்' என்று, பிரமனை வேண்டிக் கொண்ட பின்னர், பிரமனும், 'நீரைத் தெளிப்பாயாக' என்று ஆணை கொடுக்க, அதையும் பெற்றுக்கொள்ளல் வேண்டும்.

மூன்றும் விநியோகமும், நான்காம் விநியோகமும்.

வேட்போன், தேவர்கள் முறையில், நெல்லின்மேல் நீரைத் தெளித்த (புரோக்ஷித்த)ல்

மந்திரம் :

**अग्नये वो जुष्टं प्रोक्षाम्यग्नीषोमाभ्याम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे आपः !** | தண்ணீரே ! |
| **वः** | உன்னை (உம்மை) |
| **अग्नये** | அக்கினிக்கு வேண்டிய நெல்லின் (அவியின்) மேல் |
| **जुष्टं** | வேண்டிய வளவு |
| **प्रोक्षामि** | தெளிக்கின்றேன். மற்றும், |
| **(वः)** | (உன்னை) |
| **अग्नीषोमाभ्यां** | அக்கினி, சோமன் என்னு மிருவரின் பொருட்டு இருக்கின்ற நெல்லினும் |
| **(प्रोक्षामि)** | (தெளிக்கின்றேன்.) |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அக்கினிக்குரிய நெல்லின் மீதும், அக்கினி சோமர்கட்குரிய நெல்லின் மீதும், நீரைத் தெளித்தல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—இது, அசுரரை விலக்குதற் பொருட்டாம். பௌர்ணமி வேள்வியில் இந்திரவைமிருத தேவதையையுஞ் சேர்த்துக்கொள்ளல் வேண்டும் என்பதை யுணர்க.

மற்றும், இருமுறை, மந்திரமின்றி நெல்லின்மீது நீரைத் தெளித்தல் வேண்டும். அமாவாசையிலும் அவி யெடுத்தற்குரிய தேவர்களின் பெயர்களைச் சொல்லி நீரைத் தெளித்தல் வேண்டும். 3, 4

---

ஐந்தாம் விநியோகத் தொடக்கம்.

மேலே கூறியவாறே நீரைத் தெளித்துவிட்டு பிரதக்ஷிணமாய் அதாவது காருகபத்தியத்திற்கு வடக்கிலிருந்து நேரே கிழக்காய் ஆகவனீயத்திற்கு வடபுறமாய் வந்து அங்கு கவிழ்த்துள்ள பாத்திரங்களை நிமிர்த்து வைத்தல் வேண்டும்.

ஐந்தாம் விநியோகம்.

பாத்திரங்களின்மேல் நீரைத் தெளித்தல்.

மந்திரம் :

**शुन्धध्वं दैव्याय कर्मणे देवयज्यायै ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे पात्राः !** | பாத்திரங்களே ! நீங்கள் |
| **देवयज्यायै** | தேவபூசை யென்னும் |
| **दैव्याय** | திவ்யமாகிய |
| **कर्मणे** | கருமத்தின் பொருட்டு |
| **शुन्धध्वम्** | புநிதமாவீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் ஒருமுறையும், பவித்திரபாணியாய் மந்திரமின்றி இருமுறையும், நீர் தெளித்துப் பாத்திரங்களைச் சுத்தி செய்தல் வேண்டும். 5



ஆறும் விநியோகத் தொடக்கம்.

இவ்வாறு தெளித்து மீந்த நீரை, காருகபத்தியத் தீக்கு முன்னர் வைத்துவிட்டு, 'देवस्य त्वा सवितुः' என்பது முதலிய மந்திரத்தால் கருமான் தோலையெடுத்துக் கொள்ளல் வேண்டும்.

ஆறும் விநியோகம்.

மான் தோலைத், தூசுபோமாறு உதறுதல்.

மந்திரம் :

**अवधूत॒ँ रक्षोऽवधूता अरातयः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **रक्षः** | *அசுரர்* |
| **अवधूतं** | *ஒழிந்தனர்* |
| **अरातयः** | *தனத்திற்குத் தடை செய்கின்ற பகைவரும்* |
| **अवधूताः** | *நாசமாயினர்.* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால்,* வேள்விக்குரிய குப்பைக் குழியில், மேலே தலையும், வெளிப்பக்கந் தோல்ப்புறமும், உள்ளில் மயிருள்ள புறமும் வருமாறு மான் தோலை, மும்முறை உதறல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—*இது அசுரர்களை, அதிலுள்ள தூசுகளாகப் பாவித்துப் போக்கலாம்.* 6

---

ஏழாம் விநியோகம்.

தரையின் மீது மான் தோலை விரித்தல்.

மந்திரம் :

**अदित्यास्त्वगसि प्रति त्वा पृथिवी वेत्तु ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **हे कृष्णाजिन !** | *மான்தோலே ! நீ* |
| **अदित्याः** | *பூமியின்* |
| **त्वक्** | *சருமமாக* |
| **असि** | *இருக்கின்றாய்.* |
| **त्वा** | *உன்னை* |
| **पृथिवी** | *பூமி* |
| **प्रति वेत्तु** | *நன்கு அறிந்து கொள்க.* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால்,* காருகபத்தியத்திற்கு வடக்கிலேனும், அல்லது குப்பைக் குழிக்கு (உத்காத்திற்கு) அருகிலேனும், மேற்கு முகமாய், மேலே மயிரிருக்குமாறு மான் தோலை விரித்துவிடல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு:—ஈண்டு, விரித்த மான் தோலிற்கு மேற்கில் உட்கார்ந்துகொண்டு மான் தோலை விடாமல் ஒரு கையாற் பிடித்துக்கொள்ளல் வேண்டு மென்பதை யுணர்க. 7

---

எட்டாம் விநியோகம்.

மான்தோலின் மீது உரலை வைத்தல்.

மந்திரம் :

**अधिषवणमसि वानस्पत्यं प्रति त्वाऽदित्याः त्वग्वेत्तु ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे उलूखल !** | உரலே! நீ |
| **अधिषवणं** | { நெல்லைக் குத்துதற் பொருட்டுக் கல்லையொத்ததோரிடமாக |
| **असि** | இருக்கின்றாய். |
| **वानस्पत्यं** | மரத்தாற் செய்யப்பட்டதாயும் |
| **(असि)** | (இருக்கின்றாய்.) |
| **त्वा** | அத்தகைய உன்னை |
| **अदित्याः त्वक्** | பூமியின் தோலென்னும் மான் தோலானது |
| **प्रति वेत्तु** | இனிது அறிந்துகொள்ளுவதாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மான் தோலின்மீது மற்றொரு கையால் உரலை எடுத்து வைத்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—வேள்விப் புருடன் அமரர்களிடத்துக் கோபமுற்றவனாய் மான் வடிவாயினன் அதுபற்றியே அதன்மீது நெற் குத்துதல். மற்றும், அரிசி கீழே விழாதிருத்தற் பொருட்டுமாம்.

ஈண்டு, உரலையும் அசையாமற் பிடித்துக்கொள்ளல் வேண்டுமென்பதும் உணரற்பாலது. 8

ஒன்பதாம் விநியோகம்.

உரலில் நெல்லைப் போடுதல்.

மந்திரம் :

**अग्नेस्तनूरसि वाचो विसर्जनं देववीतये त्वा गृह्णामि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **भोः पुरोडाशीय व्रीहि समूह !** | } நெற் குவியலே! நீ |
| **अग्नेः** | அக்கினியின் |

| | |
|---|---|
| तनूः | உடம்பாக |
| असि | இருக்கின்றாய். மற்றும், |
| वाचः | வாக்கு எழுவதற்கு |
| विसर्जनं | முதற் காரணமாகவும் |
| (असि) | (இருக்கின்றாய்.) ஆதலின், |
| देववीतये | தேவர்கட்கு அவி செய்தற்பொருட்டு |
| त्वा | உன்னை |
| गृह्णामि | உரலுக்குட் கொட்டுகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நெல்லை உரலிற் போடல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—வயிற்றில், உண்ட அன்னத்தைப் பாகஞ் செய்யுந் தீயும், வேள்வித் தீயும், அன்னத்தால் வளர்வனவாதலினானும், அன்னத்தின் இரசத்தால் வாக்கெழுதலினானும், நெல், தீயின் வடிவென்று உபசரிக்கப்பட்டது. மும்முறை மந்திரத்துடனும், ஒருமுறை மந்திரமின்றியும் நெல்லை உரலிற் போடல் வேண்டுமென்க. 9

---

பத்தாம் விநியோகம்.

உலக்கையை எடுத்துக்கோள்ளல்.

மந்திரம் :

अद्रिरसि वानस्पत्यः स इदं देवेभ्यो हव्यँ सुशमिशमिष्व ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे मुसल ! | உலக்கையே ! நீ |
| वानस्पत्यः | மரத்தாற் செய்யப்பட்டதா யிருந்தும் |
| अद्रिः | கல்லாக |
| असि | இருக்கின்றாய். |
| सः | அத்தகைய நீ |
| देवेभ्यः | தேவர்களுக்கு |
| हव्यं | உணவாதற்குரிய |
| इदं | இந்த நெல்லை |
| सुशमि | இனிது சாந்தப்படுமாறு |
| शमिष्व | உமியைப் போக்கி, நன்கு சமப்படுத்துவாயாக. அதாவது இனிது பக்குவப்படுத்துவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், உலக்கையை எடுத்துக்கொள்ளல் வேண்டும் என்பதாம்.*

குறிப்பு :— *ஈண்டு, உலக்கையை எடுத்துக்கொண்டு,* 'हविष्कृदेहि' *அவி செய்வோய் ! வருவாயாக, என்று மும்முறை அழைத்தல் வேண்டும். இது பத்தினியைக் கூப்பிடல் என்ப.*

பத்தினி—'अवरक्षो दिवः' *என்பது முதலிய மந்திரத்தால் நெல்லைக் குத்தல் வேண்டு மென்பதும் உணரற்பாலது.* 10

---

பதினோராம் விநியோகத் தொடக்கம்.

*வேட்போன், ஆக்கினீந்திரனை நோக்கி* 'उच्चैः समाहन्तवै' '*ஆக்கினீந்திர ! நீ பேரொலியெழ அடித்தல் வேண்டும்' என்று, ஆக்கினீந்திரனை ஏவல் வேண்டும்.*

*பின்னர் ஆக்கினீந்திரன்,* 'देवस्य त्वा' *என்பது முதலிய மந்திரத்தால், சம்மியை (தலை வைத்துள்ள ஒரு புரசமரத்தின் தடியை) எடுத்துக்கொள்ளல் வேண்டும்.*

பதினோராம் விநியோகம்.

ஒலிமிகுமாறு அம்மியின்மீதுங் குழவியின்மீதும் தடியால் தட்டுதல் (அடித்தல்).

மந்திரம் :

**इषमा वदोर्जमा वद्द्युमद्वदत वयँ संघातं जेष्म ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **हे पाषाण !** | கல்லே ! நீ |
| **इषं** | அவியாகிய அன்னத்தையும் |
| **ऊर्जं** | இன்சுவையையும், (வேள்வித்தலைவன் கொண்டு வருவானென) |
| **आवद** | தேவர்கட்குச் சொல்வாயாக. |
| **हे यज्ञायुधानि !** | வேள்விச் சாதனங்களே ! நீங்களும் |
| **द्युमत्** | அவி மிகுந்த இன்சுவை யுடையதென்று |
| **वदत** | தேவர்கட்குச் சொல்வீர்களாக. |
| **वयं** | யாம், (ஒலியால்) |
| **संघातं** | பகைவர்களின் கூட்டத்தை |
| **जेष्म** | வெல்வோமாக. |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தை, மும்முறை மறித்தும் மறித்தும் ஓதிக்கொண்டு, அத் தடியால், அம்மியில் இருமுறையும், குழவியில் ஒருமுறையும், குழவியில் ஒரு முறையும், அம்மியில் இரு முறையும் மீண்டும் அம்மியில் இருமுறையும், குழவி யில் ஒரு முறையுமாக ஒன்பது முறை அடித்தல் வேண்டு மென்பதாம்.*

குறிப்பு :—*இவ்வொலி, வெற்றியைத் தருவதாம் என்பது கருத்து.*　11

---

பன்னிரண்டாம் விநியோகம்.

பின்னர். வேட்போன், முறத்தை யிழுத்துக் கோள்ளல்.

மந்திரம் :

**वर्ष वृद्धमसि ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **हे शूर्प !** | *முறமே! நீ* |
| **वर्ष वृद्धं** | *மழையால் வளரும் மூங்கிலாக* |
| **असि** | *இருக்கின்றாய்.* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், வேதிகையிலிருக்கும் முறத்தை வலித்துக்கொள்ளல் வேண்டு மென்பதாம்.*

குறிப்பு :—*மூங்கிலாற் செய்யப்பட்டிருத்தலின், முறம் மூங்கிலென்று உபசரிக்கப்பட்டது. மழையால் வளர்வன பலவாயினும், மழையால் வள ருவது என்பது இங்கு மூங்கிலையே யுணர்த்தி நின்றது.*　12

---

பதின்மூன்றும் விநியோகத் தோடக்கம்.

'वर्ष वृद्धाः स्थ' *என்னும் மந்திரத்தால், குத்திவைத்துள்ள அவியை (நெல்லை)ப் போற்றிக்கொள்ளல் வேண்டும்.*

பதின்மூன்றும் விநியோகம்.

குத்திய நெல்லை முறத்தில் எடுத்தல்.

மந்திரம் :

**प्रति त्वा वर्ष वृद्धं वेत्तु ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **हे व्रीहि समूह !** | குத்துப்பட்ட நெற் குவியலே! |
| **त्वा** | உன்னை, |
| **वर्षं वृद्धं** | முறம் |
| **वेत्तु** | உணர்ந்து கொள்வதாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குத்தி வைத்திருந்த நெல்லை, முறத்தில் எடுத்துக்கொள்ளல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—கீழே சிந்தாமல், குத்திய நெல்லை எடுத்து முறத்தில் வைத்தல் வேண்டும் என்பது. 13

பதினான்காம் விநியோகம்.
நெல்லைக் கொழித்தல்.

மந்திரம் :

**परापूतं रक्षः परापूता अरातयः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **रक्षः** | அசுரர் |
| **परापूतं** | முழுதும் ஒழிந்தனர். |
| **अरातयः** | பகைவர் |
| **परापूताः** | நீங்கிவிட்டனர். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உமியைப் புடைத்துத் தள்ளல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—உமிகளை அசுரர்களாகப் பாவனை செய்துகொண்டு குப்பைக் குழியிற் புடைத்தல் வேண்டுமென்பது முணரற்பாலது. 14

பதினைந்தாம் விநியோகத் தொடக்கம்.

'प्रविद्धं रक्षः' என்பது முதலிய மந்திரத்தால், கீழே புடைத்துத் தள்ளிய உமிகளைப் போற்றிவிட்டு, மத்திய கபாலத்தில் (நடுவில் வைக்கவேண்டிய அகலில்) அவ் வுமிகளை எடுத்து வைத்தல் வேண்டும்.

பதினைந்தாம் விநியோகம்.

மான்தோலின் கீழே அந்த உமியை வைத்தல்.

மந்திரம் :

**रक्षसां भागोऽसि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे तुष !** | *உமியே! நீ* |
| **रक्षसां** | *அசுரர்களின்* |
| **भागः** | *பாகமாக* |
| **असि** | *இருக்கின்றாய்.* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், அகலில் எடுத்துவைத்த உமியை, மான் தோலின் கீழ் வாயு மூலையிற் கொட்டி வைத்தல் வேண்டும் என்பதாம்.*

குறிப்புகள் :—*இது, அசுரர், தமக்கும் அவி கொடுக்குமாறு போரிடா திருத்தற் பொருட்டாம். பின்னர், கையால் நீரைத் தொடல் வேண்டும்.*

*ஈண்டு, வேள்வித்தலைவன், 'रक्षोभ्य इदं न मम' அதாவது 'இது என்னு டையதன்று இதை அசுரர்கட்குக் கொடுத்துவிட்டேன்' என்று கூறிவிட்டுக் கையால் நீரைத் தொடல் வேண்டும்.* 15

---

பதினாறும் விநியோகத் தொடக்கம்.

*வேட்போன், உமியை யெடுத்த அந்த அகலைக் கழுவி, தனியே பத்திர மாக வைத்துவிட்டு, கையில் நீரைத் தொட்டுக் கொள்ளல் வேண்டும்.*

பதினாறும் விநியோகம்.

அரிசியுடன் குத்துப்படாதிருந்த நெல்லைப் பொறுக்கியெடுத்தல்.

மந்திரம் :

**वायुर्वो विविनक्तु ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे तण्डुलाः !** | *அரிசிகாள்!* |
| **वः** | *உங்களை* |
| **वायुः** | *காற்று* |
| **विविनक्तु** | *குத்துப்படாத நெல்லினின்றும் வேறுபடுத்துவ தாகுக.* |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அரிசியையும், குத்துப்படாத நெல்லையும் வேறு பிரித்தல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—குத்திய நெல்லில், உமி விடுபடாதவற்றையும், அரிசியானவற்றையும் தனித்தனி வேறாக்கல் வேண்டுமென்பது. 16

---

பதினேழாம் விநியோகம்.

அரிசியைப் பாத்திரத்தில் எடுத்து வைத்தல்.

மந்திரம் :

**देवो वः सविता हिरण्यपाणिः प्रतिगृह्णातु ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे तण्डुलाः !** | அரிசிகளே ! |
| **वः** | உங்களை |
| **सवितादेवः** | சூரிய தேவனென்னும் |
| **हिरण्यपाणिः** | பொன் மோதிர மணிந்துள்ள கையையுடையவன் |
| **प्रतिगृह्णातु** | எடுத்து வைப்பானாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், சூரியன் எடுத்து வைக்கின்றதாகப் பாவித்துக் கொண்டு ஒரு பாத்திரத்தில் அரிசியை எடுத்து வைத்தல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு :—அரிசியைப் பாதுகாப்புடன் எடுத்து வைத்துக் கொள்ளல் வேண்டுமென்பது கருத்து. 17

இவ் வநுவாகத்தின் பரிசேடம்.

ஈண்டுச் சூத்திர விநியோகத்தைத் தழுவி, 'अदब्धेनवश्चक्षुषावपश्यामि' என்பது முதலிய மந்திரத்தால் இனிது நோக்கி, அரிசியை யெடுத்து, மந்திரம் ஓதாமல் உரலிற் போட்டு, 'त्रिफली कर्तवै' அதாவது தவிட்டைப் போக்குபவளே ! வருவாயாக, என்று பத்தினியைக் கூப்பிடல் வேண்டும்.

அவள் வரத் தடைப்படில் அது செய்பத்தக்கார் வேறே ஒருவரைக் கூப்பிடல் வேண்டுமென் றுணர்க.

பின்னர், பத்தினி, 'देवेभ्यः शुन्धध्वं, देवेभ्यः शुध्यध्वं, देवेभ्यः शुम्भध्वम्' என்னும் மந்திரங்களை ஓதிக்கொண்டு, அரிசியைத் தவிடு விடுபடுமாறு மீண்டுந் தீட்டல் வேண்டும். அல்லது, மந்திரமிலாது தீட்டல் வேண்டும்.

பின்னர், வேட்போன், தவிட்டை யெடுத்து அதற்குரிய பாத்திரத்திற் செவ்வையாய் வைத்துவிட்டு, அரிசியைக் களைந்து, கழுகிய அந்நீரை, குப்பைக் குழிக்கு மேற்கில் 'रक्षसां भागधेयं' என்பது முதலிய மந்திரத்தால் மும்முறை யாக ஊற்றிவிட்டு, கையில் தண்ணீரைத் தொட்டுக்கொள்ளல் வேண்டும். 'பிராசித்ரஹரணம்' அதாவது, தொன்னை போன்ற பாத்திரத்தாலாவது, உரலா லாவது கழுவிய நீரை யெடுத்துக் கொட்டல் மரபாம். யாதானுமொரு பாத்தி ரத்தால் எடுத்துக் கொட்டலு முண்டு.

வேள்வித்தலைவன், ஈண்டு 'रक्षोभ्य इदं न मम' என்று தியாகஞ் செய்து விட்டு, நீரைக் கையால் தொட்டுக் கொள்ளல் வேண்டு மென்பதாம்.

ஐந்தாம் அநுவாகம் முடிந்தது.



## ஆறும் அநுவாகம்.



### விடயச் சுருக்கம்.

अवेति पूर्ववत्तत्र शम्यां स्थापयते दिवः ।
धिषणा द्वे तथाऽमानौ देवेत्यधिवपेद्धविः ॥ १ ॥
प्राणायेति त्रिभिः पिष्ट्वा दीर्घेत्यन्त उपोहति ।
देवोऽजिने स्कन्दयेत प्रोक्ता एकादश त्विह ॥ २ ॥

மான் தோலை யெடுத்து உதறி, விரித்து விட்டு, அதன் மேல் 'சம்மியை' என்னும் ஒரு புரசமரத் தடியை வைத்து, அதன் மேல் அம்மியைத் தூக்கி வைத்து, குழவியை யெடுத்து அதன் மேலே வைத்து, அரிசியைப் போற்றி, அம்மியின்மீது அரிசியை எடுத்துவைத்து, அரைத்து, குழவியைக் கொண்டே மாவை மான் தோலின்மீது தள்ளிவிட்டு, மீந்த அரிசியையும் அரைத்து அம் மாவையும் எடுத்து வைத்துக்கொள்ளல் வேண்டும். அம்மியில் ஒட்டிய மாவை யும் அதற்குரிய பாத்திரத்தில் எடுத்து வைத்துக்கொள்ளல் வேண்டும் என் பதாம்.



## முதற் காண்டம் - முதற் பிரபாடகம்.

## ஆறும் அநுவாகம்.

இது, ஒரு பஞ்சாதிக்குமேல், 15 பதங்களைக்கொண்டது.

அரிசியை மாவாக்குதற் (தண்டுல பேஷணத்திற்) குரிய மந்திரங்கள்.

अवधूतꣳ रक्षोऽवधूता अरातयोऽदित्यास्त्वगसि प्रति त्वा पृथिवी वेत्तु दिवः स्कम्भनिरसि प्रति त्वाऽदित्यास्त्वग्वेत्तु धिषणाऽसि पर्वत्या प्रति त्वा दिवः स्कम्भनिर्वेत्तु धिषणाऽसि पार्वतेयी प्रति त्वा पर्वतिर्वेत्तु देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्यां मधि वपामि धान्यमसि धिनुहि देवान्प्राणाय त्वाऽपानाय त्वा व्यानाय त्वा दीर्घामनु प्रसितिमायुषे धां देवो वः सविता हिरण्यपाणिः प्रतिगृह्णातु ॥ १ ॥

முதல் விநியோகத் தொடக்கம்.

*வேட்போன், 'देवस्य त्वा सवितुः' என்பது முதலிய மந்திரத்தால், முன்போல் கரிய மான் தோலை எடுத்துக் கொள்ளல் வேண்டும்.*

முதல் விநியோகம்.

மான் தோலை மும்முறை உதறுதல்.

மந்திரம் :

अवधूतꣳ रक्षोऽवधूता अरातयः ।

என்பது.

பதவுரை.—*இதனுரை முன் கூறப்பட்டது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், மான் தோலை, வேள்விக் குப்பைமேட்டில் மும்முறை உதறல் வேண்டும் என்பதாம்.*

குறிப்பு :—*முன்னர்க் கூறப்பட்டதேயாம். ஈண்டுக் கபாலங்களை வைத்தலைக் கூறல், மாவரைத்த பின்னரே பயனுடையதாதல் கருதி, முன்னர் மா வரைத்தல் கூறப்படுகின்றது.*

இரண்டாம் விநியோகம்.

மான் தோலைப் பூமியின்மீது விரித்தல்.

மந்திரம் :

**अदित्यास्त्वगसि प्रति त्वा पृथिवी वेत्तु ।**

என்பது.

பதவுரை.—இதனுரை முன் கூறப்பட்டது.

சாயணபாடியக் கருத்து.—முன் கூறப்பட்டதேயாம்.

குறிப்பு :—இதைப் பற்றிய கதையும் முன் கூறப்பட்டுள்ளது. ஈண்டு, முன்போல், விரித்த மான் தோலிற்கு மேற்கில் உட்கார்ந்து மான் தோலைப் பிடித்துக் கொள்ளல் வேண்டும். 2

---

மூன்றும் விநியோகம்.

மான் தோலின் மீது சம்மியை (தலையுடைய புரசமரத்தின் தடியொன்றை) வைத்தல்.

மந்திரம் :

**दिवस्कम्भनिरसि प्रतित्वाऽदित्यास्त्वग्वेत्तु ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे शम्ये !** | சம்மியை யென்னுந் தடியே! நீ |
| **दिवः** | வானுலகை |
| **स्कम्भनिः** | தாங்குகின்றவனாக |
| **असि** | இருக்கின்றாய். |
| **त्वा** | உன்னை |
| **अदित्याः त्वक्** | பூமியின் மீது விரித்துள்ள மான் தோல் |
| **प्रति वेत्तु** | உணர்ந்து கொள்ளுவதாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தலை வைத்துள்ள 'சம்மியை' என்னும் தடியை, வடக்கு நுனியாக மான் தோலின் மீது வைத்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—தடியை வைத்து, அத்தடியைப் பிடித்துக் கொள்ளல் வேண்டும் என்பதுங் காண்க. இது, அம்மியில் ஒரு பக்கம் உயர்ந்திருத்தற் பொருட்டென்க. 3

---

நான்காம் விநியோகம்.

சம்மியை என்னும் தடியின் மீது அம்மியை வைத்தல்.

மந்திரம் :

**धिषणासि पर्वत्या प्रति त्वा दिवस्कम्भनिर्वेत्तु ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **दृषद्रूपे !** | *அம்மிக்கல்லே ! நீ* |
| **धिषणा** | *வன்மையால்* |
| **पर्वत्या** | *மலையை யொத்ததாக* |
| **असि** | *இருக்கின்றாய்.* |
| **त्वा** | *உன்னை* |
| **दिवस्कम्भनिः** | *வானைத்தாங்கும் சம்மியை யென்னுந் தடியானது* |
| **प्रति वेत्तु** | *உணர்ந்து கொள்ளுவதாகுக.* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், சம்மியையின்மீது, ஒரு புறம் உயரமா யிருக்கும்படி அம்மியை எடுத்து வைத்தல் வேண்டும் என்பதாம்.*

குறிப்பு :—*அம்மியை, அசையாமற் பிடித்துக் கொள்ளல் வேண்டும் என்பதையு முணர்க.* 4

ஐந்தாம் விநியோகம்.

குழவியை எடுத்து வைத்தல்.

மந்திரம் :

**धिषणाऽसि पार्वतेयी प्रति त्वा पर्वतिर्वेत्तु ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे उपले !** | *குழவிக் கல்லே ! நீ* |
| **पार्वतेयी** | *மலையைப் போன்ற* |
| **धिषणा** | *வன்மை யுடையதாக* |
| **असि** | *இருக்கின்றாய்.* |
| **त्वा** | *உன்னை* |
| **पर्वतिः** | *மலையின் சம்பந்தமாகிய அம்மிக்கல்* |
| **प्रति वेत्तु** | *நன்கு அறிவதாகுக.* |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குழவிக்கல்லை யெடுத்து அம்மியின் மீது வைத்தல் வேண்டும் என்பதாம். 5

ஆறும் விநியோகத் தொடக்கம்.

'अंशवः स्थ मधुमन्तः' என்னும் மந்திரத்தால் முன் அரிசியைப் போற்றிக் கொள்ளல் வேண்டும்.

ஆறும் விநியோகம்.

அவ்வத் தேவதையைக் குறித்து அம்மியில் அரிசியை யெடுத்து வைத்தல்.

மந்திரம் :

**देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्या मधिवपामि धान्यमसि धिनु हि देवान् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे तण्डुल !** | அரிசியே ! நீ |
| **धान्यमसि** | பாதுகாப்பாற்றுவதாக இருக்கின்றாய். ஆதலின், |
| **देवान्** | தேவர்களை |
| **धिनुहि** | பிரியப்படுத்துவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அம்மி, கொள்ளும் வரை அரிசியை யெடுத்து அம்மியின் மீது வைத்தல் வேண்டு மென்பதாம்.

'தேவஸ்ய' என்பது முதல், 'ஹஸ்தாப்யாம்' என்பது வரை முன் உரை கூறப்பட்டது.

குறிப்பு :—பௌர்ணமி யெனில், 'अग्नये' 'அக்கினியின் பொருட்டும்' 'अग्नीषोमाभ्यां' 'அக்கினி, சோமன் என்பவர்களின் பொருட்டும்' 'इन्द्राय वैमृधाय' 'இந்திர வைமிருதத்தின் பொருட்டும்' எனச் சேர்த்துக் கொள்ளுக.

**जुष्टं** - என்பதும் பாடம் (அதாவது) வேண்டியவளவு என்பதாம்.

அமாவாசை யெனின்? சோமயாகஞ் செய்யாதவர்களுக்கு 'इन्द्राग्निभ्यां' என்பதைச் சேர்த்துக் கொள்க.

ஈண்டு, மும்முறை மந்திரத்துடனும், மந்திரமின்றி ஒரு முறையும் அரிசியை எடுத்து வைத்தல் வேண்டு மென்பதும் உணரற்பாலது.

(போ-சூ.) இம் மந்திரத்தை 'अधिवपामि' என்னும் வரை, ஒரு மந்திரமாகவும், மீதியை மற்றொரு மந்திரமாகவும் பிரித்து, இரண்டு மந்திரங்களாலும் அம்மியின் மேல் அரிசியை யெடுத்து வைத்தல் வேண்டு மென்பது. 6



ஏழாம் விநியோகம்.

*இது மூன்று விநியோகங்களைக் கொண்டது.*

மா வரைத்தல்.

மந்திரம்:

**प्राणाय त्वाऽपानाय त्वा व्यानाय त्वा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे तण्डुल !** | அரிசியே ! |
| **त्वा** | உன்னை |
| **प्राणाय** | பிராணன் பொருட்டும், (மற்றும் ;) |
| **त्वा** | உன்னை |
| **अपानाय** | அபானன் பொருட்டும், (மற்றும் ;) |
| **त्वा** | உன்னை |
| **व्यानाय** | வியானன் பொருட்டும் (அரைக்கின்றேன்). |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால், முறையே, கிழக்கும், மேற்கும், நடுவுமாகக் குழவியை ஓட்டி அரைத்தல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு:—வேள்வித்தலைவனுக்கு மூன்று பிராணனையும் உறுதிப்படுத்தும் பொருட்டு மூவகையாக இவ்வாறு அரைத்தலாம்.

பின்னர், மேற்கூறிய மந்திரத்தையே தொடர்ந்து ஓதிக்கொண்டு குழவியை இடைவிடாது ஓட விட்டரைத்தல் வேண்டும் என்பதையு முணர்க.

(போ-சூ.) இம் மூன்றையும் ஒரே விநியோகமாக்கி இம் மந்திரத்தால் மாவை அரைத்தல் வேண்டு மென்பது. 7, 8, 9



பத்தாம் விநியோகம்.

அம்மியின் மேல் கிழக்குப் புறத்தில் குழவியை யிழுத்துக்கொண்டு போதல்.

மந்திரம்:

**दीर्घामनु प्रसिति मायुषे धाम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे बाहू ! | கைகாள்! உங்களால் |
| अनुप्रसितिं | தொடர்ந்து அரைத்தற் பொருட்டு |
| दीर्घाँ | நீண்ட குழவியை |
| धाम् | தாங்கிக் கொண்டிருக்கின்றேன். எதற்கெனின்? |
| आयुषे | வேள்வித்தலைவனது ஆயுள் வளருதற் பொருட்டு. |

சாயணபாடியக் கருத்து,

இம் மந்திரத்தால், அம்மியின் கிழக்கு ஓரமாகக் குழவியைக் கொண்டு போதல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—குழவியை அம்மியின் கிழக்கிற் கொண்டு போய், அதனுல் அரைத்த மாவைச் சேர்த்து வைத்துக் கொள்ளில், மாவைத் தள்ளி விடுவதற்கு எளிதாமென்பது கருத்து.

(போ-சூ.) இம் மந்திரத்தால், கைகளைப் பார்த்தல் வேண்டு மென்பது. 10



பதினோராம் விநியோகம்.

அரைத்த மாவை, தோலின் மீது தள்ளுதல்.

மந்திரம் :

**देवो वः सविता हिरण्यपाणिः प्रतिगृह्णातु ॥**

என்பது.

பதவுரை.—இதனுரை முன் கூறப்பட்டது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குழவியைக் கொண்டே அரைத்த மாவைக் கீழே தள்ளி விடல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—மான் தோலின்மீது, மாவைத் தள்ளிவிடில் நன்கு அரைக்கப் பட்டதா? இல்லையா? வென நோக்குதற்கு நலமாம் என்பது கருத்து. 11

இனி, இவ் வநுவாகத்தின் பரிசேடம்.

பின்னர், 'अदब्धेनवश्चक्षुषाऽवेक्षे' என்னும் மந்திரத்தால், மாவைப் பார்த்து விட்டு, 'असं वपन्ती' என்பது முதலிய மந்திரத்தால், அரைக்காமல் மீந்த அரிசியை அரைத்தற் பொருட்டு, ஏவலாளியை யேனும், அல்லது பத்தினியை யேனும் விளித்தல் வேண்டும். (கூப்பிடல் வேண்டும்.)

ஈண்டுத் 'தாசி' என்பவள், கணிகை மாதரன்று, மற்றே, குலத்தொடர் பாய் அந்தணர் வீட்டில் தொழிற் செய்கின்றவளாவள்.

பின்னர், பத்தினியாவது, வேலைக்காரியாவது அரிசியை நன்றாய் மாவாக அரைத்தல் வேண்டும். அரைத்த பின்னர், வேட்போன் மாவைப் பாதுகாப்புடன் எடுத்து வைத்துக் கொள்ளல் வேண்டும்.

மற்றும், அம்மியில் ஒட்டியிருந்த மாவையும் உருட்டி யெடுத்து அதையும் அதற்குரிய பாத்திரத்தில் பத்திரப்படுத்தல் வேண்டும். இதுவும், மேல் வரும் ஆகுதி செய்வதற்காம் என்பதாம்.

ஆறும் அநுவாகம் முடிந்தது.

---

## ஏழாம் அநுவாகத் தொடக்கம்.

### அவதாரிகை.

ஆறும் அநுவாகத்தில் மாவரைத்தல் கூறப்பட்டது. இனி, மேல் புரோடாசஞ் செய்ய வேண்டுவது கூறற்பாலதா மாயினும், சூடாகாத கபாலங்களில் புரோடாசத்தை வேகவைத்தல் அமையாமையின், ஏழாம் அநுவாகத்தில் கபாலங்களை (அகல்களை)த் தீயின் மேல் வைத்தல் கூறப்படுகின்றது.

---

### விடயச் சுருக்கம்.

धृष्टिरादायोपवेष मपाङ्गारौ वियोजयेत् ।
निष्कापसारयेदेक मा देवान्यं तु शेषयेत् ॥ १ ॥

ध्रुवं कपालमाधाय निर्दाङ्गारं तथोपरि ।
धर्त्रं द्वितीयं धरुणं तृतीयं धर्मं सप्तमम् ॥ २ ॥

चितोष्टमं भृगू तेषु सर्वेष्वङ्गार रोपणम् ।
यानि स्वकाले संप्राप्ते कपालानि विमुञ्चति ॥ ३ ॥

अनुवाके सप्तमेऽस्मिन्नुक्ता द्वादश मन्त्रकाः ।

'உபவேஷம்' என்னும் தடியை யெடுத்து, காருகபத்தியம், அல்லது, ஆகவனீய மென்னுந் தீயிலிருந்து இரண்டு தணல்களை வெளியிற் றள்ளி, ஒன்றை யெறிந்துவிட்டு, ஒன்றைத் தென்புறத்தில் வைத்து, அதன் மேல், நடுவில் கபாலத்தை வைத்து, அதற்குக் கீழ்ப்புறத்தில் மூன்றும், தெற்கு, மேற்கு, வடக்கில் ஒவ்வொன்றும், கன்னி மூலையினும், வாயு மூலையினும் ஒவ்வொன்றுமாக எட்டுக் கபாலங்களையும் வைத்து விட்டு, காலைப் பாலைக் கறந்துக்கொண்டு, அவைகளின் மேல் தருப்பை முடிச்சால் தணல்களை யெடுத்து வைத்த பின்னர், பால் சூடுமாறு செய்தல் வேண்டும் என்பதாம்.

---

முதற் காண்டம் - முதற் பிரபாடகம்.

ஏழாம் அநுவாகம்.

இது, ஒரு பஞ்சாதிக்கு மேல் 48 பதங்களைக் கொண்டது.

மண்ணகல்களை (கபாலங்களை)த் தீயின் மேல் வைத்தற்குரிய மந்திரங்கள்.

धृष्टिरसि ब्रह्म यच्छापाग्नेऽग्निमामादं जहि निष्क्रव्याद॑ꣳ सेधाऽऽदेवयजं वह निर्दग्धꣳ रक्षो निर्दग्धा अरातयो ध्रुवमसि पृथिवीं दृꣳहाऽऽयुर्दृꣳह प्रजां दृꣳह सजातानस्मै यजमानाय पर्यूह धर्त्रमस्यन्तरिक्षं दृꣳह प्राणꣳ दृꣳहापानं दृꣳह सजातानस्मै यजमानाय पर्यूह धरुणमसि दिवं दृꣳह चक्षुः ॥ १ ॥ दृꣳह श्रोत्रं दृꣳह सजातानस्मै यजमानाय पर्यूह धर्मासि दिशो दृꣳह योनिं दृꣳह प्रजां दृꣳह सजातानस्मै यजमानाय पर्यूह चितः स्थ प्रजामस्मै रयिमस्मै सजातानस्मै यजमानाय पर्यूह भृगूणामङ्गिरसां तपसा तप्यध्वं यानि घर्मे कपालान्युपचिन्वन्ति वेधसः । पूष्णस्तान्यपि व्रत इन्द्रवायू विमुञ्चताम् ॥ २ ॥

முதல் விநியோகம்.

வேட்போன் உபவேஷத்தை (தணலைத் தள்ளி விடுதற்குரிய தடியை) யெடுத்தல்.

மந்திரம் :

धृष्टिरसि ब्रह्म यच्छ ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे उपवेष !** | உபவேஷ மென்னுந் தடியே! நீ, |
| **धृष्टिः** | தணலைத் தள்ளுவதில் வலிமிகுந்தவனாக |
| **असि** | இருக்கின்றாய். ஆதலின், |
| **ब्रह्म** | அவியை (தேவவுணவை)க் |
| **यच्छ** | கொடுப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், தணலேத் தள்ளுதற்குரிய 'உபவேஷம்' என்னுந் தடியை யெடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.*

குறிப்பு :—*முன்னர், கன்றைச் செலுத்துவதற்குக் கொண்டு வந்துள்ள புரசங் கொம்பின் அடியை வெட்டி வைத்துக் கொண்டிருந்த ஒட்டைச்சாண் அளவுள்ள தடியே இங்கு உபவேஷமாம்.* 1

---

இரண்டாம் விநியோகத் தொடக்கம்.

'रक्षसः पाणि दहाहिरसि बुध्न्यः' *என்னும் மந்திரத்தால், 'உபவேஷ மென்னும்' தீத் தள்ளுந் தடியை முன்னர்ப் போற்றிக் கொள்ளல் வேண்டும்.*

இரண்டாம் விநியோகம்.
தணல்களைத் தள்ளிவிடல்.

மந்திரம் :

**अपाग्नेऽग्नि मामादं जहि ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **अग्ने !** | *அக்கினியே! நீ* |
| **आमादं** | *அபக்குவத்தைத் தகிக்கின்ற* |
| **अग्निं** | *தீயை* |
| **अपजहि** | *நாசஞ் செய்வாயாக.* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், காருகபத்தியத் தீயிலேனும், ஆகவனீயத் தீயிலேனும், இரண்டு தணல்களைச் சிறிது வெளியிற் றள்ளிவிடல் வேண்டும் என்பதாம்.*

குறிப்பு :—*புநிதமாகிய தீயும், மாசுடைய தீயுமென இருவகைத் தீ யிருத்தலின் இரண்டு தணல்களென்க.* 2

---

மூன்றும் விநியோகமும், நான்காம் விநியோகமும்.
ஒரு தணலை வெளியிலெறிதல், மற்றொன்றைத் தெற்கில் வைத்தல்.

மந்திரம் :

**निष्क्रव्याद१ँ सेध । आदेव-यजं वह ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| हे गार्हपत्याग्ने ! | காருகபத்தியத் தீயே ! நீ |
| क्रव्यादं | இவ்வுலகிலுள்ள ஊனை யருந்துகின்ற தீயை |
| निस्सेध | வெளியிற் போக்கி நாசப்படுத்துவாயாக. |
| देवयजं | தேவாராதனைக்குரிய அக்கினியை |
| आवह | அழைப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இரண்டு தணல்களுள் ஒரு தணலை வாயு மூலையில் எறிந்துவிட்டு, மற்றொன்றைத் தென்புறமாக வைத்தல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—இது, மாசுடைய தீயை விலக்கி விட்டதை ஒக்கும் என்பதை யுணர்க. ஈண்டு, தீயானது, அட்டல் தீ, வேள்வித் தீ, இடுகாட்டுத் தீயென மூவகைத்தென் றுணர்தற்பாலது.

தணலை எறிந்தவுடனே கையில் நீரைத் தொட்டுக்கொள்ளல் வேண்டும். 3, 4



ஐந்தாம் விநியோகம்.

தணலின் மேல், நடுக் கபாலத்தை வைத்தல்.

மந்திரம் :

**ध्रुवमसि पृथिवीं द॑ँहाऽऽयुर्दृ॑ँह प्रजां द॑ँह सजातानस्मै यजमानाय पर्यूह ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे कपाल ! | நடுவில் வைக்கின்ற கபாலமே ! நீ |
| ध्रुवं | உறுதி யுடையதாக |
| असि | இருக்கின்றாய். ஆதலின், |
| पृथिवीं | பூமியை |
| दृंह | வன்மை யுடையதாகச் செய்வாயாக. மற்றும், |
| आयुः | ஆயுளை |
| दृंह | உறுதிப்படுத்துவாயாக. |
| प्रजां | பிரசையை |
| दृंह | நிலைப்படுத்துவாயாக. |

| | |
|---|---|
| **अस्मै यजमानाय** | இவ் வேள்வித்தலைவனுக்கு |
| **सजातान्** | அவனுடைய சுற்றத்தார்களை |
| **पर्यूह** | ஏவலாளர்களாகச் செய்வாயாக. |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், தள்ளி வைத்த அத் தணலின் மீது நடுவிலிருக்கின்ற தர்கிய புரோடாசத்தைச் சுடுதற்கு வேண்டிய ஒரு அகலை வைத்தல் வேண்டும் என்பதாம்.*

குறிப்பு :—*முன்னர், உமியை வாரி வைத்துள்ள கபாலமே இப்போது நடுவில் வைக்கும் கபாலமாம். ஈண்டு, கபாலம், அகல், உடைந்த மட்பாண்டத்தின் வட்ட வடிவாகிய கூறு என்பது பரியாயச் சொற்களாம். இம் மந்திரம் பாட முறையிற் பின்னுள்ளதாம். ஈண்டுத் தரையானது, சூடுண்டு வன்மையற்றதாய் ஆகற்க என்பது கருத்தாம்.* 5

---

ஆறும் விநியோகம்.

கபாலத்தின் மீது தணலை யெடுத்து வைத்தல்.

மந்திரம் :

**निर्दग्धꣳ रक्षो निर्दग्धा अरातयः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **रक्षः** | அசுரர் |
| **निर्दग्धं** | எரிந்து விட்டனர். |
| **अरातयः** | பகைவர் |
| **निर्दग्धाः** | கொளுத்தப்பட்டனர். |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், அகலின் மேல் தணலை யெடுத்து வைத்தல் வேண்டும் என்பதாம்.*

குறிப்பு :—*இதனால், அகலைப் பற்றிக்கொண்டு அசுரர் இருப்பரேல் அவர் ஒழிவரென்பது கருத்து.*

*இது, பாடமுறையில் முன்னுள்ளதாம்.* 6

---

## ஏழாம் விநியோகம்.

நடுக் கபாலத்திற்குக் கிழக்கில் இரண்டாவது கபாலத்தை வைத்தல்.

மந்திரம் :

**धर्त्रमस्यन्तरिक्षं दृꣳह प्राणदृꣳहापानं दृꣳह सजातानस्मै यजमानाय पर्यूह ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **हे कपाल !** | அகலே ! நீ |
| **धर्त्रं** | மேலுள்ள கபாலங்களைத் தாங்குவதாக |
| **असि** | இருக்கின்றாய். ஆதலின், |
| **अन्तरिक्षं** | வானை |
| **दृंह** | உறுதி யாக்குவாயாக. |
| **प्राणं** | பிராணனை |
| **दृंह** | வன்மை யுடையதாக்குவாயாக. |
| **अपानं** | அபான வாயுவை |
| **दृंह** | வலிப்படுத்துவாயாக. |

### சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், முன் வைத்த அகலுக்குக் கிழக்காய் இரண்டாவதாக ஒரு அகலை வைத்தல் வேண்டு மென்பதாம்.*

குறிப்பு :—*இம் முறையில் சிற்சில பேதங்களுண்டென்ப. அது பிராமணத்திலு முண்டென் றுணர்க.*

*எஞ்சிய மந்திரத்திற்கு உரை முன் கூறப்பட்டிருக்கிறது.* 7

---

## எட்டாம் விநியோகம்.

இரண்டாங் கபாலத்திற்குக் கிழக்காய் மூன்றாங் கபாலத்தை வைத்தல்.

மந்திரம் :

**धरुणमसि दिवं दृꣳह चक्षुर्दृꣳह श्रोत्रं दृꣳह सजातानस्मै यजमानाय पर्यूह ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे कपाल !** | கபாலமே! நீ |
| **धरुणं** | மேல் வைக்கின்ற அகல்களைத் தாங்குகின்றவனாக |
| **असि** | இருக்கின்றாய். ஆதலின், |
| **दिवं** | வானை |
| **दृंह** | வலிவுப்படுத்துவாயாக. மற்றும், |
| **चक्षुः** | கண்ணை |
| **दृंह** | உறுதி செய்வாயாக. |
| **श्रोत्रं** | செவியை |
| **दृंह** | வன்மை யுடையதாய்ச் செய்வாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இரண்டாவது அகலுக்குக் கீழ்புறமாய் மூன்றாவதாக ஒரு அகலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

எஞ்சியது முன்னர்க் கூறியது.

ஈண்டுச் சூத்திர விநியோகத்தைத் தழுவி, '**चिदसि विश्वासु दिक्षुसीद**' என்னும் மந்திரத்தால் நடுக் கபாலத்திற்குத் தெற்கில் நான்காவது கபாலத்தையும், '**परिचिदसि विश्वासु दिक्षुसीद**' என்னும் மந்திரத்தால் நடுக் கபாலத்திற்கு வடக்கில் ஐந்தாவது கபாலத்தையும், '**मरुतां॒शर्धोऽसि**' என்னும் மந்திரத்தால் நடுக் கபாலத்திற்கு மேற்கில் ஆறாவது கபாலத்தையும் வைத்தல் வேண்டும்.

(போ·சூ) இம்மந்திரத்தால், நடுவில் வைக்கப்பட்ட கபாலத்திற்கு மேற்கில் ஒரு கபாலத்தை வைத்தல் வேண்டு மென்பது. 8

---

ஒன்பதாம் விநியோகம்.

ஏழாவது கபாலத்தை வைத்தல்.

மந்திரம் :

**धर्मासि दिशो दृꣳह योनिं दृꣳह प्रजां दृꣳह सजातानस्मै यजमानाय पर्यूह ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे कपाल !** | கபாலமே! நீ |
| **धर्म** | கபாலங்களைத் தாங்குவோனாக |

மந்திரங்கள்)

| | |
|---|---|
| **असि** | இருக்கின்றாய். ஆதலின், |
| **दिशः** | திசைகளை |
| **दृंह** | உறுதிப்படுத்துவாயாக. |
| **योनिं** | காரணத்தை |
| **दृंह** | வலுப்படுத்துவாயாக. |
| **प्रजां** | காரியமாகிய பிரசையையும் |
| **दृंह** | உறுதிப்படுத்துவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தெற்குக் கபாலத்திற்குக் கிழக்கில் அதாவது நடுக் கபாலத்திற்கு அக்கினி மூலையில் ஏழாவது கபாலத்தை வைத்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—கபாலங்களை வைக்கும் முறை பல்வகை வேறுபாடுகளை யுடையது. அவற்றுள் இது ஒரு விதமாகிய முறையா மென்றுணர்க. ஏனையவற்றைப் பாடியத்திற் காண்க. எஞ்சியது முற்கூறியதே.

(போ-சூ.) இம் மந்திரத்தால், நடுவில் வைக்கப்பட்ட கபாலத்திற்குத் தெற்கில் ஒரு கபாலத்தை வைத்தல் வேண்டு மென்பது. 9

---

பத்தாம் விநியோகம்.

எட்டாங் கபாலத்தை வைத்தல்.

மந்திரம் :

**चितस्थः प्रजामस्मै रयिमस्मै सजातानस्मै यजमानाय पर्यूह ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे कपाल !** | கபாலமே! நீ |
| **चित: स्थ** | அகன்றதாக இருக்கின்றாய். ஆதலின், |
| **अस्मै** | இவ் வேள்வித்தலைவனுக்கு |
| **प्रजां** | மகவையும் |
| **रयिं** | தனத்தையுங் கொடுப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் வடக்கிலுள்ள கபாலத்திற்குக் கிழக்கில், அதாவது நடுக்கபாலத்திற்குக் கன்னி மூலையில் எட்டாங் கபாலத்தை வைத்தல் வேண்டு மென்பதாம். எஞ்சியது முற்கூறியதேயாம்.

குறிப்பு :—பௌர்ணமியில், விநியோகம்—2-ல், 'अपाग्नेऽग्निमामादं जहि' என்பது முதலிய தணலை யெடுக்கும் விதிகளால், அக்கினிக்கு எட்டுக் கபாலங்களை வைத்தது போன்றே, அக்கினி சோமத்திற்கு எட்டுக் கபாலங்களை வைத்து விட்டு, 'चितस्थोर्ध्वचितः' என்னும் மந்திரத்தால் நிருதி மூலையிலும், வாயு மூலையிலும், ஈசான மூலையிலும், அமையுமாற்றால் மூன்று கபாலங்களை வைத்தல் வேண்டும். இவ்வாறே, இந்திரன், வைமிருதம் என்பவற்றிற்கும் வைத்தல் வேண்டும் என்பது உணரற்பாலது. அமாவாசையில், இந்திரன், அக்கினிகளின் கபாலங்களை இவ்வாறே வைத்தல் வேண்டும் என்க. பன்மை அன்பின் பொருட்டு.

(போ-சூ.) இம் மந்திரத்தால், இரண்டாவதாக வைக்கப்பட்ட கபாலத்திற்கு கிழக்கில் ஒரு கபாலத்தை வைத்தல் வேண்டு மென்பது. 10

---

பதினோராம் விநியோகத் தொடக்கம்

இவ்வாறு எட்டுக் கபாலங்களையும் வைத்த பின்னர், மாடு கறக்கும் பிரகரணத்தின் முதல் விநியோகத்திற் கூறியுள்ள, 'एता आचरन्ति मधुमद्दुहानाः' என்பதை முதலாய்க் கொண்டதும், பாற் கலசத்தைக் கழுவிவிடலை ஈறுகக் கொண்டதுமாகிய, காலைப் பால் கறக்கும் காரியங்களைச் செய்தல் வேண்டும். இதில், சாகாபவித்திரம், (பால் வடிக்கும் தருப்பை சுற்றியுள்ள புரசங் கொம்பு) வடக்கில் நுனியாக வைத்தல் வேண்டுமென் றுணர்க.

ஈண்டுப் பௌர்ணமியில், மேற் கூறிய, 'ஏதா: ஆசரந்தி' என்பது முதலிய விதிகள் இல்லை யென்பதும், அமாவாசையில் சோமயாகம் பண்ணுதவனுக்கும் இல்லை என்பதும் உணர்தற்பாலன. என்னை? இரண்டிடத்தும் சாந்நாய்யம் (பால் தயிர்) இன்மையின் என்க.

பதினோராம் விநியோகம்.

எல்லாக் கபாலங்களின் மேலும் தனல்களை வைத்தல்.

மந்திரம் :

भृगूणा मङ्गिरसां तपसा तप्यध्वम् ।

என்பது

பதவுரை.

| | |
|---|---|
| हे कपालाः ! | கபாலங்களே ! நீங்கள் |
| भृगूणां | பிருகு முனிவரின் புத்திரர்களான |
| अङ्गिरसां | ஆங்கிரசர்களின் |
| तपसा | தவமாகிய தீயால் |
| तप्यध्वम् | சுடப்படுவீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அகல்களின் மீது தணல்களை யெடுத்து வைத்தல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—அகல்கள், முன்னர்ச் சுடப்பட்டனவாதலின் இதுவும் ஒரு வகைச் சமற்காரமா மென்றுணர்க. அக்கினியை, நற்றவ முனிவரின் தவமாகப் பாவித்துக்கொண்டு அகல்களில் தணலை வைத்தல் வேண்டு மென்பது கருத்து. வேதம் என்னும் தருப்பை முடிச்சால் தணலை யெடுத்து வைத்தல் வேண்டு மென்பதையு முணர்க. 11

பன்னிரண்டாம் விநியோகம்.

அகல்களை வெளியிலெடுத்துப் போடுதல்.

மந்திரம் :

यानि घर्मे कपालान्युपचिन्वन्ति वेधसः ।
पूष्णस्तान्यपि व्रत इन्द्रवायू विमुञ्चताम् ॥

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **वेधसः** | வேட்போர்கள் |
| **यानि कपालानि** | எத்தனை கபாலங்களை |
| **घर्मे** | காருகபத்தியத் தீயின்கண் |
| **उपचिन्वन्ति** | சூடுறச் செய்கின்றார்களோ |
| **तान्यपि** | அவைகளனைத்தையும் |
| **पूष्णः** | பாதுகாப்பாளனாகிய வேள்வித்தலைவனுடைய |
| **व्रते** | விரதம் முடிந்தபோது |
| **इन्द्रवायू** | இந்திரன், வாயுவென்னு மிருவரும் |
| **विमुञ्चताम्** | வெளியில் எடுத்தெறிந்து விடுவார்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இந்திரனும், வாயுவும் அகல்களை வெளியிலெடுத்துப் போடுவதாகப் பாவித்துக்கொண்டு, கபாலங்க ளனைத்தையும் வெளியில் எடுத்துப் போட்டு விடல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—இம் மந்திரம், வேள்வி முடிந்த பின்னர் விநியோகிக்கப்படுவதாயினும், தொடர்புபற்றி ஈண்டுக் கூறப்பட்டுள்ளது.

போதாயன சூத்திரத்தில் ‘ वियुंक्ताम् ’ எனப் பாடங்கொண்டு, முன்வைத்த கபாலங்களையே நெருக்கி வைத்தலில் இதை விநியோகிக்கப்பட்டிருக்கின்றது.

‘ पूष्णः ’ என்பதை அக்கினி யென்கின்றனர் பட்டபாஸ்கரர்.

ஏழாம் அநுவாகம் முடிந்தது.

## எட்டாம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

संवपामि हविर्वापः समा तत्र जलं क्षिपेत् ।
अद्भ्यः संप्लाव्य तप्ताभिर्जलं (न) संयौत्यशेषतः ॥ १ ॥
अग्नाग्नी निर्दिशेद्भागौ मखपिण्डं करोति हि ।
घर्मः कपाले निक्षिप्य प्रथयेदुरुमन्त्रतः ॥ २ ॥
त्वचं श्लक्ष्णी करोत्यद्भिरन्तः पर्यग्नये कृतिः ।
श्रपयत्युल्मुकैर्देवौ ह्यग्निस्ते ज्वाल्यते कुशैः ॥ ३ ॥
संवेदेन च साङ्गार भस्मनाऽऽच्छादयेद्धविः ।
एकान्तर्वेदि लेखासु क्षालनं निनये त्रिभिः ॥ ४ ॥
अनुवाकेऽष्टमे सप्तदश मन्त्राः प्रकीर्तिताः ।

மாவை யெடுத்து வறுத்து, மாவில் தண்ணீரையும், வெந்நீரையும் விட்டு ஊறவைத்து, பிசைந்து, உருண்டையாக்கி, ஒவ்வொரு தேவர்களுக்கும் தனித் தனியே பிரித்து, சுட்டிக் காட்டி, புரோடாசஞ் செய்து, முன்னிருந்த தணல் களைத் தள்ளிவிட்டு, அகலின்மேல் புரோடாசத்தை வைத்து, தட்டிவிட்டு, நீரால் தடவி, தணலாற் சுற்றி, தணலை யெடுத்து மேலே வைத்து, கொள்ளியாற் சூடு காட்டி, தருப்பையைக் கொளுத்திப்போட்டு, சாம்பரைத் தள்ளி மூடி, தீயைப் போற்றி, கையையும் மரப் பாண்டத்தையும் கழுவி, அந்நீரைக் கொள்ளியாற் சூடாக்கிக் கலந்துகொண்டு, அந்தர்வேதியில் மூன்று கோடு கிழித்து, அந் நீரை, கிழக்கிலிருந்து மேற்காய்த் தெளித்த லென்பதாம்.

---

### முதற் காண்டம் - முதற் பிரபாடகம்.

### எட்டாம் அநுவாகம்.

இது, ஒரு பஞ்சாதிக்கு மேல் 22 பதங்களைக் கொண்டது.

---

புரோடாச நிட்பாதன (புரோடாசத்தைச் செய்வதற்குரிய) மந்திரங்கள்.

सं वपामि समापो अद्भिरग्मत समोषधयो रसेन सꣳ रेवती-
र्जगतीभिर्मधुमती मधुमतीभिः सृज्यध्वमद्भ्यः परिप्रजाताः स्थ
समद्भिः पृच्यध्वं जनयत्यै त्वा सं याम्यग्नये त्वाऽग्नीषोमाभ्यां

**मखस्य शिरोऽसि घर्मोऽसि विश्वायुरुरु प्रथस्वोरु ते यज्ञपतिः प्रथतां त्वचं गृह्णीष्वान्तरितꣳ रक्षोन्तरिता अरातयो देवस्त्वा सविता श्रपयतु वर्षिष्ठे अधि नाकेऽग्निस्ते तनुवं माऽति धागग्ने हव्यꣳ रक्षस्व सं ब्रह्मणा पृच्यस्वैकताय स्वाहा द्विताय स्वाहा त्रिताय स्वाहा ॥ १ ॥**

---

முதல் விநியோகத் தொடக்கம்.

*காருகபத்தியத் தீயிலேனும், ஆகவனீயத் தீயிலேனும் வெந்நீர்ப்பானையை வைத்துவிட்டு, ஒரு வாணலைக் கழுவித் தீயில்வைத்து அது ஆவி வருமாறு சூடுற்ற பின்னர், பவித்திரத்தை (தருப்பையை) அதில் போட்டு, 'देवस्य त्वा सवितुः' என்பது முதலிய மந்திரத்தின் ஈற்றில் 'சம்வபாமி' என்று ஓதிக் கொள்க.*

முதல் விநியோகம்.

மாவை வாணலில் எடுத்து வைத்தல்.

மந்திரம் :

**संवपामि ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **हे पिष्ट!** | *மாவே! உன்னை* |
| **संवपामि** | *எடுத்துக்கொள்ளுகின்றேன்.* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், மூன்று முறையும், மந்திரமின்றி ஒரு முறையும் மாவை முறத்தால் எடுத்து வாணலிற் போடல் வேண்டு மென்பதாம்.*

குறிப்பு :—*பௌர்ணிமை மாதத்தில், 'அக்கினியின் பொருட்டும், அக்கினி சோமர்களின் பொருட்டும், இந்திர வைமிருதத்தின் பொருட்டும் எடுக்கின்றேன்' என்று எடுத்தல் வேண்டும். எடுத்துவிட்டு, எஜமானன் இதிலிருந்து பேசுவதை நிறுத்தல் வேண்டும்.*

*அமாவாசையில், 'அக்கினியின் பொருட்டும், இந்திராக்கினிகளின் பொருட்டும் எடுக்கின்றேன்' என்பது விசேடமாம்.* 1

இரண்டாம் விநியோகத் தொடக்கம்.

சூத்திரப்படி, ‘देवो वः सवितोत्पुनातु’ என்பதால், மாவை முதன்முறை தருப்பையால் அலைத்தல் (புநிதமாக்கல்) வேண்டும்.

‘अच्छिद्रेण पवित्रेण’ என்பதால் இரண்டாம் முறையும் மாவை அலைத்தல் வேண்டும்.

‘वसोः सूर्यस्य रश्मिभिः’ என்பதால் மூன்ரும் முறையும், மாவை அலைத்தல் வேண்டும். இது உத்பவன மெனப்படும்.

பின்னர், மேக்ஷணத்தா (சல்லிக் கரண்டியா)ல் அம்மாவை வறுத்தல் வேண்டும்.

இரண்டாம் விநியோகம்.

மாவில் சிறிது தண்ணீரை விடல்.

மந்திரம் :

**समापो अद्भिरग्मत समोषधयो रसेन सꣳ रेवतीर्जगतीभि-र्मधुमतीर्मधुमतीभिः सृज्यध्वम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे सं आपः !** | முன்னர், மரப்பாத்திரத்திற் கொண்டுவந்து வைத்துள்ள பிரணீதா என்னும் தண்ணீரே! நீ |
| **अद्भिः** | வெந்நீருடன் |
| **अग्मत** | கலந்து கொள்ளுவாயாக. |
| **हे ओषधयः !** | ஓஷதிகளின் சம்பந்தமான மாவே! நீ |
| **रसेन** | தண்ணீருடன் |
| **अग्मत** | கலந்து கொள்ளுவாயாக. |
| **रेवतीः** | தனமுடையதும் |
| **मधुमतीः** | இன்சுவையுடையதுமாகிய நீரே! நீ |
| **जगतीभिः** | தாப வடிவாயதும் |
| **मधुमतीभिः** | சுவையுடையதுமாகி, மாவுடன் |
| **संसृज्यध्वम्** | கலந்து கொள்வாயாக. |

சாயணபாடியக் கருத்து.

தண்ணீருடன் வெந்நீரையுங் கலந்து, வறுத்த மாவில் தெளித்தல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு:—சூத்திரம், தண்ணீரை மாத்திரம் தெளித்தல் வேண்டுமென்று கூறுகின்றது. அதாவது மரப்பாத்திரத்தில் வைத்துள்ள நீரில் சிறிது சுருவத்தால் எடுத்து வேதம் என்னும் தருப்பை முடிச்சின் மேல் வைத்து, இம் மந்திரத்தால் மாவில் விடல் வேண்டு மென்பதாம்.

பாடியம், இரண்டு நீரையும் கலந்துவிடல் வேண்டுமென்று கூறுகின்றது. பன்மை வடமொழியை நோக்கியதாம்.

(போ-சூ.) இம் மந்திரத்தாலேயே மதந்தியிலிருக்கும் வெந்நீரையும் மாவிலூற்றல் வேண்டுமென்பது. மதந்தி = வெந்நீப்பானை. 2



மூன்றும் விநியோகம்.

வேண்டியவளவு தண்ணீர் விட்டு மாவை நனைய வைத்தல்.

மந்திரம் :

**अद्भ्यः परिप्रजाताः स्थ समद्भिः पृच्यध्वम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे पिष्टाः !** | மாவுகளே ! நீங்கள் |
| **अद्भ्यः** | நீரிலிருந்து |
| **परिप्रजाताः** | இனிது உண்டானதாக |
| **स्थ** | இருக்கின்றீர்கள். ஆதலின், |
| **अद्भिः** | தண்ணீருடன் கலந்துகொண்டு |
| **संपृच्यध्वम्** | நன்கு ஊறுவீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தண்ணீரையும் வெந்நீரையுங் கொண்டு நன்கு மாவை ஊற வைத்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—சூத்திரப்படி, வெந்நீரால் மாவை நன்றாய் நனையச் செய்தல் வேண்டு மென்பதாம். பன்மை இனம் பற்றியது.

மற்றும், தண்ணீரையும் வெந்நீரையுங் கலந்து தெளித்து ஊற வைத்தல் வேண்டு மென்பதும், முன்னர் தண்ணீரைத் தெளித்துக்கொண்டு பின்னர் வெந்நீரால் நன்கு மாவை நனைய வைத்தல் வேண்டு மென்பதும் சிறிது வேறுபாடுடையவைகளா மென்று தோன்றுகின்றது.

(போ-சூ.) இம் மந்திரத்தால், மாவு முழுவதும் நனையும் வண்ணம் நீர் விடல் வேண்டு மென்பது. 3



நான்காம் விநியோகம்.
மாவைக் கிளறல்.

மந்திரம் :

**जनयत्यै त्वा संयौमि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे पिष्ट !** | மாவே! |
| **त्वा** | உன்னை |
| **जनयत्यै** | புத்திரன் உதித்தற் பொருட்டு |
| **संयौमि** | சேர்த்துக் கலக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கை விரல்களாற் றட்டி, நன்றாக உண்டையாமாறு மாவைப் பிசைதல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—மேக்ஷணம், என்னும் சல்லிக் கரண்டியாற் கிளறல் வேண்டுமென்பது சூத்திரம்.

இது, சுக்கில சோணிதம் ஒன்றுபட்டு வேள்வித்தலைவனுக்குக் குழந்தையை யுண்டாக்குதல் போன்று பாவனை செய்தலாம். 4

---

ஐந்தாம் விநியோகம்.
மாவை உருண்டை யாக்கல்.

மந்திரம் :

**मखस्य शिरोऽसि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे पिण्ड !** | மா வுருண்டையே! நீ |
| **मखस्य** | வேள்வியின் |
| **शिरः** | தலையாக |
| **असि** | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மாவை உருண்டையாக்கல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு :— மா வுருண்டையை வேள்வியின் தலையென்பது பாவனை. 5

ஆறும் விநியோகம்.

மாவுருண்டையை இருவகையாகப் பிரித்தல்.

மந்திரம் :

**अग्नये त्वाऽग्नीषोमाभ्याम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे पिण्ड !** | உருண்டையாயுள்ள மாவே! |
| **त्वा** | உன்னை |
| **अग्नये** | அக்கினியின் பொருட்டும், |
| **अग्नीषोमाभ्यां** | அக்கினி சோமன் என்பவர்களின் பொருட்டும், பிரித்து வைக்கின்றேன் எனக் கூட்டுக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால் மாவுருண்டையைப் பங்கிடல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—பௌர்ணமியில், உருண்டையாகச் செய்த பின்னர், பாகப்படி தனித்தனியாவீர்களாக என்று, அக்கினி தேவதைக்குரியதைப் பிரித்தெடுத்துக்கொண்டு, பின்னர், பாகப்படி தனித்தனி யாவீர்களாக என்று, அக்கினி சோமம் என்னுந் தேவதைக்கும், இந்திர வைமிருத தேவதைக்கும் மா வுருண்டையை வேறாக்கிப் புரோடாசமாய்ச் செய்தல் வேண்டும்.

அதன் பின்னர், இது அக்கினி சோமர்களுக்கு, இது இந்திர வைமிருதனுக்கு என்று, ஈற்றிலுள்ள இவ்விருவரின் பொருட்டு மாத்திரம், கை வைத்துச் சுட்டிச் சொல்லல் வேண்டும். அக்கினிக்குச் சுட்டிச் சொல்லுதல் இல்லை.

அமாவாசையில் பாகப்படி பிரிவீர்களாக என்றும், சமமாய் உருண்டை செய்து என்றுஞ், சூத்திரங் கூறும் வகையிற் பிரித்தல் வேண்டுமென்று புலப்படுகிறது. பின்னர், இது, அக்கினிக்கு, இது இந்திராக்கினிகளுக்கு என்று தொட்டுச் சுட்டல் வேண்டு மென்பது விசேடம். இது பாட முறையில் பின்னுள்ளது. 6

---

ஏழாம் விநியோகத் தொடக்கம்.

ஈண்டு, சூத்திரத்தைத்தழுவி, நடுவில் மிக உயரமாகாமலும், பணியாரம் போலிராமலும், ஆமையைப் போன்றதாய் குதிரைக் குளம்பளவு கொண்ட புரோடாசங்களை (மாவடைகளை)ச் செய்து வைத்துக்கொண்டு, ‘ इदमहं सेनया ’ என்பது முதலிய மந்திரத்தால், முன்னர், கபாலங்களின் மேல் வைத்துள்ள தணல்களை, வேதம் என்னும் தருப்பை முடிச்சால் கீழே தள்ளி விடல் வேண்டும்.

### ஏழாம் விநியோகம்.

புரோடாசங்களை அகல்களின்மேல் வைத்தல்.

மந்திரம் :

**घर्मोऽसि विश्वायुः ।**

என்பது.

#### பதவுரை.

| | |
|---|---|
| **हे पुरोडाश !** | புரோடாசமே ! நீ |
| **घर्मः** | சூடுற்ற அகலின் மேலிருப்பதனல் |
| **विश्वायुः** | வேள்வித்தலைவனுக்கு நிறைந்த வயதைக் கொடுப்பவனாக |
| **असि** | இருக்கின்றாய். |

#### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அகல்களின் மேல் புரோடாசங்களை வைத்தல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு :—பௌர்ணிமையினும், அமாவாசையினும் இவ்வாறே புரோடாசஞ் செய்தல் வேண்டும்.

'**इदमहं सेनया**' என்பது முதலிய மந்திரத்தையே, மீண்டும், மீண்டும் ஓதிக்கொள்ளல் வேண்டும். '**घर्मोऽसि**' என்னும் மந்திரத்தையும் மறித்தும் மறித்தும் ஓதிக்கொண்டு அக்கினி தேவதையின் பொருட்டு வைத்துள்ள எட்டு அகல்களிலும் புரோடாசங்களை வைத்தல் வேண்டுமென்க.

இவ்வாறு புரோடாசங்களை வைத்து விட்டு, கையைக் கழுவிக்கொள்ளல் வேண்டும் என்பதை யுணர்க. 7

---

### எட்டாம் விநியோகம்.

புரோடாசத்தை அகலமாம்படி அழுத்திவிடல்.

மந்திரம் :

**उरु प्रथस्वोरुते यज्ञपतिः प्रथताम् ।**

என்பது.

#### பதவுரை.

| | |
|---|---|
| **हे पुरोडाश !** | புரோடாசமே ! நீ |
| **उरु** | அகலமாம்படி |
| **प्रथस्व** | பரந்து போவாயாக. |
| **ते** | உனது |
| **यज्ञपतिः** | வேள்வித்தலைவன் |
| **प्रथताम्** | தழைத்தோங்குவானாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அகல்வரை அகன்று வருமாறு புரோடாசத்தை அழுத்தி வைத்தல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு :—இம் மந்திரத்தையே மறித்தும், மறித்தும் ஓதிக்கொண்டு எல்லாப் புரோடாசங்களையும் இவ்வாறே செய்துவிட்டுக் கையைக் கழுவிக்கொள்ளல் வேண்டும். 8



ஒன்பதாம் விநியோகம்.

புரோடாசங்களை, தண்ணீரைக் கொண்டு தடவுதல்.

மந்திரம் :

**त्व चं गृह्णीष्व ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **(हे पुरोडाश !)** | (புரோடாசமே !) |
| **(त्वं)** | (நீ) |
| **त्व चं गृह्णीष्व** | தோலைப் பெற்றுக்கொள்ளுவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தண்ணீரைத் தொட்டுக்கொண்டு புரோடாசத்தின்மேல் வழுவழுப்பாமாறு தடவல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு :—சூடுபட்டவுடன், மேலே ஒரு புரைபோன்று கிளம்புதலின் அது தோலென உபசரிக்கப்பட்டது.

இம் மந்திரத்தையே மறித்தும் மறித்தும் ஓதிக்கொண்டு புரோடாசங்கள் முழுதையும் இவ்வாறு செய்தல் வேண்டும் என்பதைக் காண்க. 9



பத்தாம் விநியோகம்.

கொள்ளியால் புரோடாசங்களைச் சுற்றுதல்.

மந்திரம் :

**अन्तरितꣳ रक्षोऽन्तरिता अरातयः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **रक्षः** | அசுரர் |
| **अन्तरितं** | ஒழிந்தனர். |

| | |
|---|---|
| **अरातयः** | *பகைவர்* |
| **अन्तरिताः** | *அழிந்தார்கள்.* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், நெருப்புறு விறகால் புரோடாசங்களை மும்முறை சுற்றல் வேண்டு மென்பதாம்.*

குறிப்பு:—*ஒவ்வொரு புரோடாசத்திற்கும் மந்திரத்தை மறித்தும் மறித்தும் ஓதிக்கொண்டு செய்தல் வேண்டும். இரண்டு புரோடாசங்கட்குச் சேர்த்துச் செய்தலுங் கூடும். சுற்றிய கொள்ளியை எறிந்து விடல் வேண்டும்.*

*முன்னர்ச் சுற்றிய கொள்ளியை எறிந்துவிட்டு, கை யலம்பிக்கொண்டு, மீண்டும் கொள்ளியை யெடுத்துக்கொள்ளல் வேண்டும்.* 10

---

பதினோராம் விநியோகம்.

புரோடாசங்கட்கு கொள்ளியாற் சூடுகாட்டல்.

மந்திரம் :

**देवस्त्वा सविता श्रपयतु वर्षिष्ठे अधिनाके ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **हे पुरोडाश !** | *புரோடாசமே !* |
| **त्वा** | *உன்னை* |
| **सवितादेवः** | *சூரிய தேவன்* |
| **वर्षिष्ठे** | *மிகப் பெரிய* |
| **अधिनाके** | *'நாகம்' என்னும் தீயின்கண்* |
| **श्रपयतु** | *பக்குவஞ் செய்வானாக.* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், கொள்ளிகளால் புரோடாசங்களைச் சூடு காட்டல் வேண்டு மென்பதாம்.*

குறிப்பு:— *இம் மந்திரத்தையே மறித்தும் மறித்தும் ஓதிக்கொண்டு எல்லாப் புரோடாசங்களையுஞ் சூடுகாட்டல் வேண்டும்.*

*இங்கு, சுவர்க்கத் தீயில், சூரியன் புரோடாசத்தைப் பக்குவஞ் செய்வதாகப் பாவனையாம்.*

(போ-சூ.) இம் மந்திரத்துடன் மேல் மந்திரத்திலிருந்து 'अग्निस्ते तनुवं मातिधाक्' என்பதையும் சேர்த்துக்கொண்டு புரோடாசத்தை பக்குவம் செய்ய வேண்டு மென்பது. 11

---

## பன்னிரண்டாம் விநியோகம்.

புரோடாசங்களின் மேல் தருப்பையைக் கொளுத்திப் போடல்.

மந்திரம் :

**अग्निस्ते तनुवं माऽतिधाक् ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **हे पुरोडाश !** | புரோடாசமே! |
| **ते** | உனது |
| **तनुवं** | உடம்பை |
| **अग्निः** | அக்கினி |
| **मा अति धाक्** | மிகச் சுடாததாகுக. |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் தருப்பையை யேனும், புல்லையேனும் கொளுத்திப் புரோடாசங்களின் மீது போடல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—இரண்டு விநியோகமும் ஒன்று சேர்ந்திருக்கின்றது மூலத்தில். 12

---

## பதின்மூன்றும் விநியோகம்.

காருகபத்தியத் தீயை வேண்டல்.

மந்திரம் :

**अग्ने हव्यꣳ रक्षस्व ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **हे अग्ने !** | காருகபத்தியத் தீயே! நீ |
| **हव्यं** | அவிக்குரிய புரோடாசத்தை |
| **रक्षस्व** | பக்குவத்துடன் பாதுகாப்பாயாக. |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், புரோடாசங்களைப் பாதுகாக்குமாறு காருகபத்தியத் தீயைப் போற்றல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு:—இவ் விரண்டும், சூத்திரத்தில் ஒரு விநியோகமாக விருக்கின்றன.

(போ-சூ.) இம் மந்திரம் 'अग्ने हव्य॑ रक्षस्व' என்பதேயாகும். இம் மந்திரத்தால் காருகபத்தியத்தை போற்றல் வேண்டு மென்பது. 13

---

### பதினான்காம் விநியோகம்.

சாம்பரைத் தள்ளிவிட்டுப் புரோடாசங்களை மூடுதல்.

மந்திரம்:

**सं ब्रह्मणा पृच्यस्व ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| हे पुरोडाश! | புரோடாசமே! நீ |
| ब्रह्मणा | சாம்பரோடு கூட |
| सं पृच्यस्व | நன்கு சேர்வாயாக. |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேதம், என்னும் தருப்பை முடிச்சால், தணலுடன் சாம்பரையுந் தள்ளிவிட்டுப் புரோடாசத்தை மூடி விடல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு:—இது கொள்ளியைக் கொண்டு சுற்றினதின் பிழை நீங்குவதற்கென்ப. 14

---

### பதினைந்தாம் விநியோகத் தொடக்கம்.

கையையும் மாவிருந்த பாத்திரத்தையுங் கழுவி அவ்விரண்டு நீர்களையும், தனித்தனியே கொள்ளியாற் சூடுறச் செய்து, பின்னர் அவ்விரண்டு நீர்களையும் ஒன்று சேர்த்துக்கொண்டு, 'ஸ்ப்யம்' என்னும் மரக் கத்தியால் கிழக்கு முகமாகவேனும், வடக்கு முகமாகவேனும் மூன்று கோடுகளைக் கிழித்தல் வேண்டும்.

### பதினைந்தாம் விநியோகம்.

இது மூன்று விநியோகங்களைக் கொண்டது.

கழுவிய நீரை அக்கோட்டில் இறைத்தல்.

மந்திரம்:

**एकताय स्वाहा । द्विताय स्वाहा । त्रिताय स्वाहा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे आप! | நீரே! நீ |
| एकताय | 'ஏகதை' யென்னும் தேவதையின் பொருட்டு |
| स्वाहा | அருப்பணமாகுக. |
| द्विताय | 'துவிதை' யென்னும் தேவதையின் பொருட்டு |
| स्वाहा | அருப்பணமாகுக. |
| त्रिताय | 'திரிதை' யென்னும் தேவதைக்கு |
| स्वाहा | அருப்பணமாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வியிற் செய்த பிழைகளால் வரும் பாவம் நீங்குமாறு கிழக்கு மேற்காய் ஒவ்வொரு மந்திரத்திற் கொருமுறை அந்நீரைத் தெளித்து அருப்பித்தல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—இவ்வாறு செய்தலால், இவ்வேள்வியில் வரும் பாவம், அம் மூவரிடமும், அவர்களுடைய பாவம், காலையில் தூங்குகின்றவனிடம், அது, உடன் பிறந்தானுக்குத் துரோகஞ் செய்தவன் பாலும், அது, ஈற்றில் அந்தணனைக் கொன்றவனிடத்திலுந் தங்கி விடுமென்பது கதையாம். இதைப் பிராமண வேதப் பகுதியிற் காண்க.

இங்கு, வேள்வித் தலைவன், 'एकतायेदं न मम' அதாவது, இப் பாவம், "ஏகதை யென்பதற்கும், துவிதை யென்பதற்கும், திரிதை யென்பதற்கும் கொடுக்கப்பட்டது எனக்கில்லை" என்று, பாவத்தைக் கொடுத்து விடல் வேண்டும் என்பதாம். 15, 16, 17

எட்டாம் அநுவாகம் முடிந்தது.

## ஒன்பதாம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

आददे स्फ्यं समादत्त इन्द्रस्येत्यभिमन्त्रयेत् ।
पृथिविस्तम्बयजुश्छित्वा ह्यपगृह्णाति भूरजः ॥ १ ॥
व्रजं गच्छेदुदग्देशं वर्ष वेदिं समीक्षते ।
बधा धूलिं क्षिपेदेवं पुनः स्तम्ब हतिद्वयम् ॥ २ ॥
अथाऽत्र पूर्ववन्मन्त्रा अराऽऽग्नीध्रोऽञ्जलौ धरेत ।
वसन्त्रिभिर्ग्रहो वेदेर्देव वेदिं खनेदमूम् ॥ ३ ॥

ऋतोत्तर परिग्राहो धा असीति समीकृतिः ।
उदादायेति वेदीक्षा मन्त्रोक्ताः पञ्चविंशतिः ॥ ४ ॥

*மரக்கத்தியை யெடுத்து, போற்றி, தருப்பையால் துடைத்து, அதனல் அளந்து, வேதிகை செய்து, அதைத் தருப்பை முடிச்சால் மும்முறை துடைத்துவிட்டு, போற்றி, அதன்மேல் ஒரு தருப்பையை வைத்து மும்முறை மந்திரத்துடனும், மந்திரமின்றி ஒருமுறையும் வெட்டி, மண்ணுடன் எடுத்து உத்கரத்தில் போட்டுப், பிடித்துக்கொண்டு போற்றி, கத்தியாற் கோடிட்டு, வேதிப் பூமியை வாங்கி, கெல்லி, முறைப்படி வேதிகை போட்டு, போற்றி, பிரமனிடத்து ஆணை பெற்று, மற்று மொருமுறை உள்ளே கோடு கிழித்து பெற்றுக்கொண்டு, கெல்லிய விடத்தை ஒப்புரவாக்கல் வேண்டு மென்பதாம்.*

---

முதற் காண்டம் - முதற் பிரபாடகம்.

ஒன்பதாம் அநுவாகம்.

இது, மூன்று பஞ்சாதிக்குமேல், 11 பதங்களைக்கொண்டது.

---

வேதிகரணம் அதாவது வேதிகை (மேடை) செய்வதற்குரிய மந்திரங்கள்.

**आ ददे इन्द्रस्य बाहुरसि दक्षिणः सहस्रभृष्टिः शततेजा
वायुरसि तिग्मतेजाः पृथिवि देवयजन्योषध्यास्ते मूलं मा हिꣳसिष
मपहतोऽररुः पृथिव्यै व्रजं गच्छ गोस्थानं वर्षतु ते द्यौर्बधान
देवसवितः परमस्यां परावति शतेन पाशैर्योऽस्मान्द्वेष्टि यं च
वयं द्विष्मस्तमतो मा मौगपहतोऽररुः पृथिव्यै देवयजन्यै व्रजम् (१)
गच्छ गोस्थानं वर्षतु ते द्यौर्बधान देवसवितः परमस्यां परावति
शतेन पाशै र्योऽस्मान्द्वेष्टि यं च वयं द्विष्मस्तमतो मा मौगपहतोऽररुः
पृथिव्या अदेवयजनो व्रजं गच्छ गोस्थानं वर्षतु ते द्यौर्बधान
देव सवितः परमस्यां परावति शतेन पाशै र्योऽस्मान्द्वेष्टि यं च वयं**

द्विषमस्तमतो मा (२) मौगररुस्ते दिवं मा स्कान् वसवस्त्वा परि गृह्णन्तु गायत्रेण छन्दसा रुद्रास्त्वा परि गृह्णन्तु त्रैष्टुभेन छन्दसा ऽऽदित्यास्त्वा परि गृह्णन्तु जागतेन छन्दसा देवस्य सवितुः सवे कर्म कृण्वन्ति वेधस ऋतमस्यृत सदनमस्यृत श्रीरसि धा असि स्वधा अस्युर्वी चासि वस्वी चासि पुरा क्रूरस्य विसृपो विरप्शि-न्नुदादाय पृथिवीं जीरदानुर्यामैरयञ्चन्द्रमसि स्वधाभिस्तां धीरासो अनुदृश्य यजन्ते (३)

---

## முதல் விநியோகம்.

‘ஸப்யம்’ என்னும் மரக்கத்தியை யெடுத்தல்.

மந்திரம் :

आददे ।

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| स्फ्य | ‘ஸ்ப்யம்’ என்னும் கத்தி |
| आददे | எடுக்கப்படுகின்றது. |

### சாயணபாடியக் கருத்து.

‘ஆததே’ என்னுஞ் சொல்லை ஈற்றிற் கொண்ட மந்திரத்தால் மரக் கத்தியை எடுத்துக் கொள்ளல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—‘देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्याम्’ என்னும் இம் மந்திரத்துடன் ‘ஆததே’ என்பதையுஞ் சேர்த்துக்கொள்ளல் வேண்டு மென்பதாம். இதன் உரை முன்னர்க் கூறப்பட்டது. பக்குவமான அவிகளை வேதியின்மீது வைத்தல் வேண்டு மாதலின் வேதிகை யியற்றல் முன்னர்க் கூறப்படுகின்றது.

## இரண்டாம் விநியோகம்.

எடுத்த கத்தியைப் போற்றுதல்.

மந்திரம் :

**इन्द्रस्य बाहुरसि दक्षिणः सहस्रभृष्टिः शततेजा वायुरसि तिग्मतेजाः ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **हे स्फ्य !** | கத்தியே ! நீ |
| **सहस्रभृष्टिः** | ஆயிரக்கணக்கான பகைவரைக் கொல்லுகின்றவனும் |
| **शततेजाः** | நூறுவகையான ஒளிகளை (கீர்த்திகளை) யுடையவனுமாகிய |
| **इन्द्रस्य** | இந்திரனுடைய |
| **दक्षिणबाहुः** | வலது கையாக |
| **असि** | இருக்கின்றாய். மற்றும், |
| **तिग्मतेजाः** | தீயை ஒளிமிகச் செய்கின்ற |
| **वायुः** | வாயுவாகவும் |
| **असि** | இருக்கின்றாய். |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கத்தியைப் போற்றல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :— ஈண்டு, மேலே கூறப்படுமாறு தருப்பையை வெட்டுதலே கத்திக்கு ஒளி மலிந்த செய்கையா மென்றுணர்க.

வாயுவுடன் உவமித்ததால் கத்தி கூராக்கப்படுகின்றதென்பது பட்டபாஸ்கரர் உடன்பாடு. 2

---

## மூன்றும் விநியோகத் தொடக்கம்.

ஈண்டு, சூத்திர விநியோகப்படி, ' हस्ते मा प्रतिगां ' என்னும் மந்திரத்தால் சுருவைத் துடைப்பது போன்று, தருப்பையால் கத்தியைத் துடைத்து விட்டு அத் தருப்பையை உத்கரத்தில் எறிந்துவிட்டுக் கையைக் கழுவிக்கொண்டு, ஆகவனீயத்திற்குப் பின் புறத்தில், கத்தியால், ஒன்று, இரண்டு, மூன்று, நான்குமுறை அளந்து, வேள்வித்தலைவனுடைய உடம்பு அளவுகொண்ட வேதிகையைச் செய்துகொண்டு, 'தம்பயசுஷ்' (தருப்பைக் குச்சு) வைப்பதற்கு முன்னேனும், அதாவது தருப்பையை வெட்டுவதற்கு முன்னாகிலும், அல்

லது, தருப்பைத் துரும்பையும் மண்ணையும் எடுத்த பள்ளத்தைப் பார்ப்பதற்கு முன்னாகிலும் அவ் வேதியைத் தருப்பை முடிச்சால் மும்முறை துடைத்தல் வேண்டும்.

ஈண்டு, வேள்வித் தலைவன், வேதிகையைத் தொட்டுக்கொண்டு,

चतुः शिखण्डा युवतिः । பிரா. 3-7-6-5.

என்பது முதலிய மந்திரத்தால், அவ் வேதிகையைப் போற்றல்வேண்டும்.

பின்னர், வேட்போன், வேதியின் முற்பாதியின் மூன்றாவது பங்கில், கிழக்கு நுனியாகவேனும், வடக்கு நுனியாகவேனும், ஒரு தருப்பைக் குச்சை வைத்தல் வேண்டும்.

## மூன்றும் விநியோகம்.

முதலாவது தருப்பையை வெட்டுதல்.

மந்திரம் :

पृथिवि देवयजन्योषध्यास्ते मूलं माहिꣳ सिषम् ।

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| देवयजनि | தேவர்களைப் பூசிப்பதற்கு இடமாகிய |
| हे पृथिवि ! | பூமியே ! |
| ते | நின்னைப்பற்றியுள்ள |
| ओषध्याः | புற்பூண்டு முதலியவற்றின் |
| मूलं | வேரைக் |
| माहिंसिषम् | களையமாட்டேன். |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கத்தியால் ஒரு தருப்பையை வெட்டல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—இது, பூமியின் மீதுள்ள ஒருவகை அசுரனை விலக்குதற் பொருட்டாம். இதன் விரிவைப் பாடியத்திற் காண்க.  3

---

## நான்காம் விநியோகம்.

வெட்டும்போது விழுந்த துரும்புகளுடன் மண்ணையுஞ் சேர்த்தெடுத்தல்.

மந்திரம் :

अपहतोऽररुः पृथिव्यै ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| पृथिव्यै | பூமியின் பொருட்டு |
| अररुः | 'அரரு' என்னும் அசுரன் |
| अपहतः | நீக்கப்பட்டனன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வெட்டுங்கால் விழுந்த தருப்பைத் தூசுகளை மண்ணுடன் சேர்த்து எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு:—இங்குத் தூசு எடுத்துப் போடுதல், அசுரன் நீங்குதலாகப் பாவனை. 4



ஐந்தாம் விநியோகம்.

அத் தூசுகளைக் கொண்டுபோதல்.

மந்திரம்:

**व्रजं गच्छ गोस्थानम् ।**

என்பது.

பதவுரை.

हे तृण सहित पांसो ! தூசே! நீ

| | |
|---|---|
| गोस्थानं | வாக்கிற்கு இடமாகிய |
| व्रजं | உத்கரம் என்னும் (குப்பைபோடும்) இடத்தை |
| गच्छ | அடைவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன் எடுத்த தூசுகளை, குப்பைக் குழியை நோக்கிக் கொண்டு போதல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு:—ஈண்டு, வாக்கிற்கு இடமென்றது: 'உத்கரம்' என்னும் வேள்விக் குப்பைகளைப் போடுமிடத்திற்கருகில் ஆக்னீத்ரன் நின்று கொண்டு 'அஸ்து சுரௌஷட்' என்னும் வாக்கைச் சொல்லல் வேண்டுமாதலின் என்க.

உத்கர மென்பது, வேதிக்கு வடக்கில், வேதியின் கிழக்கின் மூன்றாவது கூறுக்கு நேர், இரண்டடி யளவு, அல்லது, அளவின்றி, ஒரு முழம் அளவு வரைந்த நாற்சதுரமாகிய இடமாம்.

ஈண்டு, வேள்வித்தலைவன்,

योमा हृदा मनसा यश्चवाचा । பிரா. 3-7-6-7.

மந்திரங்கள்)

என்பது முதலிய மந்திரத்தால், கொண்டு போகின்ற அத் தருப்பையுடன் கூடிய மண்ணைப் போற்றல் வேண்டும். 5

---

ஆறும் விநியோகம்.

வேட்போன், வேதிகையை, அல்லது, வேள்வித்தலைவனை நோக்கல்.

மந்திரம் :

**वर्षतु ते द्यौः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे वेदे !** | வேதிகையே ! |
| **ते** | உன்னை நனைத்தற் பொருட்டு |
| **द्यौः** | மழை |
| **वर्षतु** | பெய்க. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேதிகைக்குரிய இடத்தை, அல்லது, வேள்வித்தலைவனை நோக்கல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—மழை பெய்தற்குக் காரணம் வானமாதலின், மழை, வானெனப்பட்டது. 6

---

ஏழாம் விநியோகம்.

தருப்பைத் தூசுடன் சேர்ந்த மண்ணை முதன்முறை உத்காத்திற் போடுதல்.

மந்திரம் :

**बधान देव सवितः परमस्यां परावति शतेन पाशैर्योऽस्मान्द्वेष्टि यं च वयं द्विष्मस्तमतो मामौक् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे सवितर्देव !** | அனைத்தையுஞ் செலுத்துகின்ற தேவனே ! நீ |
| **यः** | எவன் |
| **अस्मान्** | எங்களை |
| **द्वेष्टि** | வெறுக்கின்றவனோ அவனையும் |
| **यं च** | எவனை |

| | |
|---|---|
| **वयं** | *யாம்* |
| **द्विष्मः** | *வெறுக்கின்றேமோ, அவனையும்* |
| **शतेनपाशैः** | *நூற்றுக்கணக்கான கயிறுகளால்* |
| **परमस्यां** | *மிகத்* |
| **परावति** | *தூர தேசத்திற்* |
| **बधान** | *கட்டுவாயாக.* |
| **तं** | *அவனை* |
| **अतः** | *இக்கட்டிலிருந்து* |
| **मामौक्** | *விட்டு விடாதே.* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், 'தம்பபசுஷ்' என்னும் அத் தூசை முதன்முறை உத்கரத்திற் போட்டுவிடல் வேண்டு மென்பதாம்.*

குறிப்பு :—*இது, தூசுகளையே அசுரர்களாகப் பாவித்துக் கூறல்.* 7

---

எட்டாம் விநியோகத் தொடக்கம்.

*வேட்போன், 'अपाररुम देवयजनं पृथिव्याः' என்னும் மந்திரத்தால், இரண்டாம் முறை தருப்பையை வெட்டல் வேண்டும்.*

எட்டாம் விநியோகம்.

மந்திரம் :

**अपहतो ररुः पृथिव्यै देवयजन्यै ।**

*என்பது.*

---

ஒன்பதாம் விநியோகம்.

மந்திரம் :

**व्रजं गच्छ गोस्थानम् ।**

*என்பது.*

---

பத்தாம் விநியோகம்.

மந்திரம் :

**वर्षतु ते द्यौः ।**

*என்பது.*

---

பதினோராம் விநியோகம்.

மந்திரம் :

**बधान देवसवितः परमस्यां परावति शतेन पाशैर्योऽस्मान्द्वेष्टि यं च वयं द्विष्मस्तमतो मामौक् ।**

என்பது.

*இந்நான்கு மந்திரங்களாலும், முதன் முறையைப் போல் இரண்டாம் முறையும் வெட்டிய தூருடன் மண்ணைக் கொண்டு போய் உத்கரத்திற் போடல் வேண்டும் என்பதாம்.* 8, 9, 10, 11

---

பன்னிரண்டாம் விநியோகத் தொடக்கம்.

*வேட்போன், '*अररुयां मापप्तत्*' என்னும் மந்திரத்தால் மூன்றும் முறையுந் தருப்பையை வெட்டல் வேண்டும்.*

பன்னிரண்டாம் விநியோகம்.

மந்திரம் :

**अपहतो ररुः पृथिव्या अदेवयजनः ।**

என்பது.

---

பதின்மூன்றும் விநியோகம்.

மந்திரம் :

**व्रजं गच्छ गोस्थानम् ।**

என்பது.

---

பதினான்காம் விநியோகம்.

மந்திரம் :

**वर्षतु ते द्यौः ।**

என்பது.

---

பதினைந்தாம் விநியோகம்.

மந்திரம் :

**बधान देवसवितः परमस्यां परावति शतेन पाशैर्योऽस्मान्द्वेष्टि यं च वयं द्विष्मस्तमतो मामौक् ।**

என்பது.

இந்நான்கு மந்திரங்களாலும், முன் போலவே மூன்றும் முறையும், வெட்டிய தூசுடன் மண்ணை உத்கரத்திற் போடல் வேண்டும். 12, 13, 14, 15

---

பதினாறும் விநியோகம்.

எறிந்துவிட்ட துப்பையை, ஆக்னீத்ரன் கைகளைச் சேர்த்துப் பிடித்துக் கோள்ளல்.

மந்திரம் :

**अररुस्ते दिवं मास्कान् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे उत्कर !** | குப்பைக் குழியே ! |
| **ते** | உன்னைப்பற்றிய |
| **अररुः** | அாரு என்னும் இத் தூசுவடிவ அசுரன் |
| **दिवं** | சுவர்க்கத்தை |
| **मास्कान्** | அடையாதொழிக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குப்பைக் குழியிற் போட்ட தருப்பைத் தூசுடன் கூடிய மண்ணை, ஆக்னீத்திரன் இரண்டு கைகளாலும் மேலே அழுத்திப் பிடித்துக்கொள்ளல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு :—இது, எவ்வாற்றானும் அவ்வசுரன் சுவர்க்கத்தை யடையாவாறு தடுப்பதாம்.

ஈண்டு, வேள்வித்தலைவன் 'इदं तस्मै हर्म्यम्' என்பது முதலிய மந்திரத்தால், குப்பைக் குழியிற் பிடித்துக் கொண்டுள்ளதைப் போற்றல் வேண்டும்.

'अव बाढ॰ रक्षः' என்னும் மந்திரத்தால், இரண்டாம் முறையும், 'अव बाढोऽघशं॰सः' என்னும் மந்திரத்தால் மூன்றும் முறையும் பிடித்தல் வேண்டுமென்பதும் உணரற்பாலது.

இவ்வாறே, மந்திரம் ஓதாமல் நான்காம் முறையும் வெட்டி, மீந்த தருப்பையையும், தூசுடன் கூடிய மண்ணையும் எடுத்து முன் போல் போட்டுவிடல் வேண்டும். வேள்வித்தலைவனும் முன் போன்றே போற்றல் வேண்டுமென்பதும் உணரற்பாலது. ஈண்டு, ஆக்னீத்ரன், 'अवबाढा यातुधानाः' என்னும் மந்திரத்தால் தூசைக் கைபாற் பிடித்துக் கொள்ளலும்; வேட்போன், 'द्रप्सस्ते द्यां मास्कान्' என்பதால் வேதிகையை நோக்கலும் விசேடமாம்; ஏனையவை முன் போன்றன.

மந்திரங்கள்)

மும்முறை தூசுகளை எடுத்துப் போடுதலால் மூவுலகத்துள்ள பகைவரும், நான்கா முறையால் ஏனைய பகைவரும் ஒழிந்து விடுவார்களென்பது பாவனையாம். 16

---

பதினேழு, பதினெட்டு, பத்தோன்பதாம் விநியோகங்கள்.

வேதிகைக்கு உரிய பூமியைக் கைக் கோள்ளல்.

மந்திரம் :

**वसवस्त्वा परिगृह्णन्तु गायत्रेण छन्दसा ।**
**रुद्रास्त्वा परिगृह्णन्तु त्रैष्टुभेन छन्दसा ।**
**आदित्यास्त्वा परिगृह्णन्तु जागतेन छन्दसा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे वेदे !** | வேதிகை செய்தற்குரிய பூமியே! |
| **त्वा** | உன்னை |
| **वसवः** | வசுக்கள் |
| **गायत्रेण छन्दसा** | 'காயத்திரி' என்னும் ஒருவகைச் சந்தத்தால் |
| **परिगृह्णन्तु** | இனிது பெற்றுக்கொள்வார்களாக. |
| **त्वा** | உன்னை |
| **रुद्राः** | உருத்திரர்கள் |
| **त्रैष्टुभेन छन्दसा** | 'திருஷ்டுப்' என்னும் ஒருவகைச் சந்தத்தால் |
| **परिगृह्णन्तु** | பெற்றுக்கொள்வார்களாக. அஃதன்றியும், |
| **आदित्याः** | ஆதித்தர்கள் |
| **त्वा** | உன்னை |
| **जागतेन छन्दसा** | 'சகதி' என்னும் ஒருவிதச் சந்தத்தால் |
| **परिगृह्णन्तु** | பெற்றுக்கொள்வார்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மூன்று மந்திரங்களாலும், முறையே, மாக்கத்தியால் வேதியின் சுரோணியின் தெற்குக் கோடியிலிருந்து, தெற்கு அம்சம் (தோள்) வரை ஒரு கோடும், தெற்குக் கோடியிலிருந்து வடக்குக் கோடி வரை மேற்கில் ஒரு கோடும், சுரோணியின் வடக்குக் கோடியிலிருந்து, வடக்கு அம்சம் (தோள்) வரை ஒரு கோடுமாக (மூன்று கோடுகள்) கிழித்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு:—*கத்தி சந்தமாகவும், அதனுல் வேதிகைப் பூமி தேவர்களால் அசுரர்களிடத்திலிருந்து கைப்பற்றப்பட்டதாகப் பாவனையாம். முன், 'பூமி முழுதும் அசுரர்களாற் கவரப்பட, தேவர்கள் கோடு கிழித்துக் காட்டி இது வரை வேள்விக்கு வேண்டுமென்று கேட்டு வாங்கிக் கொண்டனர் என்பது பிராமணம். இதன் விரிவை ஆண்டுக் காண்க.*

*இவ்வாறு எல்லை கோலி, பூமியை வாங்கின் அசுரர் அதற்குட்புகுந்து துன்புறுத்தார்களென்பது கருத்து.*

*இவ்வண்ணம் கோடு கிழித்துவிட்டுக் கை கழுவல் வேண்டு மென்பது பற்றிப் பலவகை வேறுபாடுகளுண்டு என்க.*

*ஈண்டு, வேள்வித்தலைவன் 'यज्ञस्य त्वा प्रमया' என்றற் ரொடக்கத்து மந்திரத்தால், வாங்கப்பெற்ற பூமியைப் போற்றல் வேண்டும்.* 17, 18, 19

---

இருபதாம் விநியோகத் தொடக்கம்.

*'अपाररुम देवयजनं' என்றற்ரொடக்கத்து மந்திரத்தால், பூமியின்மேலுள்ள அசுத்த மண்ணை, வேட்போன் கெல்லி எடுத்துப்போட, அதை, ஆக்னீத்ரன் (இரண்டு கையளவு) மும்முறையாகக் கொண்டு போய்க் குப்பைக் குழியிற் போடுதல் வேண்டும்.*

*பின்னர், வேட்போன், 'इमां नराः कृणु तवे दिमेतु' என்பது முதலிய மந்திரத்தால், ஆக்னீத்ரனை, வேதிகையைச் செய்யுமாறு ஏவல் வேண்டும்.*

இருபதாம் விநியோகம்.
ஆக்னீத்ரன் வேதிகையைச் செய்தல்.

மந்திரம்:

**देवस्य सवितुः सवे कर्म कृण्वन्ति वेधसः ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **सवितुः देवस्य** | *அந்தரியாமியாகிய தேவனுடைய* |
| **सवे** | *ஏவலைக் கொண்டு* |
| **वेधसः** | *பிரமர்கள் (வேட்போர்கள்)* |
| **कर्म** | *மண்ணைக் கெல்லுந் தொழிலை* |
| **कृण्वन्ति** | *செய்கின்றார்கள்.* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், ஆக்னீத்ரன் சிறிது மண்ணைக் கெல்லிக் கொண்டு முறையாய் வேதிகையைப் போடல் வேண்டு மென்பதாம்.*

மந்திரங்கள்)

குறிப்பு:—ஈண்டு, இரண்டங்குலம், அல்லது, சில விகற்ப உடன்பாட்டளவு, மேல் மண்ணைக் கெல்லி யெடுத்துவிட்டு தண்ணீரைக் கையாற் றெட்டுக்கொண்டு வேதிகையின் தெற்கிலிருந்து உயர்ந்து, கிழக்கேனும், அல்லது ஈசானியமேனும் தாழ்ந்ததாகச் செய்து வடகோடியை (விலாப்புறத்தை) யேனுஞ் செய்துகொண்டு, தோளிரண்டையும், (அம்சங்களை) உயரமாக்கி, அவ்வாறே மேற்குப்புறத்துக் கோடிகளையுஞ் சிறிது உயரமாக்கி, வேதிக்குக் கீழ்புறஞ் சிறிது பெரிதாகச் செய்து, மேற்கில் மிகப் பெரிதாக்கி நடுவில் மிகச் சிறியதாகவும் வேதிகைச் செய்தல் வேண்டும்.

ஈண்டு, வேள்வித்தலைவன்,

भूमिर्भूत्वा महिमानं पुपोष । பிரா. 3-7-7-6.

என்பது முதலிய மந்திரத்தால், செய்யப்படுகின்ற வேதிகையைப் போற்றல் வேண்டும்.

குறிப்பு:—இதில், ஆகவனீயம் தலையும், வேதிகை உடலுமாமென்றுணர்க.

மண்ணைக் கெல்லல் பலவகைப்படும் அதன் விரிவை பாடியத்திற் காண்க. கெல்லுங்கால் உறுதியான பூமி கிடைக்காவிடின் வேண்டியவளவு கெல்லிக் கொண்டு அதில் மணலைக் கொட்டிக் கொள்ளலா மென்பதையு முணர்க. 20

---

### இருபத்தோராம் விநியோகத் தொடக்கம்.

பின்னர், வேட்போன், பிரமனை நோக்கி, 'ब्रह्मन्नुत्तरं परिग्राहं परिग्राहीष्यामि' 'பிரமன்? வேதிப் பூமியை இரண்டா முறையும் பெற்றுக் கொள்ளுகின்றேன்' என ஆணை கேட்டல் வேண்டும்.

அதற்குப் பிரமன்—'ஓம் பூர்புவ: ஸ்வ: ப்ருகஸ்பதி ப்ரசூத:' என்று செபித்துவிட்டு, 'ओं परिगृहाण' 'ஆம் பெற்றுக்கொள்வாயாக' என்று ஆணை கொடுத்தல் வேண்டும். சூத்திரப்படி, பிருகஸ்பதே பரிக்ருஹாண, என்பது முதலிய மந்திரத்தை மெல்லச் செபித்து, 'ஆம் பெற்றுக்கொள்வாயாக' என உரத்துக் கூறல் வேண்டும் என்பதாம்.

### இருபத்தோன்று, இருபத்திரண்டு. இருபத்து மூன்றுவது விநியோகங்கள்.

இரண்டா முறை வேதிப் பூமியைக் கைப்பற்றல்.

மந்திரம்:

ऋतमस्यृत सदनमस्यृत श्रीरसि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे वेदे ! | வேதிகையே! நீ |
| ऋतं | உண்மை யுடையதாக |
| असि | இருக்கின்றாய். |
| ऋतसदनं | உண்மையான அவிகளுக்கு இடமாகவும் |
| असि | இருக்கின்றாய். |
| ऋतश्रीः | உண்மையான செல்வமுடையதாகவும் |
| असि | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால், முறையாய், முன்போன்று, தெற்கிலும், மேற்கிலும், வடக்கிலுங் கோடு கிழித்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—முன்னர் வாங்கியது உறுதியாமாறு, மற்றொரு முறையும் அசுரர்களிடத்திலிருந்து வேள்விப் பூமியை வாங்கல் வேண்டும். என்னை ? பூமி முழுதும் அசுரராற் கவரப்பட்டமையின் என்க. இதன் விரிவைப் பிராமணத் திற் காண்க.

ஈண்டு, வேள்வித்தலைவன் 'यज्ञस्य त्वा प्रमया' என்பது முதலிய மந்திரத் தால், வாங்கப்பெற்ற வேதிகையைப் போற்றல் வேண்டும். 21, 22, 23

---

இருபத்து நான்காம் விநியோகம்.
கெல்லிய மண்ணை ஒப்புரவுப்படுத்தல்.

மந்திரம் :

**धा असि स्वधा अस्युर्वीचासि वस्वीचासि पुरा क्रूरस्य विसृपो विरप्शिन् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे विरप्शिन् ! | வேதிகையே! நீ |
| क्रूरस्य | கோரமுடைய அசுரன் |
| विसृपः | வெளிப்படுவதற்கு |
| पुरा | முன்னர் |
| धा | அவிகளைத் தாங்குவதாக |
| असि | இருக்கின்றாய். |

| | |
|---|---|
| स्वधा | ‘சுவதா’ என்னும் மந்திரத்தாற் குறிப்பிட்ட பிதிரு பிண்டங்களை யுடையதாகவும் |
| असि | இருக்கின்றாய். |
| उर्वी च | பரப்புடையதாகவும் |
| असि | இருக்கின்றாய். |
| वस्वी च | தனமுடையதாகவும் |
| असि | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், செல்லிய விடத்தை, கிழக்கிலிருந்து மேற்காய் மண்ணைத் தள்ளிவிட்டு மரக்கத்தியாற் சமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—இது, சதுரப்படுத்திய பூமியின், மேடு பள்ளத்தை ஒப்புரவாக்கலாம்.

24

—⁘—

இருபத்தைந்தாம் விநியோகம்.
வேதிகையை நோக்குதல்.

மந்திரம் :

उदादाय पृथिवीं जीरदानुर्यामैरयञ्चन्द्रमसि स्वधाभिस्तां
धीरासो अनुदृश्य यजन्ते ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| धीरासः | தீரர்கள் |
| जीरदानुः | வேள்வித்தலைவரைத் தாங்குகின்ற |
| यां पृथिवीं | எப் பூமியை |
| चन्द्रमसि | சந்திரனுடைய |
| स्वधाभिः | கிரணங்களால் |
| उदादाय | அசுரர்களிடத்திலிருந்து கொண்டுவந்து |
| ऐरयन् | நிறுவினார்களோ, |
| तां | அவ் வேதிப் பூமியை |
| अनुदृश्य | நோக்கிக்கொண்டு |
| यजन्ते | வேள்வியைச் செய்கின்றார்கள். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேதிகையை இனிது பார்த்தல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு :—அசுரர்கள் கொல்லப்பட்டபோது அவ் விரத்தஞ் சிந்தியதனுல் பூமி மாசுடையதாய் விடுமென்று கருதி, பூமியை அணுக்களாக்கிச் சந்திரனிடத்திற் கொண்டு போய் வைத்து விட்டனர். இதுவே மதியின் களங்கமாம்; அதுவே ஈண்டுக் குறிப்பிக்கப்படுகின்றதென் றுணர்க.

(போ-சூ.) இவ்விரண்டு விநியோகங்களையும் ஒரே மந்திரமாகச் செய்து கிழக்கிலிருந்து மேற்காய்ப் பூமியை சமப்படுத்தல் வேண்டு மென்பது. 25

ஒன்பதாம் அநுவாகம் முடிந்தது.

---

## பத்தாம் அநுவாகத் தொடக்கம்.

வேட்போன், நெய் யெடுப்பதற்கு முன்னர், வேதிகையின் பிற்பாதியின் மூன்ருங் கூற்றில், மரக்கத்தியை, வெட்டும் புறம் உள்ளாகவும் தலைகீழாகவும் பிடித்துக் கொள்ளல் வேண்டும்.

பின்னர், ஆக்னீத்ரனை நோக்கி, ‘प्रोक्षणी रासाद येध्मा बर्हिरुपसादय स्रुवंच स्रुचश्च संमृड्ढि पत्नीं सन्नह्याज्येनो देहि’ புரோக்ஷணீ என்னும் நீர் நிறைந்த மரப் பாத்திரத்தையும், விறகையும் தருப்பையையுங் கொண்டு வந்து வைப்பாயாக. சுருக்குகளையும் சுருவத்தையுந் துடைப்பாயாக. பத்தினியைத் தருப்பைக் கயிற்ருற் கட்டுவாயாக. நெய்யைக் கொண்டுவந்து வைப்பாயாக என்று ஏவல் வேண்டும். ஈண்டு, வேட்போன் ‘புரோக்ஷணீ’ என்னும் பாத்திரத்தில் நீர் நிறைத்து வைத்தல் வேண்டும் என்பர் சிலர்.

அதன் பின்னர், ஆக்னீத்ரன், தலை கீழாய்ப் பிடித்திருந்த கத்தியை, வடக்கில் நுனி கோடு கிழிக்கப்படுமாறு தள்ளிவிட்டு, அக் கத்தி மேற்படாமல் தெற்கில் நீரிறைத்தல் வேண்டும்.

பின்னர், ‘ऋतसधःस्थ पापघ्न्यः’ என்று வேள்வித்தலைவனுடைய பாவத்தை மனதாற் சிந்தித்துக்கொண்டு, கத்தியாற் கீறிய கோட்டின்மேல் ‘புரோக்ஷணீ’ என்னும் நீர்ப்பாத்திரத்தை வைத்தல் வேண்டும்.

ஈண்டு, வேள்வித்தலைவன், ‘इडेऽन्यक्रत् रहमपः’ என்பது முதலிய மந்திரத்தால், கொண்டு வந்து வைத்த நீர்ப்பாத்திரத்தைப் போற்றல் வேண்டு மென்பதையு முணர்க.

மற்றும், ஆக்னீத்ரான், ‘शतभृष्टिरसि’ என்பது முதலிய மந்திரத்தால், வெறுக்கின்ற பாவியை மனதால் நினைத்துக்கொண்டு உத்காத்திற்கு முன்னால் மேற்காக அக் கத்தியை எறிந்துவிட்டுக் கையைக் கழுவிக்கொண்டு, பின்னர், அக் கத்தியின் நுனியைத் தொடாமலே அக் கத்தியைக் கழுவுதல் வேண்டும்.

பின்னர், ஆகவனீயத்திற்கு வடக்கில் கிழக்கு நுனியாகத் தென்புறமாகச் சமித்துக்களையும், வடக்கில் தருப்பைகளையும் வைத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'ऊर्णाम्रदु प्रथमानं' என்பது முதலிய மந்திரத்தால், கொண்டு வந்து வைத்த தருப்பையைப் போற்றல் வேண்டும். பின்னர், ஆக்னீத்ரன், 'घृताचीरेताग्निर्वः' என்பது முதலிய மந்திரத்தால், சுருவம், பிராசித்ரம், சுருக் மூன்று, என்னும் இவ்வைந்தையும் அங்கு கொண்டு வந்து வைத்துக் கொள்ளல் வேண்டுமென்பது முணரற்பாலது.

---

விடயச் சுருக்கம்.

प्रत्यु स्रुचस्तपेदग्नेर्मृष्टेरूर्ध्वं पुनस्तपेत् ।
गोष्ठं वाचं तथा चक्षुः प्रजां मार्ष्टि क्रमात्स्रुचः ॥ १ ॥
जुहूपभृद्ध्रुवा आशा पत्नीं योक्त्रेण नह्यति ।
सुप्रेति पत्न्युपविशेदिमं काले विमोचनम् ॥ २ ॥
समा पत्नी पूर्णपात्रं जपेदथ मही द्वयात् ।
घृतं निरुप्य वीक्षेत तेजोऽधिश्रित्य पश्चिमे ॥ ३ ॥
अग्नौ तेजो हरेदग्निः पूर्वाग्नावधिसंश्रयेत् ।
अग्नेः स्फ्यवर्त्मनि क्षिप्त्वा शुज्योते त्रिभिराज्यकम् ॥ ४ ॥
उत्पूय देवो जलमुत्पुनात्याज्य पवित्रतः ।
शुज्योऽर्चिस्त्रिभिराज्यस्य ग्रहो जुह्वादिके त्रये ॥ ५ ॥
दशमे त्वनुवाकेऽस्मिन् त्रयोविंशति रीरिताः ।

சுருவம், சுரு, உபபிருத், துருவா என்பன முதலிய நெய்ப் பாத்திரங்களையும், பிராசித்திரஹரணத்தையுமெடுத்து வேள்வித்தீயிற் சூடுகாட்டி, அவற்றின் மேல் நீரைத் தெளித்து, தருப்பையாற் றுடைத்து, மற்றொருமுறை நீராற் கழுவி, தருப்பையின்மேல் வைத்து, பத்தினியின் இடுப்பில் தருப்பைக் கயிற்றைச் சுற்றி, அவளை முடியுமாறு செய்வித்து, நெய்ப் பானையைத் திறந்து நெய்யெடுத்து, ஆஜ்யத்தாலியில் நெய்யை வார்த்துக்கொண்டு, தக்ஷிணாக்கினி, காருகபத்தியம் என்னும் அக்கினிகளிற் சூடுகாட்டி, பத்தினியின் கையிற் கொடுத்து, அதை பார்க்கும்படி செய்து, மற்றொருமுறை காருகபத்தியத்திலும் ஆகவனீயத்திலுஞ் சூடுகாட்டி, வேதிகையின்மீது ஸ்பியத்தாற் கிழித்த கோட்டில் வைத்து, வேள்வித்தலைவனும், வேட்போனும் அந் நெய்யைப் பார்த்த பின்னர், அதைப் பவித்திரத்தால் அலைத்து, அப் பவித்திரத்தாலேயே புரோக்ஷணியை அலைத்து விட்டு, சுரு, உபபிருத், துருவா, என்பவற்றில், நான்கு

(நெய் எடுக்கும் முறை, அல்லது, ஐந்துமுறை மந்திரத்துடன் நெய்யெடுத்து வேள்விச்சாலைக் கருகில் வைத்தல் வேண்டு மென்பதாம். இங்குப் பத்தினியின் இடுப்பிலுள்ள கட்டை யவிழ்த்தலும் பூர்ணபாத்திர நீரை யூற்றலுங் கூறப்பட்டிருப்பினும், அதற்கு, ஈண்டு, விநியோகம் இல்லை யென்பது உணரற்பாலது.

---

## முதற் காண்டம் - முதற் பிரபாடகம்.

## பத்தாம் அநுவாகம்.

மூன்று பஞ்சாதிக்கு மேல் 16 பதங்களைக் கொண்டது.

---

நெய் முதலிய அவிகளை எடுத்துக்கொண்டு வருதற்குரிய மந்திரங்கள்.

प्रत्युष्टꣳरक्षः प्रत्युष्टा अरातयोऽग्नेर्वस्तेजिष्ठेन तेजसा निष्टपामि गोष्ठं मा निर्मृक्षं वाजिनं त्वा सपत्नसाहꣳ सं मार्ज्मि वाचं प्राणं चक्षुः श्रोत्रं प्रजां योनिं मा निर्मृक्षं वाजिनीं त्वा सपत्न साहीꣳ सं मार्ज्म्याशासाना सौमनसं प्रजाꣳ सौभाग्यं तनूम् । अग्ने रनुव्रता भूत्वा सं नह्ये सुकृताय कम् । सुप्रजसस्त्वा वयꣳ सुपत्नी रुप (१) सेदिम । अग्ने सपत्न दम्भनमदब्धासो अदाभ्यम् । इमं विष्यामि वरुणस्य पाशं यमबध्नीत सविता सुकेतः । धातुश्च योनौ सुकृतस्य लोके स्योनं मे सह पत्या करोमि । समायुषा सं प्रजया सममग्ने वर्चसा पुनः । सं पत्नी पत्याहं गच्छे समात्मा तनुवा मम । महीनां पयोऽस्योषधीनाꣳ रसस्तस्य तेऽक्षीयमाणस्य निः (२) वपामि महीनां पयोस्योषधीनाꣳ रसोऽदब्धेन त्वा चक्षुषाऽवेक्षे सुप्रजास्त्वाय तेजोऽसि तेजोऽनुप्रेह्यग्निस्ते तेजो मा वि नैं दग्नेर्जिह्वाऽसि सुभूर्देवानां धाम्ने धाम्ने देवेभ्यो यजुषे यजुषे भव शुक्रमसि ज्योतिरसि तेजोऽसि देवो वः सवितोत्पुनात्व-

च्छिद्रेण पवित्रेण वसोः सूर्यस्य रश्मिभिः शुक्रं त्वा शुक्रायां धाम्ने धाम्ने देवेभ्यो यजुषे यजुषे गृह्णामि ज्योतिस्त्वा ज्योतिष्यर्चिस्त्वाऽर्चिषि धाम्ने धाम्ने देवेभ्यो यजुषे यजुषे गृह्णामि (३)

---

முதல் விநியோகம்.

ஆகுதிக்கு வேண்டிய பாத்திரங்களைத் தீயிற் காய்ச்சல்.

மந்திரம் :

प्रत्युष्ट॰ रक्षः प्रत्युष्टा अरातयः ।

என்பது.

பதவுரை.—*இதன் உரை முன்னர்க் கூறப்பட்டுள்ளது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், சுருக், சுருவம் முதலிய வேள்விப்பாத்திரங்களை, காருக பத்தியத் தீயிற் காய்ச்சல் வேண்டு மென்பதாம்.*

குறிப்பு :—*இது, வேண்டியவை கைகூடுதற்கும், வேண்டாதவை யொழிதற் பொருட்டுமாம். இவற்றை ஆகவனீயத் தீயிற் காய்ச்சுதலு முண்டு.*

(போ-சு.) 'प्रत्युष्टं' *என்பது முதல்* 'निष्टपामि' *என்னும் வரை ஒரே மந்திரமாகச் சொல்லி, சுருக்குகளை காருகபத்தியத்திற் காய்ச்சல் வேண்டு மென்பது.* 1

---

இரண்டாம் விநியோகத் தொடக்கம்.

*பின்னர்,* 'अनिशितास्थ सपत्नक्षयणिः' *என்னும் மந்திரத்தால், காய்ச்சின அப் பாத்திரங்களைப் போற்றிக்கொண்டு, பிரித்து வைத்த தருப்பை நுனிகளை, அல்லது, ஒன்று சேர்ந்துள்ள தருப்பை நுனிகளை யெடுத்துக்கொள்ளல் வேண்டும்.*

இரண்டாம் விநியோகம்.

சுருவம் என்னும் மரப்பாத்திரத்தைத் தருப்பை நுனியால் துடைத்தல்.

மந்திரம் :

गोष्ठं मा निर्मृक्षं वाजिनं त्वा सपत्नसाहं संमार्ज्मि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| गोष्ठं | *கோக்களின் இடத்தைக்* |
| मा निर्मृक्षं | *கெடுக்கமாட்டேன்* |

| | |
|---|---|
| **वाजिनं** | வன்மை யுடையதும் |
| **सपत्नसाहं** | பகைவரை யடக்குவதுமாகிய |
| **त्वा** | (சுருவமே!) உன்னை |
| **संमार्ज्मि** | நன்கு துடைக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், சுருவம் என்னும் அகப்பை விசேடத்தை, தருப்பை நுனியால் மும்முறை துடைத்தல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு:—வடக்கு முகமாக வேனும், கிழக்கு முகமாக வேனும் சுருவத்தை யெடுத்து மேலே வைத்துக்கொண்டு, அதன் உட்பள்ளத்தைச் சுற்றி தருப்பையின் நுனிகளாலும், தருப்பையின் அடிகளால் அதன் கைப்பிடியையுந் துடைத்தல் வேண்டும். 2

---

மூன்றும் விநியோகம்.

சுருவைத் துடைத்தல்.

மந்திரம்:

**वाचं प्राणं मा निर्मृक्षं वाजिनीं त्वा सपत्नसाहीं संमार्ज्मि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **वाचं** | வாக்கையும் |
| **प्राणं** | பிராணனையுங் |
| **निर्मृक्षं** | கெடுக்கமாட்டேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன் போன்று, சுரு என்பதைத் துடைத்தல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு:—தருப்பை நுனிகளால், குழிந்த விடத்தைக் கிழக்காகவும், நடுத் தருப்பைகளால், மேலும் கீழும், நடுப்பாகத்தை மேற்கிலிருந்து கிழக்காகவும், அடிகளால் கைப்பிடியைக் கிழக்காகவும் மும்முறை துடைத்தல் வேண்டுமென் பதை யுணர்க. எஞ்சியது முற்கூறியது. 3

---

நான்காம் விநியோகம்.

உபபிருதை (மரப்பாத்திர விசேடத்தை)த் துடைத்தல்.

மந்திரம்:

**चक्षुः श्रोत्रं मा निर्मृक्षं वाजिनीं त्वा सपत्नसाहीं संमार्ज्मि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| चक्षुः | கண்ணையும் |
| श्रोत्रं | செவியையும் |
| मा निर्मृक्षं | கெடுக்கமாட்டேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன் போன்று, 'உபபிருத்' என்னும் மரப்பாத்திர விசேடத்தைத் துடைத்தல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—துடைக்கும் வகை, முன்போன்று மூன்று முறை துடைப்பதே யாம்; அப்பிரதட்சணமாய் வருதல் விசேடம். எஞ்சியது முற்கூறியது. 4

ஐந்தாம் விநியோகம்.

துருவா, என்பதைத் துடைத்தல்.

மந்திரம் :

प्रजां योनिं मा निर्मृक्षं वाजिनीं त्वा सपत्नसाहीं सं मार्ज्मि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| प्रजां | காரியத் தோற்றத்தையும் |
| योनिं | காரணத்தையும் |
| मा निर्मृक्षं | கெடுக்கமாட்டேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், 'துருவா' என்னும் மரப்பாத்திரத்தை முன் போன்று துடைத்தல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு :—துடைக்கும் வகை, முன்னர்ச் சுருவத்தைத் துடைத்தது போன்று மும்முறை துடைத்தலேயாம். எஞ்சியது முற்கூறியதே.

ஈண்டு, 'रूपं वर्णं पशूनां मा निर्मृक्षं' 'கோக்களின் உருவத்தையும் நிறத்தையும் கெடுக்கமாட்டேன்' என்றும், மற்றவைகளை முற்கூறியது போன்றே கூறிக் கொண்டும், பிரமன் அருந்துதற்குரிய பசுவின் காது போன்ற தொன்னையை யும் முன்போன்றே துடைத்து, அல்லது, இம்மந்திரத்தை ஓதாமலே மும்முறை துடைத்து, பிரயோகம் முடியும் வரையும் அங்குள்ள சுத்தஞ் செய்யாத பாத் திரங்களுடன் கலக்காமல் வைத்தல் வேண்டும். 5

ஆறும் விநியோகம்.

மீண்டுந் தீயிற் காய்ச்சுதல்.

மந்திரம் :

**अग्नेर्वस्तेजिष्ठेन तेजसा निष्टपामि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे पात्राः !** | சுருக் முதலிய பாத்திரங்களே ! |
| **वः** | உங்களை |
| **अग्नेः** | காருகபத்திய மென்னுந் தீயின் |
| **तेजिष्ठेन** | பேரொளி வாய்ந்த |
| **तेजसा** | சோதியால் |
| **निष्टपामि** | சூடுறச் செய்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மற்றுமொரு முறை அப் பாத்திரங்களைத் தீயிற் காய்ச்சல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—இம் மந்திரம் பாடமுறையில் முன்னுள்ளது.

பின்னர், நீர் தெளித்து, உத்காத்திற்கு முன் பக்கத்திலேனும், பின் பக்கத்திலேனும், தருப்பைகளை விரித்து அதன் மேல் அவைகளை வைத்தல் வேண்டும் என்பதாம்.

அதன் பின்னர் 'दिवः शिल्प मवततं' என்பது முதலிய மந்திரத்தால், துடைத்த தருப்பை நுனிகளை, பாத்திரங்களைக் காய்ச்சிய அக்கினியிற் கொளுத்திவிடல் வேண்டும். அல்லது, 'உத்கரம்' என்னும் இடத்தில் எறிந்து விடல் வேண்டும்.

ஈண்டு, வேள்வித்தலைவன் 'प्रजापतय इदं न मम' 'இது பிரசாபதியின் பொருட்டு எனக்கல்ல' என்று கொளுத்துகின்ற பட்சமாயிருக்கில் தியாகஞ் செய்து விடல் வேண்டும். உத்காத்திற் போடுகின்ற பட்சமாகில் தியாகம் இல்லை. வழக்கிலோ, பிரகிருதியிற் கொளுத்துதலும், விகிருதியில் உத்காத்திற் போடுதலும் நடந்து வருகின்றது என்பது உணரற்பாலது.

எப்போதும் உபபிருதின் முகம் வடக்காகவே யிருத்தல் வேண்டும், ஏனைய வற்றின் முகங்கள் வடக்கேயாகிலும், கிழக்கேயாகிலு மிருக்கலாம்.

இவற்றுள், சுருவம் நெய் யெடுக்கவும் சில சமயம் ஆகுதி செய்வதற்கும், சுகு, ஆகுதி செய்வதற்கும், உபபிருத், பிரயாசம், அநுயாசம் என்னும் அங்க வேள்விகளுக்கு நெய்யெடுத்து வைக்கவும், துருவா, எல்லா வேள்விகளுக்கும் நெய் யெடுத்து வைத்துக்கொள்ளுவதற்கும் உரியவைகளென்பதை யுணர்க. 6

### ஏழாம் விநியோகத் தொடக்கம்.

*ஈண்டு, ஆக்னீத்ரன் வேதம், என்னும் தருப்பை முடிச்சையும், நெய்ப்பாத்திரத்தையும், தருப்பைக் கயிற்றையும், பவித்திரத்தையும் எடுத்துக்கொண்டு காருகபத்தியத்திற்குச் செல்லல் வேண்டும்.*

### ஏழாம் விநியோகம்.

பத்தினியின் இடுப்பில் தருப்பைக் கயிற்றைக் கட்டுவித்தல்.

மந்திரம் :

**आशा साना सौमनसं प्रजाँ॰सौ भाग्यं तनूम् ।**
**अग्ने रनुव्रता भूत्वा संनह्ये सुकृतायकम् ।**

*என்பது.*

### பதவுரை.

| | |
|---|---|
| **अग्ने:** | *அக்கினியை* |
| **अनुव्रता** | *பின்றொடர்ந்து நடப்பவளும்* |
| **सौमनसं** | *நன்மன முடையவளும்* |
| **प्रजां** | *புத்திரப் பேறுடையவளும்* |
| **सौभाग्यं** | *மிகவழகிய* |
| **तनूं भूत्वा** | *உடம்பை யுடையவளுமாய்* |
| **आशा साना** | *இருக்கின்ற வேள்வித்தலைவியை* |
| **सुकृतायकं** | *நலத்தைக் கருதிக்* |
| **संनह्ये** | *கட்டுகின்றேன்.* |

### சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், ஆக்னீத்ரன் முப்பிரிகொண்ட தருப்பைக் கயிற்றால் பத்தினியின் இடுப்பிற் கட்டல் வேண்டு மென்பதாம்.*

குறிப்பு :—*காருகபத்தியத்திற்கு மேற்கில் பத்தினியை உட்கார வைத்தேனும், அல்லது நிற்க வைத்தேனும், முஞ்சிக் கயிற்றினாலேனும், அல்லது யாதானுமொரு கயிற்றாலேனும், இடுப்பில் கட்டும்படி செய்வித்தல் வேண்டும். அதாவது முடிச்சுப் போடும் வரை சுற்றி விட்டுவிடுதலாம். இதனால் பத்தினியும் வேள்விக்கு அதிகாரியாகின்றா ளென்பது பெறப்படுகின்றது.* 7

---

### எட்டாம் விநியோகத் தொடக்கம்.

*பின்னர், பத்தினி, நாபிக்கு வடக்கில் மயிர் முடிச்சுப் போன்று முடிந்து, அம் முடிச்சு நாபிக்குத் தென்புறமாய் வருமாறு தள்ளி வைத்துக்கொண்டு*

எழுந்து நின்று, 'अग्ने गृहपत उपमाह्वयस्व' என்னும் மந்திரத்தால், காருகபத்தியத் தீயைப் போற்றிக்கொண்டு, பின்னர், 'देवानां पत्नीरुपमा' என்பது முதலிய மந்திரத்தால் தேவபத்தினியையும் போற்றிக்கொண்டு அவ்விடத்திலிருந்து தெற்கே சிறிது தூரம் நகர்ந்துகொள்ளல் வேண்டும்.

எட்டாம் விநியோகம்.

வடக்கு முகமாய் பத்தினி உட்காருதல்.

மந்திரம் :

**सुप्रजसस्त्वा वयꣳ सुपत्नीरुप सेदिम ।**
**अग्ने सपत्न दम्भन मदब्धासो अदाभ्यम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **सपत्नदम्भनं** | பகைவரை யடக்குகின்றதும் |
| **अदाभ्यं** | ஒருவராலேனும் தள்ளிவிடப்படாததுமாகிய |
| **अग्ने !** | அக்கினியே ! |
| **त्वा** | உன்னை |
| **सुप्रजसः** | நல்ல புத்திரப்பேற்றை யுடையவர்களும் |
| **सुपत्नीः** | நல்ல கணவர்களை யுடையவர்களும் |
| **अदब्धासः** | ஒருவராலேனும் கெடுக்க முடியாதவர்களுமாகிய |
| **वयं** | யாம் |
| **उपसेदिम** | அடைகின்றோம். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பத்தினி, காருகபத்தியத் தீக்கு அருகாய்த் தெற்கில் வடக்கு முகமாய் உட்காரல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—காருகபத்தியத்திற்கு மேற்கில் உட்கார்ந்து தருப்பைக் கயிற்றை இடுப்பிற் கட்டிக்கொண்டு தெற்காய்ச் சிறிது தூரம் நகர்ந்து கிழக்கிற் போய் வடக்கு முகமாய் உட்காரல் வேண்டு மென்பதை யுணர்க.

பின்னர், 'इन्द्राणी वाऽविधवा भूयासं' என்பது முதலிய மந்திரத்தை, பத்தினி செபித்தல் வேண்டும்.

ஈண்டு, வேள்வித்தலைவன், 'युक्ता मे यज्ञमन्वा सातै' அதாவது, 'ஒற்றுமையாயிருந்து வேள்வியைத் தழுவி நடப்பாயாக என்று' பத்தினிக்கு ஆணையிடல் வேண்டும் என்பது முணரற்பாலது.

ஒன்பதாம் விநியோகம்.

பத்தினியின் இடுப்பிற் கட்டியுள்ள கயிற்றை அவிழ்த்தல்.

மந்திரம் :

**इमं विष्यामि वरुणस्य पाशं यमबध्नीत सविता सुकेतः ।
धातुश्च योनौ सुकृतस्य लोके स्योनं मे सह पत्या करोमि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे यजमाने !** | வேள்வித் தலைவியே ! உன்னை |
| **यं वरुणपाशं** | யாதொரு வருணனது கயிற்றைக்கொண்டு |
| **सुकेतः** | நல்லுணர்வுடைய |
| **सविता** | சூரியன் |
| **अबध्नीत** | கட்டினனோ |
| **इमं** | அத்தகைய இக்கட்டை |
| **विष्यामि** | அவிழ்க்கின்றேன். (அவிழ்த்து) |
| **सुकृतस्य** | புண்ணியத்தின் பயனும் |
| **धातुश्च** | பிரமனது |
| **योनौ** | இடமுமாகிய |
| **लोके** | உலகில் |
| **पत्यासह** | கணவனுடன் |
| **स्योनं** | இன்பத்தை யடையுமாறு |
| **मे करोमि** | (உன்னைச்) செய்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஹோதா (இருக்குவேத மோதுவோன்) பத்தினியின் இடுப்பிலுள்ள கயிற்றை அவிழ்த்து விடல் வேண்டும்.

குறிப்பு :—அவிழ்த்த கயிற்றை இரண்டாய் மடித்து, காருகபத்தியத்திற்கு மேற்கில் போட்டுவிட்டு, தருப்பை முடிச்சின் தருப்பைகளின் மேல் 'புரோக்ஷணீ' என்னும் பூரண பாத்திரத்தை வைத்து அத் தருப்பைகளால் மூடி அதைத் தொட்டுக்கொண்டு, 'पूर्णमसि पूर्ण' என்பது முதலிய மந்திரத்தை பத்தினி ஓதுமாறு செய்தல் வேண்டும் என்பதாம். 'प्राच्यां दिशि देवाः' என்பது முதலிய மந்திரத்தால், பூரண பாத்திரத்திலுள்ள நீரைத் தெளித்து மந்திரம் ஓதச் செய்து, கயிற்றின் அடியை இரு கைகளாலும் பிடித்துக்கொள்ள

ஹோதாவும் இடது கையாற் பிடித்து மேலே தூக்கிக் கவிழ்த்து அதிலுள்ள நீரைக் கீழே கொட்டி விடல் வேண்டுமென்க.

வருணனுடைய கயிற்றால் சூரியன் கட்டினன் என்றல் பாவனையாம். அதை அவிழ்க்காவிடின் வயிறு பெருக்கு மென்ப. 9

---

### பத்தாம் விநியோகம்.

பத்தினி பூரண பாத்திரத்தைக் கையிலெடுத்துக் கொண்டு எழுந்திருத்தல்.

மந்திரம் :

**समायुषा सं प्रजया समग्ने वर्चसा पुनः ।**
**सं पत्नी पत्याहं गच्छे समात्मा तनुवा मम ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **अग्ने** | காருகபத்தியத் தீயே! |
| **अहं** | யான் |
| **समायुषा** | நிறைந்த ஆயுளை |
| **संगच्छे** | அடைவேனாக. |
| **प्रजया** | மக்களை யுடையவளும் |
| **सं** | இனிது ஆவேனாக. |
| **वर्चसा** | கற்பு என்னும் கீர்த்தி யுடையவளாயு மிருப்பேனாக. |
| **पत्या** | இக் கணவனுடன் |
| **पुनः** | மீண்டும், மீண்டும் |
| **पत्नी** | மனையாளாய் இருப்பேனாக. |
| **मम तनुवा** | என்னுடம்புடன் கூடி |
| **समात्मा** | சீவான்மா வாழ்க. |

### சாயணபாடியக் கருத்து.

பத்தினி, இம் மந்திரத்தை ஓதி, பூரண பாத்திரத்தைப் போற்றி அந்நீரைத் தரையிற் கொட்டிவிட்டு, நீரால் கையை நனைத்து அக்கையால் முகத்தைத் துடைத்துக்கொண்டு, புஷ்டிவதீ, பசுமதீ, கிருஹமேதினீ, ஆவேனாக என்று, எழுந்திருத்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—முன்னர், ஹோதா, பத்தினியை அவிழ்த்த தருப்பைக் கயிற்றுடன் பூரண பாத்திரத்தைப் பிடித்துக்கொள்ளச் செய்து அதில் நீரை விடல்

வேண்டும் என்பதையு முணர்க. இவ் விநியோகங்கள் இங்கில்லை. தொடர்பு பற்றிக் கூறப்பட்டுள்ளன வென்பது உணரற்பாலது. 10

பதிஞோராம் விநியோகத் தொடக்கம்.

பின்னர், ஆக்னீத்ரன், 'पूषा ते बिलं विष्यतु' என்னும் மந்திரத்தால், நெய்ப் பானையின் மூடியைத் திறந்து அதை தட்சிணத் தீயில் காய்ச்சிக்கொண்டு, 'अदितिरस्यच्छिद्रपत्रा' என்னும் மந்திரத்தால் நெய் யெடுக்கும் பாத்திரத்தை யெடுத்துக் கொள்ளல் வேண்டும்.

பதிஞோராம் விநியோகம்.

ஆஜ்யஸ்தாலி, என்னும் நெய்ப் பாத்திரத்தில் நெய்யை வார்த்தல்.

மந்திரம் :

**महीनां पयोऽस्योषधीनाँ रसस्तस्य तेऽक्षीयमाणस्य निर्वपामि देवयज्यायै ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे आज्य !** | நெய்யே ! நீ |
| **महीनां** | பசுக்களின் |
| **पयः** | பாலாக |
| **असि** | இருக்கின்றாய். |
| **ओषधीनां** | கொடி செடிகளின் |
| **रस:** | இரசமாகவும் |
| **असि** | இருக்கின்றாய். |
| **अक्षीयमाणस्य** | குறைதலற்ற |
| **तस्य ते** | அத்தகைய வுன்னை |
| **देवयज्यायै** | தேவாராதனையின் பொருட்டுப் |
| **निर्वपामि** | பாத்திரத்தில் எடுத்துக்கொள்ளுகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் 'ஆஜ்யஸ்தாலி' என்னும் ஒரு பெரிய பாத்திரத்தில் பவித்திரத்தை யுள்ளே வைத்து அதில் நெய்யை வார்த்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம். ஈண்டு, 'தேவாராதனையின் பொருட்டு' என்பது மிகுதிப் பாடம்.

குறிப்பு :—*பிரமன் படைப்பதற்கெண்ணி, நெய், தேன் வடிவங்களாயினன். தேனல் எண்ணிலா வுயிர்களைப் படைத்துவிட்டான்; ஆதலின், இரசமிலாததாய், தேன், வேள்விக்கு உரித்தலாததாயிற்று. மிகுந்த சுவை யுடைமையின் நெய்யே வேள்விக்கு மிகவும் உரியதா மென்பது கதை.* 11



பன்னிரண்டாம் விநியோகத் தொடக்கம்.

*பின்னர், 'इदं विष्णुर्विचक्रमे' என்பது முதலிய மந்திரத்தால் தட்சிணுக்கினியில் அந்நெய்யை வைத்து, பின்னர் அதை யெடுத்து வேதம் என்னும் தருப்பை முடிச்சால் சாம்பரைத் துடைத்து 'इषे त्वा' என்னும் மந்திரத்தால் காருகபத்தியத் தீயின் தென்பாதியில் வைத்து, 'ऊर्जे त्वा' என்னும் மந்திரத்தால் எடுத்துக்கொண்டு போய் வேதத்தின் மேல் வைத்து, பத்தினியின் கையிற் கொடுத்தல் வேண்டும். கொண்டு போன நெய்யை, மூச்சு விடாமலும் கண்ணிமை கொட்டாமலும் கண்ணைத் திறந்து பேசாமலும் பார்த்தல் வேண்டும்.*

பன்னிரண்டாம் விநியோகம்.
பத்தினி நெய்யை நோக்குதல்.

மந்திரம் :

**महीनां पयोऽस्योषधीनाꣳ रसोऽदब्धेन त्वा चक्षुषाऽवेक्षे
सुप्रजात्वाय ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **हे आज्य !** | *நெய்யே! நீ* |
| **महीनां** | *பசுக்களின்* |
| **पयः** | *பாலாக* |
| **असि** | *இருக்கின்றாய்.* |
| **ओषधीनां** | *கொடி செடிகளின்* |
| **रसः** | *இரசமாகவும்* |
| **असि** | *இருக்கின்றாய்.* |
| **त्वा** | *அத்தகைய உன்னை* |
| **अदब्धेन** | *தீமையிலாத (குளிர்ந்த)* |
| **चक्षुषा** | *கண்ணால்* |
| **सुप्रजास्त्वाय** | *நல்ல புத்திரப்பேற்றின் பொருட்டு* |
| **अवेक्षे** | *பார்க்கின்றேன்.* |

மந்திரங்கள்)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பத்தினி, நெய்யைப் பார்த்தல் வேண்டு மென்பது.

குறிப்பு :—இதிலிருந்து வேள்வித்தலைவனும் தலைவியும் வேள்வி செய்யத் தொடங்கினர் என்பது உணரற்பாலது. 12



பதின்மூன்றாம் விநியோகம்.

ஆக்னீத்ரன், நெய்யைக் காருகபத்தியத் தீயிற் காய்ச்சல்.

மந்திரம் :

**तेजोऽसि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे आज्य !** | நெய்யே! நீ |
| **तेज:** | ஒளியாக |
| **असि** | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அந்த நெய்யை, காருகபத்தியத் தீயின் வடபாதியில் வைத்தல் வேண்டும் என்பது.

'तेजसे त्वा' என்னும் மந்திரத்தால் அதை எடுத்து வேதம் என்னும் தருப்பை முடிச்சால் சாம்பரைத் துடைத்தல் வேண்டும். 13



பதினான்காம் விநியோகம்.

ஆக்னீத்ரன், நெய்யைக் கொண்டு போதல்.

மந்திரம் :

**तेजोऽनुप्रेहि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे आज्य !** | நெய்யே! நீ |
| **तेजः** | ஒளிகளை |
| **अनुप्रेहि** | முறையாய் அடைவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆகவனீயத் தீக்கு அருகில் அந் நெய்யைக் கொண்டு போதல் வேண்டும் என்பது. 14



பதினைந்தாம் விநியோகம்.
ஆகவனீயத் தீயில் அந் நெய்யை வைத்தல்.

மந்திரம் :

**अग्निस्ते तेजो मा विनैत् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे आज्य ! | நெய்யே ! |
| ते | உனது |
| तेजः | ஒளியை |
| अग्निः | ஆகவனீய மென்னும் தீ |
| मा विनैत् | கெடுக்காததாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆகவனீயத் தீயில் வைத்து நெய்யைக் காய்ச்சல் வேண்டும் என்பது.

இம் மூன்று மந்திரங்களாலும், முறையே, காருகபத்தியத் தீயின் வட பாதித் தீயில் நெய்யை வைத்துக் காய்ச்சி எடுத்துச் சாம்பரைத் துடைத்து கொண்டு போய் மீண்டும் ஆகவனீயத்தில் வைத்துக் காய்ச்சி எடுத்து அதி லுள்ள சாம்பரைத் துடைத்தல் வேண்டும் என்பது பொருளாம்.

குறிப்பு :—பூப்பு முதலியவற்றால் பத்தினி இல்லில் இல்லை யெனின், காருகபத்தியத் தீயின் வடபாதித் தீயில் வைத்துக் காய்ச்சுதலும், இறக்கு தலும் இல்லை. அவள் பார்த்தல் இன்மையின் என்க. அங்ஙனமாயின், அவள் இடுப்பிற் கட்ட வேண்டிய தருப்பைக் கயிற்றை யேனும், அல்லது, மற்றைய கயிற்றை யேனும், உரிய காலத்தில், வடக்கில் முடிச்சும், தெற்கில் கயிறு மாக வேதிக்குப் பின்னால், அல்லது, அந்தர்வேதியில், பேசாமல் (மந்திரம் ஓதா மல்) போட்டு விடல் வேண்டும் என்பது உணரற்பாலது. 15

—oo:o:oo—

பதினாறாம் விநியோகம்.
நெய்யை எடுத்து வைத்தல்.

மந்திரம் :

**अग्नेर्जिह्वाऽसि सुभूर्देवानां धाम्ने धाम्ने देवेभ्यो यजुषे यजुषे भव ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे आज्य ! | நெய்யே ! நீ |
| अग्नेः | அக்கினியின் |
| जिह्वा | நாக்காக |
| असि | இருக்கின்றாய். |
| देवानां | தேவர்களுக்கு |
| सुभूः | சுகத்தை யுண்டாக்குவதாகவும் |
| असि | இருக்கின்றாய். ஆதலின், |
| धाम्ने धाम्ने | ஒவ்வொரு வேள்விகளினுஞ் செய்யப்படும் |
| यजुषे यजुषे | ஒவ்வொரு தேவாராதனையினும் |
| देवेभ्यः | தேவர்களுக்குப் |
| भव | போதியது ஆவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆகவனீயத்திற் காய்ந்துகொண்டிருந்த நெய்யை யெடுத்து வேதம் என்னும் தருப்பை முடிச்சால் அதன் சாம்பரைத் துடைத்து விட்டு மரக்கத்தியாற் கிழித்துள்ள கோட்டின் மேல் அதை வைத்தல் வேண்டும் என்பதாம். 16

---

பதினேழாம் விநியோகத் தொடக்கம்.

சூத்திரப்படி, வேட்போனும் வேள்வித்தலைவனும், வாய் பேசாமல், கண்ணைத் திறந்து நோக்கிக் கொண்டு, மூச்சும் விடாமலே,

आज्यमसि सत्यमसि । சங். கா-1, பிர-6, அநு-1.

என்பது முதலிய மந்திரத்தைச் செபித்தல் வேண்டும். கண்ணோக்குதலும் ஒருவகைச் சமற்காரமாம் என்பதை யுணர்க.

ஈண்டு, இடையில் மூச்சு விடில், 'இதம் விஷ்ணுர்விசக்ரமே த்ரேதா நிதகே பதம்' என்னும் மந்திரத்தை ஆபத்தம்ப வேள்வித்தலைவனும், இம் மந்திரத்தையே, தனது சாகையைத் தழுவி ஆசுவலாயன வேள்வித்தலைவனும் படித்தல் வேண்டு மென்பது முணரற்பாலது.

பதினேழு, பதினெட்டு, பத்தொன்பதாம் விநியோகங்கள்.

நெய்யைப் புநிதமாக்கல்.

மந்திரம் :

शुक्रमसि । ज्योतिरसि । तेजोऽसि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे आज्य ! | நெய்யே! நீ |
| शुक्रं | புநிதமாகவே |
| असि | இருக்கின்றாய். |
| ज्योतिः | சோதியாகவும் |
| असि | இருக்கின்றாய். |
| तेजः | சுடராகவும் |
| असि | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால், முறையே, பவித்திரத்தால் மும்முறை நெய்யை அலைத்தல் (உத்பவனம் செய்தல்) வேண்டும் என்பதாம்.

குறிப்பு:— உத்பவனஞ் செய்வது, முதலில் கிழக்கில் ஆரம்பித்து பவித்திரத்தை மேற்காகக் கொண்டு போய் மீண்டுங் கிழக்கிலேயே முடித்தல் வேண்டும்.

17, 18, 19

---

இருபதாம் விநியோகம்.

புரோக்ஷணியிலுள்ள நீரைப் புநிதமாக்குதல்.

மந்திரம்:

देवो वः सवितोत्पुनात्वच्छिद्रेण पवित्रेण वसोः सूर्यस्य
रश्मिभिः ।

என்பது.

பதவுரை.—ஐந்தாம் அநுவாகத்திற் காண்க.

சாயணபாடியக் கருத்து.—இதுவு மவ்வாறே.

குறிப்பு:—ஐந்தாம் அநுவாகத்திற் கூறியபடி பவித்திரத்தால் நீரை மும்முறை அலைத்தது (உத்பவனம்) போன்று, நெய்யைப் புநிதஞ் செய்த அத் தருப்பையாலேயே மும்முறை நீரை அலைத்தல் உத்பவன மெனப்படும். வேள்வித்தலைவன் ' अद्भिराज्यमाज्येनापः ' என்பது முதலிய மந்திரத்தால், புநிதமாக்கிய நெய்யையும், நீரையும் போற்றல் வேண்டும்.

20

---

இருபத்தோராம் விநியோகம்.

சுருவில் முதன் முறை நெய்யை யெடுத்தல்.

மந்திரம் :

**शुक्रं त्वा शुक्रायां धाम्ने धाम्ने देवेभ्यो यजुषे यजुषे गृह्णामि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे आज्य !** | நெய்யே ! |
| **शुक्रं** | பிரகாசமுடைய |
| **त्वा** | உன்னை |
| **शुक्रायां** | பிரகாசத்தின் பொருட்டு |
| **धाम्ने धाम्ने** | ஒவ்வொரு தீயோம்புமிடத்திலும் |
| **देवेभ्यः** | தேவர்களின் பொருட்டுச் செய்கின்ற |
| **यजुषे यजुषे** | ஒவ்வொரு ஆராதனை ஆகுதிக்கும் |
| **गृह्णामि** | எடுத்துக்கொள்ளுகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இடது கையில், வேதம் என்னும் தருப்பை முடிச்சின் மேல், 'சுருு' என்பதை வைத்து, நெய்ப்பாத்திரத்திற்குச் சமமாக அச்சுருவைப் பிடித்துக்கொண்டு சுருவத்தால் ஒருமுறை நெய்யை யெடுத்துச் சுருவிற் போட்டுக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—நெய்த்தாலி என்பதன் குழியும், சுருவின் பள்ளமும் ஒன்று படும்படி வைத்துக்கொண்டு, சுருவத்தால் நிறைய நெய்யை மொண்டு சிறிதும் மீதமிலாமற் சுருவிற் போடல் வேண்டு மென்பதாம்.

ஈண்டு, இம் மந்திரத்தால், சுருவில் நான்கு முறை நெய்யை யெடுத்தல் வேண்டு மென்பது பாடியக் கருத்து.

சூத்திரமோ, இம் மந்திரத்தால் சுருவில் ஒரு முறை யெடுத்தல் வேண்டு மென்று கூறுகின்றது. இதனால், இம்மந்திரம் போன்றே மேல்வரும் இரண்டு மந்திரங்களாலும், உபபிருத், துருவா, என்பவைகளிலும், மூன்று மூன்று முறை எடுத்துக்கொள்ளல் வேண்டும் என்பது பாடியக் கருத்தாம் என்பதும், இம் மூன்று மந்திரங்களாலும், 'சுருு' என்பதிலேயே மும்முறை யெடுத்துக் கொண்டு, மற்றிருமுறையும், உபபிருத், துருவா, என்பவைகளில் ஐவ்வைந்து

(நெய் எடுக்கும் முறையும் சங். கா-1, பிர-6, அநு-1-ம் மந்திரப்படி எடுத்துக்கொள்ளல் சூத்திரக் கருத்து என்பதும் ஈண்டுக் கொள்ளக் கிடக்கின்றமை காண்க. 21

---

## இருபத்திரண்டாம் விநியோகம்.

### சுருவில் இரண்டாம் முறை நெய்யெடுத்தல்.

மந்திரம் :

**ज्योतिस्त्वा ज्योतिषि धाम्ने धाम्ने देवेभ्यो यजुषे यजुषे गृह्णामि ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **हे आज्य !** | நெய்யே ! |
| **ज्योतिः** | சோதி வடிவாகிய |
| **त्वा** | உன்னை, எடுத்துக்கொள்ளுகின்றேன். |

பதவுரை முன் கூறப்பட்டுள்ளது. 'எடுத்துக்கொள்கின்றேன்' என்பது வருவிக்கப்பட்டது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன் போன்று சுருவென்பதில் இரண்டா முறையும் நெய்யை எடுத்துக்கொள்ளல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—முற் குறிப்பிற் குறிப்பித்துள்ளதைக் காண்க. 22

---

## இருபத்து மூன்றும் விநியோகம்.

### சுருவில் மூன்றும் முறை நெய்யெடுத்தல்.

மந்திரம் :

**अर्चिस्त्वाऽर्चिषि धाम्ने धाम्ने देवेभ्यो यजुषे यजुषे गृह्णामि ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **हे आज्य !** | நெய்யே ! |
| **अर्चिः** | ஒளியாய் விளங்குகின்ற |
| **त्वा** | உன்னை |
| **गृह्णामि** | எடுத்துக்கொள்கின்றேன் என முடிக்க. |

பதவுரை முன் கூறப்பட்டுள்ளது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன் போன்று மூன்ரும் முறையும் சுருவில் நெய் யெடுத்துக்கொள்ளல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :— ஏனையவற்றை முதன் முறை நெய்யெடுப்பதிற் காண்க. 23



இவ் வநுவாகத்தின் பரிசேடம்.

இவ்வாறு சூத்திர விநியோகத்தைத் தழுவி, சுருவில் முப்முறை நெய்யை யெடுத்துக் கொண்ட பிறகு,

**पञ्चानां त्वा वातानां यन्त्राय धर्त्राय गृह्णामि ।** சங். கா-1, பிர-6, அநு-1.

என்னும் மந்திரத்தால், நான்காம் முறையும் நான்கு இருடிகளின் கோத் திரத்திலுள்ளவன் நெய் எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

ஐந்து இருடிகளின் கோத்திரத்தானெனின்,

**पञ्चानां त्वर्तूनां यन्त्राय धर्त्राय गृह्णामि ।** சங். கா-1, பிர-6, அநு-1.

என்னும் மந்திரத்தால், ஐந்தாம் முறையும் சுருவில் நெய்யை யெடுத்து வேள்விச்சாலைக் கருகில் வைத்தல் வேண்டும்.

ஈண்டு, வேள்வித்தலைவன், நான்கு முறை நெய் யெடுக்க வேண்டியவ னெனின், அதற்குரிய மந்திரங்களை வேட்போனுடன் ஓதல் வேண்டும்.

ஐந்து முறை நெய்யெடுக்க வேண்டியவனெனின், அதற்குரிய மந்திரங் களை வேட்போனுடன் ஓதல் வேண்டு மென்பதும் உணரற்பாலது. வேட் போனும் நான்கு சுரங்களுடன் மந்திரத்தை ஓதிக்கொண்டு நெய்யை யெடுத் துக்கொள்ளல் வேண்டும்.

மற்றும் வேட்போன்,

**पञ्चानां त्वा दिशां यन्त्राय धर्त्राय गृह्णामि ।** சங். கா-1, பிர-6, அநு-1.

என்னும் மந்திரத்தால், நெய்ப் பாத்திரத்தின் நடுவில் ‘உபபிருத்’ என் பதைத் தருப்பை முடியின் மேல் வைத்துக்கொண்டு சுருவத்தால் சிறிது குறை வாய் முதல் முறை நெய் யெடுத்துக்கொள்ளல் வேண்டும்.

பிறகு,

**पञ्चानां त्वा पञ्चजनानां यन्त्राय धर्त्राय गृह्णामि ।** சங். கா-1, பிர-6, அநு-1.

என்னும் மந்திரத்தால், முன் போன்று இரண்டாம் முறையும் உபபிருதில் நெய்யை யெடுத்துக்கொள்ளல் வேண்டும்.

பிறகு,

**पञ्चानां त्वा सलिलानां धर्त्राय गृह्णामि ।** சங். கா-1, பிர-6, அநு-1.

என்னும் மந்திரத்தால், உபபிருதில் முன் போன்று மூன்றும் முறையும் நெய் எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

அதன் பின்,

**पञ्चानां त्वा पृष्ठानां धर्त्राय गृह्णामि ।** சங். கா-1, பிர-6, அநு-1.

என்னும் மந்திரத்தால், முன் போன்று நான்காம் முறையும் உபபிருதில் நெய் யெடுத்துக்கொள்ளல் வேண்டும்.

ஐந்தாம் முறையும் வேள்வித்தலைவன் பொருட்டு நெய் எடுத்துக்கொள்ள வேண்டி வரின்?

**धामसि प्रियं देवाना मनाधृष्टं देवयजनं देववीतये त्वा गृह्णामि ।**

சங். கா-1, பிர-6, அநு-1.

என்னும் மந்திரத்தால், ஐந்தாம் முறையும் நெய் எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

இவ்வாறு எடுத்துக்கொண்ட பிறகு,

**चरोस्त्वा पञ्च बिलस्य यन्त्राय धर्त्राय गृह्णामि ।** சங். கா-1, பிர-6, அநு-1.

என்னும் மந்திரத்தால், முன் போன்று 'உபபிருத்' என்பதில் ஐந்தாம் முறையும் நெய்யை எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

அதன் பின்,

**ब्रह्मणस्त्वा तेजसे यन्त्राय धर्त्राय गृह्णामि ।** சங். கா-1, பிர-6, அநு-1.

என்னும் மந்திரத்தால், ஆறும் முறையும்,

**क्षत्रस्य त्वौजसे यन्त्राय धर्त्राय गृह्णामि ।** சங். கா-1, பிர-6, அநு-1.

என்னும் மந்திரத்தால், ஏழாம் முறையும் உபபிருதில் நெய்யை எடுத்துக் கொண்ட பிறகு,

**विशेत्वा यन्त्राय धर्त्राय गृह्णामि ।** சங். கா-1, பிர-6, அநு-1.

என்னும் மந்திரத்தால், எட்டாம் முறையும் முன் போன்று உபபிருதில் நெய்யை எடுத்துக்கொண்டு, அதை ஆகவனீயத்திற்கருகில், அதாவது உத்கரத்திற் கருகில் வைத்துவிட்டு, ஐந்து இருடிகள் மரபைக்கொண்டதால் ஐந்தா முறையும் வேள்வித்தலைவன் நெய் யெடுத்துக் கொள்ளல் வேண்டியவன் எனின்?

மந்திரங்கள்)

**सुवीर्याय त्वा गृह्णामि ।** சங். கா-1, பிர-6, அநு-1.

என்னும் மந்திரத்தால், ஐந்தாம் முறையும் நெய் எடுத்துக்கொள்ளல் வேண்டும். மற்றும், வேள்வித்தலைவன், வேட்போனுடன் நெய் யெடுத்தற் குரிய மந்திரங்களைச் செபித்தலும் வேண்டும்.

குறிப்பு :—எஜமானன், ஐந்து இருடிகளின் மரபைக் கொண்டவனாதலின் உபபிருத்தில், 10 முறை நெய் யெடுத்தல் கூறப்படுகின்றது.

வேட்போன் முன் போன்றே நான்கு சுரங்களுடன் மந்திரத்தை ஓதிக் கொண்டு நெய்யை யெடுத்தல் வேண்டும்.

வேட்போன், தருப்பை முடிச்சின்மேல், நெய்ப்பாத்திரத்திற்கு வடக்கில் அந்தர்வேதியில் வைக்கப்பட்டுள்ள துருவாவில், சுருவம் என்னும் மர அகப் பையால்,

**सुप्रजास्त्वाय त्वा गृह्णामि ।** சங். கா-1, பிர-6, அநு-6.

என்னும் மந்திரத்தால், நிறைய நெய்யை யெடுத்துச் சிறிதும் மீதமின்றி முதன் முறை வார்த்துக்கொள்ளல் வேண்டும்.

பிறகு முன்போன்றே,

**रायस्पोषाय त्वा गृह्णामि ।** சங். கா-1, பிர-6, அநு-1.

என்னும் மந்திரத்தால், இரண்டா முறையும், துருவாவில் நெய் யெடுத் துக் கொள்ளல் வேண்டும்.

அவ்வாறே,

**ब्रह्मवर्चसाय त्वा गृह्णामि ।** சங். கா-1, பிர-6, அநு-1.

என்னும் மந்திரத்தால், மூன்று முறையும் துருவாவில் நெய் யெடுத் துக் கொள்ளல் வேண்டும்.

மற்றும்,

**भूरस्माकं हविर्देवानामाशिषो यजमानस्य देवानां त्वा देवताभ्यो गृह्णामि ।**
சங். கா-1, பிர-6, அநு-1.

என்னும் மந்திரத்தால், முன் போன்றே நான்கா முறையும் துருவாவில் நெய்யை யெடுத்து ஆகவனீயத்திற் கருகில் வைத்தல் வேண்டும். அதாவது உத்கரத்திற்குக் கிழக்கில் என்க.

வேள்வித்தலைவன் ஐந்தா முறையும் நெய் யெடுத்தற்குரியானெனின் ?

**कामाय त्वा गृह्णामि ।** சங். கா-1, பிர-6, அநு-1.

என்னும் மந்திரத்தால், ஐந்தா முறையும் நெய்யை யெடுத்து வேள்விச் சாலைக் கருகில் வைத்தல் வேண்டும்.

ஈண்டு, முதலில் நான்கு முறை எடுத்த நெய்களை, உத்கரத்தில் (குப்பை போடுமிடத்தில்) வைத்தல் கூடாது.

மற்றும், அந்தர்வேதியின்மீது துருவாவிலெடுத்துள்ள நெய்யை, பிறகு வேறிடத்திற்குக் கொண்டு போதலுங் கூடாது.

வேள்வித்தலைவன், வேட்போனுடன் நெய் யெடுத்தற்குரிய இம் மந்திரங் களைச் செபித்தல் வேண்டும். வேட்போனும் முன் போன்றே நான்கு சுரத் துடனே மந்திரங்களை ஓதுதலும் வேண்டும்.

பத்தாம் அநுவாகம் முடிந்தது.

---

## பதினோராம் அநுவாகம்.

---

### விடயச் சுருக்கம்.

कृष्ण इध्मं वेदिर्वेदिं बर्हिर्बर्हिः समुक्षति ।
दिवे त्रिभिर्बर्हिषोऽग्रमध्यमूलानि चोक्षति ॥ १ ॥
स्वधाशेषं क्षिपेद्भूमौ विष्णोः प्रस्तरमुन्नयेत् ।
ऊर्णा बर्हिस्तृतिर्गन्ध त्रिभिस्त्रीन्परिधीन्क्षिपेत् ॥ २ ॥
सूर्योऽभिमन्त्र्य पूर्वाग्निं वीत्याधार समिरिस्थतिः ।
विशो आधाय विधृती वसू प्रस्तर सादनम् ॥ ३ ॥
जुहूपध्रुभिरासाद्य स्रुच एतास्तु मन्त्रयेत् ।
एकादशानुवाकेऽस्मिन्नीरिता मन्त्र विंशतिः ॥ ४ ॥

புரோக்ஷணிநீரைப் போற்றி, பிரமனிடம் விடைபெற்றுக்கொண்டு, பிறகு, வேதி, தருப்பைக்கட்டு ஆகிய இவைகளின் மேல் அந்நீரைப் புரோக்ஷித்து, தருப்பைக் கட்டை வேதிகையில் வைத்து, நுனி, நடு, அடி என்னும் முறையாக புரோக்ஷணி நீரை மற்றொரு முறையும் அவற்றில் தெளித்து, மீதியை வேதியின் சுரோணியில் தாரையாக வார்த்து, கட்டை யவிழ்த்து, பிரஸ்தரத்தை வெளியி லெடுத்து, மீதிக் கட்டுகளை முறையாய் வேதிகையிற் பரப்பி, ஆகவனீயத் திற்கு மேற்கிலும், தெற்கிலும், வடக்கிலும் பரிதிகளை (விறகை)ப் போட்டு, ஆகவனீயத்தை வளர்த்து, இரண்டு ஆகார சமித்துகளையும் போட்டு, முன் விரித்த தருப்பைகளின் மேல் 'விதிருதி' என்னும் இரண்டு தருப்பைகளைப்

வைக்கும் மந்திரங்கள்)

போட்டு, அதன் மேல் பிரஸ்தரத்தை விரித்து, சுரு, உபபிருத், துருவா என்னுஞ் சுருக்கு முதலியவைகளை அப் பிரஸ்தரத்தின் மேல் வைத்து அவைகளைப் போற்ற லென்பதாம்.

---

## முதற் காண்டம் - முதற் பிரபாடகம்.

## பதினோராம் அநுவாகம்.

மூன்று பஞ்சாதிக்குமேல், 15 பதங்களைக்கொண்டது.

---

### சமித்து முதலான வேள்விச் சாதனங்களைச் சேர்த்து வைத்தற்குரிய மந்திரங்கள்.

कृष्णोऽस्याखरेष्ठोऽग्नये त्वा स्वाहा वेदिरसि बर्हिषे त्वा स्वाहा बर्हिरसि स्रुग्भ्यस्त्वा स्वाहा दिवे त्वाऽन्तरिक्षाय त्वा पृथिव्यै त्वा स्वधा पितृभ्य ऊर्ग्भव बर्हिषद्भ्य ऊर्जा पृथिवीं गच्छत विष्णोः स्तूपोऽस्यूर्णाम्रदसं त्वा स्तृणामि स्वासस्थं देवेभ्यो गन्धर्वोऽसि विश्वावसुर्विश्वस्मादीषतो यजमानस्य परिधिरिड ईडित इन्द्रस्य बाहुरसि (१) दक्षिणो यजमानस्य परिधिरिड ईडितो मित्रावरुणौ त्वोत्तरतः परिधत्तां ध्रुवेण धर्मणा यजमानस्य परिधिरिड ईडितः सूर्यस्त्वा पुरस्तात्पातु कस्याश्चिदभिशस्त्या वीतिहोत्रं त्वा कवे द्युमन्तꣳ समिधीमह्यग्ने बृहन्तमध्वरे विशो यन्त्रे स्थो वसूनाꣳ रुद्राणामादित्यानाꣳ सदसि सीद जुहूरुपभृद् ध्रुवाऽसि घृताची नाम्ना प्रियेण नाम्ना प्रिये सदसि सीदैता असदन्त्सुकृतस्य लोके ता विष्णोः पाहि पाहि यज्ञं पाहि यज्ञपतिं पाहि मां यज्ञनियम् ॥

---

(சமித் முதலியவற்றை

முதலாம் விநியோகத் தொடக்கம்.

ஈண்டு, ‘ आपो देवी रग्रे पुवः ’ என்பது முதலிய மந்திரத்தால், வேட்போன் நீருள்ள மரப்பாத்திரத்தைப் போற்றிக் கொண்டு, பிரமனை, ‘ ब्रह्मन्प्रोक्षिष्यामि ’ ‘பிரமனே! யான் நீரைத் தெளிக்கின்றேன்’ (புரோக்ஷிக்கின்றேன்) என்று ஆணை கேட்டல் வேண்டும்.

அதற்குப் பிரமன், ஆபத்தம்ப சூத்திரத்தைத் தழுவியவனாயின், ‘ प्रोक्ष यज्ञं देवता वर्धयत्वं ’ என்பது முதலிய மந்திரத்தை மெல்ல ஓதிக்கொண்டு, ‘ ओं प्रोक्ष ’ (ஓம் தெளிப்பாயாக) என்று, ஆணை கொடுத்தல் வேண்டும்.

ஆசுவலாயன சூத்திரத்தைத் தழுவியனெனின், ஓம் பூர் புவ: ஸ்வ: ப்ருஹஸ்பதி ப்ரஸூத:, என்று செபித்துக்கொண்டு ‘ஓம் தெளிப்பாயாக’ என்று ஆணை கொடுத்தல் வேண்டும். பிறகு, வேட்போன் சமித்து (ஹோம விறகு)க் கட்டை அவிழ்த்தல் வேண்டும்.

முதல் விநியோகம்.

தீ வளர்த்தற்குரிய விறகுகளின் மேல் நீர் தெளித்தல்.

மந்திரம் :

कृष्णोऽस्याखरेष्ठोऽग्नये त्वा स्वाहा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे इध्म ! | வேள்வி விறகே! நீ |
| कृष्णः | கரிய மானாக |
| असि | இருக்கின்றாய். மற்றும், |
| आखरेष्ठः | வலிய பொருளிலும் இருக்கின்றனை. |
| त्वा | அத்தகைய வுன்னை (உன்மேல்) |
| अग्नये | தீயின் பொருட்டு |
| स्वाहा | புரோக்ஷிக்கி (நீர் தெளிக்கி)ன்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஒரு முறையும், மந்திரமின்றி இரு முறையும் வேள்வி விறகுகளின் மேல் நீர் தெளித்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு:—ஈண்டு ‘ஸ்வாஹா’ என்பது நீர் தெளித்தலைக் குறித்து நிற்கின்றது. இதை, அசையாக்கி ‘தெளிக்கின்றேன்’ என்பதை வருவித்துக்கொள்வாருமுளர். அக்கினி, கருமான் வடிவாக ஆயிற்றென்பது பிராமணத்திலுள்ளது.

வைக்கும் மந்திரங்கள்)

இரண்டாம் விநியோகம்.

வேதிகையின் மேல் நீர் தெளித்தல்.

மந்திரம் :

**वेदिरसि बर्हिषे त्वा स्वाहा ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **हे वेदे !** | *மேடையே ! நீ* |
| **वेदिः** | *அவிகளை யேற்று விளக்குகின்றவளாக* |
| **असि** | *இருக்கின்றாய். ஆதலின்,* |
| **त्वा** | *அத்தகைய வுன்னை (உன்மேல்)* |
| **बर्हिषे** | *தருப்பைகளை வைத்தற் பொருட்டு* |
| **स्वाहा** | *நீர் தெளிக்கின்றேன்.* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், ஒரு முறையும், மந்திரமின்றி இருமுறையும், வேதிகையின் மேல் நீரைத் தெளித்தல் வேண்டும் என்பதாம்.*

குறிப்பு :—*நீராற் புநிதமாகும் வகை முன்னர்க் கூறப்பட்டது.* 2

---

மூன்றும் விநியோகம்.

தருப்பைகளின் மேல் நீரைத் தெளித்தல்.

மந்திரம் :

**बर्हिरसि स्रुग्भ्यस्त्वा स्वाहा ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **हे दर्भ !** | *தருப்பையே ! நீ* |
| **बर्हिः** | *ஆதாரமாக* |
| **असि** | *இருக்கின்றாய். ஆதலின்,* |
| **स्रुग्भ्यः** | *சுருக் (மர அகப்பை) முதலியவைகளை வைத்தற் பொருட்டு* |
| **त्वा** | *உன்னை* |
| **स्वाहा** | *நீரால் நனைக்கின்றேன்.* |

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், ஒருமுறையும், மந்திரமின்றி இருமுறையும் தருப்பை களின் மீது நீரைத் தெளித்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—இவ்வாறு நீரைத் தெளித்துவிட்டு, அந்தர்வேதிகையின் மேலே முடிச்சும், கிழக்கில் நுனியுமாகத் தருப்பைகளை வைத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्निरेम बहिरन्तः' என்பது முதலிய மந்திரத்தால், வேதிகையின் மேலுள்ள தருப்பைகளைப் போற்றல் வேண்டும் என்பது. 3



நான்காம் விநியோகம்.

இது, மூன்று விநியோகங்களைக் கொண்டது.

வேதிகையின் மேல் வைத்த தருப்பைகளின்மீது நீரைத் தெளித்தல்.

மந்திரம் :

**दिवे त्वा । अन्तरिक्षाय त्वा । पृथिव्यै त्वा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे दर्भ !** | தருப்பை கட்டே ! |
| **त्वा** | உன்னை |
| **दिवे** | சுவர்க்க நிமித்தமாய் நீரால் தெளிக்கின்றேன். (மற்றும்) |
| **अन्तरिक्षाय** | வான் நிமித்தமாகவும் |
| **त्वा** | உன்னை, நீரால் நனைக்கின்றேன். (மற்றும்) |
| **पृथिव्यै** | தரை நிமித்தமாகவும் |
| **त्वा** | உன்னை, நீரால் நனைக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால், முறையே, தருப்பைக் கட்டின் நுனியிலும், நடுவி லும், அடியிலும் நீரைத் தெளித்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—ஈண்டு, சுருக்கில், தருப்பைக் கட்டின் நுனியையும் அடியை யும் நனைத்துக்கொண்டு, தருப்பைக்கட்டை மேடையின்மீது கிழக்கு நுனியாய்ப் போட்டு 'पोषाय त्वा' என்று, சுருக்கின் பள்ளத்தில் நுனிவரை, குவித்து மூடிக் கொண்ட கையால் மேற்கு முகமாய் முடிச்சின் மேல் நீரை விடல் வேண்டு மென்பதை யுணர்க.

வைக்கும் மந்திரங்கள்)

*தருப்பையின் அடி, நடு, நுனிகளை மூவுலகங்களாய்ப் பாவித்துக்கொண்டு மூன்றிடத்தும் நீர் தெளித்தலாம்.* 4, 5, 6

---

ஏழாம் விநியோகம்.

புரோக்ஷணியில் மீந்த நீரை வேதியின் சுரோணியில் தெளித்தல்.

மந்திரம் :

**स्वधा पितृभ्य ऊर्ग्भव बर्हिषद्भ्यः ऊर्जा पृथिवीं गच्छत ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **हे आप !** | *நீரே! நீ* |
| **बर्हिषद्भ्यः** | *தருப்பையின் மீது அமர்ந்துள்ள* |
| **पितृभ्यः** | *பிதுர்க்களின் பொருட்டு* |
| **स्वधा** | *தெளிக்கப்படுகின்றாய். ஆதலின்,* |
| **ऊर्ग्भव** | *இரசம் ஆவாயாக. (நீரின் துளிகளே! நீங்களும்)* |
| **ऊर्जा** | *இரசமாய்* |
| **पृथिवीं** | *பூமியைச்* |
| **गच्छत** | *சேர்வீர்களாக.* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், வேதியின் சுரோணியின்மேல் தெற்கு மூலையிலிருந்து வடக்கு மூலைவரை வடக்கு முகமாய் இடைவிடாது மீந்த நீரைத் தாரையாய் வார்த்து விடல் வேண்டும் என்பதாம்.*

குறிப்பு :— *இவ்வண்ணம் நீரை வார்ப்பதற்கு முன், வேள்வித்தலைவனும் வேட்போனும், பூணூலை மாற்றிப் போட்டுக்கொண்டு, நீரை வார்த்தவுடன் நேரே பூணூலைப் போட்டுக்கொண்டு கையைக் கழுவிக்கொள்ளல் வேண்டுமென்பது முணாற்பாலது.*

*வேள்வித்தலைவனும், ' पितृभ्यो बर्हिषद्भ्य इदं न मम ' அதாவது ' தருப்பையின் மீதுள்ள பிதுர்க்களுக்கு இது எனக்கன்று ' என்று தியாகஞ் செய்துவிட்டு, பூணூலை நேராய்ப் போட்டுக்கொண்டு கையைக் கழுவிக்கொள்ளல் வேண்டுமென்பதையு மறிக.* 7

---

### எட்டாம் விநியோகத் தொடக்கம்.

ஈண்டு, வேள்வித்தலைவன், மந்திரம் ஓதாமல் முன்னுள்ள பவித்திரத்தை (தருப்பை நுனிகளை) அவிழ்த்துக்கொண்டு, 'பூஷா தே கிரந்திம் விஷ்யது' என்று, தருப்பைக் கட்டின் கிழக்கிற் செருகி வைத்திருக்கும் முடிச்சை, கிழக்காய் இழுத்து அவிழ்த்து விடல் வேண்டும்.

முடியுங்கால் மேற்கில் முடிந்திருக்கில் அம் முடிச்சின் நுனியை மெல்ல இழுத்து அவிழ்த்தல் வேண்டும். இவ்வாறு தருப்பைக் கட்டை அவிழ்த்தல் வேண்டும்.

### எட்டாம் விநியோகம்.

பிரஸ்தரம் என்னும் ஒரு தருப்பைக் கத்தையை மெல்ல எடுத்தல்.

மந்திரம் :

विष्णोः स्तूपोऽसि ।

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **हे प्रस्तर !** | தருப்பைக் கத்தையே ! நீ |
| **विष्णोः** | பரந்த வேள்வியைத் |
| **स्तूपः** | தாங்குவோனாக |
| **असि** | இருக்கின்றாய். |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முதலாவதாக அறுத்து வைத்த பிரஸ்தரம் என்னும் தருப்பைக் கத்தையை, தருப்பைகளிலிருந்து மெல்ல எடுத்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—ஆகவனீயத்தைக் குறித்து தருப்பைகளிலிருந்து இழுத்துக் கொண்டது போன்று மெல்ல எடுத்துக்கொள்ளல் வேண்டுமென்பதாம். சூத்திரக்காரர், அது அசைதலைப் பழித்திருக்கின்றாராதலி னென்க. 8

---

### ஒன்பதாம் விநியோகத் தொடக்கம்.

பின்னர், வேட்போன், 'अयं प्राणश्चापानश्च' என்பது முதலிய மந்திரத்தால், பிரஸ்தாக் கத்தையில் அவிழ்த்த பவித்திரத்தையும் போட்டு, 'प्राणापानाभ्यां त्वा सुतनुं करोमि' என்னும் மந்திரத்தால், ஆகவனீயத்திற்கு முன்னால் பிரஸ்தரத்தை யிழுத்து வேள்வித்தலைவனிடங் கொடுத்தல் வேண்டும்.

வைக்கும் மந்திரங்கள்)

வேள்வித்தலைவன் பிரமனிடத்திற் கொடுத்துவிடல் வேண்டும். பிரமன் அப் பிரஸ்தரத்தை வைத்துக் கொண்டிருத்தல் வேண்டும். வேள்வித்தலைவன் தானே வைத்துக்கொண்டு மிருக்கலாம், அல்லது, பிரமனிடத்திலுங் கொடுத்து விடலாம்.

வேட்போன், 'பரிபோஜனீ' என்னுந் தருப்பைகளால், அல்லது, ஏனைய தருப்பைகளால் வேதிகை மூடுமாறு போட்டு, தருப்பைக் கத்தைகளைக் கட்டி முடிந்துள்ள கட்டை யவிழ்த்து, கிழக்காகவேனும், கன்னி மூலையாகவேனும் வேதிகையின் தெற்கில் வைத்துக்கொள்ளல் வேண்டும்.

ஒன்பதாம் விநியோகம்.

வேதிகையின் மேல் தருப்பைகளைப் பரப்புதல்.

மந்திரம் :

**ऊर्णाम्रदसं त्वा स्तृणामि स्वासस्थं देवेभ्यः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे देवबर्हिः !** | தேவ தருப்பையே ! |
| **त्वा** | உன்னை |
| **देवेभ्यः** | தேவர்கள் அமருதற் பொருட்டு |
| **ऊर्णाम्रदसं** | இரத்தினக் கம்பளியைப்போல |
| **स्वासस्थं** | உட்கார்ந்து களிப்புறும் ஆசனமாக |
| **स्तृणामि** | விரித்து விடுகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மூன்று, அல்லது, ஐந்து தருப்பைக் கத்தைகளை, தருப்பைகளின் அடிகளை மற்றைய தருப்பைகளின் நுனிகள் மூடிக்கொண்டிருக்குமாறு, கிழக்கிலிருந்து மேற்காய், அல்லது, மேற்கிலிருந்து கிழக்காய், வேதிகையிற் சிறிதும் இடைவெளியின்றி, மந்திரங்களை மறித்தும் மறித்தும் ஓதிக்கொண்டு வேதியின்மீது பரப்புதல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :— ஈண்டு வேள்வித்தலைவன், 'चतुः शिखण्ड युवति' பி. 3-7-6-12-9 என்பது முதலிய மந்திரத்தாலும், 'शिवाच मे शग्माचैधि' என்பது முதலிய மந்திரத்தாலும், 'इष मूर्जं मे पिन्वस्व' என்பது முதலிய மந்திரத்தாலும், முறையே மும்முறை, தருப்பை விரித்து விடுதலைப் போற்றல் வேண்டு மென்பதையு முணர்க.

9

### பத்தாம் விநியோகத் தொடக்கம்.

பிறகு, வேட்போன், பிரமனிடத்திலிருந்து பிரஸ்தரத்தை வாங்கி வலது கையில் வைத்துக்கொண்டவாறே இருத்தல் வேண்டும்.

### பத்தாம் விநியோகம்.

வேட்போன், நடு விறகை வைத்தல்.

மந்திரம் :

**गन्धर्वोऽसि विश्वावसुर्विश्वस्मादीषतो यजमानस्य परिधिरिड ईडितः ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **हे मध्यम परिधे!** | நடுவிறகே! நீ |
| **विश्वावसुः** | 'விசுவாவசு' என்னும் |
| **गन्धर्वः** | கந்தருவனாக |
| **असि** | இருக்கின்றாய். ஆதலின், |
| **विश्वस्मात्** | எல்லா |
| **ईषितः** | சத்துருக்களிலிருந்தும் |
| **यजमानस्य** | வேள்வித்தலைவனை |
| **परिधिः** | பரிபாலிப்போனாகவும் |
| **इडः** | அன்னமாகவும் |
| **ईडितः** | போற்றப்படுவோனாகவும் ஆவாயாக. |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அந்தர்வேதியின் கீழ்க் கடைசியில், அதாவது ஆகவனீயத்திற்கு மேற்கில், வடக்கு நுனியாக நடுவிறகை வைத்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—இது, அசுரர்களின் பீடை தன்னைத் தாக்காமல், வேள்வித் தலைவன் தீ முதலியவைகளைப் பாதுகாத்தற் பொருட்டென்றுணர்க.

'விசுவாவசு' என்னும் கந்தருவன் வைப்பதாகப் பாவித்தல் வேண்டுமென்பதுமாம்.

'விசுவாவசு' என்றமையினனே அனைத்தையுங் காப்பாற்றுந் தன்மை கொள்ளக்கிடக்கின்றதென்பதுணரற்பாலது. பொதுவாக இது பாதுகாப்பின் பொருட்டேயாம் என்க.

வைக்கும் மந்திரங்கள்)

ஈண்டு, வேள்வித்தலைவன்,

ध्रुवोसि ध्रुवोहꣳ सजातेषु भूयासम् । சங். கா-1, பிர-6, அநு-2.

என்பது முதலிய மந்திரத்தால், முன்னர் வைத்துள்ள நடு விறகைப் போற்றல் வேண்டும் என்பதையுங் காண்க. 10

பதினோராம் விநியோகம்.
இரண்டாம் விறகை வைத்தல்.

மந்திரம் :

इन्द्रस्य बाहुरसि दक्षिणो यजमानस्य परिधिरिड ईडितः ।
என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे दक्षिण परिधे !** | இரண்டாம் விறகே! (பரிதியே!) நீ |
| **इन्द्रस्य** | இந்திரனுடைய |
| **दक्षिणबाहुः** | வலது கையாக |
| **असि** | இருக்கின்றாய். ஆதலின், |
| **यजमानस्य** | வேள்வித்தலைவனைப் |
| **परिधिः** | பாதுகாப்பவனாகவும் |
| **इडः** | அன்னமாகவும் |
| **ईडितः** | போற்றப்படுகின்றவனாகவும் ஆவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இரண்டாவதாக ஒரு விறகையெடுத்து, கிழக்கு நுனியாகவும், மற்றொரு விறகின்மேல் பட்டுக்கொண்டிருக்குமாறும் ஆகவனீயத்திற்குத் தெற்கில் வைத்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—இந்திரனுடைய வலது கை யென்றது, வன்மை மிகுதிபற்றிப் பாதுகாக்குந் திறமையா லுபசாரமாம்.

ஈண்டு வேள்வித்தலைவன்,

उग्रोऽस्युग्रोऽहꣳ । சங். கா-1, பிர-6, அநு-2.

என்பது முதலிய மந்திரத்தால், தென்புறத்தில் வைத்த விறகைப் போற்றல் வேண்டு மென்பதையுங் காண்க. 11

பன்னிரண்டாம் விநியோகம்.

மூன்றும் விறகை வைக்குதல்.

மந்திரம் :

**मित्रावरुणौ त्वोत्तरतः परिधत्तां ध्रुवेण धर्मणा यजमानस्य परिधिरिड ईडितः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे उत्तर परिधे!** | மூன்றும் விறகே! |
| **त्वा** | உன்னை |
| **मित्रवरुणौ** | மித்திரனும் வருணனும் |
| **उत्तरतः** | வடக்குத் திக்கில் |
| **ध्रुवेण धर्मणा** | நித்தியமாகிய தருமத்தால் |
| **परिधत्तां** | பாதுகாப்பாற்றுவார்களாக. (ஆதலின் நீ) |
| **यजमानस्य** | வேள்வித்தலைவனை |
| **परिधिः** | பாதுகாப்பவனும் |
| **इडः** | அன்னமும் |
| **ईडितः** | போற்றப்படுகின்றவனு மாவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மூன்றுவதாக ஒரு விறகை யெடுத்து, கிழக்கு நுனி யாகவும், மற்றொரு விறகின்மேற் பட்டுக்கொண்டிருக்குமாறும் ஆகவனீயத் திற்கு வடபுறத்தில் வைத்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—மூன்று விறகுகளும் இடையின்றி ஒன்றின் நுனியில் ஒன்று தொட்டுக் கொண்டிருத்தல் வேண்டும். இடையில் வெளியிருக்கில் அவ்வழி யாய் அசுரர் வந்து துன்புறுத்துவார்களென்பதை யுணர்க. இம் மூன்று கட்டை விறகுகளும் ‘ பரிதிகள் ’ எனப்படுகின்றன.

மற்றும், வேள்வித்தலைவன்,

**अभिभूरस्यभिभूरहꣳ ।** சங். கா-1, பிர-6, அநு-2.

என்பது முதலிய மந்திரத்தால், வடக்கில் வைத்த விறகைப் போற்றல் வேண்டு மென்பதையுங் காண்க.

ஈண்டு, வேள்வித்தலைவன், இவ்வாறு மூன்று விறகு (பரிதி) களை வைத்த பின்னர்,

வைக்கும் மந்திரங்கள்)

अस्मिन्यज्ञ उप भूय । பிரா. 3-7-6-10.

என்பது முதலிய மந்திரத்தால், அம்மூன்று விறகுகளையும் மற்றொரு முறை போற்றல் வேண்டும் என்பதும் உணரற்பாலது. 12

---

பதின்மூன்றும் விநியோகம்.

ஆகவனீயத் தீயைப் போற்றி வளர்க்குதல்.

மந்திரம் :

सूर्यस्त्वा पुरस्तात् पातु कस्याचिदभिशस्त्याः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे आहवनीय ! | ஆகவனீயமென்னுந் தீயே ! |
| त्वा | உன்னை |
| सूर्यः | இரவி |
| कस्याचित् | எவ்வகையாலேனும் வருகின்ற |
| अभिशस्त्याः | துன்பத்தினின்றும் |
| पुरस्तात | கீழ்த்திசையிலிருந்து |
| पातु | பாதுகாப்பதாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், வேட்போன், ஆகவனீயத் தீயைப் போற்றிக்கொண்டு, அத்தீயின் மேல் பிரஸ்தரம் என்னுந் தருப்பைப் பிடியை வைத்துக்கொண்டு, விறகுகளால் அத்தீயை நன்கு வளர்த்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—ஈண்டு, வேள்வித்தலைவன்,

युनज्मित्वा ब्रह्मणा । பிரா. 3-7-6-10.

என்பது முதலிய மூன்று மந்திரங்களாலும் ஆகவனீயத் தீயைப் போற்றல் வேண்டு மென்பதையுங் காண்க. 13

---

பதினான்காம் விநியோகம்.

வேட்போன், 'ஆகார சமித்துக்கள்' என்னும் இரண்டு விறகுகளை யெடுத்து முன் வைத்துள்ள நடு விறகில் தொட்டுக்கொண்டிருக்கும்படி ஆகவனீயத் தீயில் நிற்க வைத்தல்.

மந்திரம் :

वीतिहोत्रं त्वा कवे द्युमन्त ँ समिधी मह्यग्ने बृहन्तमध्वरे ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **कवेः** | கவியாகிய |
| **अग्ने** | அக்கினியே ! |
| **वीतिहोत्रं** | விரிவாய் ஹோமஞ் செய்யப்படுகின்றதும் |
| **द्युमन्तं** | ஒளி யுடையதும் |
| **अध्वरे बृहन्तं** | வேள்வியிற் பெரிதுமாகிய |
| **त्वा** | உன்னை |
| **समिधीमहि** | நன்கு வளர்க்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால்*, தெற்கில் வைக்க வேண்டிய ஆகார சமித்தை, மூற் பாதியிலிருந்து குறுக்காய் தென் கிழக்கு மூலை முடிவில் மேலே நுனி யிருக்கு மாறு ஊன்றி வைத்தல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—இதனால் ஆகவனீயத் தீ பாதுகாக்கப்படுகின்றது என்பதாம்.

ஈண்டு, சூத்திர விநியோகத்தைத் தழுவி, 'समिदस्यायुषे त्वा' என்னும் மந் திரத்தை யோதிக்கொண்டாவது, அல்லது, ஓதாமலாவது, தீக்கு வடக்கில் வைக்க வேண்டிய ஆகார சமித்தை, மூற்பாதியிலிருந்து குறுக்காக, வடகிழக்கு மூலையில் நுனியானது மேலே யிருக்குமாறு ஊன்றி வைத்தல் வேண்டும். 14

---

பதினைந்தாம் விநியோகம்.

உட்குச்சுகளை நீக்கிவிட்டு இரண்டு தருப்பைகளை அந்தர்வேதிமேல் வைத்தல்.

மந்திரம் :

**विशो यन्त्रेस्थः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे विधृत्यौ !** | { விதிருதி என்னும் (உட்குச்சு நீங்கிய) இரண்டு தருப்பைகளே ! நீங்கள் |
| **विशः** | பிரசைகளை |
| **यन्त्रे** | நியமிக்கின்றவர்களாக |
| **स्थः** | இருக்கின்றீர்கள். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வடக்கில் நுனிகளிருக்கும்படி அவ் விரண்டு தருப்பை களையும் அந்தர்வேதியின் மேல் வைத்தல் வேண்டும் என்பதாம்.

வைக்கும் மந்திரங்கள்)

குறிப்பு :—ஈண்டு வேள்வித்தலைவன்,

विच्छिनद्मि विधृतीभ्याम् । பிராமணம் 3–7–6–11.

என்பது முதலிய இரண்டு மந்திரங்களாலும், வேதிகையின் மேல் வைத்துள்ள இரண்டு தருப்பைகளையும் போற்றல் வேண்டும் என்பதாம். 15

---

பதினாறும் விநியோகம்.

'பிரஸ்தரம்' என்னும் தருப்பைகளைப் பரப்பல்.

மந்திரம் :

**वसूना॑ रुद्राणा मादित्याना॑ सदसि सीद ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे प्रस्तर!** | 'பிரஸ்தரம்' என்னும் தருப்பையே! நீ |
| **वसूनां** | வசுக்கள் |
| **आदित्यानां** | ஆதித்தர்கள் |
| **रुद्राणां** | உருத்திரர்கள் என்னு மிவர்களுடைய |
| **सदसि** | சபையில் |
| **सीद** | அமருவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேதிகையின்பால் வைத்துள்ள அவ்விரண்டு தருப்பைகளின் மீது, பிரஸ்தரம் என்னுந் தருப்பைக் கத்தையை அவிழ்த்துப் பரப்புதல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு:—ஈண்டு வேள்வித்தலைவன்,

अयं प्रस्तर उभयस्य । பிராமணம் 3–7–6–12.

என்பது முதலிய மந்திரத்தால், விரித்து வைத்த பிரஸ்தரத் தருப்பைகளைப் போற்றல் வேண்டும். 16

---

பதினேழாம் விநியோகம்.

சுருவை, அத் தருப்பையின் மீது வைத்தல்.

மந்திரம் :

**जुहूरसि घृताची नाम्ना प्रियेण नाम्ना प्रिये सदसि सीद ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे जुहूः ! | நெய்ப் பாத்திர விசேடமே! நீ, பெயரால், ஆகுதியைச் செய்வது என்பதாயும் |
| घृताची | நெய்யால் நிறையப் பெற்றதாகவும் |
| असि | இருக்கின்றாய். |
| नाम्ना | பெயரானே |
| प्रिये ! | பிரியமுடையோய்! நீ |
| नाम्ना | பெயரால் |
| प्रियेण | பிரியப்படுகின்ற நெய்யோடு |
| सदसि | சபையில் |
| सीद | அமருவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், விரித்த அத்தருப்பையி (பிரஸ்தரத்தி) ன் மீது, 'சுரு' என்னும் நெய்ப்பாத்திரத்தை மற்றொன்றின் மேலும் படாமல் கிழக்கு நுனியாக வைத்தல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—ஈண்டு வேள்வித்தலைவன்,

आरोहपथो जूहः । பிராமணம் 3–7–6–13.

என்பது முதலிய மூன்று மந்திரங்களாலும், நெய்யுடன் வேதிகையின் மேல் வைத்துள்ள சுருவைப் போற்றல் வேண்டும். 17

---

பதினெட்டாம் விநியோகம்.

'உபபிருத்' என்னும் நெய்ப்பாத்திரத்தை வைத்தல்.

மந்திரம் :

**उपभृदसि घृताची नाम्ना प्रियेण नाम्ना प्रिये सदसि सीद ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे उपभृत ! | நெய்ப்பாத்திர விசேடமே! நீ |
| उपभृत् | அருகிலிருந்து நெய்யைத் தாங்குவதும் |
| घृताची | நெய்யால் நிறையப்பெற்றதுமாக |
| असि | இருக்கின்றாய். |

வைக்கும் மந்திரங்கள்)

| | |
|---|---|
| नाम्ना | பெயரானே |
| प्रिये ! | பிரியமுடையோய்! நீ |
| नाम्ना प्रियेण | பெயரால் பிரியப்படத்தக்க நெய்யுடன் |
| सदसि | சபையின்கண் |
| सीद | அமருவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பிரத்தரத்தின்மீது சுருவிற்கு வடக்கில் கிழக்கு நுனியாய் மற்றொன்றின் மேற்படாமல் 'உபபிருத்' என்னும் மற்றொரு நெய்ப்பாத்திர விசேடத்தையும் வேதியின் மீதே வைத்தல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—ஈண்டு வேள்வித்தலைவன்,

अवाहं बाध उपभृता । பிராமணம் 3-7-6-14

என்பது முதலான மந்திரங்களால் முன்னர் வைத்துள்ள 'உபபிருத்' என்னும் நெய்ப் பாத்திரத்தைப் போற்றல் வேண்டுமென்பதையு முணர்க. 18



பத்தோன்பதாம் விநியோகம்.

துருவா, என்னும் பாத்திரத்தை வைத்தல்.

மந்திரம் :

ध्रुवाऽसि घृताची नाम्ना प्रियेण नाम्ना प्रिये सदसि सीद ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे ध्रुवा ! | நெய்ப்பாத்திர விசேடமே! நீ |
| ध्रवा | நிலையா யிருப்பதாகவும் |
| घृताची | நெய்யால் நிறையப்பெற்றதாகவும் |
| असि | இருக்கின்றாய். |
| नाम्ना प्रिये ! | பெயரானே பிரியமுள்ள அத்தகைய நீ |
| नाम्ना | பெயரானே |
| प्रियेण | பிரியமுடைய நெய்யுடன் |
| सदसि | சபையில் |
| सीद | அமருவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பிரஸ்தரத்தின் (தருப்பையின்) மீது, 'உபபிருத்' என்பதற்கு வடக்கில் கிழக்கு முகமாய் மற்றொன்றின் மேற்படாமல் 'துருவா' என்னும் நெய்ப் பாத்திரத்தை வேதிகையின்மீது வைத்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு:—ஈண்டு வேள்வித்தலைவன்,

योमा वाचा मनसा । பிராமணம் 3–7–6–15

என்பது முதலான மந்திரங்களால், வேதியின்மீது முன்வைத்த துருவா என்னும் பாத்திரத்தைப் போற்றல் வேண்டு மென்பதை யுணர்க.

ஈண்டு, சூத்திரப்படி,

ऋषभोऽसि शाक्वरः । பிராமணம் 3-7-6-17

என்பது முதலிய மந்திரத்தால், சுருவிற்குத் தென்புறத்திலேனும் வடபுறத்திலேனும், அல்லது, துருவாவிற்கு வடபுறத்திலேனும் சுருவம் என்னும் பாத்திரத்தையும் வைத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

स्येनो मे सीद । பிராமணம் 3-7-6-18

என்பது முதலிய மந்திரத்தால், வைத்திருக்கின்ற சுருவத்தைப் போற்றல் வேண்டும் என்பதையு முணர்க.

மற்றும், வேட்போன், வேதிகையின்மீது, முன்னர் வைத்த இடத்திலே (மரக்கத்தியாற் கிழித்த கோட்டில்) மந்திரமோதாமல் 'ஆஜ்யத்தாலி' என்னும் பாத்திரத்தையும் வைத்தல் வேண்டும்.

மற்றும்,

इयꣳ स्थाली घृतस्य पूर्णा ।

என்பது முதலிய மந்திரத்தால், வேதிகையில் வைத்த அந்த ஆஜ்யத் தாலியைப் போற்றல் வேண்டும் என்பவைகளும் உணரற்பாலன. 19

இருபதாம் விநியோகம்.
சுருக்குகளைப் போற்றுதல்.

மந்திரம்:

एता असदन्त्सुकृतस्य लोके ता विष्णो पाहि पाहि यज्ञं पाहि
यज्ञपतिं पाहि मां यज्ञनियम् ।

என்பது.

வைக்கும் மந்திரங்கள்)

பதவுரை.

| | |
|---|---|
| **विष्णो !** | வேள்விப்புருடனே ! நீ |
| **एता** | இந்த நெய்ப் பாத்திரங்கள் |
| **सुकृतस्य लोके** | புண்ணியத்தின் பயனாகிய உலகில் |
| **असदन्** | இருக்கின்றன. |
| **ता** | அவைகளைப் |
| **पाहि** | பாதுகாப்பாயாக. |
| **यज्ञं** | வேள்வியைப் |
| **पाहि** | பாதுகாப்பாயாக. |
| **यज्ञपतिम्** | வேள்வித்தலைவனை |
| **पाहि** | பாதுகாப்பாயாக. |
| **यज्ञनियम्** | வேள்விக்கிரியை யாளனாகிய |
| **मां** | என்னையும் |
| **पाहि** | பாதுகாப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேடையின்கண் தருப்பையின்மீது வைத்துள்ள நெய்ப் பாத்திரங்களையும், மர அகப்பை விசேடங்களையும் போற்றல் வேண்டு மென் பதாம்.

குறிப்பு:—ஈண்டு வேட்போன், 'विष्णूनिस्थ वैष्णवानि' என்பது முதலிய மந்திரத்தால், சுருக் என்பவைகளிலுள்ள நெய்களையும் போற்றிக்கொண்டு, வேதம் (தருப்பை முடிச்சு) ஆஜ்யஸ்தாலி (நெய்ப் பாத்திரம்), சுருவம், (நெய் யகப்பை விசேடம்) என்பவற்றையும் எடுத்து ஆகவனீயத்திற்கு மேற்கில் வைத்துக்கொள்ளல் வேண்டு மென்பதையு முணர்க. 20

பதினோராம் அநுவாகம் முடிந்தது.

---

## பதினோராம் அநுவாகத்தின் பிற்பாக்கி.

---

ஈண்டு, சூத்திர விநியோகத்தைத் தழுவி,

इदमहꣳ सेनायाः । பிராமணம் 3-7-5-3

என்பது முதலிய மந்திரத்தால், வேதம் என்னும் தருப்பை முடிச்சால்,

(சமித் முதலியவற்றை

கபாலத்தை முன்னர்த் துடைத்தது போன்று, புரோடாசத்தின் மேலுள்ள தணலையுஞ் சாம்பரையுந் துடைத்துத் தள்ளிவிட்டு,

सूर्यज्योतिर्विभाहि महत इन्द्रियाय । பிராமணம் 3-7-5-3

என்னும் மந்திரத்தால், புரோடாசங்களை போற்றிக்கொள்வதுடன் இம் மந்திரத்தை மறித்தும் மறித்தும் ஓதிக்கொண்டு போற்றல் வேண்டும்.

आप्यायतां घृतयोनिः । பிராமணம் 3–7–5–8

என்பது முதலிய மந்திரத்தால், அக்கினிக்குரிய புரோடாசத்தின்மீது நெய்யைத் தடவல் வேண்டும்.

மற்றும், அக்கினி சோமர்களின் புரோடாசத்திலும், வைமிருதத்தின் புரோடாசத்திலும், மந்திரம் ஓதாமல் நெய் தடவல் வேண்டும்.

பிறகு,

यस्त आत्मा पशुषु प्रविष्टः । பிராமணம் 3-7-5-8

என்பது முதலிய மந்திரத்தால், காலையிற் கறந்த பாலில் நெய்யைச் சிறிது விட்டுவிட்டு, மாலையிற் கறந்த பாலிலும் நெய்யைச் சிறிது விடல் வேண்டும். தயிரிலும் மந்திரம் ஓதாமலே சிறிது நெய்யைச் சேர்த்தல் வேண்டும். பௌர்ணமியில் பால் தயிர் இன்மையின் இக் கருமம் இல்லை. அமாவாசையிலும் சோமயாகஞ் செய்யாதவர்களுக்கு இல்லை.

பிறகு,

स्योनं ते सदनम् । பிராமணம் 3-7-5-5

என்பது முதலிய மந்திரத்தால், முன்னர் மாவை வேகவைத்துள்ள பாத்திரத்திற் சிறிது நெய்த் துளியை விட்டு, பிறகு,

आर्द्रः प्रथस्नुर्भुवनस्य । பிராமணம் 3–7–5–7

என்பது முதலிய மந்திரத்தால், புளாமல் புரோடாசத்தை யெடுத்துத் தருப்பை முடிச்சால் அதிலுள்ள சாம்பரைப் போக்கிவிட்டு,

तस्मिन्सीदामृते प्रति तिष्ठ । பிராமணம் 3-7-5-6

என்பது முதலிய மந்திரத்தால், அப் பாத்திரத்தில் புரோடாசங்களை வைத்தல் வேண்டும். (வாற்கோதும்பை மாப் புரோடாசமெனின் மந்திரம் ஓதாமல் வைத்தல் வேண்டும்). இது அக்கினிஷோமீயத்திற்கும் வைமிருதத்திற்கும் செயற்பாலது. சோமயாகம் பண்ணுதவன் அமாவாசையிலும் ஆக்கினேயத்திற்கும் இந்திராக்கினிகளை யுடையதற்குஞ் செயற்பாலது.

வைக்கும் மந்திரங்கள்)

பிறகு,

दृꣳह गा दृꣳह गोपतिं । பிராமணம் 3-7-5-9

என்பது முதலிய மந்திரத்தால், காலைப்பாலைக் காய்ச்சி இறக்கி வடக்கில் வைத்து விடல் வேண்டும். ஈண்டு, பௌர்ணமியிலும், சோமயாகம் பண்ணுத வனுக்கு அமாவாசையிலும் இது இல்லை என்பதும் உணரற்பாலது.

அதன்பின்,

इरा भूतिः पृथिव्यै । பிராமணம் 3–7–5–9

என்பது முதலிய மந்திரத்தால், சுருவம் என்னும் மர அகப்பையால் நெய்யை யெடுத்து, மந்திரத்தை மறித்தும் மறித்தும் ஓதிக்கொண்டு கபாலங் களின்மேல் துளித்துளியாய் விடல் வேண்டும்.

பின்பு, 'देवस्त्वा सविता मध्वाऽनक्तु' என்னும் மந்திரத்தால், சுருவத்தால் நெய்யை யெடுத்து, புரோடாசத்தை நனையவிட்டு, கையால் மேலுங் கீழும் நன்குறப்படுமாறு அந் நெய்யைத் தடவல் வேண்டும்.

இம் மந்திரத்தை, பௌர்ணமியிலும், சோமயாகம் பண்ணுதவன் அமா வாசையிலும் மறித்தும் மறித்தும் ஓதல் வேண்டும்.

ஈண்டு, 'तृप्तिरसि गायत्रं छन्दस्तर्पय' என்பது முதலிய மந்திரத்தால், வேள் வித்தலைவன், நெய் தடவும் புரோடாசத்தைப் போற்றல் வேண்டும்.

பௌர்ணமியிலும், சோமயாகம் பண்ணுதவன், அமாவாசையிலும் இம் மந்திரமும் மீண்டும் மீண்டும் ஓதற்பாலதாம்.

வேட்போன், 'अग्निर्होता अश्विनाध्वर्यू' ஆ. பிர. 3-3 என்பது முதலிய பஞ்சஹோதா மந்திரத்தால், சுருக்குகளுக்கு மேற்கில் புரோடாசத்தையும், சுருக்குக்கு, வடக்கில் பால் தயிரையும், புரோடாசத்திற்கு வடக்கில், அல்லது, கையில் பால் தயிர்ப் பாத்திரங்களையும் வைத்துக்கொண்டு, வேதியின் நடுவில், முன்னர்ப் பாலையும், பின்னர் தயிரையும் ஒன்று சேர்த்து வைத்துவிட்டு, பிறகு பிரித்து, வேதியின் தென் கோடியில் பாலையும், வடகோடியில், தயிரையும், வைத்தல் வேண்டும். ஒரே முறை மந்திரமோதிக்கொண்டு இவ்வாறு வைத் தல் முடியாதெனின்? மந்திரத்தை மறித்தும் மறித்தும் ஓதிக்கொள்க. அவ் வாறே ஒரே கையால் வைத்தல் முடியாதெனின் இரண்டு கைகளாலும் வைத் துக்கொள்க. கைகளே! உங்களைக் கருமத்தில் நியமிக்கவல்லேன் என்னும் பன்மைக் குறியாலென்க.

ஈண்டு, 'अग्निर्होता' என்றவிடத்து, பௌர்ணமியில் 'पृथिवी होता' என்பது முதலிய சதுர்ஹோதா மந்திரங்களால் புரோடாசங்களை வைத்தல் வேண்டு

மென்பதும், சோமயாகம் பண்ணுதவன் அமாவாசையில் 'अग्निर्होता' என்பது முதலிய மந்திரத்தானே புரோடாசம் முதலியவற்றை வைத்தல் வேண்டுமென்பதும் உணரற்பாலன. மற்றும், பௌர்ணமியிலும், சோமயாக மின்றியவனுக்கு அமாவாசையிலும் பால் தயிர்களை வைத்தல் இல்லை.

வேள்வித்தலைவன்,

यज्ञोऽसि सर्वतः श्रितः । பிராமணம் 3–7–6–19

என்பது முதலிய மந்திரத்தால் அக்கினிக்குரிய புரோடாசத்தைத் தொட்ட பிறகு,

इदमिन्द्रिय ममृतं । பிராமணம் 3-7-6-20

என்பது முதலிய மந்திரத்தால், கறந்து வைத்துள்ள காலை வேளைப் பாலைத் தொட்டு விட்டு,

यत्पृथिवीमचरत्तत्प्रविष्टं । பிராமணம் 3–7–6–21

என்பது முதலிய மந்திரத்தால் வைத்திருக்கின்ற தயிரையுந் தொடல் வேண்டும்.

பிறகும்,

अयं यज्ञः समसदद्धविष्मानृचा । பிராமணம் 3-7–6–23

என்பது முதலிய மந்திரத்தால் எல்லா அவிக (தேவ வுணவுக)ளையுந் தொடல் வேண்டும். முன் தொட்டதா மெனினும் இப்போது மறித்துந் தொடல் வேண்டு மென்ப துணரற்பாலது.

மற்றும், ஈண்டு, பௌர்ணமியிலும், சோமயாக மின்றியவன் அமாவாசையிலும், 'अयं यज्ञः' என்பது முதலிய மந்திரத்தால் எல்லா அவிகளையுந் தொட்டு விட்டு,

यो नः कनिय इह । பிராமணம் 3–7-6–24

என்பது முதலிய மந்திரத்தால், ஐந்திரம், வைமிருதம் என்பவற்றையுந் தொட்டு விட்டு,

ममाग्ने वर्चः । சங். கா-4, பிர-7, அநு-14.

என்பது முதலிய அநுவாக மந்திரங்களாலும்,

पृथिवी होता । அருணம் பி–3, அநு–2.

என்பது முதலிய மந்திரத்தாலும், வைத்துள்ள அவிகளனைத்தையுந் தொடல் வேண்டும் என்பதும், சோமயாக மின்றியவன் அமாவாசையிலும், 'अमृतत्वमस्य' என்பதன் பிறகு, 'यो नः कनीय' என்பது முதலிய மந்திரத்தால்,

வைக்கும் மந்திரங்கள்)

ஐந்திராக்கினிகளின் புரோடாசத்தையும், அக்கினிக்குரியதையுந் தொட்டுவிட்டு 'மமாக்னே வர்ச்ச' என்னும் மந்திரத்தாலும், அருணம், பிர-3, அநு-3, ல் உள்ள 'அக்னிர்ஹோதா' என்பது முதலிய மந்திரத்தாலும் எல்லா அவிகளையுந் தொடல் வேண்டு மென்பதும் ஈண்டு உணரற்பாலன.

மற்றும்,

**ममाग्ने वर्चः ।** சங். கா-4, பிர-4, அநு-14.

என்பது முதலியனவாக உள்ள பத்து மந்திரங்களாலும், முன்னர் வைத்துள்ள அவிகளைத் தொடல் வேண்டும்.

பதினோராம் அநுவாக சேடமும் முடிந்தது.

---

## பன்னிரண்டாம் அநுவாகத் தொடக்கம்.

வேட்போன், 'अयं वेदः पृथिवी मन्वविन्दत्' என்பது முதலிய மந்திரத்தால், 'துருவா' என்னும் நெய்ப்பாத்திரத்திற்கு வடக்கிலேனும், அல்லது முன்னு லேனும் 'வேதம்' என்னுந் தருப்பைப்பிடியை வைத்துவிட்டு, வேதியில் விரித்து மீந்திருக்கின்ற தருப்பையாலேனும், அல்லது 'பரிபோசனீ' என்னுந் தருப்பை யாலேனும் வேதியின் சுரோணியின் வடகோடிக்கருகில் ஹோதாவிற் (இருக்கு வேத மோதுவோனுக்) கு இடத்தைச் செய்து கொண்டு சமித்துக்களால் தீயை வளர்த்தற் பொருட்டு அச்சமித்துக்களை யெடுக்கத் தொடங்கல் வேண்டும்; தொடங்கிய பிறகு 'होतरेहि' 'இருக்கோதுவோய்! நீ வருவாயாக' என்று அழைத்தல் வேண்டும்.

அதைக்கேட்ட 'ஹோதா' என்பவன் அங்கு வந்து ஆகவனீயத்தின் கன்னி மூலையிலிருந்துவிட்டு எழுந்து கிழக்கு முகமாய் நின்று, பூணூல் தரித்து, ஆசமனம் பண்ணிக்கொண்டு, தெற்கு முகமாய்த் திரும்பி வேதிகையின் பால் உத்காத்திற்குக் கிழக்காகவும், பிரணீதாவிற் (நீர்ப்பாத்திற்) கு மேற்காகவும் வந்து, வேதியின் சுரோணியின் வடமூலையில் தனது கணுக்காலைச் சமமாய் வைத்து ஒரு பாதத்தால் நாணலை மிதித்து, கைகுவித்து, இரண்டு பெருவிரலும் வானை நோக்கி யிருக்க, இதயத்திற்கு நேராய் கைகளை வைத்துக்கொண்டு, வான், தரை என்னுமிரண்டின் இடையை நோக்கிக்கொண்டு நிற்றல் வேண்டும்.

பிறகு, வேட்போன், 'अग्नये समिध्यमानायानुब्रूहि' என்று, இரைந்து சொல்லி ஹோதாவை ஏவல் வேண்டும். அவன் பிரணவத்துடன் 'சாமிதேனீ' மந்திரங்களை ஓதும்போது, அல்லது, பரிதானீயா, என்னும் மந்திரங்களை ஓதும் போது, ஒவ்வொரு பிரணவத்தைச் சொல்லும்போதும் ஒவ்வொரு சமித்தை வைத்துக்கொண்டு வரல் வேண்டும்.

ஹோதா, 'सत्यं प्रपद्ये' 'नमः प्रवक्त्रे' என்பது முதலிய மந்திரத்தைக் கூறி, தனது பெய்ரையுஞ் சொல்லல் வேண்டும்.

பிறகு, 'भूते भविष्यति जाते' என்பது முதலிய மந்திரத்தால், தனது கை விரலை மடக்கிக்கொண்டு,

'जातवेदो रमया पशून्मयि' என்னும் மந்திரத்தால், அக் கைவிரலை நீட்டிக் கொண்டு,

'वर्म मे द्यावापृथिवी' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்தல் வேண்டும்.

மற்றும், ஹிம் என நீண்ட சுரத்துடனும், 'பூர் புவ: ஸ்வரோம்' என்று மெல்லவுஞ் செபித்து, 'प्रवो वाजा अभिद्यवः' என்பது முதலிய சாமி தேனீ மந்திரம் ஓதி முடிந்ததும் நிறுத்தி விட்டு, வேள்வித்தலைவனுடைய இருடி பரம்பரைகளை முதலிலிருந்து சொல்லி முடித்து விடல் வேண்டும்.

பின்பு வேள்வித்தலைவன், சாமி தேனீயை, (சமித்தைத் தீயிலிடுவதற்குரிய மந்திரத்தை) ஓதுவதன் முன்னர்,

चित्तिः स्रुक् चित्तमाज्यं । அருணம் பிர–3, அநு–1

என்பது முதலிய மந்திரத்தைச் சொல்லல் வேண்டும். சொல்லிய பிறகு, சாமி தேனீ மந்திரங்களுள் முதல் மந்திரத்தை ஓதத் தொடங்கும்போது, 'अङ्गिरसो माऽस्य प्रातरनुवाकैरवन्तु' என்று செபித்துவிட்டு, சாமி தேனீ மந்திரங்களை ஓதுங்கால், பிறகும், 'चित्तिः स्रुक्, चित्तमाज्यं' என்பது முதலியவற்றை விரித்துரைத்துவிட்டு, 'उच्चुष्मो अग्ने यजमानायैधि' என்பது முதலிய, சமித்தியமான, (வளர்க்க வேண்டும்,) என்னுஞ் சொல்லுடன் கூடிய இருக்கு மந்திரத்தால் வளர்க்க வேண்டிய தீயைப் போற்றல் வேண்டும்.

பின்பு, 'समिद्धो अग्निराहुतः स्वाहाकृतः' என்பது முதலியதும், வளர்ந்த, என்னுஞ் சொல்லுடன் கூடியதுமாகிய மந்திரத்தால் வளர்த்த அத் தீயைப் போற்றல் வேண்டும்.

'சமித்தோ அக்ன ஆஹுத' என்பதுணர்ந்து, அநுயாசம், என்னும் ஒரு வேள்வியின் பொருட்டு ஒரு சமித்தை மாத்திரம் அங்கு வைத்து விட்டு, பாக்கிச் சமித்துக்களைத் தீயில் வைத்தல் வேண்டும். பரிதானீயா என்பது, 'ஆஜுஹோதா துவஸ்ய' என்னும் இருக்காம்.

அப்போது ஹோதா தனது இருடி மரபு கூறுமிடத்து,

देवाः पितरः पितरो देवाः । பிரா. 3–7–5–10

என்பது முதலிய மந்திரத்தை, வேள்வித்தலைவன் செபித்தல் வேண்டும்.

பின்பு, ஹோதா, 'देवेद्धो मन्विद्ध ऋषिष्टुतः' என்பது முதலிய மந்திரத்தைச் சொல்லி முடித்தவுடன், வேட்போன், தருப்பை முடிச்சால் தீயை மும்முறை விசிறிவிட்டு, சுருவத்தால் துருவாவிலிருந்து நெய்யை யெடுத்து, வேதம்

என்னும் தருப்பை முடிச்சின் மேல் வைத்துக்கொண்டு, அங்கு வைத்துள்ள கட்டை விறகுகளின் வடக்குச் சந்தியிலிருந்து தொடங்கி, ப்ரஜாபதயே, என்று மனதில் தியானித்து, 'ஸ்வாஹா' என்று கூறிக்கொண்டு, தென் கிழக் கோடிவரை கொழுந்து விட்டெரியுந் தீயில் குறுக்காய் எல்லாச் சமித்துக்களி லும் படுமாறு நெய்யைத் தாரையாய் விடல் வேண்டும். இது சுருவ ஆஹார மெனப்படும்.

அப்போது, வேள்வித்தலைவன், 'प्रजापतय इदं न मम' (பிரசாபதியின் பொ ருட்டு இதுவாம் எமதன்று) என்று தியாகம் பண்ணல் வேண்டும். 'मनोसि प्राजापत्यं' என்றற் றொடக்கத்து மந்திரத்தாற் போற்றலும் வேண்டும்.

பிறகு வேட்போன்,

**आप्यायतां ध्रुवा घृतेन ।** சங். கா-1, பிர-6, அநு-3.

என்பது முதலிய மந்திரத்தை ஓதிக்கொண்டு, சுருவத்தால் நெய்ப் பாத் திரத்திலிருந்து நெய்யை யெடுத்துத் துருவாவில் விட்டு விட்டு, சுருவத்தால் பிரஸ்தரத்தையும் வேதியிலுள்ள தருப்பையையுந் துடைத்தல் வேண்டும்.

பிறகு, 'अग्नीत्परिधीँ श्चाग्निंच' என்பது முதலிய மந்திரத்தால் ஆக்கினீத்ரனை ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன், விறகுகளைக் கட்டிய கயிற்றை மரக்கத்தியில் சுற்றிக் கொண்டு, அல்லது மரக்கத்தியின்றியாவது, மூன்று விறகுகளையும் வைத்த முறையாகவே அவ்வவ்விறகினிடத்திற் சென்று அவ்விறகின் அடியிலிருந்து நுனிவரை துடைத்தல் வேண்டும்.

பின்பும், 'अग्ने वाजजित्' என்றற் றொடக்கத்து மந்திரத்தால் கிழக்காய் அக்கினியை மும்முறை துடைத்தல் வேண்டும்.

அதன் பின், ஹோதா, 'आस्पात्रं जुहूर्देवानां' என்பது முதலிய மந்திரத்தை யெடுத்து ஓதல் வேண்டும்.

---

## பன்னிரண்டாம் அநுவாகம்.

---

### விடயச் சுருக்கம்.

**भुवाग्ने रञ्जलिं कृत्वा जूपद्वाभ्यां तयोर्ग्रहः ।**
**अग्ना दक्षिणदिग्गामी विष्णोः स्थित्वा समाहृतिः ॥ १ ॥**
**बृहद्भाः स्रुचमुद्गृह्य पाहि प्रति निवर्तते ।**
**मख ध्रुवामनक्तित्रि नैव मन्त्रा इहेरिताः ॥ २ ॥**

சுகு, உபபிருதை வணங்குதல், அவற்றைக் கையில் எடுத்துக்கொள்ளல், தெற்கே போதல், வேதிகையைத் தாண்டுதல், நிற்றல், ஆகார ஓமஞ் செய்தல், சுருக்கையெடுத்தல், வேதிகையைத் தாண்டி வடக்கே வருதல், நெய்வார்த்தல், சுருக்குகளை வைத்தல் என்பது.

---

முதற் காண்டம் - முதற் பிரபாடகம்.

பன்னிரண்டாம் அநுவாகம்.

இது ஒரு பஞ்சாதிக்கு மேல் 11 பதங்களைக் கொண்டது.

---

ஆகார ஹோமங்கட்குரிய மந்திரங்கள்.

भुवनमसि विप्रथस्वाग्ने यष्टरिदं नमः । जुहूरेह्यग्निस्त्वा ह्वयति देवयज्याया उपभृदेहि देवस्त्वा सविता ह्वयति देवयज्याया अग्नाविष्णू मा वामव क्रमिषं विजिहाथां मा मा संताप्तं लोकं मे लोककृतौ कृणु तं विष्णोः स्थानमसीत इन्द्रो अकृणोद्वीर्याणि समारभ्योर्ध्वो अध्वरो दिविस्पृशमह्रुतो यज्ञो यज्ञपते रिन्द्रावान्त्स्वाहा बृहद्भाः पाहिमाऽग्ने दुश्चरितादा मा सुचरिते भज मखस्य शिरोऽसि संज्योतिषा ज्योतिरङ्क्ताम् ॥ १ ॥

---

முதல் விநியோகம்.

வேட்போன், முதலில், 'துருவா' என்பதையேனும், அல்லது, 'சுகு' என்பதையேனும் வணங்குதல்.

மந்திரம் :

भुवनमसि विप्रथस्वाग्ने यष्टरिदं नमः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| यष्टः | வேட்பதற்குரிய |
| अग्ने ! | அக்கினியே ! நீ |
| भुवनं | தோன்றுபவைகட்குக் காரணமாக |

மந்திரங்கள்)

| | |
|---|---|
| **असि** | இருக்கின்றாய். ஆதலின் |
| **विप्रथस्व** | வளர்வாயாக. உனக்கு |
| **इदं नमः** | இவ் வணக்கம். |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், துருவாவையேனும் சுருவையேனும் வணங்கல் வேண்டு மென்பதாம்.*

குறிப்பு:—*ஆகாரம்*, என்பது வேள்விக்குத் *தலையாம்*. துருவா உடலாம். *இது இரண்டாம் முறை செய்யற்பாலதாகிய ஆகார ஹோமம் என் பதை யுணர்க.*



இரண்டாம், மூன்றும் விநியோகங்கள்.

சுரு, உபபிருத்களை எடுத்துக் கொள்ளுதல்.

மந்திரம்:

**जुह्वेह्यग्निस्त्वा ह्वयति देवयज्यायै ।**

**उपभृदेहि देवस्त्वा सविता ह्वयति देवयज्यायै ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **हे जुहू!** | *சுருவே!* |
| **त्वा** | *உன்னை* |
| **अग्निः** | *அக்கினி* |
| **ह्वयति** | *அழைக்கின்றது. ஆதலின்* |
| **देवयज्यायै** | *தேவாராதனையின் பொருட்டு* |
| **एहि** | *செல்வாயாக.* |
| **हे उपभृत्!** | *உபபிருதே! உன்னை* |
| **सवितादेवः** | *சூரிய தேவன்* |
| **ह्वयति** | *அழைக்கின்றான். ஆதலின்* |
| **देवयज्यायै** | *தேவாராதனையின் பொருட்டு* |
| **एहि** | *செல்வாயாக.* |

சாயணபாடியக் கருத்து.

*இவ்விரண்டு மந்திரங்களாலும், சுருவையும் உபபிருதையும் எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.*

குறிப்பு:—இவ்விரண்டையும் மேலே கூறுமாறு வைத்துக் கொள்ளல் வேண்டும் என்பதும் உணரற்பாலது.

முதலில் ஜுஹுவை வலது கையால் எடுத்து இடது கையில் வைத்துக் கொண்டு உபபிருதை யெடுத்து அதன் மேல் வைத்துக் கொள்ளல் வேண்டும்.

இவ்வாறு எடுத்துக்கொண்டு, 'सुयमे मे अद्य घृताची भूयाः' என்பது முதலிய மந்திரத்தால், உபபிருதின் மேல் சுருவை வைத்துக் கொள்ளல் வேண்டும். அதாவது, நுனிப்பக்கமாக மேலே கொண்டு வந்து வைத்தல் வேண்டும். இவ்வாறு ஹோமத்தின் பொருட்டு எடுக்கும்போதெல்லாம் செய்தல் வேண்டும். அசைதல் கூடாது, நாபிக்கு நோாகவும் வைத்துக் கொள்ளல் வேண்டும். 2, 3

---

நான்காம் விநியோகம்.

வேதிகையைத் தாண்டிச் செல்லல்.

மந்திரம்:

**अग्ना विष्णू मा वामव क्रमिषं वि जिहाथां मा मा संताप्तं लोकं मे लोककृतौ कृणुतम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **अग्ना विष्णू!** | அக்கினி விஷ்ணு என்பவர்களே! யான், |
| **वां** | உங்களிருவர்க்கும் நடுவிற் செல்லினும் |
| **मा अवक्रमिषं** | உங்களை விலக்கிவிடாதவனாகின்றேன். (ஆதலின்) |
| **विजिहाथां** | இடங் கொடுப்பீர்களாக. |
| **मा संताप्तं** | சுட்டுவிடாதீர்கள். |
| **लोककृतौ** | இடத்திற்குக் காரணர்களான நீங்களிருவரும் |
| **मे लोकं कृणुतम्** | யான் நடக்க, இடத்தை யுண்டாக்குவீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், சுருக்குக்களுக்கு முன்னாகவும், நடுப்பரிதிக்குப் பின்னாகவும், பிரஸ்தா மென்னும் தருப்பையைத் தாண்டாமலும், வலது காலை எடுத்து வைத்து பின்னர் இடது காலையுந் தூக்கி வைத்து, வேதிகையின் தென்புறத்திற் செல்லல் வேண்டும். அல்லது, தெற்கு முகமாய்த் திரும்பியேனுஞ் செல்லலாம்.

குறிப்பு:—ஆகவனீயத் தீயைப் பார்த்துக்கொண்டே தாண்டல் வேண்டு மென்பது கருத்தாம். காருகபத்தியத் தீயைப் பார்த்துக் கொண்டு செல்லல் வேண்டு மென்பாரு முளர்.

ஈண்டு நடுவிலுள்ள விறகி (பருதியி)ல், தீயும், சுருக்கின் அடியில் மாயோனும் இருக்கின்றனர் என்பது நூல் வழக்கு. 4

---

ஐந்தாம் விநியோகம்.

வேட்போன் ஹோமஞ் செய்தற்துரிய வகையில் வேதிகையைத் தாண்டி நிற்றல்.

மந்திரம்:

**विष्णोः स्थानमसीत इन्द्रो अकृणाद्वीर्याणि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **भू प्रदेश !** | வேள்விப்பூமியே! நீ |
| **विष्णोः** | வேள்வியாகிய மாயோனுடைய |
| **स्थानं** | இடமாக |
| **असि** | இருக்கின்றாய். |
| **इतः** | இவ்விடத்திலிருந்து |
| **इन्द्रः** | இந்திரன் |
| **वीर्याणि** | பராக்கிரமங்களைச் |
| **अकृणोत्** | செய்துகொண்டனன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வடக்கு முகமாய் நின்றுகொண்டு அந்தர்வேதியில் வலது காலை வைத்து, வெளியிலுள்ள இடது கால் விரலால் தொட்டுக்கொண்டு கீழே குனியாமல், தெற்கிலுள்ள பரிதியின் (விறகின்) சந்தியிற் றொடங்கல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு:—ஆகார ஹோமம், தீயில் குறுக்காய் நெய்யைத் தாரையாய் விடலாம்.

'अग्निमग्नि आऽवह' அக்கினியே! வருவாயாக, என்று அக்கினியை அழைப்பது போன்று, சோமம், விஷ்ணு என்னுந் தேவதைகளை மெல்லக் கூவி யழைத்துவிட்டு, மகேந்திரன் முதலான தேவதைகளை உரக்கக் கூவி யழைத்துக் கொண்டு, தொடைகள் மேலேயிருக்குமாறு உட்கார்ந்துகொள்ளல் வேண்டும். 5

(போ-சூ.) 'विष्णोः स्थानमसि' என்னும் வரைக்கும் இவ் விநியோக மந்திரமாம், மீதி, 'इत इन्द्रो अकृणोद्वीर्याणि' என்பதை மேல்வரும் ஆரும் விநியோகத்துடன் சேர்த்துக் கொள்ளல் வேண்டு மென்பது.

---

### ஆரும் விநியோகம்.

#### ஆகாரம், என்னும் ஹோமஞ் செய்தல்.

மந்திரம் :

**समारभ्योर्ध्वो अध्वरो दिविस्पृशमह्रुतो यज्ञो यज्ञपतेरिन्द्रावान्त्स्वाहा ।**

என்பது.

#### பதவுரை.

| | |
|---|---|
| **यज्ञपतेः** | வேள்வித்தலைவனது |
| **यज्ञः** | ஆகாரம் என்னும் ஹோமம் |
| **देवतायै** | தேவதையின் பொருட்டு |
| **स्वाहा** | அருப்பணஞ் செய்யப்படுகின்றது. |
| **इन्द्रवान्** | இந்திரன் வாழும் நிருதி திசையில் |
| **समारभ्यः** | தொடங்கிய |
| **अध्वरः** | இந்த ஆகார ஹோமம் |
| **ऊर्ध्वः** | வளர்ச்சி யுடையதும் |
| **अह्रुतः** | கேடின்றியதுமாகி |
| **दिविस्पृशम्** | ஈசான திசைக்கண் முடிவுறுக. |

#### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தென்மேற்கு மூலையில் தொடங்கி, வடகிழக்கு மூலை வரை தாரையாய் நெய்யை விடல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—சுருவிலுள்ள நெய்யில், நாலில் ஒரு பங்கால் இது செய்யற்பாலதாம். வடகிழக்காய் நேராக எரிகின்ற தீயில் எல்லா விறகுகளிலும் படுமாறு மூச்சை யடக்கிக் கொண்டு ஆகார ஹோமம் என்னும் நெய்த்தாரையை விடல் வேண்டும்.

ஈண்டு, மந்திரந் தொடங்கும்போதே இது செய்யற்பால தென்றுணர்க. 'இது இந்திரனுக்கு எமதல்ல' என்று தியாகஞ் செய்தல் வேண்டும். ஈண்டு வேள்வித்தலைவன், 'वागस्यैन्द्री सपत्नः' என்பது முதலிய மந்திரத்தால் சுருக்காற் செய்யப்பட்ட ஆகார ஹோமத்தைப் போற்றல் வேண்டும்.



---

ஏழாம் விநியோகத் தொடக்கம்.

வேட்போன், இவ்வாறு ஆகார ஹோமத்தைச் செய்துவிட்டு மூச்சு விடல் வேண்டும்.

ஏழாம் விநியோகம்.

சுருக்கை எடுத்தல்.

மந்திரம் :

बृहद्भाः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| बृहत् | பெரிய |
| भाः | ஒளியா யிருக்கின்றது. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நெய்யுடன் கூடிய 'சுரு' என்னும் மரப்பாத்திரத்தை எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு:—இது துருவாவினாலாகும் ஆகார ஹோமத்தின் பொருட்டென்பதாம். இவ்வொளி சுவர்க்க வொளியெனப் பாவிக்கப்படுகின்றது. 7



எட்டாம் விநியோகம்.

மீண்டும், வேதிகையைத் தாண்டிக்கொண்டு வடக்கே வருதல்.

மந்திரம் :

पाहि माऽग्ने दुश्चरितादाता सुचरिते भज ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अग्ने ! | அக்கினியே ! நீ |
| मा | என்னை |
| दुश्चरितात् | தீ யொழுக்கத்திலிருந்து |
| पाहि | பாதுகாப்பாயாக. |
| मा | என்னை |
| सुचरिते | நல்லொழுக்கத்தில் |
| आभज | நிலைக்க வைப்பாயாக. |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், சுருக்குகள் ஒன்றோடொன்று சேராதபடி, 'சுருக்' என்பதன் முன்னும், நடுவிறகிற்குப் பின்னும், நடுவிறகையும், பிரஸ்தாத்தை யுந் தாண்டாமல், இடது காலை யெடுத்து வைத்து, அல்லது, வலது காலை யெடுத்து வைத்துத் தாண்டல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—ஆகவனீயத் தீயைப் பார்த்தவாறே தாண்டிக் கொண்டு வரல் வேண்டுமென்க. தாண்டிச் செல்வதற்கும், வருவதற்கும் இதுவே மந்திர மாம். இனி மேற்செய்தல் மந்திரமின்றியே செய்யலாம் என்பதையுங் காண்க. 8

---

### ஒன்பதாம் விநியோகம்.

சுருவின் நெய்யை, துருவா என்பதில் விடல்.

மந்திரம் :

**मखस्य शिरोऽसि सं ज्योतिषा ज्योति रङ्क्ताम् ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| **हे आघारशेष !** | அகப்பை விசேடமே! நீ |
| **मखस्य** | வேள்வியின் |
| **शिर:** | தலையாக |
| **असि** | இருக்கின்றாய். ஆதலின் |
| **ज्योतिषा** | சோதியுடன் |
| **ज्योति:** | சோதியானது |
| **सं अङ्क्ताम्** | இனிது சேருக. |

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், சுருவில் மீந்த நெய்யிற் மும்முறையேனும் இரு முறையேனும் துருவாவில் சிறிது விடல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—இதனால் வேள்விக்குத் தலை வைக்கப்பட்டது போலாகின்றது.

ஈண்டுச் சூத்திர விநியோகப்படி, 'उन्नीतꣳ राय:' என்னும் மந்திரத்தால், சுருவத்தால் துருவாவிலுள்ள நெய்யை யெடுத்துக் கொண்டு, 'सुवीराय स्वाहा' என்பதால் சுருவில் நெய்யை விட்டு, மீண்டும் சுருவில் நெய்யை யெடுத்து, 'यज्ञेन यज्ञ; संतत:' என்று துருவாவில் மறித்தும் நெய்யை விட்டு விட்டு அதனது இடத்திலே வைத்து விடல் வேண்டும் என்பதையுங் காண்க.

பன்னிரண்டாம் அநுவாகம் முடிந்தது.

---

## தரிசபூரணமாச யாகத்தின் பரிசேடமாகிய பிரயாஜ யாகம்.

வேட்போன், 'क इद मध्वर्युर्भविष्यति' என்பது முதலிய மந்திரத்தால், சமித்துக்களைக் கட்டிவைத்திருந்த தருப்பைகளை, ஸ்ப்யம் என்னும் மரக்கத்தியிற் சுற்றிக்கொண்டு, வேதிகையிலுள்ள தருப்பைப் புல்லில் மற்றென்றிலும் படாததாகிய ஒரு தருப்பைப் புல்லை யெடுத்து அதனுடன் வைத்துக்கொண்டு, பிரவரத்தைச் சொல்லுதற் பொருட்டு வேதிகையின் வடக்கிலேயே கிழக்கு முகமுடையவனாய் நிற்றல் வேண்டும்.

ஆக்னீத்ரனும், 'क इदमग्नीद्भविष्यति' என்பது முதலிய மந்திரத்தால், அத்தருப்பைக் கயிற்றைத் தொட்டுக்கொண்டு வேட்போனுக்குப் பின்னால் கிழக்கு முகமாக நிற்றல் வேண்டும்.

பிறகு வேட்போன், 'ब्रह्मन् प्रवरायाऽऽश्रावयिष्यामि' (பிரமன்! குலமரபு கூறுகின்றேன்) என்று, பிரமனை ஆணை கேட்டல் வேண்டும்.

பிரமன், ஆபத்தம்ப சூத்திரத்தைத் தழுவியவனெனின்? 'वाचस्पते वाचमाश्रावय' என்பது முதலிய மந்திரத்தை மெல்லச் செபித்து 'ஓம் ஆச்ராவய' என்று ஆணை கொடுத்தல் வேண்டும்.

ஆசுவலாயன சூத்திரப்படியோ, 'ஓம் பூர்புவ: சுவ: ப்ருஹஸ்பதி ப்ரகூத:' என்று செபித்து 'ஓம் ஆச்ராவய' என்று ஆணை கொடுத்தல் வேண்டும்.

பிறகு வேட்போன், 'ஆச்ராவய' என்று ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன், உத்கரத்திற்கு (குப்பை போடுமிடத்திற்கு) மேற்கில் தெற்கு முகமாய் நின்று கொண்டு 'அஸ்து சுரௌஷட்' என்று கூறல் வேண்டும்.

ஹோதா 'ஆச்ராவய யக்ஞம்' என்பது முதலிய மந்திரத்தால் 'ஆச்ராவய' என்று ஆக்னீத்ரனுக்குக் கூறும் வேட்போனை போற்றல் வேண்டும்.

வேட்போன், 'अग्निर्देवो होता देवान्' என்பது முதலிய மந்திரத்தால் உட்கார்ந்திருந்திருக்கின்ற ஹோதாவை அழைத்து விட்டு, எஜமானனுடைய கோத்திரத்திற்குரிய இருடிகளைக் கூறி 'ब्रह्मन्वदाचक्षद्ब्राह्मणा' என்பதையுங் கூறி, ஹோதாவின் பெயரை மெல்லச் சொல்லுவதுடன், மாநுஷ:, என்று உரக்கக் கூறிவிட்டு, முன்னெடுத்து வைத்திருந்த தருப்பைப் புல்லை வேதிகையிற் போட்டுவிடல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

देवाः पितरः पितरो देवाः । பிராமணம் 3-7-5-10

என்பது முதலிய மந்திரத்தை, வேட்போன் பிரவரத்தை (குலமரபை) ச் சொல்லும்போது செபித்தல் வேண்டும்.

ஹோதா, 'देवसवितरेतं त्वा वृणते' என்பது முதலிய மந்திரத்தால், பிரவாஞ் சொல்லுகின்ற வேட்போனைப் போற்றல் வேண்டும்.

பின்னர், மாநுஷ:, என்னும் வேட்போனுடைய சொல்லைக்கேட்டு,

उदायुषा स्वायुषो दोषधीनां । பிராமணம் 3-5-4

என்பது முதலிய மந்திரத்தைக் கூறிக் கொண்டு எழுந்து, 'षष्टिश्चाध्वर्यो नवतिश्च पाशाः' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்து, 'ऋतस्य पन्था मन्वेमि होता' என்று வேட்போனுக்கு அருகிற் சென்று, 'इन्द्रमन्वारभामहे होतृवूर्ये' என்பது முதலிய மந்திரத்தை ஓதி, வேட்போனை வலக்கையாலும், ஆக்னீத்ரனை இடக்கையாலுந் தொட்டுக்கொண்டு, 'संमार्गोऽसि संमां प्रजया पशुभिर्मृड्डि' என்று முன்னர் பரிதியைத் துடைத்த தருப்பைகளால் ஒரு முறை மந்திரத்துடனும், இரண்டு முறை மந்திர மின்றியும் முகத்தைத் துடைத்துக்கொள்வதுடன், நீரையுந் தொட்டுக்கொண்டு, தனது ஆசனத்திற்குப் பின்னர் இருந்துகொண்டு, 'अहेदेधिषव्योदतस्तिष्ठान्' என்பது முதலிய மந்திரத்தால் தனது ஆசனத்தைப் போற்றி, 'निरस्तः परावसुः' என்று, பெரு விரலாலும் நான்காம் விரலாலும், ஒரு தருப்பைப்புல்லை, தன் ஆசனத்திலிருந்து எடுத்து வாயு மூலையிலெறிந்துவிட்டு நீரைத் தொட்டுக்கொண்டு, 'इदमहमर्वावसोः सदने सीदामि' என்று, வலது தொடையானது மேலே யிருக்குமாறு உட்கார்ந்துகொண்டு, 'देवबर्हिः स्वासस्थं त्वाध्यासदेयं' என்று செபித்து, பின்னர், 'अभिहिषहोतः प्रतरां बर्हिषद्भवा' என்று முழந் தாளால் தருப்பையைத் தொட்டுக் கொண்டு, 'भूपतये नमो भुवनपतये नमः' என்பது முதலிய மந்திரத்தைச் செபிப்பதுடன்,

अग्निर्होता वेत्त्वग्ने होत्रं । பிராமணம் 3-5-4

'घृतवती मध्वर्यो स्रुचं' என்பது முதலிய மந்திரங்களையும் ஓதி முடித்தல் வேண்டும்.

ஈண்டு, 'अग्निर्होता' என்று தொடங்கி, 'यज्ञियान्' என்பது ஈருக ஓதில் ஒரு மந்திர முடிந்தது என்பதை யுணர்க.

வேட்போன், 'अग्निर्होता' என்பது முதலியவற்றை ஹோதா ஓதும்போது அதிலுள்ள 'घृतवती' ('கிருதவதீ') என்னுஞ் சொல்லைக் கேட்டவுடன், சுருகு, உபபிருத் என்பவற்றை யெடுத்துக் கொண்டு, வேதிகைக்குத்

தெற்கிற் சென்று வடக்கு முகமாய் நின்று 'ஆச்ராவய' என்று ஆக்கினீத்ரனை ஏவல் வேண்டும்.

ஈண்டு, அனைவரும் வீண் வார்த்தை பேசாதிருத்தல் வேண்டும் என்பதும், பேசில், வியாகிருதி முதலியவற்றைச் செபஞ் செய்தல் வேண்டும் என்பதும் உணரற்பாலன.

ஆக்னீத்ரன், உத்கரத்திற்கு மேற்கில் தெற்கு முகமாய் நின்று கொண்டு மரத்கத்தியை (ஸ்ப்யத்தை) விறகுகளைத் துடைத்த தருப்பையுடன் வைத்துக் கொண்டு 'அஸ்து சுரௌஷட்' என்று கூறல் வேண்டும். யாண்டும், கூறுவித்தலும், கூறுதலும் என்பது இவ்வண்ணமே யாம் என்க.

பிறகு, வேட்போன், 'समिधो यज' என்று ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'ये यजामहे समिधः समिधो अग्न आज्यस्य व्यन्तु वौषट्' என்று வஷட்காரத்தைக் கூறி, 'वागोजः सह ओजोमयि प्राणापानौ' என்று, அவ் வஷட்காரத்தை மெல்லப் போற்றல் வேண்டும்.

ஹோதா 'வௌஷட்' என்று சொல்லும்போது வேட்போன், முன்னர்ச் செய்த ஆகார ஹோமத்தின் நெய்த்தாரைகள் சேர்ந்த விடத்திற்கு மேற்கில் முதலாவது பிரயாசத்தின்பொருட்டு (நெய்யை) ஹோமஞ் செய்தல் வேண்டும்.

அப்போது வேள்வித்தலைவன்,

पृथिवी होता । அருணம் பி-3, அநு-2.

என்பது முதலிய, சதுர் ஹோதா என்னும் மந்திரத்தை ஓதல் வேண்டும்.

பிறகு, 'समिद्भ्योऽग्नय इदं न मम' என்று தியாகஞ் செய்து விட்டு,

वसन्तमृतूनां प्रीणामि । சங். கா-1, பிர-6, அநு-2.

என்பது முதலிய மந்திரத்தால், ஓமஞ் செய்துள்ள முதலாவது பிரயாஜத்தைப் போற்றல் வேண்டும்.

---

## இரண்டாம் பிரயாஜம்.

முன்போன்று, வேட்போன், ஆக்னீத்ரன் என்பவர்களின் வாக்கியங்கள் முடிந்தவுடன், வேட்போன், யஜ, என்று, ஹோதாவை ஏவிய விடத்து ஹோதா, 'ये यजामहे तनूनपादग्न आज्यस्य वेत ३ वौ ३ षट्' என்று வஷட்காரத்தைச் சொல்லி 'वागोजः सह' என்பது முதலியவற்றால் மெதுவாக வஷட்காரத்தைப் போற்றல் வேண்டும்.

வேட்போன் 'ஹோதா' 'வௌஷட்' என்றபோது ஆகார ஹோமத்தின் நெய்த்தாரைகள் கூடியதற்குத் தெற்கில் இரண்டாம் பிரயாஜத்தைச் சுருவினாற் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'तनूनपातेऽग्नय इदं न मम' என்று தியாகஞ் செய்து விட்டு, 'ग्रीष्ममृतूनां प्रीणामि' என்பது முதலிய மந்திரத்தால், இரண்டாம் பிரயாஜ ஹோமத்தைப் போற்றல் வேண்டும்.



மூன்றும் பிரயாஜம்.

முன்போல், வேட்போனும் ஆக்னீத்ரனும், கேட்டல், விடையளித்தலை முடித்துக்கொண்டு, வேட்போன், யஜ, என்று மூன்றும் பிரயாஜஞ் செய்யும்படி ஏவியவுடன், ஹோதா, 'ये यजामह इळो अग्न आज्यस्य व्यन्तू वौषट्' என்று வஷட்காரத்தைச் சொல்லி, 'वागोजः सह' என்பது முதலியவற்றால் வஷட்காரத்தை மெதுவாகப் போற்றல் வேண்டும்.

வேட்போன், ஹோதா 'வௌஷட்' என்றபோது, ஆகாரஹோமத்தின் நெய்த்தாரைகள் கூடியதற்கு மேற்கில், சுருவினால் மூன்றும் பிரயாஜத்தை நெய் மீதமின்றி ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், 'इड्भ्योऽग्नय इदं न मम' என்று தியாகஞ் செய்துவிட்டு, 'वर्षा ऋतूनां प्रीणामि' என்பது முதலியவற்றால் மூன்றும் பிரயாஜத்தைப் போற்றல் வேண்டும்.



நான்காம் பிரயாஜம்.

வேட்போன், மூன்று பிரயாஜங்களையும் சுருவினால் ஹோமஞ் செய்து விட்டு, உபபிருதிலிருக்கும் நெய்யில் பாதியைச் சுருவி லூற்றிக்கொண்டு, 'ஆச்ராவய' என்று ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன், 'அஸ்து சுரௌஷட்' என்று கூறல் வேண்டும்.

பிறகு, வேட்போன், 'யஜ' என்று நான்காம் பிரயாஜத்தைக் குறித்து ஹோதாவை ஏவிய பின்னர், ஹோதா, 'ये यजामहे बर्हिरग्न आज्यस्य वे३तू३वौ३षट्' என்று வஷட்காரத்தைக் கூறி, 'वागोजः सह' என்பது முதலியவற்றால் வஷட்காரத்தைப் போற்றல் வேண்டும்.

வேட்போன், 'வௌஷட்' என்று கூறும்போது, ஆகார ஹோம நெய்த்தாரைகள் கூடியதற்கு வடக்கில் நான்காம் பிரயாஜத்தைச் சுருவினால் ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'बर्हिषे अग्नय इदं न मम' என்று தியாகஞ் செய்து விட்டு, 'शरदमृतूनां प्राणामि' என்பது முதலியவற்றால் ஹோமஞ் செய்த நான்காம் பிரயாஜத்தைப் போற்றல் வேண்டும்.

---

## ஐந்தாம் பிரயாஜம்.

முன்போன்று, வேட்போனும் ஆக்னீத்திரனும், வினை விடைகளைச் செய்து கொண்டு, வேட்போன், 'யஜ' என்று ஐந்தாம் பிரயாஜத்தைக் குறித்து ஹோதாவை ஏவியவுடன், ஹோதா, 'ये यजामहे स्वाहाग्निं' என்று ஆரம்பித்து ஹோமஞ் செய்யவேண்டிய தேவதைகளின் பெயர்களைக் கூறி விட்டு, வஷட்காரத்தையுஞ் சொல்லி 'वागोजः सह' என்பது முதலியவற்றால் வஷட்காரத்தை மெதுவாகப் போற்றல் வேண்டும்.

குறிப்பு :—ஈண்டு, பௌர்ணிமையில், சோமயாகஞ் செய்தவனும், செய்யாதவனும், 'ஸ்வாஹா அக்னீஷோமௌ', 'ஸ்வாஹா இந்திரம் வைமிருதம்', 'ஸ்வாஹா தேவ ஆஜ்யபா' என்பதைக் கூட்டிக்கொண்டு கூறல் வேண்டும்.

ஈண்டு, ஆபஸ்தம்ப வேள்வித்தலைவனுக்கு விஷ்ணு யாகம் இல்லையென்பது உணரற்பாலது. அமாவாசையில், சோமயாகம் பண்ணுதவன், ஸ்வாஹா மஹேந்திரம், என்னுமிடத்து, ஸ்வாஹா இந்திராக்னீ என்னல் வேண்டும்.

வேட்போன், ஹோதா 'வௌஷட்' என்னும்போது, ஆகார ஹோம நெய்த்தாரைகள் கூடியதின் நடுவில் சுருவினால் ஐந்தாம் பிரயாஜத்தை மீதமின்றி ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'स्वाहाकारायाग्नय इदं न मम' என்று தியாகஞ் செய்து விட்டு, 'हेमन्तशिशिरावृतूनां प्रीणामि' என்பது முதலியவற்றால், ஹோமஞ் செய்த ஐந்தாம் பிரயாஜத்தைப் போற்றல் வேண்டும்.

பிரயாஜங்கள் முற்றின.

---

## ஆஜ்யபாக ஹோமம்.

### அக்கினி தேவதை.

வேட்போன், முற்கூறியவாறே நடந்து கொண்டுவந்து, சுருவிலிருக்கின்ற நெய்யை, துருவாவில் விட்டுவிட்டு, தேவதை முறையைத் தழுவி அவிகளிலும் சிறிது நெய்யை வார்த்துவிட்டு, உபபிருதில், சுருவிலுள்ள நெய்யை கொட்டிவிட்டு, அதனதனிடத்தில் சுருவையும் உபபிருதையும் வைத்துவிட்டு,

மந்திரமோதாமல் துருவாவிலுள்ள நெய்யைச் சுருவத்தால் எடுத்துச் சுருவில் விட்டுக்கொண்டு, மற்றைய நெய்ப் பாத்திரத்திலிருந்தும் சுருவத்தால் நெய் யெடுத்துக்கொண்டு,

आप्यायतां ध्रुवा घृतेन । பிராமணம் 3-7-5-4

என்பது முதலிய மந்திரத்தால், துருவாவில் அந் நெய்யை வார்த்துவிட்டு, சுருவத்தில் ஒட்டிய நெய்யை, பிரத்தரத்திலும், தருப்பையிலுந் துடைத்தல் வேண்டும். இவ்வாறே மும்முறை நெய் யெடுத்துச் சுருவிற் போட்டுக் கொண்டு, 'अग्नये अनुब्रूहि' என்று புரோநுவாக்கியத்தின் பொருட்டு ஹோதா வை ஏவல் வேண்டும்.

ஹோதா,

अग्निः प्रत्नेन मन्मना । பிராமணம் 3-5-4

என்பது முதலிய புரோநுவாக்கியத்தை அமாவாசையிற் சொல்லல் வேண்டும்.

பௌர்ணமியில், 'अग्निर्वृत्राणि जङ्घनत्' என்பது முதலிய புரோநுவாக்கி யத்தைச் சொல்லல் வேண்டும். இது முதற்கொண்டு சுவிஷ்டகிருத் யாகம் வரை மத்தியம சுரத்தாற் கூறல் வேண்டும்.

முன்போல் நான்காம் முறை நெய் யெடுத்துக்கொள்வதுடன் சுருவையும் உபபிருதையும் எடுத்துக்கொண்டு தெற்கில் சென்று வடக்கு முகமாய் நின்று, 'आश्रावय' என்று ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன், 'அஸ்து சுரௌஷட்' என்று முன்போன்றே சொல்லல் வேண்டும். பிறகு வேட்போன், 'அக்னிம் யஜ' என்று ஹோமத்தின் பொ ருட்டு ஹோதாவை ஏவல் வேண்டும்,

ஹோதா, 'ये यजामहेऽग्निं जुषाणः' என்பது முதலிய வாக்கியத்தை, வௌ ஷட், அந்தமாய்ச் சொல்லிவிட்டு, 'वागोजः सह ओजः' என்பது முதலியவற்றால் வஷட்காரத்தை மெதுவாகப் போற்றல் வேண்டும்.

வேட்போன், 'வௌஷட்' என்றவுடன் எரிந்து கொண்டிருக்கின்ற ஆகவனீயத் தீயின் வடக்குப் பாதியின் முற்பாதியில், அதாவது ஆகவனீயத் தீயின் கன்னி மூலையில் அக்கினியின் பொருட்டு ஹோதா ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், 'अग्नय इदं न मम' என்று தியாகஞ் செய்தல் வேண்டும். மற்றும், 'अग्निना यज्ञः' என்பது முதலியவற்றால் ஆக்னேய ஆஜ்ய பாகத்தைப் போற்றல் வேண்டும் என்பர் சிலர்.

## சோம தேவதை.

வேட்போன் முன்போற் சென்று, ஒன்றும் பேசாது, துருவாவிலுள்ள நெய்யைச் சுருவத்தால் எடுத்து, சுருவாவில் விட்டுக்கொண்டு, சுருவத்தால் நெய்த் தாலியிலிருந்து நெய்யை யெடுத்து, 'आप्यायतां ध्रुवा घृतेन' என்பது முதலியவற்றால், துருவாவில் விட்டு, சுருவத்தை, பிரத்தாரத்திலும், தருப்பையிலுந் துடைத்தல் வேண்டும். இவ்வாறே மும்முறை எடுத்துச் சுருவில் போட்டுக் கொண்டு 'சோமாய அநுப்ரூஹி' என்று புரோநுவாக்கியத்தைச் சொல்லுமாறு ஹோதாவைத் தூண்டல் வேண்டும்.

ஹோதா, 'सोम गीर्भिष्ट्वा वयं वर्धयामो वचो विदः' என்பதை முதலாக வுடையதும், ஓம் என்பதை ஈறாக வுடையதுமாகிய புரோநுவாக்கியத்தை அமாவாசையிற் கூறல் வேண்டும். பௌர்ணமியில், 'त्वं सोमासि' என்பது முதலியவற்றைக் கூறல் வேண்டும்.

வேட்போன் ஒன்றும் பேசாது, துருவாவிலுள்ள நெய்யைச் சுருவத்தால் எடுத்துச் சுருவிற் போட்டுக்கொண்டு, சுருவத்தால் நெய்ப் பாத்திரத்திலிருந்து நெய்யை யெடுத்து, 'आप्यायतां ध्रुवा घृतेन' என்பது முதலியவற்றால், துருவாவில் விட்டு விட்டு, சுருவத்தை, பிரஸ்தாரத்திலுந் தருப்பையிலுந் துடைத்து விட்டு, தெற்கில் சென்று வடக்கு முகமாய் நின்றுகொண்டு, 'आश्रावय' என்று ஆக்னீத்ரனைத் தூண்டல் வேண்டும்.

ஆக்னீத்ரன், 'அஸ்து சுரௌஷட்' என்று முன்போற் கூறல் வேண்டும்.

வேட்போன், 'சோமம் யஜ' என்று யாகத்தின் பொருட்டுள்ள வாக்கியத்தைக் கூறும்படி ஹோதாவைத் தூண்டல் வேண்டும்.

ஹோதா, 'ये३यजामहे सोमं जुषाणः' என்பது முதலியவற்றை 'வௌஷட்' என்பதோடு முடித்துக் கூறிவிட்டு, 'वागोजः सह ओजो गमि प्राणापानौ' என்று வஷட்காரத்தை மெல்லப் போற்றல் வேண்டும்.

வேட்போன், 'வௌஷட்' என்று ஹோதா சொல்லும்போது, எரிகின்ற தீயின் தெற்குப் பாதியின் முற்பாதியில், அதாவது ஆகவனீயத் தீயின் அக்கினி மூலையில் முன் ஆஜ்ய பாகத்தை ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'சோமாய இதம் ந மம' என்று தியாகஞ் செய்து விட்டு, வேறாய்த் துதிக்கும் பக்ஷத்தில், 'சோமேன யக்ஞ' என்று கூறிவிட்டு, 'अग्निषोमयो रहं देवयज्यया' என்பது முதலியவற்றால் ஹோமஞ் செய்த ஆஜ்ய பாகத்தைப் போற்றல் வேண்டும்.

ஆகார ஆஜ்ய பாகங்கள் இரண்டுங் கண்களைப் போன்றன என்ப. ஈண்டு வேட்போன், ஐந்து குலமரபுடையோனு யிருக்கின், ஒவ்வொரு ஆஜ்ய பாகத் திற்கும் மீண்டும் ஒருமுறை, ஒன்றும் பேசாமல், துருவாவிலுள்ள நெய்யை யெடுப்பது முதற் கொண்டு, சுருவைத் துடைத்தலீருகிய கருமத்தைச் செய் தல் வேண்டும்.

ஆஜ்யபாகம் முற்றிற்று.

---

## பிராயச்சித்த ஹோமம்.

ஆஜ்யபாகத்தின் பொருட்டு, எடுத்த சுருவும், உபபிருதும் கையிலேயே இருத்தல் வேண்டும். அதாவது ஸ்விஷ்ட கிருத்யாகம் முடியும் வரை அதனு டைய இடத்தில் வைத்தல் கூடாதென்பதாம்.

அதன்பிறகு வேள்வித்தலைவன், ' व्रत्येहनि व्रतलोप प्रायश्चित्तार्थं पूर्णाहुतिं होष्यामि ' அதாவது விரத நாளில் விரதம் குறைந்ததின் பொருட்டு வ்ராதபதி யென் னும் ஒரு வேள்வியைச் செய்தல் வேண்டும் என்பதாம். அதன் பொருட்டுப் பூரணுகுதி செய்வேனுக என்பது கருத்து. ஆசுவலாயன சூத்திரத்தைத் தழு வியவன் எனின் இது கூடும்.

ஆபஸ்தம்ப சூத்திரத்தைத் தழுவியவனெனின், அதன் பொருட்டுச் சுரு வாகுதியைச் செய்வோனுக, என்று சங்கற்பித்துக்கொள்ளல் வேண்டும்.

வேட்போன், மந்திரம் ஓதாமல், நெய்ப் பாத்திரத்திலிருந்து சுருவத் தால் நான்கு முறை சுருவில் நெய்யை யெடுத்துக் கொண்டு, ' அக்னயே வ்ர தபதயே ஸ்வாஹா ' என்று ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், ' அக்னயே விரதபதய இதம் ந மம' என்று தியாகஞ் செய்து விட்டு, ' சம்பாவித சமஸ்த தோஷ நிவர்த்தியின் பொருட்டு சர்வப் பிராயச்சித்தஞ் செய்வேனுக ' என்று சங்கற்பித்துக் கொள்ளல் வேண்டும்.

வேட்போன், நெய்ப் பாத்திரத்திலிருந்து சுருவத்தால் சுருவில் ஒருமுறை நெய் யெடுத்துக்கொண்டு, ' ஓம் பூர் புவ: ஸ்வ: ஸ்வாஹா ' என்று ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், ' ப்ரஜாபதய இதம் ந மம ' என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிராயச்சித்த ஹோமம் முற்றிற்று.

---

## முக்கிய ஹோமம்.

வேள்வித்தலைவன், 'अग्निर्होता अश्विनाध्वर्यू' என்பது முதலிய 'பஞ்ச ஹோதாரம்' என்னும் மந்திரத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், மந்திரஞ் சொல்லாமல் துருவாவிலுள்ள நெய்யைச் சுருவத்தால் எடுத்துச் சுருவில் விட்டு விட்டு, சுருவத்தால் நெய்ப் பாத்திரத்திலிருந்து நெய்யை யெடுத்துக்கொண்டு,

आप्यायतां ध्रुवा घृतेन । பிராமணம் 3-7-5-4

என்பது முதலிய மந்திரத்தால் துருவாவில் விட்டு, சுருவத்தை, தருப்பையிலும் பிரஸ்தாத்திலுந் துடைத்துவிட்டு,

मा भेर्मा संविक्था: । பிராமணம் 3-7-5

என்பது முதலிய மந்திரத்தால், அக்கினிக்குரிய புரோடாசத்தின் நடுவிலிருந்து கிழக்கு முகமாய், பெருவிரல் நடுவிரல் நான்காம் விரல் என்னும் மூன்று விரல்களாலும், பெருவிரலளவு கொண்ட புரோடாசத் துண்டை யெடுத்துச் சுருவில் போட்டு, புரோடாசத்தின் கிழக்குப் பாதியிலும் முன்போன்று எடுத்துப் போட்டுக்கொண்டு இரண்டையும் ஒன்றுபடுத்தி, ஐந்து குலமரபுகளை யுடையவனெனின், புரோடாசத்தின் மேற் பாதியிலும் முன்போன்று எடுத்துக் கொண்டு, மந்திரமின்றித் துருவாவிலுள்ள நெய்யைச் சுருவத்தால் எடுத்துச் சுருவிலுள்ள புரோடாசத்தின் மேல் விடல் வேண்டும்.

பிறகு, நெய்ப் பாத்திரத்திலிருந்து சுருவத்தால் நெய்யை யெடுத்து, 'आप्यायतां ध्रुवा घृतेन' என்பது முதலிய மந்திரத்தால் துருவாவில் விட்டுக் கொண்டு, சுருவத்தை பிரஸ்தாத்திலும் தருப்பையிலும் துடைத்து விட்டு,

यदवदानानि । பிராமணம் 3-7-5

என்பது முதலிய மந்திரத்தால், சுருவத்தால் ஆஜ்யத்தாலி யென்னும் நெய்ப் பாத்திரத்திலிருந்து நெய் யெடுத்துக்கொண்டு, எடுத்த புரோடாசத்தின் மேல் அந்நெய்யை விட்டுக்கொண்டு, 'अग्नये अनुब्रूहि' என்று புரோநுவாக்கியத்தின் பொருட்டு ஹோதாவைத் தூண்டல் வேண்டும்.

ஹோதா,

अग्निर्मूर्धा दिव: ककुत्पति: । பிராமணம் 3-5-7-1

என்பது முதலிய புரோநுவாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், தெற்கே சென்று வடக்கு முகமாய் நின்றுகொண்டு, 'आश्रावय' என்று ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும். ஆக்னீத்ரன், 'அஸ்து ச்ரௌஷட்' என்று முன்போற் கூறல் வேண்டும்.

வேட்போன், 'अग्नि यज' (அக்கினி யாராதனை வாக்கியத்தைச் சொல்வாயாக) என்று, ஹோதாவைத் தூண்டல் வேண்டும்.

ஹோதா,

ये यजामहे अग्निं भुवः । பிராமணம் 3-5-7-2

என்பது முதலியவற்றை 'வௌஷட்' என்பதுடன் முடித்துக் கூறி, 'वागोजः सह ओजः' என்பது முதலியவற்றால் வஷட்காரத்தை மெதுவாகப் போற்றல் வேண்டும்.

வேட்போன், 'வௌஷட்' என்று ஹோதா சொன்னவுடன், கையிலுள்ள சுருவின் நெய்யை முன்னர்ச் சிறிது ஒழுகவிட்டு, புரோடாசத்துண்டுகள் சிதறிவிடாமல், சுருக்கானது நேரா யிராதபடி பக்கமாகச் சாய்த்து அப் புரோடாசத் துண்டை, ஆகார ஹோமத்தின் நெய்த்தாரைகள் சேர்ந்த விடத்தில் ஆகுதிசெய்து விட்டு, மீந்த நெய்யை அதன்மேல் ஒழுக விடல் வேண்டும்.

இவ்வாறு செய்தல், புரோடாச முதலிய பொருள்களை ஆகுதி செய்யும் போதாம். ஒழுகுகின்ற நெய் முதலியவைகளைச் செய்யும்போதன்று. அதாவது சுருவை நேராக வைத்துக்கொண்டு செய்யவேண்டு மென்பதாம்.

இவ்வாறு செய்தலும் வேள்வித் தீயானது அவியாமல் இனிது களித்தெழுமாறு செய்தற்பொருட்டாம்.

வேள்வித்தலைவன்,

'अग्नय इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகு,

अग्नेरहं देवयज्यया । சங். கா-1, பிர-6, அநு-2.

என்பது முதலியவற்றால் ஆகுதி செய்த புரோடாசத்தைப் போற்றல் வேண்டும்.

---

## உபாம்சு யாகம்.

### விஷ்ணு தேவதை.

வேட்போன் வந்து தனது ஆசனத்தின்மீது உட்கார்ந்துகொண்டு, மந்திரமின்றி, சுருவத்தால் துருவாவிலிருந்து நெய்யெடுத்துச் சுருவில் போட்டுக்

கொண்டு, நெய்ப் பாத்திரத்திலிருந்து சுருவத்தால் நெய் யெடுத்து, 'आप्यायतां ध्रुवा घृतेन' என்பது முதலிய மந்திரத்தால், துருவாவில் விட்டு விட்டு, சுரு வத்தை, பிரஸ்தாத்திலும் தருப்பையிலுந் துடைத்து விடல் வேண்டும். இவ் வாறே மீண்டும் மும்முறை யெடுத்துக்கொண்டு மெதுவாக விஷ்ணவே என வும் 'அநுப்ரூஹி' என உரக்கவும் கூறிப் புரோநுவாக்கியத்தின் பொருட்டு ஹோதாவைத் தூண்டல் வேண்டும்.

ஹோதா, 'इदं विष्णुर्विचक्रमे' என்பது முதலிய புரோநுவாக்கியத்தை மெதுவாகக் கூறிவிட்டு, ஓம் என, உரக்கக் கூறல் வேண்டும். வேட்போன் தெற்கே சென்று வடக்கு முகமாய் நின்று கொண்டு, 'ஆச்ராவய' என்று ஆக் னீத்ரனை ஏவல் வேண்டும். ஆக்னீத்ரன், 'அஸ்து சுரௌஷட்' என்று முன் போன்றே கூறல் வேண்டும்.

வேட்போன் மெதுவாக விஷ்ணும் எனவும் 'யஜ' என்று உரக்கவும் கூறி, யாஜ்யா வாக்கியத்தைக் கூறுமாறு ஹோதாவைத் தூண்டல் வேண்டும்.

ஹோதா, 'ये यजामहे' என்று உரக்கவும் 'विष्णुं त्रिदेवः पृथिवीमेष' என்பது முதலியவற்றை மெதுவாகவும், 'வௌஷட்' என்று உரக்கவுங் கூறிவிட்டு, 'वागोजः' என்பது முதலியவற்றால் வஷட்காரத்தைப் போற்றல் வேண்டும்.

'வௌஷட்' என்று ஹோதாவானவன் சொன்னவுடன், ஆகார ஹோ மத்தின் மீது சுருவாவின் நுனியால் வேட்போன் ஹோமஞ் செய்தல் வேண் டும்.

வேள்வித்தலைவன், 'விஷ்ணவ இதம் ந மம' என்று தியாகஞ் செய்து விட்டு, 'दब्धिरस्य दब्धो भूयासं पाप्मानं दभेयं' என்று உபாம்சு யாகத்தைப் போற் றல் வேண்டும்.

குறிப்பு :—ஈண்டு, அமாவாசையில், மகேந்திரயாகம், சோமயாகம் பண் ணுதவனுக்கு இது இல்லை. பௌர்ணமியில் பால் தயிர்களே யில்லை. என்னை? அவை கூறப்படாமையின் என்க. இனி, பௌர்ணமியில் உள்ள விசேடங்கள் ஈண்டு உணரற்பாலன. அவையாவன :—

### அக்கினி சோம தேவதை.

உபாம்சு யாகத்தைப் போற்றிய பிறகு, வேட்போன், எழுந்து வந்து தனது ஆசனத்திலிருந்து கொண்டு, மந்திர மோதாமல், துருவாவிலிருந்து சுரு வத்தால் நெய்யெடுத்துச் சுருவில் விட்டுக்கொண்டு, சுருவத்தால் நெய்த்தாலி யில் நெய்யை யெடுத்து, 'आप्यायतां ध्रुवा घृतेन' என்பது முதலியவற்றால், துருவா வில் விட்டு விட்டு, சுருவத்தை, பிரஸ்தாத்திலும், தருப்பையிலுந் துடைத்துக் கொண்டு,

'मामेमां संविक्थाः' என்பது முதலியவற்ருல், அக்கினி சோமன் என்பவர்கட்குரிய புரோடாசத்தின் நடுவில், பெரு விரலளவு கொண்டதை தெற்கு முகமாக்கிய பெருவிரல் மூன்ரும் விரல் நான்காம் விரல்களால் எடுத்துச் சுருவில் போட்டு, அவ்வாறே மற்ருெரு முறையும் எடுத்துப் போட்டு அவற்றை ஒன்ருக்கி, (ஐந்து குலமரபுடையானெனின் ; முன்போன்றே மூன்ரும் முறையும் எடுத்துப் போட்டுக்கொள்ளல் வேண்டும்.) மந்திரமின்றி துருவாவில் சுருவத்தால் நெய்யை யெடுத்து, ஜுகுவிலிருக்கும் புரோடாசத்தின் மேல் விட்டு, நெய்த்தாலியில் சுருவத்தால் நெய்யெடுத்து, 'आप्यायतां ध्रुवा घृतेन' என்பது முதலியவற்ருல் துருவாவில் விட்டு விட்டு, சுருவத்தைப் பிரஸ்தரத்திலும் தருப்பையிலுந் துடைத்துக்கொண்டு 'यदवदानानि ते' என்பது முதலியவற்ருல் சுருவத்தால், நெய்த்தாலியிலிருந்து நெய்யை யெடுத்துக்கொண்டு, எடுத்த புரோடாசத்தின்மீது அந் நெய்யை விட்டு, 'अग्निषोमाभ्या मनुब्रूहि' என்று புரோநுவாக்கியத்தின் பொருட்டு ஹோதாவைத் தூண்டல் வேண்டும்.

ஹோதா,

अग्नीषोमा सवेदसा । பிராமணம் 3-5-7-5

என்பது முதலிய புரோநுவாக்கியத்தைச் சொல்லல் வேண்டும். வேட்போன் தெற்கே சென்று வடக்கு முகமாய் நின்று கொண்டு, 'आ३श्रा३वय' (ஆச்ராவய) என்று ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன், 'அஸ்து சுஔஷட்' என்று முன் போன்று கூறல் வேண்டும். வேட்போன், 'अग्नीषोमौ यज' என்று, யாகஞ் செய்தற்குரிய வாக்கியத்தைச் சொல்லுமாறு ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா,

ये ३ यजामहे अग्नीषोमौ दिवि रोचनानि । பிராமணம் 3-5-7-6

என்பது முதலியவற்றை ஓதி, ஈற்றில் வௌஷட் என்று கூறி, 'वागोजः सह' என்பது முதலியவற்ருல் வஷட்காரத்தைப் போற்றல் வேண்டும். வேட்போன், 'வௌஷட்' என்று ஹோதா சொல்லுங்கால், சுருவிலுள்ள நெய்யில் சிறிது ஒழுகவிட்டு, தீயிலிடும் புரோடாசத் துண்டுகள் நழுகாமல், சுருக்கைப் பக்கமாய்ச் சாய்த்து அப் புரோடாசத் துண்டு உடையாவாறு ஆகாரஹோமத்தின் நெய்த்தாரைகள் சேர்ந்த விடத்தின் மீது உபாம்சு யாகஞ் செய்ததற்கு அருகாய் ஹோமஞ் செய்தல் வேண்டும். மீந்த நெய்யையும் அதன் மேல் ஒழுக விடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'அக்னீஷோமாப்யாம் இதம் ந மம' என்று தியாகஞ் செய்து விட்டு,

अग्नीषोमयो रहं । சங். கா-1, பிர-1, அநு-2.

என்பது முதலியவற்ருல் ஓமஞ் செய்த புரோடாசமாகிய அவியைப் போற்றல் வேண்டும்.

---

## இந்திர வைமிருத தேவதை.

வேட்போன் எழுந்துவந்து தனது ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டு, மந்திர மோதாமல், துருவாவிலுள்ள நெய்யைச் சுருவத்தால் எடுத்துச் சுருவில் விட்டு, நெய்த் தாலியிலிருந்து நெய் யெடுத்து, 'आप्यायतां ध्रुवा घृतेन' என்பது முதலியவற்ருல் துருவாவில் விட்டு விட்டுச் சுருவத்தை, பிரஸ்தரத்தி லுந் தருப்பையிலுந் துடைத்துக்கொண்டு,

'मामेर्मा' என்பது முதலியவற்ருல் இந்திர வைமிருத தேவதையின் புரோடாசத்தின் நடுவில், முன்போன்றே இரண்டு முறை புரோடாசத் துண்டுகளை யெடுத்துச் சுருவில் போட்டு, (குலமரபு ஐந்தை யுடையவனெனின் மூன்று முறை யெடுத்துப் போட்டுக்கொண்டு, அவற்றை ஒன்று சேர்த்து, துருவாவிலுள்ள நெய்யிலிருந்து சுருவத்தாலெடுத்துச் சுருவிலுள்ள புரோடாசத்தின் மீது விட்டு, சுருவத்தால் நெய்த்தாலியில் நெய்யை யெடுத்து, 'आप्यायतां ध्रुवा घृतेन' என்பது முதலியவற்ருல் துருவாவில் விட்டு விட்டு, சுருவத்தை, பிரஸ்தரத்திலுந் தருப்பையிலுந் துடைத்துக்கொண்டு, 'यदवदानानि ते' என்பது முதலியவற்ருல் நெய்த்தாலியிலிருந்து சுருவத்தால் நெய் யெடுத்துக் கொண்டு, எடுத்த புரோடாசத்தின் மீதுவிட்டு, 'इन्द्राय वैमृधायानुब्रूहि' என்று புரோநுவாக்கியத்தின் பொருட்டு ஹோதாவைத் தூண்டல் வேண்டும்.

ஹோதா, 'विन इन्द्र मृधो जहि' என்பது முதலிய மந்திரமாகிய புரோநுவாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், தெற்கே சென்று வடக்கு முகமாய் நின்றுகொண்டு, 'आश्रावय' என்று ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும். ஆக்னீத்ரன், 'அஸ்து சுரௌஷட்' என்று முன்போலவே கூறல் வேண்டும்.

வேட்போன், 'इन्द्रं वैमृधं यज' என்று, யாக வாக்கியத்தைக் கூறும்படி ஹோதாவைத் தூண்டல் வேண்டும்.

ஹோதா, 'ये ३ यजामह इन्द्रं वैमृधं मृगोनभीमः' என்பது முதலியவற்றை 'வௌஷட்' அந்தமாய்க் கூறுவதுடன், 'वागोजः सह' என்பது முதலியவற்ருல், வஷட்காரத்தையும் மெதுவாகப் போற்றல் வேண்டும்.

வேட்போன், 'வௌஷட்' என்று ஹோதாவானவன் சொன்னவுடன், தனது கையிலிருக்கும் சுருக்கின் நெய்யில் சிறிதளவு முன்னர்த் தீயில் ஒழுக

விடல் வேண்டும். தீயிலிட வேண்டிய புரோடாசத்துண்டு நழுகாமலிருக்கு மாறு செய்துவிட்டு, சுருக்கை மற்ருெரு புறமாகச் சாய்த்து வைத்துக் கொண்டு, புரோடாசத் துண்டு உடைந்து போகாமல் ஆகார ஹோமத்தின் நெய்த் தாரைகள் கூடியதின் மீது, அக்கினி சோமத்தின் புரோடாச ஹோமத் திற்கு அருகில், ஹோமஞ் செய்து விட்டு மீந்த நெய்யையும் அதன் மேல் ஒழுக விடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इन्द्राय वैमृधाय इदं न मम' என்று தியாகஞ் செய்து விட்டு,

इन्द्रस्य वैमृधस्याहं । சங். கா-1, பிர-1, அநு-2.

என்பது முதலியவற்ருல் இந்திர வைமிருதர்களின் புரோடாச ஹோமத் தைப் போற்றல் வேண்டும் என்பதாம். அதன் பின்னர் பார்வண ஹோமம்.



மஹேந்திர தேவதை.

அமாவாசையில் உபாம்சு யாகத்தைப் போற்றிய பிறகு, வேட்போன், எழுந்து வந்து தனது ஆசனத்தில் உட்கார்ந்து, மந்திர மோதாமல், துருவாவி லுள்ள நெய்யைச் சுருவத்தால் எடுத்து, 'आप्यायतां ध्रुवा घृतेन' என்பது முதலிய தால், துருவாவில் விட்டு விட்டு, சுருவத்தை, பிரஸ்தரத்திலும் தருப்பையிலுந் துடைத்துக்கொண்டு, 'मामेमां संविक्था:' என்பது முதலியவற்ருல், காலையிற் கறந்தபாலில் நடுவில் சுருவத்தால் எடுத்துச் சுருவில் விட்டுக்கொண்டு, மற்றும், கீழ்ப்பாதியில் இரண்டா முறையும் சுருவத்தால் எடுத்துச் சுருவில் விட்டுக் கொண்டு, ஐந்து குல மரபானெனின் மற்றுமொருமுறையும் எடுத்துச் சுருவில் விட்டுக் கொள்ளல் வேண்டும்.

மற்றும், 'मामेमां संविक्था:' என்பது முதலியவற்ருல், தயிரின் நடுவிலும் கீழ்ப்பாதியிலும் சுருவத்தால் சிறிது எடுத்துச் சுருவில் போட்டுக்கொண்டு ஐந்து முறை யெடுக்கத் தக்கானெனின் மற்ருெரு முறையும் எடுத்தல் வேண்டும்.

பிறகு, மந்திரமோதாமல், துருவாவிலுள்ள நெய்யைச் சுருவத்தால் எடு த்துச் சுருவில்விட்டு, நெய்ப்பாத்திரத்திலிருந்து சுருவத்தால் நெய்யை எடுத்து, 'आप्यायतां ध्रुवा घृतेन' என்பது முதலியவற்ருல், துருவாவில் விட்டு விட்டு, சுரு வத்தை, பிரஸ்தரத்திலும், தருப்பையிலுந் துடைத்துக்கொண்டு, பிறகும், சுருவத்தால் நெய்ப் பாத்திரத்திலிருந்து நெய்யை யெடுத்துக் கொண்டு, 'यदवदनानि ते' என்பது முதலியவற்றை இரண்டிடத்து மோதிக் கொண்டு,

பாலிலும் தயிரிலும் நெய்யை விட்டு விட்டு, 'महेन्द्रायानुब्रूहि' என்று புரோநுவாக்கியத்தின் பொருட்டு ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா,

महाँ इन्द्रो य ओजसा । பிராமணம் 3-5-7-11

என்பது முதலிய புரோநுவாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

வேட்போன் தெற்கில் தாண்டி வடக்கு முகமாய் நின்று கொண்டு, 'आश्रावय' (ஆச்ராவய) என்று ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும். ஆக்னீத்ரன், 'அஸ்து சுரௌஷட்' என்று முன் போன்று கூறல் வேண்டும். பின்னர் வேட்போன், 'மஹேந்த்ரம் யஜ' என்று யாகஞ் செய்தற்குரிய வாக்கியத்தைக் கூறும்படி ஹோதாவைத் தூண்டல் வேண்டும்.

ஹோதா,

ये यजामहे महेन्द्रं भुवस्त्वमिन्द्र । பிராமணம் 3-5-7-12

என்பது முதலியவற்றை வௌஷட் என்பதீறுகக் கூறிவிட்டு' 'वागोजः सह ओजः' என்பது முதலியவற்ருல், வஷட்காரத்தை மெதுவாகப் போற்றல் வேண்டும். வேட்போன், 'வௌஷட்' என்று, ஹோதா கூறும்போது, சுருக்கால், ஆகார ஹோமத்தின் மேல் உபாம்சு ஹோமத்திற்கருகில் சுருக்கின் முகத்தால் ஹோமஞ் செய்தல் (வேள்வித் தீயில் விடல்) வேண்டும். ஒழுகும் பொருள்களனைத்தும் சுருக்கின் நுனியால் ஹோமஞ் செய்யற்பாலன என்பதை யுணர்க. வேள்வித்தலைவன், 'மஹேந்திராய இதம் ந மம' என்று தியாகஞ் செய்து விட்டு,

महेन्द्रस्याहं देवयज्यया । சங். கா-1, பிர-6, அநு-2

என்பது முதலியவற்ருல் மஹேந்திரனுக்கு ஹோமஞ்செய்த பால் தயிர்களைப் போற்றல் வேண்டும்..

### இந்திரன் அக்கினி தேவதை.

குறிப்பு :—ஈண்டுச் சோமயாகம் பண்ணுதவன், அமாவாசையில் உபாம்சு யாகத்தைப் போற்றிய பின்னர், எழுந்து வந்து தனது ஆசனத்தின் மீது உட்கார்ந்து, வாய் பேசாமல் துருவாவில் சுருவத்தால் நெய்யை யெடுத்துச் சுருவாவில் விட்டு, நெய்த்தாலியிலிருந்து சுருவத்தால் நெய்யை யெடுத்து, 'आप्यायतां ध्रुवा घृतेन' என்பது முதலியவற்ருல் துருவாவில் விட்டு விட்டு, சுருவத்தைப் பிரத்தரத்திலும், தருப்பையிலுந் துடைத்து விட்டு,

'मामेर्मा संविक्थाः' என்பது முதலியவற்றைக் கூறி, இந்திரன் அக்கினி என்னு மிருவர்களுக்குரிய புரோடாசத்தின் நடுவில், பெரு விரளலவு, பெரு

விரல் மூன்றும் விரல் நான்காம் விரல்களால், விரலைத் தெற்கு முகமாய்க் கொண்டு எடுத்துச் சுருவில் போட்டு, அங்ஙனமே, கிழக்குப் பாதியிலும் எடுத்துப் போட்டுக் கொண்டு, (ஈண்டு, ஐந்து குல மரபுக்களை யுடையவ னெனின் மற்றொரு முறையும் எடுத்துக் கொள்ளல் வேண்டும்.)

மந்திரமின்றி துருவாவிலிருந்து, சுருவத்தால் நெய்யை யெடுத்து சுருவி லுள்ள புரோடாசத்தின் மேல் விட்டு, நெய்ப் பாத்திரத்திலிருந்து சுருவத்தால் நெய் யெடுத்து 'आप्यायतां ध्रुवा घृतेन' என்பது முதலியவற்றால், துருவாவில் விட்டு, சுருவத்தை, பிரத்தரத்திலும் தருப்பையிலுந் துடைத்து, 'यदवदानानि तेऽवद्यन्' என்பது முதலியவற்றால், நெய்ப் பாத்திரத்திலிருந்து நெய்யை யெடுத்து அவிகளில் விட்டு, 'इन्द्राग्निभ्या मनुब्रूहि' என்று புரோநுவாக்கியத்தின் பொருட்டு ஹோதாவைத் தூண்டி விடல் வேண்டும்.

ஹோதா,

इन्द्राग्नी अवसाऽऽगतमस्मभ्यं । பிரா. 3-5-7-7

என்பது முதலியவற்றை ஓங்கார மீறாகக் கூறல் வேண்டும். வேட்போன், தெற்கே சென்று வடக்கு முகமாய் நின்று கொண்டு, 'आ३श्रा३वय' என்று ஆக் னீத்ரனை ஏவல் வேண்டும். ஆக்னீத்ரன், 'அஸ்து சுரௌஷட்' என்று முன் போலவே கூறல் வேண்டும். பிறகு வேட்போன், 'इन्द्राग्नी यज' என்று, யாகஞ் செய்தற் பொருட்டுள்ள யாஜ்யா வாக்கியத்தைக் கூறும்படி ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா,

ये यजामह इन्द्राग्नी वृत्रहणा । பிரா. 3-5-7-8.

என்பது முதலியவற்றை 'வௌஷட்' ஈறாகக் கூறி விட்டு, 'वागोजः सह' என்பது முதலியவற்றால் வஷட்காரத்தை மெதுவாகப் போற்றல் வேண்டும்.

வேட்போன், 'வௌஷட்' என்று ஹோதா கூறும்போது சுருக்கி லுள்ள நெய்யில் சிறிதளவு முன்னர்த் தீயில் ஒழுக விட்டு, தீயிலிடும் புரோடா சம் அப்படியே யிருக்க, சுருக்கை மற்றொரு புறமாகச் சாய்த்துக்கொண்டு, புரோடாசம் உடைந்து போகாமல் சுருக்கால் ஆகார ஹோமத்தின் மேல், உபாம்சு யாகத்திற்கருகில் ஹோமஞ் செய்து விட்டு மீந்த நெய்யையும் அதில் ஒழுக விடல் வேண்டும். வேள்வித்தலைவன், 'इन्द्राग्निभ्यां इदं न मम' என்று தியாகஞ் செய்து விட்டு,

इन्द्राग्नियोरहं । சங். கா-1, பிர-1, அநு-2.

என்பது முதலியவற்றால் இந்திராக்கினிகளின் பொருட்டு ஹோமஞ் செய்த புரோடாசத்தைப் போற்றல் வேண்டும்.

குறிப்பு:—ஆபஸ்தம்ப ஸூத்திரத்தைத் தழுவியவனுக்கு, சோமயாகம் பண்ணி யிருப்பினும் பண்ணுதிருப்பினும் உபாம்சு யாகம் இன்மையின் ஆக்னேயத்திற்குப் பின் இந்திரன் அக்கினி என்பவர்கட்கு யாகஞ் செய்தல் வேண்டும். சோமயாகம் பண்ணியவன், ஆக்னேயத்திற்குப் பிறகு மாஹேந்திர யாகமே செய்யற்பாலது என்பது உணரத்தக்கதாம்.

முக்கிய ஹோமங்கள் முடிந்தன.

## பார்வண ஹோமம்.

வேட்போன், எழுந்துவந்து தனது ஆசனத்தி லுட்கார்ந்து சுருவத்தால் நெய்ப் பாத்திரத்திலுள்ள நெய்யை எடுத்துக்கொண்டு,

**अमावास्या सुभगा सुशेवा ।** பிராமணம் 3–7–5–24

என்பது முதலிய மந்திரத்தை 'ஸ்வாஹா' என்பதை ஈறுகக் கொண்டு சொல்லி ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अमावास्याया इदं न मम' என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

குறிப்பு:—அமாவாசையில் சோமயாகம் பண்ணுதவனுக்கும் இதுவே பார்வண ஹோமமாம். பௌர்ணமியில் சோமயாகஞ் செய்தவனுக்கும் செய்யாதவனுக்கும்,

**ऋषभं वाजिनं वयं पूर्णमासं यजामहे ।** பிராமணம் 3–7–5–23.

என்பது முதலியவற்றுல் ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவனும், 'பூர்ணமாஸாய இதம் ந மம' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

## நாரிஷ்ட ஹோமம்.

வேட்போன், நெய்ப் பாத்திரத்திலிருந்து சுருவத்தால், ஆறுமுறை, அல்லது, ஏழுமுறை சுருவிலிருந்து நெய் யெடுத்துக்கொண்டு,

**दशते तनुवो यज्ञः ।** பிரா. 3-7-5-22.

என்பது முதலிய மந்திரத்தை, 'ஸ்வாஹா' என்பது ஈறுகப் படித்துக்கொண்டு ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'நாரிஷ்டாப்யாம் அக்கினி வாயுப்யாம் இதம் ந மம' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

இவ்வாறே வேட்போனும்,

यं वां देवाः, अहं देवानां, अदारसृद्भवत, ब्रह्म प्रतिष्ठा मनसः,
सं ते मनसा मनः । பிராமணம் 3-7-5-22.

என்பனவற்றைத் தொடக்கங்களிற் கொண்ட மந்திரங்களால் ஹோமங்களைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், முன்போன்று மூன்று தியாகங்களுடன், 'नारिष्टेभ्यः सोममरुद्भ्य इदं न मम' என்றும், 'नारिष्ठाय ब्रह्मण इदं न मम' என்று இருமுறையும், 'नारिष्ठायाग्नय इदं न मम' என்றும், 'नारिष्ठाय परमात्मन इदं न मम' என்றும், தியாகங்கள் செய்தல் வேண்டும்.

நாரிஷ்ட ஹோமங்கள் முடிந்தன.

---

## ஸ்விஷ்டகிருத் யாகம்.

வேட்போன், மந்திரமின்றி துருவாவில் சுருவத்தால் நெய்யை யெடுத்துச் சுருவில் விட்டுக்கொண்டு சுருவத்தால் நெய்ப் பாத்திரத்திலிருந்து நெய் யெடுத்து, 'आप्यायतां ध्रुवा घृतेन' என்பது முதலியவற்றால் துருவாவில் விட்டு விட்டு, சுருவத்தை பிரஸ்தாத்திலும் தருப்பையிலும் துடைத்தபின், எல்லாப் புரோடாசங்களின் வடக்குப் பாதிகளில், ஒவ்வொரு முறை பிரதான யாகத்திற்கு எடுத்தது போன்று மிகுதியா யெடுத்துச் சுருவில் போட்டுவிட்டு, ஐந்து குலமரபுடையா னெனின், இவ்வாறு இருமுறை எடுத்தலும் வேண்டும்.

வாய் பேசாமல் துருவாவிலிருந்து சுருவத்தால் நெய்யை யெடுத்துச் சுருவில் விட்டுக்கொண்டு, நெய்ப் பாத்திரத்திலிருந்து சுருவத்தால் நெய்யை யெடுத்து, 'आप्यायतां ध्रुवा घृतेन' என்பது முதலியவற்றால் துருவாவில் விட்டுக்கொண்டு, சுருவத்தைப் பிரஸ்தாத்திலும் தருப்பையிலும் துடைத்துவிட்டு, மற்றும், வாய் பேசாமலே, துருவாவிலுள்ள நெய்யை சுருவத்தால் எடுத்துச் சுருவில் விட்டுக்கொண்டு, 'अग्ने स्विष्टकृतेऽनुब्रूहि' என்று, புரோநுவாக்கியத்தைக் கூறும்படி ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா,

पिप्रीहि देवाँ उशतो । பிராமணம் 3-5-7-13

என்பது முதலிய புரோநுவாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

பிறகு, தெற்கே சென்று வடக்கு முகமாய் நின்றுகொண்டு, 'आश्रावय' என்று ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும். ஆக்னீத்ரன், 'அஸ்து ச்ரௌஷட்' என்று முன்போற் கூறல் வேண்டும்.

வேட்போன், 'अग्निं स्विष्टकृतं यज' என்று, வேள்வி செய்தற்குரிய (யாஜ்யா) வாக்கியத்தைக் கூறும்படி ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா,

ये यजामहेऽग्निं स्विष्टकृत । பிராமணம் 3-7-5-14

என்பது முதற்கொண்டு, 'धामान्ययाट्' என்பதீறுகிய மந்திரத்தை மெதுவாகவும், 'प्रिया धामान्ययाण्महेन्द्रस्य' என்பது முதற்கொண்டு, 'வௌஷட்' என்பது அந்தமாகிய மந்திரத்தை உரக்கவுஞ் சொல்லல் வேண்டும்; சொல்லிவிட்டு, 'वागोजः सह' என்பது முதலியவற்றுல் மெதுவாக வஷட்காரத்தைப் போற்றல் வேண்டும்.

மற்றும், 'ये यजामहे' என்று தொடங்கி, 'வௌஷட்' என்பது வரை மூச்சு விடாமற் சொல்லல் வேண்டும். மூச்சு விட்டுப் படிக்க விரும்பில், பாதி இருக்கு மந்திரத்தில் 'யஜ்வா' என்னுமிடத்து மூச்சு விட்டுக்கொண்டு ஓதல் வேண்டும். ஏனைய விடங்களில் மூச்சுவிடல் கூடாது.

குறிப்பு:—ஹோதா பௌர்ணமியில், விஷ்ணு, அக்கினி சோமர்கள், இந்திர வைமிருதர்கள் என்பவர்களைச் சேர்த்து மந்திரத்தை ஓதிக்கொள்ளல் வேண்டும்.

சோம யாகஞ் செய்யாதவன் அமாவாசையிலும் இந்திராக்கினிகளைச் சேர்த்து மந்திரத்தை ஓதல் வேண்டும்.

ஆபத்தம்பச் சூத்திரத்தைத் தழுவியவனுக்கு, சோமயாகஞ் செய்தவனுயிருப்பினுஞ் செய்யாதவனுயிருப்பினும், அமாவாசையில் உபாம்சுயாகம் இன்மையால், 'விஷ்ணோ: ப்ரியாதாமான்யயாட்' என்று, மெதுவாக தேவதையின் பெயரைக் கூறுதல் இல்லை.

வேட்போன், 'வௌஷட்' என்று ஹோதா கூறும்போது, சுருவிலுள்ள நெய்யில் சிறிது முன்னர் ஒழுகவிட்டு, தீயிலிட வேண்டிய அவி நழுகாவண்ணம் சுருக்கைப் பக்கத்தில் சாய்த்துக்கொண்டு, புரோடாசம் சிதறிவிடாமல் வேள்வித்தீயின் வடகிழக்கில் மற்றைய ஆகுதிகளுடன் சேராமல் ஹோமஞ் செய்தல் வேண்டும். செய்து மீந்த நெய்யையும் வேள்வித்தீயில் ஒழுக விடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्नये स्विष्टकृत इदं न मम' என்று தியாகஞ் செய்துவிட்டு,

अग्नेः स्विष्टकृतोऽहं । சங். கா-1, பிர-1, அநு-2.

என்பது முதலியவற்றால் ஸ்விஷ்டகிருத் ஹோமத்தைப் போற்றல் வேண்டும்.

வேட்போன் திரும்பிவந்து தனது ஆசனத்தில் உட்கார்ந்து சுருவில் நீரை எடுத்துக்கொண்டு, 'वैश्वानरे हविरिदं जुहोमि' என்பது முதலிய மந்திரத்தை, ஸ்வாஹா என்பதீருக ஓதி, அந்நீரை நடுவிறகின் மேற் கொட்டிவிட்டு அதனிடத்தில் சுருவையும் உபபிருதையும் வைத்துவிடல் வேண்டும்.

வேட்போன், 'अग्नये वैश्वानरायेदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். இது வேண்டற்பால தன்றென்பர் சிலர்.

ஸ்விஷ்டகிருத் யாகம் முற்றிற்று.

---

## பிராசித்திரத்தை அருந்தல்.

வேட்போன், 'பிராசித்திரம்' என்னும், அவியின் சேடத்தை யருந்தும் பிரமாவின் பாத்திரத்தில் நெய்யைச் சிறிது விட்டு, ஆக்னேய (அக்கினி தேவதையின்) புரோடாசத்தை, கிழக்காகவேனும், அல்லது, குறுக்காகவேனும் இரண்டாய் உடைத்து, கட்டை விரலாலும் நாலாம் விரலாலும் அதை எடுத்து,

आज्यायो यवमात्रा । பிராமணம் 3-7-5-13

என்பது முதலிய மந்திரத்தால் அக்கினி தேவதையின் புரோடாசத்தின் நடுவில், வால் கோதுமை யளவேனும், அல்லது திப்பிலி யளவேனும் பிராசித்ரத்தில் (உண்ணுகின்ற ஆவின் காது போன்ற பாத்திரத்தில்) போடல் வேண்டும். பிறகு, கையைக் கழுவிக்கொள்ளல் வேண்டும். பால் தயிர்கள் இப்பாத்திரத்தில் எடுப்பதில்லை யென்பதை யுணர்க. பௌர்ணமியில் கட்டை விரலாலும், நான்காம் விரலாலும் என்பது முதற் கொண்டு, கைகழுவுதல் ஈருகவுள்ள கருமத்தை, ஒவ்வொரு புரோடாசத்திற்கும் மறித்தும் மறித்துஞ் செய்தல் வேண்டும். அமாவாசையில் சோமயாகஞ் செய்யாதவனுக்கும் இவ் வண்ணமே யாமென்பதையு முணர்க.

வேள்வித்தலைவன், 'अग्निर्मादुरिष्टात्पातु सविता' என்பது முதலிய மந்திரத்தால் உண்ணும் பாத்திரத்தில் எடுத்துப் போட்ட புரோடாசத்தைப் போற்றல் வேண்டும். வேட்போன், அதில் நெய்த்துளியை விட்டேனும் விடாமலேனும், ஆகவனீயத் தீக்கு முன்னர் பிரமாவின் பொருட்டு அதை எடுத்துக் கொண்டு வரல் வேண்டும்.

பிராசித்திரம் அருந்தல்)

ஈண்டுக் குறிப்பு:—பிரமன், ஆபத்தம்ப சூத்திரத்தைத் தழுவியவனெனின், அதை, 'मित्रस्यत्वा चक्षुषा प्रेक्षे' என்று, உண்ணும் பாத்திரத்தில் எடுத்துள்ள புரோடாசத் துண்டைப் பார்ப்பதுடன், 'ऋतस्य पथा पर्येहि' என்று, ஆகவனீயத் தீய்க்கு முன்னர்க் கொண்டுவருவதையும், 'सूर्यस्य त्वा चक्षुषा प्रतिपश्यामि' என்று கொண்டு வந்ததையும் நோக்கி விட்டு, 'देवस्य त्वा सवितुः' என்பது முதலியவற்றால், இரு கையாலும் அதை எடுத்து, 'पृथिव्यास्त्वा नाभौ' என்பது முதலியவற்றால் அந்தர்வேதியிலுள்ள தருப்பையை ஒதுக்கிவிட்டு, அதில் அப்பாத்திரத்தின் கை பிடி கிழக்கிலிருக்கும்படியாக வைத்துவிட்டு, 'अदब्धेन त्वा चक्षुषाऽवेक्षे' என்று, அதை நோக்கி, 'देवस्य त्वा सवितुः' என்பது முதலியவற்றால், கட்டை விரலாலும், நான்காம் விரலாலும் அப் புரோடாசத் துண்டை எடுத்து, பற்களால் கடிக்காமல் வாயிற் போட்டு, 'या अप्स्वन्तर्देवताः' என்பது முதலியவற்றால், தண்ணீரை விட்டு விழுங்கி விட்டு ஆசமனம் பண்ணிக் கொண்டு, 'घसीना मे मा संपृक्था' என்பது முதலியவற்றைக் கூறி நாபியைத் தொட்டு, वाङ् मे आसन्' என்று முகத்தையும், 'नसोः प्राणः' என்று மூக்கையும், अक्ष्योश्चक्षुः' என்று கண்ணேயும், 'कर्णयोः श्रोत्रं' என்று காதையும், 'बाह्वोर्बलं' என்று தோளேயும், ऊरुवो रोजः' என்று தொடையையும், 'अरिष्टा विश्वान्यङ्गानि तनूः' என்று, மீந்த அவயவங்களேயுந் தொட்டுவிட்டுத் தண்ணீரைத் தொட்டுத் துடைத்துக் கொண்டு, பிராசித்ரம் என்னும் உண்ணும் பாத்திரத்தைக் கழுவி அதில் நீரை நிறைத்து, 'दिशो जिन्व' என்று, கிழக்கில் ஒரே முறையாக அந் நீரைக் கொட்டி விட்டு, 'मां जिन्व' என்று, மீண்டும் நீரை யெடுத்து இருதயத்திற்கு நோக்கிக் கொட்டல் வேண்டும்.

ஆசுவலாயன சூத்திரத்தைத் தழுவிய பிரமனெனின், 'मित्रस्य त्वा चक्षुषा प्रेक्षे' என்பதால், கொண்டு வந்த புரோடாசத் துண்டை நோக்கி, 'देवस्य त्वा सवितुः' என்பது முதலியவற்றால் அதை இரு கையாலும் எடுத்து, 'पृथिव्यास्त्वा नाभौ' என்பது முதலியவற்றால் அந்தர்வேதியில் தருப்பையின் மீது அதன் கை பிடி கிழக்காக அப் பாத்திரத்தை வைத்து விட்டு, கட்டை விரலாலும் நான்காம் விரலாலும் புரோடாசத் துண்டை யெடுத்து, 'अग्नेष्ट्वाऽऽस्येनाश्नामि बृहस्पतेर्मुखेन' என்பதால் பல்லாற் கடிக்காமல் வாயிற் போட்டு விழுங்கி விட்டு ஆசமனஞ் செய்துகொண்டு, 'सत्येन त्वाऽभिजि घर्मि' என்பது முதலியவற்றால் நீரருந்தி ஆசமனம் பண்ணிக்கொண்டு, 'इन्द्रस्य त्वा' என்பது முதலியவற்றால் நாபியைத் தொட்டுவிட்டு, பிராசித்திர மென்னும் அப் பாத்திரத்தைக் கழுவி, அதையும் கையையும் தனக்கு நோக்கிக்கொண்டு, தனக்கு முன்பாக அதனல், மும்முறை நீரை விடல் வேண்டும் என்பதாம்.

பிராசித்திரம் அருந்தல் முற்றிற்று.

## இடா பட்சணம்.

வேட்போன், 'இடா' என்னும் ஒரு மரத் தட்டில் நெய்யைச் சிதறி,

**मनुना दृष्टां घृतपदीं ।** பிராமணம் 3-7-5-14

என்பது முதலியவற்றால், அக்கினி தேவதையின் புரோடாசத்தினுடைய தென்பாதியில் முதலாவது பாகத்தை யெடுத்து, 'இடா' என்னும் பாத்திரத்தில் வைத்துவிட்டு, முன்னெடுத்த இரண்டின் நடுவில், இரண்டாம் முறையும் எடுத்து அப் பாத்திரத்தில் வைத்துவிட்டு, ஐங்கு மரபுக்களை யுடையானெனின் மேல் பாதியில் மூன்றாம்முறையும் எடுத்துக் கொள்ளல் வேண்டும். கிழக்குப் பாதியில் வேள்வித்தலைவன் பொருட்டு எடுத்துக்கொண்டுக் கையைக் கழுவி விட்டு,

'मनुना दृष्टां घृतपदीं' என்பது முதலியவற்றால் காலைப் பாலின் தென் பாதியில் முதலாவது சுருவத்தால் எடுத்து, 'இடா' என்னும் பாத்திரத்தில் விட்டு, முன்னெடுத்த இரண்டிடங்கட்கும் நடுவில் இரண்டாம் முறையு மெடுத்து இடா என்பதில் விட்டு, ஐந்து குல மரபுடையானெனின், மேற்பாதியில் மூன்றாம் முறையும் எடுத்தல் வேண்டும். பௌர்ணமியில், 'மநுநா' என்பது முதலிய மந்திரத்தை ஒவ்வொரு புரோடாசத்திற்கும் மீண்டும் மீண்டும் படித்தல் வேண்டும். சோமயாகம் பண்ணுதவன், இந்திரன் அக்கினி என்பவர்களின் புரோடாசங்கட்கு, 'மநுநா' என்பது முதலிய செயல் செய்யற்பாலது. பௌர்ணமியில் எல்லாப் புரோடாசங்களிலும் வேள்வித்தலைவன் பாகம் எடுக்கற்பாலது.

கிழக்குப் பாதியில் வேள்வித்தலைவனுடைய பாகத்தை, வேறு பாத்திரத்தில் எடுத்து இடாவில் விடுக. அவ்வண்ணமே தயிரிலும் எடுத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'सुरूपवर्षवर्ण एहीमान्' என்பது முதலியவற்றால், எடுத்த புரோடாச பாகங்களைப் போற்றல் வேண்டும்.

வேட்போன், எடுத்த வேள்வித்தலைவன் பாகமாகிய புரோடாசத் துண்டைச் சிறிது நீளமாக்கி, நிறைய நெய்யைச் சிதறி துருவாவிற்கு அருகில் வைத்து விடல் வேண்டும்.

அங்ஙனமே, பால் தயிர்களிலும், வேள்வித்தலைவன் பாகத்தை முழுதையும் நெய்யால் நனைத்துத் துருவாவிற்கு அருகில் வைத்துவிட்டு, 'இடா' என்னும் பாத்திரத்திற் சிறிது நெய்யைச் சிந்தி, ஹோதாவின் கையிற் கொடுத்து விட்டு, அதை விடாமலே பிறகு தெற்காக வந்து, ஹோதாவிற்குத் தென்புறத்தில் உட்கார்ந்துகொண்டு வடக்கு முகமாய் ஹோதாவின் கட்டை விரல் பெரு விரல்களின் முதற்கணுவில் நெய்த் துளியை விடல்வேண்டும். அல்லது, வேட்போன், ஹோதாவினிடத்தில் இடா என்னும் பாத்திரத்தைக் கொடுக்காமல்,

(இடா பட்சணம்)

கிழக்கில் இடாவை நகர்த்திவிட்டு, தான் மேற்கிற் சென்று ஹோதாவிற்குத் தெற்கில் வடக்கு முகமாய் உட்கார்ந்துகொண்டு சுருவத்தால் ஹோதாவின் விரல்களில் முன்போல் நெய்யைச் சிந்தல் வேண்டும்.

வேட்போன், 'वाचस्पतिना ते हुतस्येषे' என்பது முதலியவற்றால், மேல் விரலின் கணுவிலுள்ள நெய்யை மேலுதட்டிலும், 'मनस्पतिना ते' என்பது முதலியவற்றால் கையைத் தனக்கு நோக்கி, கீழ்விரற் கணுவிலுள்ள நெய்யைக் கீழுதட்டிலுந் துடைத்துக்கொண்டு, நீரைத் தொட்டுக் கையைத் துடைத்து விட்டு இரண்டு கையாலும், இடா, என்னும் பாத்திரத்தை யெடுத்து இடது கையிற் பிடித்துக்கொண்டு, பெரு விரலை மடித்து இடாவின் இடையில் வேட்போனுக் கெதிராக கையை நீட்டல் வேண்டும்.

வேட்போன், ஹோதாவிற்கு எதிரில் மேற்கு முகமாய் வந்து உட்கார்ந்து கொண்டு, நீரைத் தொட்டுத் துடைத்துள்ள ஹோதாவின் கையில் இடாவிலுள்ள புரோடாசத்திற் சிறிது வைத்து விட்டு அவாந்தர புரோடாசத் துண்டையும் அதில் எடுத்து வைத்தல் வேண்டும்.

ஹோதா, பெரு விரல், கட்டை விரல்களின் இடையில் தனது புரோடாசத் துண்டை இடுக்கிப் பிடித்துக் கொள்ளல் வேண்டும்.

வேட்போன், இடா என்னும் பாத்திரத்திலுள்ள புரோடாசத்தில் அதில் சிறிது வைத்தல் வேண்டும். ஐந்து குல மரபானெனின், இருமுறை புரோடாசத் துண்டை அதில் வைத்தல் வேண்டும்.

ஹோதா, மடித்துள்ள விரல்களால் அதை இடுக்கிப் பிடித்து எடுத்து விரல்களை மடக்காமல் தெற்கில் இடாவை முக அளவோடாவது, அல்லது, பிராணக்கு நேராகவேனும் புரோடாசத் துண்டைக் கொண்டு போய், அதாவது, புரோடாசத் துண்டைப் பிடித்துள்ள வலது கையால், அவாந்தர புரோடாசத் துண்டிற்கும் தெற்கில் இடா பாத்திரத்தைப் பிடித்துக்கொண்டு, 'इळोपहूता सह दिवा' என்பது முதலிய மந்திரங்களால் மெதுவாகவும், 'इळोपहूतोपहूतेळोपास्मां' என்பது முதலிய மந்திரத்தால் உரக்கவும் புரோடாசத் துண்டைப் போற்றல் வேண்டும்.

வேள்வித்தலைவனும் வேட்போனும், போற்றிய இடாவை மற்றொரு முறை தொடல் வேண்டும்.

வேட்போன், 'दैव्या अध्वर्यव उपहूता' என்னும் ஹோதாவின் வாக்கியத்தாலுணர்ந்துகொண்டு, 'उपहूत: पशुमानसानि' என்று செபித்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'भूयस्येहि श्रेयस्येहि' என்பது முதலியவற்றால் இடாவை மெல்லப் போற்றி விட்டு, 'चिदसि, मनसि, धीरसि' என்பது முதலியவற்றால்,

போற்றிய இடாவின்பொருட்டு உரக்கச் செபஞ் செய்துகொண்டு, 'वायविडा ते माता ' என்று, ஹோதாவைப் பார்த்துக்கொண்டு, வாயுவை மனதால் நினைத்து இவ் வேள்வித்தலைவன் போற்றினன் என்று, ஹோதாவின் வாக்காலுணர்ந்தவனாய், 'उपहूतः पशुमानसानि' என்பது முதலியவற்றைச் செபித்துக்கொண்டு, 'इडाया अहं देवयज्यया पशुमान् भूयासं ' என்று, வணங்கிய புரோடாசத் துண்டைப் போற்றுவதுடன், 'इडा धेनुः सह वत्सा न आगादूर्जं ' என்பது முதலியவற்றால் அருந்துதற்கெடுத்த புரோடாசத் துண்டையும் போற்றிவிட்டு, வேள்வித்தலைவனை ஐந்தாமவனாகக் கொண்டவர்கள், அதாவது, பிரமன் வேட்போன், ஆக்னீத்ரன், ஹோதா, வேள்வித்தலைவன் என்பவர்கள் தத்தமது பாகத்தை அருந்துதற்பொருட்டுக் கையில் எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

பின்னர், ஹோதா, 'इले भागं जुषस्व नः पिन्वगा ' என்று தொடங்கி, 'सर्वं पूरुषाः ' என்று முடித்துக் கூறி, அல்லது, 'सर्वं पुरुषाः ' என்று முடித்துக் கூறி, அவாந்தர புரோடாசத் துண்டை அருந்தி விட்டு, ஆசமனம் பண்ணிக்கொண்டு மந்திரமோதாமல், அருந்துதற் பொருட்டு எடுத்த புரோடாச பாகத்தையும் அருந்திவிட்டு ஆசமனம் பண்ணிக்கொண்டு கை கழுவும்வரை ஒன்றும் பேசாதிருத்தல் வேண்டும்.

பிரமன், ஒன்றும் பேசாமல் புரோடாச பாகத்தை அருந்திவிட்டு ஆசமனம் பண்ணிக்கொண்டு, கையலம்பும் வரை பிறகும் ஒன்றும் பேசாதிருத்தல் வேண்டும்.

ஆபஸ்தம்ப சூத்திரத்தைத் தழுவிய பிரமன்,

इडे भागं जुषस्व नो जिन्वगा । பிராமணம் 3-7-5-15

என்பது முதலியவற்றால் தனது பாகத்தை அருந்தல் வேண்டும். ஏனையவைகள் சமானங்கள்.

வேட்போன், வேள்வித்தலைவன், ஆக்னீத்ரன் மூவரும், 'इडे भागं जुषस्व नो जिन्वगा ' என்பது முதலியவற்றால் இடாவிலிருந்து தத்தமது புரோடாச பாகத்தை யருந்தி விட்டு ஆசமனம் பண்ணிக் கொண்டு, கை சுத்தி செய்யும் வரை ஒன்றும் பேசாதிருத்தல் வேண்டும். ஈண்டு ஒவ்வொருவரும் மந்திரத்தை மீண்டும் மீண்டும் ஓதிக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, வேட்போன், வேள்வித்தலைவன், ஆக்னீத்ரன் என்பவர்கள்,

मनोज्योतिर्जुषतामाज्यं विच्छिन्नं । பிராமணம் 3-7-6-26.

என்பது முதலிய மந்திரத்தை ஓதி, அந்தர்வேதியிலுள்ள பிரஸ்தாம் என்னும் தருப்பையின்மீது கையைக் கழுவுதல் வேண்டும். அதாவது, அந்தர்வேதியிலுள்ள பிரஸ்தாத் தருப்பையின்மீது நீரைத் தெளித்து அதன் கீழிலிருந்து

கையால் நீரை யெடுத்துத் தலையின்மீது தெளித்துக் கொள்ளுதலாம். ஒவ்வொருவரும் மந்திரத்தை மீண்டும் மீண்டும் படித்தல் வேண்டும்.

ஹோதாவும் பிரமனும், ஆகவனீயத் தீக்கருகில் விரித்துள்ள தருப்பைகளிடத்து நீர் நிற்குமாறு கையை ஏந்தி வேறு யாதானுமோர் செய்கையால் நீரைத் தலையின்மீது தெளித்துக்கொள்ளல் வேண்டும்.

ஆபஸ்தம்ப சூத்திரத்தைத் தழுவிய பிரமன், 'मनोज्योतिर्जुषतां' என்பது முதலிய மந்திரத்தால், அந்தர்வேதியிலுள்ள பிரஸ்தரத் தருப்பையின்மீது மேற்கூறியவாறே கை கழுவுதல் வேண்டும்.

இடா பட்சணம் முற்றிற்று.

---

## அக்கினியின் புரோடாசத்தை யருந்தல்.

வேட்போன், அக்கினியின் புரோடாசத்தை நான்கு பங்காக்கித் தருப்பையின்மீது வைத்தல் வேண்டும். அல்லது, தருப்பையின்மீது வைத்து நான்கு கூறுக்கல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

**ब्रह्म पिन्वस्व ददतो मे ।** பிரா. 3-7-5-16, 18

என்பது முதலிய மந்திரத்தால், நான்கு கூறுகத் தருப்பையின் மீதுள்ள புரோடாசத் துண்டுகளைத் தொட்டு, 'ஆஶானாம் த்வாऽஶாபாலேப்ய:' என்பது முதலிய மந்திரத்தால், ஒருமுறை நான்கு திக்கிலும் அவற்றை நகர்த்தி வைத்துவிட்டு, இது பிரமனுக்கு, இது ஹோதாவிற்கு, இது வேட்போனுக்கு, இது ஆக்னீத்ரனுக்கு என்று ஒவ்வொரு பெயரையுஞ் சொல்லுவதுடன்,

**उपहूतो द्यौः पितोपमां द्यौः ।** பிராமணம் 3-7-6-25

என்பது முதலிய மந்திரத்தைக் கூறி ஆக்னீத்ரனுடைய பாகத்தை மீண்டுஞ் சிறிது நகர்த்தல் வேண்டும்.

வேட்போன், 'இது வேள்வித்தலைவனுக்கு' என்று, முன்னெடுத்துள்ள வேள்வித் தலைவனுடைய புரோடாச பாகத்தைச் சிறிது நகர்த்திவிட்டு, யாதேனு மொரு பாத்திரத்தில் ஒரு துளி நெய் சிதறி ஆக்னீத்ரனுடைய பாகத்தை இரண்டாக்கி ஒரு பாகத்தைப் பாத்திரத்தில் வைத்துவிட்டு மீண்டும் ஒரு துளி நெய்யைச் சிதறி இரண்டாம் பாகத்தையும் அதில் வைத்துவிட்டு இருமுறை நெய் சிதறி அப் பாத்திரத்தை ஆக்னீத்ரனிடத்திற் கொடுத்துவிடல் வேண்டும்.

அல்லது, யாதானு மொரு பாத்திரத்தில் இருமுறை நெய் சிதறி அதில் இரண்டு புரோடாசத் துண்டுகளையும் வைத்து, அதன்மேல் இருமுறை நெய்யைச் சிதறி ஆக்னீத்ரனிடத்திற் கொடுத்தல் வேண்டும். ஆக்னீத்ரன்பாகத்தைக் கையால் எடுத்துக் கொடுத்தல் வேண்டுமென்பர் சிலர். அது பொருத்தமற்றதென்க.

ஆக்னீத்ரன், வேள்விச்சாலைக்கு வெளியிற் போய் பாத்திரத்திலிருக்கின்ற தனது பாகத்தை எடுத்து, 'अग्नेराग्नीध्रमस्यग्नेः' என்பது முதலிய மந்திரத்தால் அதை யருந்திவிட்டு ஆசமனஞ் செய்து கொள்ளல் வேண்டும்.

முறையாய் தமது ஆசனத்தின்மீது உட்கார்ந்திருக்கின்ற பிரமன், வேள்வித்தலைவன் என்னு மிருவருக்கும் அவர்களுடைய பாகங்களை வேட்போன், வேதம் என்னும் தருப்பை முடிச்சாற் பிடித்து எடுத்துக் கொடுத்தல் வேண்டும்.

பிரமன் கொடுத்த தனது பாகத்தை, 'பிராசித்திர ஹரணம்' என்னும் ஆவின் காதுபோன்ற பாத்திரத்தில் போட்டுக்கொள்ளல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'பிராசித்திர ஹரணம்' என்னும் பாத்திரத்திற்குப் பின்னால் தருப்பைகளில் தனது பாகத்தை வைத்தல் வேண்டும்.

இந்த நியமம் ஆபஸ்தம்ப சூத்திரத்தைத் தழுவிய வேள்வித்தலைவனுக்கு இல்லை. எங்கு வைத்தபோதிலும் குற்றம் இல்லை.

வேட்போன், ஹோதாவின் பாகத்தை சுருவத்தா லெடுத்து ஹோதாவினிடத்திற் கொடுத்தல் வேண்டும். அங்ஙனமே தனது பாகத்தையுஞ் சுருவினால் தான் எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

ஹோதா, ஒன்றும் பேசாமல் அதை அருந்திவிட்டு ஆசமனஞ் செய்து கொள்ளல் வேண்டும்.

வேட்போன், 'அந்தரிட்சத்தின் பாகமா யிருக்கின்றாய்' என்று, தனது பாகத்தை யருந்திவிட்டு ஆசமனஞ் செய்துகொள்ளல் வேண்டும்.

அக்கினியின் புரோடாச பட்சணம் முற்றிற்று.



## அன்வாஹார்ய மென்னுந் தக்ஷிணை யுணவு.

வேள்வியாளர்களுக்குப் போதுமானதும், அளக்காததுமாகிய அன்வாஹார்யம் என்னும் பெயர்பூண்ட சோற்றை தக்ஷிணத் தீயில், சமைத்தல் வேண்டும். பாற்பொங்க லென்பர் சிலர்.

பிரமன், தட்சிணத் தீயில் பொங்கிய சாதத்திற்கருகிற் சென்று, 'प्रजापते-र्भागोऽस्यूर्जस्वान्' என்பது முதலிய மந்திரத்தால், சமைத்த அவ் வன்னத்தை

நோக்கி, 'प्राणापानौ मे पाहि' என்று, அதைத் தொடாது மணம் பார்த்து, கட்டை விரலாலும் நான்காம் விரலாலும் பதம் பார்த்து ஒரு சோறெடுத்துப் பிராசித்திரஹரண மென்னும் தனது பாகமுள்ள பாத்திரத்திற் போட்டுக் கொள்ளல் வேண்டும்.

வேட்போன், அவ் வன்னத்திற் சிறிது நெய்யை விட்டேனும், விடாம லேனும் இறக்கி அந்தர்வேதியில் வைத்தல் வேண்டும்.

ஆபஸ்தம்ப சூத்திரத்தைத் தழுவிய பிரமனெனின், 'ब्रह्मन् ब्रह्मासि ब्रह्मणे त्वा' என்பது முதலிய மந்திரத்தால் அந்தர்வேதியில் வைத்துள்ள அவ்வன்னத் தைத் தொடல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

ब्रह्म पिन्वस्व ददतो मे मा । சங். கா-1, பிர-6, அநு-3.

என்பது முதலியவற்றால், வைத்த அவ் வன்னத்தைத் தொட்டுப் போற் றல் வேண்டும்.

வேட்போன், 'दक्षिण सद्य उपहर्तवै' என்று வேள்வித்தலைவனைத் தூண் டல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'दक्षिणत एतद्ब्राह्मणा अयं वा ओदनः' என்று அவர்களுக்கு அன்வாஹார்யம் என்னும் அன்னத்தைத் தட்சிணையாக அளித்தல் வேண்டும்.

வேள்வியாளர்கள், அன்னமாகிய தட்சிணையைக் கொள்ளுங்கால் பிராண வாயுவை உள்ளிழுத்தலாகிய நிச்சுவாசங்களைப் பதினேழுமுறை செய்தல் வேண்டும்.

வேட்போனும், ஆக்னீத்ரனும், 'देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनो बाहुभ्यां' என் பது முதலியவற்றால் அன்வாஹார்ய மென்னும் அன்னத்தைப் பெற்றுக் கொண்டு உண்ணல் வேண்டும்.

ஹோதாவும் பிரமனும், 'क इदं कस्मा अदात्कामः' என்பது முதலிய மந்திரத் தால் அன்வாஹார்யம் என்னும் அன்னத்தைப் பெற்றுக்கொண்டு உண்ணல் வேண்டு மென்பதாம்.

ஆபஸ்தம்ப சூத்திரத்தைத் தழுவிய பிரமனும், 'देवस्य त्वा सवितुः' என்பதை முதலாகவும், 'गृह्णातु' என்பதை முடிவாகவுமுடைய மந்திரத்தை ஓதிவிட்டு அவ்வன்னத்தைப் பெற்றுக் கொண்டு உண்ணல் வேண்டு மென்பதாம்.

வேள்வித்தலைவன் 'उत्तरतः परीत' என்று, அதாவது தெற்கில் நிற்கின்ற வேள்வியாளர்களை, உங்களுடைய பாகங்களை எடுத்துக் கொண்டு வடக்கே

செல்வீர்களாக, என்று ஏவல் வேண்டும். எல்லோரும் அவ்வண்ணமே செயல் வேண்டும்.

பிறகு, வேட்போன், மீந்துள்ள ஏனைய அவிகளையும் அதிலிருந்து எடுத்து விடல் வேண்டும்.

அன்வாஹார்யம் முற்றிற்று.

---

## அநுயாஜம்.

பின்னர், வேட்போன், 'ब्रह्मन् प्रस्थास्यामः समिधमाधाय' என்பது முதலிய மந்திரத்தால் பிரமனையும் ஆக்னீத்ரனையும் ஏவல் வேண்டும். பிரமன், 'बृहस्पतिर्ब्रह्मा ब्रह्मसदन्' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்து, 'ओं प्रतिष्ठ' என்று கூறல் வேண்டும்.

ஆபஸ்தம்ப சூத்திரத்தைத் தழுவிய பிரமனெனின்? 'देवसवितरेतत्ते प्राह' என்பது முதலிய மந்திரத்தை மெதுவாகக் கூறிவிட்டு, 'ஓம் பிரதிஷ்ட' என்று உரக்கக் கூறி ஆணை கொடுத்தல் வேண்டும்.

ஆக்னீத்ரன், பிரமனுடைய ஆணையைப் பெற்றுக்கொண்டு, 'एषाते अग्ने समित्तया' என்பது முதலிய மந்திரத்தை, ஸ்வாஹா என்பது ஈறுகக் கூறி, அநுயாச யாகத்தின் பொருட்டு முன்னர் வைத்திருந்த ஒரு சமித்தைத் தீயில் வைத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'एषाते अग्ने समित्तया वर्धस्व' என்பது முதலிய மந்திரத்தால் தீயிலிட்ட சமித்தைப் போற்றி, 'அக்கினய இதம் ந மம' என்று தியாகஞ் செய்து விட்டு, 'यं ते अग्न आवृश्चाम्यहं' என்பது முதலிய மந்திரத்தால் அத்தீயைப்போற்றல் வேண்டும்.

ஆக்னீத்ரன், முன்னர் விறகுகளைத் துடைத்தது போன்று, ஒவ்வொரு முறை சமித்துக்களைக் கட்டியிருந்த தருப்பைகளாற் றுடைத்து விட்டு, 'अग्ने वाजजिद्वाजंत्वा' என்பது முதலியவற்றால் மற்றும் ஒரு முறை அக்கினியின் கீழ்ப்புறத்தைத் துடைத்தல் வேண்டும்.

வேட்போன், விறகு கட்டியிருந்த தருப்பைகளை அவிழ்த்துக்கொண்டு அதில் நீர் தெளித்து, 'योभूताना मधिपती रुद्रः' என்பது முதலியவற்றை, ஸ்வாஹா, என்பதீறுகக் கூறி, அத் தருப்பைகளை அவ்வேள்வித் தீயிற் போட்டு விட்டு நீரைத் தொட்டுக் கொள்ளல் வேண்டும். வேள்வித்தலைவன், 'भूताना-मधिपतये रुद्राय' என்பது முதலியவற்றால் தியாகஞ் செய்து விட்டு 'वेदिर्बर्हिः'

அநுயாஜம்)

என்றற்ருெடக்கத்து மந்திரத்தால் அதைப் போற்றிக்கொண்டு சப்த ஹோதார மென்னு மந்திரத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், உபபிருதிலுள்ள நெய்யைச் சுருவில் விட்டு சுருவையும் உபபிருதையும் எடுத்துக் கொண்டு ஒரே முறையாகத் தெற்கில் சென்று வடக்கு முகமாய் நின்று கொண்டு, 'आश्रावय' என்று ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும். ஆக்னீத்ரன், 'அஸ்து சுரௌஷட்' என்று மறுமொழி கூறல் வேண்டும். வேட்போன் 'देवान् यज' என்று ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'देवं बर्हिर्वसुवने वसुधे यस्य वेतू३वौ३षट्' என்று வஷட்காரங் கூறி 'वागोजः सह' என்பது முதலியவற்ருல் அவ் வஷட்காரத்தைப் போற்றல் வேண்டும்.

வேட்போன், 'வௌஷட்' என்று ஹோதாவானவன் கூறும் போது, ஆகார ஹோமத்தின் நெய்த்தாரைகள் கூடியதன் கீழ்ப் புறத்திலுள்ள சமித்தின் மேல் கீழ்ப்புறமாய் அநுயாஜ மென்னும் நெய் ஆகுதியைச் செய்தல் வேண்டும். வேள்வித்தலைவன், 'அக்னய இதம் ந மம' என்று, தியாகஞ் செய்து விட்டு,

बर्हिषोहं देवयज्यया । சங். கா-1, பிர-6, அநு-4.

என்பது முதலியவற்ருல் நெய்யால் ஆகுதி செய்த அநுயாஜத்தைப் போற்றல் வேண்டும்.

ஈண்டு, இதற்கு யாஜ்யாநு வாக்கியங்கள் இருப்பினும் 'யே யஜாமஹே' என்னும் வாக்கியத்தைக் கூறல் இல்லை யென்க. இவ்வாறே அநுயாஜ மனைத்துமா மென்றுணர்க.

முன் போன்றே வேட்போன் ஆக்னீத்ரனைத் தூண்ட, அவனும் 'அஸ்து சுரௌஷட்' என்றவுடன், ஹோதாவை வேட்போன் ஏவிய பிறகு, ஹோதா, 'देवो नराशंसो वसुवने वसुधे यस्य वे३तू वौ३षट्' என்று வஷட்காரத்தைக் கூறியபின் 'वागोजः सह ओजः' என்பது முதலியவற்ருல் வஷட்காரத்தை மெல்லப் போற்றல் வேண்டும்.

வேட்போன் முன் போன்றே ஹோதா 'வௌஷட்' என்றதும் இரண்டாம் அநுயாஜத்தையும் ஆகார ஹோமத்தின் நெய்த்தாரைகள் சேர்ந்ததற்குக் கிழக்கில் சமித்தின்மேல் முன் செய்த அநுயாஜ ஹோமத்திற்கு மேற்கில் ஆகுதி செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'அக்னய இதம் ந மம' என்று தியாகஞ் செய்து விட்டு,

नराशꣳ सस्याहं । சங். கா-1, பிர-6, அநு-4.

என்பது முதலியவற்றால் செய்த அநுயாஜத்தைப் போற்றல் வேண்டும்.

முன்போல் வேட்போன், ஆக்னீத்ரனை ஏவ ஆக்னீத்ரன், 'அஸ்து ச்ரௌஷட்' என்று கூறிய பின்னர், வேட்போன், யஜ என்று ஹோதாவை ஏவிய பிறகு, ஹோதா, 'देवो अग्निः स्विष्टकृत्सु द्रविणा' என்பது முதலிய மந்திரத்தை, வௌஷட் என்பதீறாகக் கூறி, 'वागोजः सह ओजः' என்பது முதலியவற்றால் வஷட்காரத்தை மெல்லப் போற்றல் வேண்டும்.

ஈண்டு, 'देवो अग्निः' என்பது முதலிய மந்திரத்தை, 'अमत्सत' என்னுமிடத்தில் நிறுத்தியும் ஓதலாம்; நிறுத்தாமலும் ஓதலாம் என்பதையுங் காண்க.

வேட்போன், 'வௌஷட்' என்று ஹோதாவானவன் கூறும்போது இரண்டாம் அநுயாஜத்திற்கு மேற்கில், அதாவது வேள்வித்தீயின் கீழ்ப்புறத்தில் வைத்த சமித்தின் மேல்புறக் கடைசியில் மூன்றும் அநுயாஜத்தை (நெய் ஹோமத்தை)த் தொடங்கி, அதற்குக் கிழக்கிலுள்ள இரண்டு அநுயாஜ ஹோமங்களுடன் ஒரே தாரையாகக் கிழக்குவரை நெய்யை விடல் வேண்டும் என்பதாம்.

வேள்வித்தலைவன், 'அக்னய இதம் ந மம' என்று, தியாகஞ் செய்துவிட்டு,

अग्नेः स्विष्टकृतोहं । சங். கா-1, பிர-6, அநு-4.

என்பது முதலியவற்றால் போற்றல் வேண்டும்.

பிறகு, வேட்போன், வடக்கில் தாண்டிவந்து சுருக்குகளை அவைகளுடைய இடத்தில் வைத்து விடல் வேண்டும்.

அநுயாஜம் முடிந்தது.

---

## பதின்மூன்றும் அநுவாகம்.

---

விடயச் சுருக்கம்.

वाजद्वाभ्यां स्रुचोर्व्यूहो वस्वञ्ज्यात्परिधीं स्त्रिभिः ।
अक्तमाप्या त्रिभिः स्रुक्षु प्रस्तराग्रादिकाञ्जनम् ॥ १ ॥
मरु प्रस्तर होमोऽयमायुरग्न्यभिमन्त्रणम् ।
ध्रुवा भूमिं स्पृशेचं प मध्यस्य परिधेर्हुतिः ॥ २ ॥

கை மாற்றல்)

यज्ञान्ययोर्द्वयोर्होमः संस्राव स्रावकाहुतिः ।
अग्नेः स्रुचौ सादयित्वा धुरि ते प्रोहयेत्स्रुचौ ॥ ३ ॥

अग्ने फलीकृते होमो देवा इष्ट यजुर्हुतिः ।
वाचि बर्हिर्हुतिर्वाते सर्वं होमोऽत्र विंशतिः ॥ ४ ॥

சுகு, உபபிருத் என்னும் இரண்டு அகப்பை விசேடங்களை, தருப்பை முடிச்சிலிருந்து எடுத்து விடல், மூன்று பரிதி (விறகு) களையும் நெய்யால் நனையச்செய்தல், தருப்பை முடிச்சின் நுனியைச் சுகுவிலும், நடுவை உபபிருதிலும், அடியைத் துருவாவிலும் நனைத்து ஓமஞ் செய்தல், ஆகவனீயத் தீயைப் போற்றல், வேதிகைப் பூமியைத் தொடுதல், விறகை ஓமஞ் செய்தல், சுகுவில் உபபிருதின் நுனியை வைத்து 'சம்சிராவ' ஓமஞ் செய்தல், வண்டியின் கடைகளில் இரண்டு சுருக்குக்களையும் புகுத்தல், தக்ஷிணாக்கினியில் தவிட்டை ஓமஞ் செய்தல், வேதிகையில் விரித்திருந்த தருப்பைகளையும், துருவாவிலிருந்த நெய்யையும் ஆகவனீயத்தில் ஓமஞ் செய்தல், (சமிஷ்ட யசுர் ஹோமம்) என்பது.

---

## முதற் காண்டம் - முதற் பிரபாடகம்.
## பதின்மூன்றும் அநுவாகம்.

இது, இரண்டு பஞ்சாதிக்குமேல், பதின்மூன்று பதங்களைக் கொண்டது.

---

வேட்போன், சுருக்குக்களைக் கைமாற்றுதல் முதலானவற்றைக் கூறும் மந்திரங்கள்.

वाजस्य मा प्रसवेनोद्ग्राभेणोदग्रभीत् । अथा सपत्नाꣳ इन्द्रो मे निग्राभेणाधराꣳ अकः । उद्ग्राभं च निग्राभं च ब्रह्म देवा अवीवृधन् । अथा सपत्नानिन्द्राग्नी मे विषूचीनान्व्यस्यताम् । वसुभ्यस्त्वा रुद्रेभ्यस्त्वाऽऽदित्येभ्यस्त्वाऽक्तꣳ रिहाणा वियन्तु वयः । प्रजां योनिं मा निर्मृक्षमा प्यायन्तामाप ओषधयो मरुतां पृषतयः स्थ दिवम् (१) गच्छ ततो नो वृष्टिमेरय । आयुष्पा अग्नेऽस्यायुर्मे पाहि चक्षुष्पा अग्नेऽसि चक्षुर्मे पाहि ध्रुवाऽसि यं परिधिं पर्यधत्था अग्नेदेव पणिभिर्वीयमाणः । तं त एतमनुजोषं

भरामि नेदेष त्वदपचेतयातै यज्ञस्य पाथ उपसमितꣳ सꣳस्राव भागाः स्थेषा बृहन्तः प्रस्तरेष्ठा बर्हिषदश्च (२) देवा इमां वाचमभि विश्वे गृणन्त आसद्यास्मिन्बर्हिषि मादयध्वमग्नेर्वामपन्नगृहस्य सदसि सादयामि सुम्नाय सुम्निनी सुम्ने मा धत्तं धुरि धुर्यौ पातमग्नेऽद-ब्धायोऽशीततनो पाहि माऽद्य दिवः पाहि प्रसित्यै पाहि दुरिष्ट्यै पाहि दुरद्मन्यै पाहि दुश्चरितादविषं नः पितुं कृणु सुषदा योनिꣳ स्वाहा देवा गातुविदो गातुं वित्त्वा गातुमित मनसस्पत इमं नो देवदेवेषु यज्ञꣳ स्वाहा वाचि स्वाहा वाते धाः (३) ॥

---

முதல் விநியோகம்.

சுருவை, வலது உள்ளங் கையால் மேலே தூக்குதல்.

மந்திரம் :

वाजस्य मा प्रसवेनोद्ग्राभेणोऽदग्रभीत् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| वाजस्य | அன்னத்தை |
| प्रसवेन | உண்டாக்கத்தக்க |
| उदग्राभेण | சுருவை மேலே தூக்குகின்றதால் |
| मा | என்னை |
| उदग्रभीत् | மேலே தூக்கி விடுக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன் தனதிடத்தில் உட்கார்ந்துகொண்டு வலது உள்ளங்கையால் பிரஸ்தரத்துடன் (தருப்பையுடன்) 'சுரு' என்னும் நெய்ப்பாத்திரத்தை மேலே தூக்கல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—இதனால் இந்திர தேவதை உணவுப் பொருள் முதலியவை களால் என்னை மேம்பாடுடையவனாகச் செய்க என்பது உட்கிடை. 1

### இரண்டாம் விநியோகம்.

இடது கையால் உபபிருதைக் கீழே தாழ்த்துதல்.

மந்திரம் :

**अथा सपत्नां इन्द्रो मे निग्राभेणा धरां अकः ।**

*என்பது.*

### பதவுரை.

| | |
|---|---|
| अथा | *பிறகு* |
| निग्राभेण | *உபபிருத் என்னும் பாத்திரத்தைக் கீழே தாழ்த்துவதால்* |
| इन्द्रः | *இந்திரன்* |
| सपत्नान् | *சத்துருக்களை* |
| मे | *எனக்கு* |
| अधरान् | *தாழும்படியாக* |
| अकः | *செய்வானாக.* |

### சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், இடது கையால், 'உபபிருத்' என்னும் நெய்ப்பாத்திரத்தைச் சிறிது கீழே தாழ்த்தல் வேண்டும் என்பதாம்.*

குறிப்பு :—*இதனால் பகைவர் தாழ்கின்றனர் என்பது பாவனையாம்.* 2



### மூன்றும் விநியோகம்.

சுருவை உயரத் தூக்கி யெறிதலும் உபபிருதைத் தாழ்த்துதலும்.

மந்திரம் :

**उदग्राभं च निग्राभं च ब्रह्म देवा अवीवृधन् ।**

*என்பது.*

### பதவுரை.

| | |
|---|---|
| उद्ग्राभं च | *சுருவை மேலே எடுத்தலையும்* |
| निग्राभं च | *உபபிருதைத் தாழ்த்துதலையும்* |
| ब्रह्म | *வேள்விக்கிடமாகிய வேதமும்* |
| देवाः | *தேவதைகளும்* |
| अवीवृधन् | *வளப்பன வாகுக.* |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால், சுருவைச் சிறிது மேலே தூக்கி, உபபிருதைச் சிறிது கீழே தாழ்த்தி வலது கையினால் கிழக்காய் சிறிது சுருவை நகர்த்தல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு:—இம் மந்திரங்கள் விநியோக அநுகூலத்தின் பொருட்டு மூன்றாய்ப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. 3



நான்காம் விநியோகம்.

உபபிருதை வெளியில் எறிதல்.

மந்திரம்:

अथा सपत्ना निन्द्राग्नी मे विषूचीनान्व्यस्याताम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अथा | பிறகு |
| इन्द्रागनी | இந்திரன் அக்கினி என்னும் இருவரும் |
| मे | எனது |
| सपत्नान् | பகைவரை |
| विषूचीनान् | வலிவற்றவர்களாகக் |
| व्यस्यताम् | கிடக்குமாறு செய்வார்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உபபிருத் என்பதை மேற்கே வெளியிடத்தில் எறிந்து விடல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு:—பிறகு கையைக் கழுவிக்கொண்டு, அதில் நீரைத் தெளித்து அதை எடுத்து வைத்துக் கொள்ளல் வேண்டும்.

ஈண்டு வேள்வித்தலைவன், 'वाजस्य मा प्रसवेन' என்பது முதலிய முற்கூறிய மந்திரத்தை வேட்போனுடன் செபித்தல் வேண்டும். மற்றும் இருவரும் இம் மந்திரத்தை நான்கு சுரங்களுடன் ஓதல் வேண்டும். 4



கை மாற்றல்)

ஐந்து, ஆறு, ஏழு விநியோகங்கள்.

வேட்போன் மூன்று விறகுகளின் மீது நெய்யை விடல்.

மந்திரம் :

**वसुभ्यस्त्वा । रुद्रेभ्यस्त्वा । आदित्येभ्यस्त्वा ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **हे मध्यम परिधे !** | *நடுவிலுள்ள விறகே! (பரிதியே!)* |
| **त्वा** | *உன்னை* |
| **वसुभ्यः** | *வசுக்களின் பொருட்டு* |
| **(अनज्मि)** | *(நெய்யால் நனைக்கின்றேன்.)* |
| **हे दक्षिण परिधे !** | *தெற்கிலுள்ள விறகே!* |
| **त्वा** | *உன்னை* |
| **रुद्रेभ्यः** | *உருத்திரர்களின் பொருட்டு* |
| **(अनज्मि)** | *(நெய்யால் நனைக்கின்றேன்.)* |
| **हे उत्तरपरिधे !** | *வடக்கிலுள்ள விறகே!* |
| **त्वा** | *உன்னை* |
| **आदित्येभ्यः** | *ஆதித்தர்களின் பொருட்டு* |
| **(अनज्मि)** | *(நெய்யால் நனைக்கின்றேன்.)* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மூன்று மந்திரங்களாலும், முறையே மூன்று விறகுகளிலும் யாதேனுமோரிடத்தில் சுருவால் சிறிது நெய்யை விடல் வேண்டும் என்பதாம்.*

குறிப்பு:—*வேள்வித்தலைவன், 'वसून्देवान्यज्ञेनापिप्रेम्' என்று நெய்யால் நனைக்கப்பெற்ற முதல் விறகைப் போற்றி விட்டு, 'இது வசுக்கட்கு என்னுடையதன்று' என்று தியாகஞ் செய்தல் வேண்டும். அவ்வாறே, 'रुद्रान्देवान् यज्ञेनापिप्रेम्' என்று, தெற்கில் நெய்விட்டுள்ள விறகைப் போற்றி விட்டு, 'இது உருத்திரர்கட்கு எமக்கு அன்று' என்று தியாகஞ் செய்தல் வேண்டும். அங்ஙனமே 'आदित्यान्देवान् यज्ञेनापिप्रेम्' என்று, வடக்கில் நெய்விட்டுள்ள விறகைப் போற்றி விட்டு 'ஆதித்தர்களின் பொருட்டு இது எமக்கன்று' என்று தியாகஞ் செய்தல் வேண்டும் என்பன உணரற்பாலன.* 5, 6, 7

எட்டாம் விநியோகத் தொடக்கம்.

*வேட்போன், வேதிகையிலேயே (பிரஸ்தாரத்திற்கு) தருப்பைக்கு வெளியில் சுருவை வைத்துவிட்டு, ' संजानाथां द्यावा पृथिवी ' என்பது முலிதய மந்திரத்தால், ' விதிருதி ' என்னும் இரண்டு தருப்பைகளுடன் பிரஸ்தாரத்தையெடுத்து, தருப்பைகளின் மீது ' விதிருதி ' என்னும் இரண்டு தருப்பைகளை மாத்திரம் வைத்து விடல் வேண்டும்.*

எட்டு, ஒன்பது, பத்து விநியோகங்கள்.

பிரஸ்தாரம் என்னுந் தருப்பை முடிச்சை நெய்யில் நனைத்தல்.

மந்திரம் :

**अत्कᳪरिहाणा वियन्तु वयः । प्रजां योनिं मा निर्मृक्षम् ।
आप्यायन्तामाप ओषधयः ।**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **वयः** | *பறவைகள்* |
| **अक्तं** | *நெய்யால் நனைத்த தருப்பை நுனிகளின் மீது* |
| **रिहाणाः** | *விளையாடுகின்றவைகளாய்* |
| **वियन्तु** | *பல வழிகளிற் செல்க. யான்* |
| **प्रजां** | *பிரசையையும்* |
| **योनिं** | *அதன் காரணத்தையுங்* |
| **मा निर्मृक्षम्** | *கெடுக்கமாட்டேன்.* |
| **आपः** | *தண்ணீர்* |
| **ओषधयः** | *கொடி செடிகளை* |
| **आप्यायन्तां** | *நனையச் செய்வதாகுக.* |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரங்களால், பிரஸ்தர மென்னும் தருப்பை முடிச்சின் நுனிகளையும் நடுவையும் அடியையும் சுருக்கு நெய்யில் நனைத்தல் வேண்டு மென்பதாம்.*

குறிப்பு:—*இம் மந்திரத்தின் முதற் பகுதியால் பிரஸ்தாரத்தின் நுனியையும், இரண்டாம் பகுதியால் பிரஸ்தாரத்தின் நடுவையும், மூன்றாம் பகுதியால் பிரஸ்தாரத்தின் அடியையும் முறையே சுரு, உபபிருத், துருவா என்பவைகளின் நெய்யில் நனைத்தல் வேண்டு மென்பது உணரற்பாலது. இவ்வாறு மும்முறை செய்தல் வேண்டும்.*

சூக்தவாகம்)

ஈண்டு வேள்வித்தலைவன், ' समङ्क्तां बर्हिर्हविषा घृतेन ' என்பது முதலிய மந்தி ரத்தால், நெய்யால் நனைந்துள்ள பிரஸ்தரத்தை (தருப்பையை)ப் போற்றல் வேண்டும்.

(போ-சூ.) ' अक्तꣳ रिहाणा: ' என்பது வரை ஒரு மந்திரமாகப் பிரித்துக் கொண்டு இம் மந்திரத்தால் பிரஸ்தரத்தின் நுனிகளை ஜுஹுவில் நனைத்தல் வேண்டும். ' वियन्तु वय: ' என்பதை வேறு மந்திரமாய் பிரித்துக்கொண்டு பிரஸ் தரத்தின் நடுபாகத்தை இம் மந்திரத்தால் உபப்ருத்தில் நனைத்தல் வேண்டும். ' प्रजां......निर्मृक्षं ' என்னும் வரை மூன்றாவது மந்திரமாக்கி இம்மந்திரத்தால் துருவாவில் பிரஸ்தரத்தின் அடியை நனைத்தல் வேண்டும். மீதியை மேல் விநி யோகத்துடன் சேர்க்கவேண்டு மென்பது. 8, 9, 10

---

பதினோராம் விநியோகத் தொடக்கம் (சூக்தவாகம்).

ஈண்டுச் சூத்திர விநியோகத்தைத் தழுவி, வேட்போன், ' आयुषेत्वा ' என்று நெய்யால் நனைத்த பிரஸ்தரத்தில் ஒரு புல்லை யெடுத்துப் பத்திரமாய் வைத்து விட்டு, இருகைகளாலும் சாகாபவித்திரத்துடன் பிரஸ்தரத்தை யெடுத்து சுருவின் மேல் வைத்துக்கொண்டு உட்கார்ந்து, ' आऽश्राऽवय ' அதா வது ' கேட்பிப்பாயாக ' என்று ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும். பௌர்ணமி யிலும், சோமயாகம் பண்ணுதவனுக்கு அமாவாசையிலும் சாகாபவித் திரத்தை யெடுத்தல் இல்லை. பிரத்தரம் மாத்திரந்தான். பிறகு ஆக்னீத்ரன், ' அஸ்து சுரௌஷட் ' என்று கேட்கச் சொல்லுதல் வேண்டும்.

பின்னர், வேட்போன். ' इषिता दैव्या होतार: ' என்பது முதலிய மந்திரத் தால் ஹோதாவை ஏவல் வேண்டும். ஹோதாவானவன், ' इदं द्यावा पृथिवी भद्रम भूदार्ध्म सूक्तवाकमुत ' என்பது முதலியவற்றை ஓதி முடித்து விட்டு, ' अग्निरिदं हविरजुषत ' என்பது முதலிய சூக்தவாக மந்திரத்தையும் ஓதல் வேண்டும்.

பதினோராம் விநியோகம்.

பிரஸ்தரத்தை ஆகவனீயத்தீயில் போடல்.

மந்திரம் :

**मरुतां पृषतयः स्थ दिवं गच्छ ततो नो वृष्टिमेरय ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे दर्भा: ! | தருப்பைகளே ! நீங்கள் |
| मरुतां | மருத்துக்களின் |
| पृषतयः | அணுக்களாக |
| स्थः | இருக்கின்றீர்கள். பிரஸ்தரமே ! நீ |

| | |
|---|---|
| दिवं गच्छ | வானை யடைவாயாக. |
| ततः | அவ் வானிலிருந்து |
| नः | எங்கட்கு |
| वृष्टिं | மழையை |
| ऐरय | பெய்விப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் கைகளை வளைத்துக் கொண்டு இழுப்பது போன்று சாகாபவித்திரத்துடன் பிரஸ்தரத்தையும், ஆகவனீயத் தீயிற் போட்டு விடல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :—பௌர்ணமியிலும், அமாவாசையில் சோமயாகம் பண்ணுதவனும் பிரஸ்தரத்தை மாத்திரம் தீயில் போடல் வேண்டு மென்பதை யுணர்க.

பின்னர் ஹோதா, 'विष्णु:' என்பதை மெதுவாகவும் 'इदं हविरजुषत' என்பது முதலியவற்றை உரக்கவும் ஓதி, வேள்வித்தலைவனுடைய பெயரைக் கூறல் வேண்டும். ஈண்டு, வேள்வித்தலைவனுக்கு வழங்கிவரும் பெயரையும் நக்ஷத்திரத்தையுஞ் சொல்லல் வேண்டும். வேள்வித்தலைவன் ஆசிரியனு யிருக்கில் பெயரை மெல்லச் சொல்லிக் கொள்ளல் வேண்டும்.

ஈண்டுப் பௌர்ணமியில், 'अग्नीषोमाविदं' எனவும் 'इन्द्र वैमृध इदं' எனவும் உபாம்சு தேவதையைக் கூறிய பிறகு சொல்லல் வேண்டும். மற்றது சமமாம். சோமயாகம் பண்ணுதவன், அமாவாசையிலும், உபாம்சு தேவதையைக் கூறிய பிறகு 'इन्द्राग्नी इदं हवि:' என்பது முதலியன சொல்லற்பாலன. பிறகு 'आयुराशास्ते सुप्रजास्त्वमाशास्ते' என்பதைத் தொடக்கத்திலும், 'गतिर्वामस्येदं नमो देवेभ्य:' என்பதை ஈற்றிலுங் கொண்ட மந்திரத்தைச் சொல்லல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्नये इदं न मम' என்பது முதலாகியதும், 'विष्णव इदं न मम' என்பதை யுட்கொண்டது மாகியவைகளால் தியாகஞ்செய்து விட்டு ஒவ்வொரு தேவதையின் பெயரைச் சொல்லி 'अहमुज्जितमनूज्जेषम्' என்பதை யீருகக் கொண்டவைகளாலும் 'एमा अग्मन्नाशिषो दोहकामा' என்பது முதலியவற்றாலும் சூக்தவாகத்தை போற்றல் வேண்டும். ஈண்டு, பௌர்ணமியில் விஷ்ணவ இதம் ந மம, பிறகு, 'அக்னிஷோமாப்யாம் இதம் ந மம' அக்னிஷோமயோ: அஹம் உஜ்ஜிதி மநூஜ்ஜேஷம், இந்திராய வைமிருதாய இதம் ந மம, இந்திரஸ்ய வைமிருதஸ்ய அஹமுஜ்ஜிதி மநூஜ்ஜேஷம் தேவேப்ய ஆஜ்ய பேப்ய: என்பது முதலியன சமானங்கள். அமாவாசையில் சோமயாகம் பண்ணுதவனுக்கு 'விஷ்ணவ இதம் ந மம' என்பதன் பிறகு இந்திராக்னிப்யாம்

இதம் ந மம, இந்திராக்னியோ: அஹமுஜ்ஜிதி மநூஜ்ஜேஷம், என்பதும், பிறகு, தேவேப்ய ஆஜ்யபேப்ய:, என்பது முதலியவைகளும் சமானங்கள்.

ஆனாலும், அமாவாசையில் ஆபத்தம்பீய வேள்வித்தலைவனுக்கு விஷ்ணு வேள்வியின்மையின் அதைப்பற்றிய 'விஷ்ணவ இதம் ந மம' என்பதுமில்லை. ஈண்டு, விஷ்ணு வேள்வி முதலியன செய்யப்பட்டு வரினும், சூக்தவாகத்தில் பேர் இன்மையின் விதியாகா. அதனால் தோஷமும் இல்லை யென்ப.

வேட்போன், ஹோதா ஆசீர்வாதஞ் சொல்லுங்கால், 'अग्नीद्गमय' அதாவது, 'தீயில் தள்ளி விடுவாயாக' என்று ஆக்னீத்திரனை ஏவல் வேண்டும். ஆக்னீத்ரன், 'रोहितेन त्वाऽग्निर्देवतां गमयतु' என்பது முதலிய மந்திரங்கள் மூன்றினும் இருகையாலும் எல்லாப் பிரஸ்தாரமும் நுனியிலிருந்து எரிந்துகொண்டு வருமாறு எடுத்துத் தீயில் தள்ளி விடல் வேண்டும். வேள்வித்தலைவன், 'रोहितेन त्वाऽग्निर्देवतां' என்பது முதலிய முற்கூறிய மந்திரத்தால் ஆக்னீத்ரனால் கொளுத்தப்பட்ட பிரஸ்தாரத்தைப் போற்றல் வேண்டும்.

ஆக்னீத்ரன், 'अनुप्रहर' அதாவது பின்னர் எரித்து விடுவாயாக என்று வேட்போனிடங் கூறல் வேண்டும். வேட்போன், முன் எடுத்து வைத்துள்ள பிரத்தரப் புல்லையும், 'स्वगा तनुभ्यः' என்று ஆகவனீயத் தீயில் போட்டு விடல் வேண்டும். வேள்வித்தலைவன், 'तनुभ्य इदं न मम' என்று, தியாகம் பண்ணிவிட்டு, 'दिवः खीलोऽवदतः' என்பது முதலிய மந்திரத்தால் பிரத்தாரத்தின் தருப்பைப் புல்லெரியுமிடத்துச் செபித்தல் வேண்டும்.

வேட்போன், 'एतदेतदेतत्' அதாவது இது, இது, இது என்று மூன்று விரல்களால் தருப்பையை விலக்கி விடல் வேண்டும். 11

---

## பன்னிரண்டாம் விநியோகம்.

### அக்கினியைப் போற்றுதல்.

மந்திரம் :

**आयुष्पा अग्नेऽस्यायुर्मे पाहि चक्षुष्पा अग्नेऽसि चक्षुर्मे पाहि ।**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| अग्ने ! | அக்கினியே ! நீ |
| आयुष्पा | ஆயுளைப் பரிபாலிப்போனாக |
| असि | இருக்கின்றாய். ஆகலின் |
| मे | எனது |
| आयुः | ஆயுளைப் |
| पाहि | பாதுகாப்பாயாக. |

| | |
|---|---|
| अग्ने ! | அக்கினியே ! நீ |
| चक्षुष्पा | கண்களைப் பாதுகாப்போனாக |
| असि | இருக்கின்றாய். ஆதலின் |
| मे | என்னுடைய |
| चक्षुः | கண்ணைப் |
| पाहि | பாதுகாப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால் ஆகவனீயத் தீயைப் போற்றல் வேண்டும் என்பதாம்.* 12

---

பதின்மூன்றும் விநியோகம்.
வேட்போன் வேதிகைப் பூமியைத் தொடுதல்.

மந்திரம் :

**ध्रुवाऽसि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे वेदे ! | வேதிகையே ! நீ |
| ध्रुवा | நிலை யுடையதாக |
| असि | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால் அந்தர்வேதிகையின் மீதுள்ள தருப்பைகளை ஒதுக்கி விட்டு அப் பூமியைத் தொடல் வேண்டும் என்பதாம்.* 13

---

பதினான்காம் விநியோகத் தோடக்கம். (சம்யுவாகம்)

ஈண்டு, ஆக்னீத்ரன், 'संवदस्व' அதாவது, இனியது கூறுக, என்று வேட்போனுக்குக் கூறல் வேண்டும். வேட்போன், 'अगानग्नीत्' அதாவது அக்கினியிற் சேர்த்தனையோ? என வினவ வேண்டும். ஆக்னீத்ரன் 'अगन्' அதாவது அக்கினியாயின, என்று வேட்போனுக்குக் கூறல் வேண்டும். வேட்போன் 'श्रावय' கேட்பிப்பாயாக, என்று ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன் 'श्रौ३षट्' என்று வேட்போனுக்குக் கூறல் வேண்டும். வேட்போன் நடுவிறகை யெடுத்துக் கொண்டு, 'स्वगा दैव्या होतृभ्यः' என்பது முதலிய மந்திரத்தால் ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'तच्छं यो रावृणीमहे गातुं यज्ञाय' என்பது முதலிய சம்யுவாக மந்திரத்தை ஓதல் வேண்டும்.

பதினான்காம் விநியோகம்.
நடுவிறகைத் தீயிற் போடுதல்.

மந்திரம் :

**यं परिधिं पर्यधत्था अग्ने देव पणिभिर्वीर्यमाणः । तं त एतमनु जोषं भरामि नेदेषत्वदपचेतयातै ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **अग्ने देव !** | அக்கினி தேவதையே ! |
| **पणिभिः** | தோத்திரங்களால் |
| **वीर्यमाणः** | கிடைக்கப்பெற்ற நீ |
| **यं परिधिं** | யாதொரு விறகை |
| **पर्यधत्था** | மேற்கில் வைத்துக் கொண்டிருந்தனையோ |
| **अनुजोषं** | பிரியமுடைய |
| **त एतं तं** | அத்தகைய இவ் விறகை |
| **भरामि** | நின்பால் வைக்கின்றேன். |
| **एषः** | இது |
| **त्वत्** | நின்னில் |
| **न इत् अपचेतयातै** | வேறாய்ப் போகாததாகுக. |

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால் மேற்கிலிருந்த விறகை ஆகவனீய மென்னும் தீயிற் போட்டு விடல் வேண்டு மென்பதாம்.*

குறிப்பு :—*ஹோதா, 'மேற்கூறிய சம்யுவாகம்' என்னும் மந்திரத்தைக் கூறும்போது மேல்பக்க விறகைத் தீயிற் போடல் வேண்டு மென்பதை யுணர்க.* 14

---

பதினைந்தாம் விநியோகம்.
மற்றிரண்டு விறகுகளையுந் தீயிற் போடுதல்.

மந்திரம் :

**यज्ञस्य पाथ उपसमितम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे परिधी !** | விறகுகளே ! நீங்களிருவரும் |
| **यज्ञस्य** | வேள்வித் தீக்கு |
| **पाथ** | அன்னமாந் தன்மையை |
| **उपसमितम्** | அடைவீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் வடக்கிலும் தெற்கிலு மிருந்த இரண்டு விறகுகளையும் ஒன்றுய்த் தீயிற் போட்டு விடல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—ஆகவனீயத் தீயின் வடபாதியில் விறகுகளின் நுனிகளைத் தணலுக்குட் செருகி வைத்தல் வேண்டு மென்பதும் உணரற்பாலது.

ஈண்டு, வேள்வித்தலைவன், 'அக்னய இதம் ந மம' எனத் தியாகஞ் செய்வதுடன்,

वि ते मुञ्चामि रशना । சங். கா-1, பிர-6, அநு-4.

என்பது முதலிய மந்திரத்தை, விறகுகளைத் தீயிற் போட்டவுடன் செபித்துவிட்டு, 'विष्णोः शंयोरहं देवयज्यया' என்பது முதலிய மந்திரத்தையுஞ் செபித்தல் வேண்டும்.

(போ-சூ.) இவ் விரண்டு விநியோகங்களும் ஒரே மந்திரமாகக் கொள்ளப் பட்டிருக்கின்றது. 15

---

பதினாறும் விநியோகத் தொடக்கம்.

வேட்போன், 'यजमानं प्रथत' என்று பரிதிக (விறகுக) ளைப் போற்றிக் கொண்டு, சுருவை உபபிருதின் நுனியின்மீது வைத்துக்கொள்ளல் வேண்டும்.

பதினாறும் விநியோகம்.

மீந்த நெய்யை அடியோடு வடித்து ஹோமஞ் செய்தல்.

மந்திரம் :

सꣳस्रावभागाः स्थेषा बृहन्तः प्रस्तरेष्ठा बर्हिषदश्च देवा इमां
वाचमभि विश्वे गृणन्त आसद्यास्मिन्बर्हिषिमादयध्वम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| बृहन्तः | போற்றத் தக்கவர்களும் |
| इषाः | நெய்ப்பாகத்தை யடைய விருப்புற்றவர்களும், |
| प्रस्तरेष्ठाः | பிரஸ்தரம் என்னுந் தருப்பையின் மீது இருப்பவர்களும் |
| बर्हिषदश्च | தருப்பையில் அமருகின்றவர்களும் |
| इमां वाचं | எமது துதியைக் கேட்டுப் |
| अभिगृणन्तः | புகழத்தக்கவர்களுமான |

| | |
|---|---|
| **विश्वे देवाः!** | தேவர்களே! நீங்களனைவரும் |
| **अस्मिन् बर्हिषि** | இவ் வேள்வியில் |
| **आसाद्य** | வந்திருந்து |
| **मादयध्वम्** | களிப்படைவீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், சுருவின் நுனியில் உபபிருதை வைத்துக் கொண்டு இரண்டிலுமுள்ள நெய்யைச் சுருவின் வாயிலாக ஒரே தாரையாய் தீயில் ஒழுக விடல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு :—இம் மந்திர முடிவில் 'स्वाहा' என்பதைச் சேர்த்துச் சொல்லி நெய்யை அடியோடு ஒழுகுமாறு விடுதலின் இது 'சம்ச்ராவ' ஹோமம் எனப் படும்.

ஈண்டு வேள்வித்தலைவன், 'वसुभ्यो रुद्रेभ्य' என்பது முதலிய மந்திரத்தால் தியாகம் பண்ணிவிட்டு, 'इष्टो यज्ञो भृगुभिर्द्रविणोदा' என்பது முதலிய மந்திரத்தால் சம்ச்ராவ மென்னும் இந்த ஹோமத்தைப் போற்றல் வேண்டும். ஆகுதி செய்து மீந்தவைகளை வேள்விக் கூட்டத்தார் ஈண்டே அருந்திவிடல் வேண் டும் என்பது. 16

---

## பத்தினி சம்யாஜம்

### பதினேழாம் விநியோகத் தொடக்கம்.

வேட்போன், சுரு, உபபிருத் என்பவற்றிலுள்ள நெய்யை வெந்நீரால் கழுவி விட்டு, சுருவத்துடன் சுரு உபபிருத்களையும் எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

ஹோதா, 'वेदोऽसि वेदो विदेय' என்று வேதத்தை (தருப்பை முடிச்சை) எடுத்துக் கொள்ளல் வேண்டும். ஆக்னீத்ரன், மாக்கத்தி, நெய்ப் பாத்திரம், உதக கமண்டலம் என்பவற்றை யெடுத்துக்கொண்டு வேட்போன் இருக் கோதுவோன் இருவருக்கு முன்னாகக் காருகபத்தியத் தீக்கு வடபுறமாகவே சென்று பத்தினி சம்யாஜம் செய்யும் வேட்கையனுக் காருகபத்தியத்திற் குத் தெற்கில் அம் மூன்றையும் வைத்து விட்டு வந்துவிடல் வேண்டும்.

பிறகு, வேட்போன் வேதிகையைத் தாண்டிக் கொண்டு காருகபத்தியத் திற்குத் தெற்கில் போதல் வேண்டும். அதன் பின்னர் ஹோதா, 'उदायुषा स्वायुषो दोषधीनां' என்பது முதலிய மந்திரத்தை ஓதிக்கொண்டு எழுந்து காருக பத்தியத்திற்கு வடபுறமாகவே போதல் வேண்டும்.

பதினேழு, பதினெட்டு விநியோகங்கள்.

வேட்போன் சுருவையும் உபபிருதையும் வண்டியில் வைத்தெடுத்தல்.

மந்திரம் :

अग्नेर्वामपन्नगृहस्य सदसि सादयामि सुम्नाय सुम्निनी सुम्ने माधत्तं । धुरि धुर्यौपातम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे जुहूपभृतौ ! | சுகு, உபபிருத் என்பவைகளே ! |
| वां | உங்களை |
| अपन्नगृहस्य | கெடாத இடத்தின் சம்பந்தமாகிய |
| अग्नेः सदसि | அக்கினியின் இடமாகிய வண்டியின்மேல் |
| सुम्नाय | வேள்வித்தலைவனுடைய நலத்தின் பொருட்டு |
| सादयामि | வைக்கின்றேன். |

மற்றும்,

| | |
|---|---|
| सुम्निनी ! | சுக வடிவினர்களே ! நீங்கள் |
| मा | என்னை |
| सुम्ने | சுகத்தில் |
| धत्तं | வைப்பீர்களாக. |
| धुरि | வேள்வியின் பாரத்தை |
| धुर्यौ | தாங்கப்பட்டவர்களான நீவிர் இருவரும், தம்பதிகளை |
| पातम् | பாதுகாப்பாற்றுவீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன் சுகு, உபபிருத் என்னு மிரண்டையும் வண்டியின் மீது வைத்தெடுத்தல் வேண்டும்.

குறிப்பு :—வண்டியின் நுகத்தடியின் நுனியிலும் சுருக்கை வைத்து எடுத்துக் கொள்ளல் வேண்டு மென்பதையு முணர்க. இது, வண்டியிலிருந்து புரோடாசத்திற்கு நெல்லெடுக்கும் பக்ஷமாம். உறையிடத்திலிருந்து நெல்லெடுக்கும் பக்ஷமாயினோ, 'अग्नेर्वामपन्न' என்பது முதலிய மந்திரத்தாலும், 'धुरि धुर्यौ' என்பது முதலிய மந்திரத்தாலும், மாக்கத்தியின் மேல் சுருவையும் உபபிருதையும் வைத்தல் வேண்டும் என்பதாம்.

சம்யாஜம்)

ஈண்டு, வேட்போன், காருகபத்தியத்திற்குத் தெற்கில் பத்மாசனத்திலுட்காரல் வேண்டும். ஹோதா, காருகபத்தியத்திற்கு மேற்கில் தனது ஆதனத்தின் மீது உட்காரல் வேண்டும். ஆக்னீத்ரன் காருகபத்தியத்திற்கு வடக்கில் மாக்கத்தியைக் கையில் வைத்துக் கொண்டு தெற்கு முகமாய் உட்காரல் வேண்டும்.

### 1. சோம தேவதை.

பிறகு, வேட்போன், இடது கையில் உபபிருத் என்னும் நெய்ப் பாத்திரத்தை யெடுத்துக் கொண்டு, அதன் மேல் சுருவை வைத்து நெய்ப் பாத்திரத்திலிருந்து சுருவத்தால் ஒருமுறை நெய்யை யெடுத்துக்கொண்டு, 'सोमाया-नुब्रूहि' அதாவது, 'சோம தேவதையின் பொருட்டு இருக்குச் சொல்வாயாக' என்று ஹோதாவை (இருக்கோதுவோனை) ஏவல் வேண்டும்.

ஹோதா,

आप्यायस्व समेतु । பிராமணம் 3-5-12-1

என்பது முதலிய மந்திரத்தால், சுரத்துடன் புரோநுவாக்கியத்தைச் சொல்லல் வேண்டும். வேட்போன் சுருவத்தால் மீண்டும் மும்முறை சுருவில் நெய் யெடுத்துக் கொள்ளல் வேண்டும். இவ்வாறு நான்கு முறையும் எடுத்துக் கொண்ட பிறகு, 'आ३श्रा३वय' கேட்பிப்பாயாக, என்று ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும். ஆக்னீத்ரன் 'அஸ்து சுரௌஷட்' என்று மறித்தும் அதை ஓதல் வேண்டும். வேட்போன் 'சோமம் யஜ' என்று ஹோதாவை ஏவல் வேண்டும்,

ஹோதா, 'யே யஜாமஹே சோமம்'

संते पयांसि । பிராமணம் 3-5-12-1

என்பதைத் தொடக்கத்திற் கொண்டதும், 'வௌஷட்' என்பதை ஈற்றிலுடையதுமாகிய யாஜ்யையைக் கூறி, 'वागोजः सह' என்பது முதலியவற்றால் உபாம்சு (மெல்ல) வஷட்காரத்தைப் போற்றல் வேண்டும்.

இருக்கோதுவோன் 'வௌஷட்' என்றவுடன் காருகபத்தியத் தீயின் வடபாதியில் வேட்போன் ஹோமஞ் செய்தல் வேண்டும். வேள்வித்தலைவன் 'சோமாய இதம் ந மம' என்று, தியாகஞ் செய்து விட்டு,

सोमस्याहं देवयज्यया । சங். கா-1, பிர-6, அநு-4,

என்பது முதலிய மந்திரத்தால் ஹோமஞ் செய்ததைப் போற்றல் வேண்டும்.

## 2. துவஷ்டா தேவதை.

வேட்போன் முன்போன்று நெய்யெடுத்துக்கொண்டு 'துவஷ்ட்ரே அநுப்ரூஹி' என்று ஹோதாவை ஏவியவுடன், ஹோதா,

इह त्वष्टारमग्रियं । பிராமணம் 3–5–12–2

என்பது முதலிய புரோநுவாக்கியத்தைச் சொன்னவுடன், வேட்போன் 'ஆச்ராவய' என்று ஆக்னீத்ரனை யேவ, அவன், 'அஸ்து சுரௌஷட்' என்று சொன்னவுடன், வேட்போன், 'த்வஷ்டாரம் யஜ' என்று ஹோதாவை யேவினவுடன், ஹோதா,

ये यजामहे त्वष्टारं तन्नस्तुरीपं । பிராமணம் 3-5-12-2

என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைச் சொல்லி, முன்போன்றே உபாம்சு வஷட்காரத்தைப் போற்றல் வேண்டும்.

வேட்போன், 'வௌஷட்' என்றவுடன் காருகபத்தியத் தீயின் வடபாதியில் சோமத்திற்கு ஆகுதி செய்ததற்கு வடக்கிலேனும் தெற்கிலேனும் ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'த்வஷ்ட்ர இதம் ந மம' என்று தியாகஞ் செய்துவிட்டு, 'त्वष्टृरहं' என்பது முதலியவற்றால் ஹோமஞ் செய்ததைப் போற்றல் வேண்டும்.

## 3. தேவபத்னி தேவதை.

வேட்போன், முன்போன்றே சுருவில் நெய்யையு மெடுத்துக்கொண்டு, 'தேவாநாம் பத்னீப்யோ அநுப்ரூஹி' என்று ஹோதாவை ஏவியவுடன், ஹோதா,

देवानां पत्नीरुशतीरवन्तु । பிரா. 3-5-12-3.

என்பது முதலிய மந்திரத்தால் புரோநுவாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

பிறகு, வேட்போன், முன்போன்றே நெய்யை யெடுத்துக்கொண்டு 'ஆச்ராவய' என்று ஆக்னீத்ரனை ஏவியவிடத்து, ஆக்னீத்ரன், அஸ்து சுரௌஷட், என்று கேட்பித்தவுடன், வேட்போன், 'தேவாநாம் பத்னீர்யஜ' என்று ஹோதாவை ஏவுங்கால், ஹோதா,

ये यजामहे देवानां पत्नीरुतग्ना । பிராமணம் 3-5-12-4

என்றற் றொடக்கத்து யாஜ்யா வாக்கியத்தைக் கூறி, 'வாகோஜ: ஸ:' என்பது முதலியவற்றால் மெல்ல வஷட்காரத்தைப் போற்றல் வேண்டும்.

ஹோதா வௌஷட் என்றவுடன் காருகபத்தியத் தீயின் வடபாதியில், வேட்போன் ஹோமஞ் செய்தல் வேண்டும்.

ரம்யாஜம்)

வேள்வித்தலைவன், 'தேவாநாம் பத்னீப்ய இதம் ந மம' என்று தியாகஞ் செய்தல் வேண்டும். ஈண்டு ஹோமஞ் செய்யுங்கால் பத்தினிக்குத் தெரியாதபடி காருகபத்தியத் தீயை மூடிவைத்தல் வேண்டு மென்பதையு முணர்க.

**4.** ராகா தேவதை.

வேட்போன், முன்போல் நெய்யை யெடுத்துக்கொண்டு, 'ராகாயை அநுப்ரூஹி' என்று ஹோதாவை ஏவியவிடத்து, ஹோதா,

**राकामहं सुहवां सुष्टुतीहुवे ।** பிராமணம் 3–5–12

என்பது முதலிய புரோநுவாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

வேட்போன், 'ஆச்ராவய' என்று ஆக்னீத்ரனை யேவியவிடத்து, அவன் 'அஸ்து சுஒளஷட்' என்று கேட்பித்தவுடன், வேட்போன், 'ராகாம் யஜ' என்று ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா,

**ये यजामहे यास्तेराके ।** பிராமணம் 3-5-12

என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைக் கூறிவிட்டு, 'வாகோஜ:' என்பது முதலியவற்றை மெல்லக்கூறி வஷட்காரத்தைப் போற்றல் வேண்டும். வேட்போன், ஹோதா 'வௌஷட்' என்றவுடன் காருகபத்தியத் தீயில் ஹோமஞ் செய்தல் வேண்டும். வேள்வித்தலைவன், 'ராகாயை இதம் ந மம' என்று தியாகஞ் செய்துவிட்டு, 'ராகாயா அஹம்' என்பது முதலியவற்றூற் போற்றல் வேண்டும். பத்தினியும் இம் மந்திரத்தாலேயே போற்றல் வேண்டும்.

**5.** சினீவாலி தேவதை.

வேட்போன், முன்போல் நெய்யை யெடுத்துக் கொண்டு, 'சினீவால்யை அநுப்ரூஹி' என்று ஹோதாவை ஏவியவுடன், ஹோதா, 'சினீவாலிப்ரு துஷ்டுகே' என்பது முதலிய புரோநுவாக்கியத்தைச் சொல்லல் வேண்டும். வேட்போன், ஆக்னீத்ரனை, 'ஆச்ராவய' என்று ஏவியவுடன், அவன், 'அஸ்து சுஒளஷட்' என்று கேட்பித்தவுடன், வேட்போன், 'சினீவாலீம் யஜ' என்று ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'ये यजामहे सिनीवालीं यासुबाहुस्वंगुरी' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தை ஓதிவிட்டு, 'வாகோஜ: ஸ:' என்பதை மெல்ல ஓதி வஷட்காரத்தைப் போற்றல் வேண்டும்.

வேட்போன், ஹோதா, 'வௌஷட்' என்றவுடன், காருகபத்தியத் தீயில் ஹோமஞ் செய்தல்வேண்டும். வேள்வித்தலைவன், 'சினீவால்யை இதம் ந மம' என்று தியாகஞ் செய்து விட்டு, 'சினீவால்யை அஹம்' என்பது முதலிய

வற்ருல் போற்றல் வேண்டும். ஈண்டு, பத்னியும், 'சினீவால்யா அஹம் தேவ யஜ்யயா' என்பது முதலியவற்ருல் போற்றல் வேண்டும்.

### 6. குஹூ தேவதை.

வேட்போன், முன்போல் நெய்யை யெடுத்துக் கொண்டு, 'குஹ்வா அநுப்ரூஹி' என்று ஹோதாவை ஏவியவிடத்து, ஹோதா, 'कुहूमहं सुहृतं' என்பது முதலிய புரோநுவாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

வேட்போன், 'ஆச்ராவய' என்று ஆக்னீத்ரனை யேவியவுடன், அவன் 'அஸ்து சுரௌஷட்' என்று கேட்பித்தவுடன், 'குஹூம் யஜ' என்று ஹோதாவை யேவல் வேண்டும்.

ஹோதா, 'ये यजामहे कुहूं कुहूर्देवानां' என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தைச் சொல்லி 'வாகோஜ:' என்பது முதலியவற்றை மெல்லச் சொல்லி, வஷட்காரத்தைப் போற்றல் வேண்டும். வேட்போன், ஹோதா, 'வௌஷட்' என்றவுடன் காருகபத்தியத் தீயில் ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'குஹ்வா இதம் ந மம' என்று, தியாகஞ் செய்துவிட்டு, 'குஹ்வா அஹம், தேவயஜ்யயா' என்பது முதலியவற்ருல் போற்றல் வேண்டும். பத்னியும், 'குஹ்வா அஹம் தேவயஜ்யயா' என்பது முதலியவற்ருல் போற்றல் வேண்டும்.

### 7. கிருஹபதி தேவதை.

வேட்போன், முன்போல் நெய்யை யெடுத்துக் கொண்டு, 'அக்னயே க்ருஹபதயே அநுப்ரூஹி' என்று ஹோதாவை ஏவியவுடன், ஹோதா,

अग्निर्होता गृहपतिः । பிராமணம் 3-5-12-5

என்பது முதலிய மந்திரத்தால் புரோநுவாக்கியத்தைச் சொல்லல் வேண்டும். வேட்போன், 'ஆச்ராவய' என்று ஆக்னீத்ரனை ஏவியவுடன், அவன், 'அஸ்து சுரௌஷட்' எனக் கேட்பித்தவுடன், வேட்போன், 'அக்னிம் க்ருஹபதிம் யஜ' என்று, ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா,

ये यजामह वयमुत्वा । பிராமணம் 3–5–12–6.

என்பது முதலிய யாஜ்யா வாக்கியத்தை ஓதி 'வாகோஜ: ஸஹ' என்பது முதலியவற்றை மெல்ல ஓதி வஷட்காரத்தைப் போற்றல் வேண்டும். வேட்போன், 'வௌஷட்' என்றவுடன், சோமம், துவஷ்டா என்னு மிரண்டு

ஆகுதிகட் கிடையில் ஹோமஞ் செய்தல் வேண்டும். வேள்வித்தலைவன், 'அக்னயே க்ருஹபதயே இதம் ந மம' என்று, தியாகஞ் செய்துவிட்டு,

देवानां पत्नीरग्निर्गृहपतिः । சங். கா-1, பிர-6, அநு-4.

என்பது முதலியவற்றால் போற்றல் வேண்டும்.

குறிப்பு:—ஆபஸ்தம்ப சூத்திரத்தைத் தழுவியவர்களுக்கும் இதுவே முறையாம். சிலர், ராகா முதலிய வேள்விகளைச் செய்த பின்னரே தேவபத்னி யாகத்தைச் செய்கின்றனர். ராகா, சினீவாலி, குகூ என்னும் தேவதைகளைக் குறித்துச் செய்யும் வேள்விகள் இச்சையாற் செய்யப்படுகின்றன. ஆபத் தம்ப சூத்திரப்படியோ விகல்பமாம். அதாவது இச்சையிலாத விடத்துஞ் செயற்பாலவைக ளென்பதாம்.

## ஆஜ்ய இடை.

அதாவது நெய்யுண்ணல். வேட்போன், ஹோதாவின் ஆட்காட்டி விரல் மேல் இரண்டு கணுக்களில் சுருவத்தால் நெய்த்துளியை விடல் வேண்டும். ஹோதா, 'वाचस्पतिना ते हुतस्येषे प्राणाय प्रश्नामि' என்று, மேற்கணுவிலுள்ள நெய் யை, கையைத் தனக்கு நேராயெடுத்து மேலுதட்டில் தடவிக் கொண்டு, 'मनसस्पतिना ते' என்பது முதலியவற்றால், கீழ்க்கணுவிலுள்ள நெய்யை கீழு தட்டிலுந் தடவிக் கொண்டு நீரைத் தொடுவதுடன் நீரைக் கையிலெடுத்துக் கொள்ளல் வேண்டும். வேட்போன், நீரைக் கையிற் கொண்டுள்ள ஹோதாவின் கையில் நான்கு நெய்த்துளிகளை விடல் வேண்டும். அவ்வாறே, ஆக்னீத்ர னுடைய கையிலும் ஆறு நெய்த்துளிகளை விடல் வேண்டும்.

பிறகு, வேட்போன், ஆக்னீத்ரன், பத்னி என்பவர்கள், கையில் நெய்த் துளியை வைத்துக் கொண்டிருக்கும் ஹோதா முதலியோர்களைத் தொட்டுக் கொண்டிருத்தல் வேண்டும்.

ஹோதா, இளோபஹூதா சஹதிவா, என்பது முதலிய மந்திரத்தை மெதுவாகவும், 'இளோபஹூதே ளோபாஸ்மாம்' என்பது முதலியவற்றை உரக்கவும் ஓதிவிட்டு நெய்த் துளியை வணங்கல் வேண்டும். வேள்வித் தலை வன், 'इडाऽस्मानुवस्तां' என்பது முதலிய மந்திரத்தால் 'ஆஜ்யேடாவை' அதா வது கையில் விட்ட நெய்த்துளியைப் போற்றல் வேண்டும். பிறகு ஹோதாவும், ஆக்னீத்ரனும், தத்தமது கையிலுள்ள நெய்த்துளியை, ஒன்றும் பேசாமலே யருந்தி விட்டு ஆசமனஞ் செய்தல் வேண்டும்.

பத்நி சம்யாஜம் முடிந்தது.

## சம்பத்னீய ஓமம்

அச்சமயத்தில், சுருவத்தால் நெய்யை யெடுத்துக் கொண்டு,பத்தினி இருப்பினும் இல்லாவிடினும், வேட்போன்,

**संपत्नी पत्या सुकृतेन ।** பிராமணம் 3-7-5-21.

என்பது முதலிய மந்திரத்தால் காருகபத்தியத் தீயில் ஆகுதி செய்தல் வேண்டும். வேள்வித்தலைவன், 'दिवि ज्योतिषे अजराय परमात्मन इदं न मम' என்று தியாகஞ் செய்து விட்டு அந்தர் வேதியில் வேதத்தை (தருப்பை முடிச்சை) வைத்து விடல் வேண்டும்.

சம்பத்னீய ஓமம் முடிந்தது.



ஈண்டு வேள்வித்தலைவன், சூத்திர விநியோகங்களைத் தழுவி,

**वेदोऽसि वित्तिरसि ।** சங். கா-1, பிர-6, அநு-4.

என்பது முதலிய மந்திரத்தால் வேதத்தை (அத் தருப்பை முடிச்சை) த் தொடல் வேண்டும்.

பின்னர், ஹோதாவேனும், வேட்போனாயினும் வேதத்தை (தருப்பை முடிச்சை) பத்தினிக்குக் கொடுத்து, 'वेदोसि वित्तिरसि' என்பது முதலிய மந்திரத்தை, பத்தினி சொல்லுமாறு செய்தல் வேண்டும். பத்தினி, தனக்கு மகற்பேறு வேண்டும், என விரும்பில், அந்தத் தருப்பை முடிச்சில், முழங்கால் போன்றுள்ள முடிச்சால் தனது நாபியைத் தொடல் வேண்டும். மக்கள் விருப்பம் இன்றெனினும் மேலுள்ள மந்திரத்தை ஓதல் வேண்டு மென்பதை யுணர்க.

பிறகு, ஹோதாவானவன், பத்தினியின் இடுப்பிற் கட்டியுள்ள தருப்பைக் கயிற்றை அவிழ்த்தல் வேண்டும். இதன் முறையை, கா-1, பிர-1, அநு-10, விதி-8, ல் காண்க. ஆசுவலாயன சூத்திரத்தைத் தழுவிய ஹோதாவாயிருக்கின், 'प्रत्वा मञ्चामि' என்பது முதலாக அதிற் சிற்சில பேதங்களுள்ளன.

ஹோதா, பத்தினியின் இடுப்பிற் கட்டியிருந்த கயிற்றை (யோக்திரத்தை) மடித்து, கீழ் நுனியாய்ப் போட்டு, வேதத்தை அவிழ்த்து வட நுனியாய் அதன் மேற் போட்டு அக்கினி ஹோத்திர ஹவணியைக் கீழ் நுனியாய் அதன் மேல் வைத்து, அதில் நீர் நிறைய வார்த்து, 'पूर्णमसि' என்றற் றொடக்கத்து மந்திரத்தால் அதைப்போற்றி, 'प्राच्यां दिशि' என்றற்றொடக்கத்து மந்திரத்தால் எல்லாப்

பக்கங்களிலும் மேலிலும் அந்நீரைத் தெளித்து விட்டு, கீழ் வைத்திருந்த யோக்த்ரம், வேதம் என்பவைகளைப் பத்நினியின் கைகளில் வைத்து, 'माहं प्रजां' என்றற் றொடக்கத்து மந்திரத்தை அவளுக்கு ஓதி வைத்துக்கொண்டே அந்நீரை அவள் கையிலூற்றல் வேண்டும்.

## பத்தோன்பதாம் விநியோகத் தொடக்கம்.

வேட்போன், முன்னர், சமித்துக்கள் வெட்டுங்கால் கீழே விழுந்த மரத்தூள்களை யெடுத்து, தக்ஷிணாக்கினியிற் போட்டுத் தீயை வளர்த்துக் கொண்டு, ஜுஹூவில் தவிட்டைப் போட்டுக்கொண்டு நான்குமுறை நெய் யெடுத்துத் தவிட்டை நெய்யால் நனைத்துக் கொள்ளல் வேண்டும்.

---

## பத்தோன்பதாம் விநியோகம்.

பலீகரண (தவிட்டின்) ஹோமம்.

மந்திரம் :

अग्नेऽदब्धायोऽशीततनो पाहि माद्यदिवः पाहि प्रसित्यै पाहि दुरिष्ट्यै पाहि दुरद्मन्यै पाहि दुश्चरितादविषं नः पितुङ्कृणु सुषदा योनिँ स्वाहा ।

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| अदब्धायः | கொல்லாமையை மேற்கொண்டதும் |
| अशीततनोः | சூடாகிய உடம்பை யுடையதுமாகிய |
| अग्ने ! | அக்கினியே ! நீ |
| मा | என்னை |
| अद्य | இப்போது |
| दिवः | வானுலகின் |
| प्रसित्यै | வலிய தடையிலிருந்து |
| पाहि | பாதுகாப்பாயாக. மற்றும், |
| दुरिष्ट्यै | நூல் விதியின்றிய வேள்வி செய்வதினின்றும் |
| पाहि | பாதுகாப்பாயாக. |
| दुरद्मन्यै | வேள்விக்குதவாப் பண்டத்தை யருந்துவதினின்றும் |
| पाहि | பாதுகாப்பாயாக. |
| दुश्चरितात् | தீய வொழுக்கத்தினின்றும் |
| पाहि | பாதுகாப்பாயாக. |

| | |
|---|---|
| नः | எமது |
| पितुं | உணவுப் பொருளை |
| अविषं कृणु | அமுதமாய்ச் செய்வாயாக. |
| सुषदा | இன்புறுதற்குக் |
| योनिं | காரணத்தைச் |
| कुरु | செய்வாயாக. |
| स्वाहा | தவிட்டை உனக்கு அருப்பிக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தவிட்டில் நெய்யைக் கலந்து தட்சிணத் தீயில் ஆகுதி செய்யல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு:—வேள்வித்தலைவன், 'अग्नये अदब्धायवे अशीततनवे इदं न मम' என்று தியாகஞ் செய்துவிட்டு, 'यासरस्वती विशो भगीना' என்பது முதலிய மந்திரத்தால், தவிட்டை ஹோமஞ் செய்யும்போது முகத்தைத் துடைத்துக்கொண்டு தண்ணீரைத் தொட்டுக் கொள்ளல் வேண்டும். 19

பலீகரண ஹோமம் முடிந்தது.

---

## பிஷ்டலேப ஹோமம்.

(ஒட்டியிருந்த மாவை ஹோமஞ் செய்தல்.)

முன், உரல், உலக்கை, அம்மி, குழவி முதலியவைகளில் ஒட்டியிருந்த மாவைத் திரட்டி வைத்திருந்ததன்றே வேட்போன், அத்துடன் நான்குமுறை நெய்யை யெடுத்து கலந்து கொண்டு,

उलूखले मुसले यच्च । பிராமணம் 3-7-6-33

என்பது முதலியவற்றைக் கூறி முடித்து 'स्वाहा' என்பதால் ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'विश्वेभ्यो देवेभ्य इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், சுருவில் மும்முறை நெய் யெடுத்துக்கொண்டு, 'यास सरस्वती विशो भगीना तस्यै स्वाहा' என்பதாலும், 'या सरस्वती वेश भगीना तस्यै स्वाहा' என்பதாலும், 'इन्द्रोऽपानस्य केह मनसः' என்பது முதலியவற்றாலும் தட்சிணத் தீயில் மூன்று ஹோமங்களைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், முறையே, சாஸ்வத்யை விசோபகின்யா இதம் ந மம, எனவும், சரஸ்வத்யை வேசபகின்யா இதம் ந மம, எனவும், இந்த்ராய சுமனஸ இதம் ந மம, எனவும் தியாகங்களைச் செய்தல் வேண்டும்.

## பூரண பாத்திர நினயனம்.

வேட்போன், அவிழ்த்த தருப்பைக் கயிற்றை பத்தினியின் இருகையிலும் பிடிக்கச் செய்து அதன் மேல் அக்னி ஹோத்திர ஹவணியில் நீரை நிறைய எடுத்து ஊற்றல் வேண்டும். பத்தினியானவள், ' समायुषा संप्रजया ' என்பது முதலிய மந்திரத்தால் ஊற்றும் பூரண பாத்திரத்தைப் போற்றிச் செபித்து, அந் நீரைத் தரையிற் கொட்டி விட்டு கையை நனைத்து முகத்தைத் துடைத்துக் கொண்டு எழுந்திருத்தல் வேண்டும். ஈண்டு, அக்கினிஹோத்திர ஹவணியே, நீர் நிறையப் பெற்றதால் பூரண பாத்திர மெனப்பட்டது

இதன் மந்திர விநியோகத்தை, கா-1, பிர-1, அநு-10, விதி-9, ல் காண்க. வேட்போன், முன்னர் தான் வந்தவாறுகவே போய் ஆகவனீயத்தை யடைதல் வேண்டும்.

## பிராயச்சித்தம்.

ஹோதா (இருக்கோதுவோன்) வேதம் என்னும் தருப்பைபுற்களின் நுனிகளை வலது கையாற் பிடித்துக்கொண்டு, கையை உதறுமல், ' तन्तुं तन्वन्नजसः ' என்பது முதலிய மந்திரத்துடன், காருகபத்தியத் தீயிலிருந்து இடது கையில் ஒவ்வொன்றுய் எடுத்துத் தாரையாகப் போட்டுக்கொண்டு ஆகவனீயத்திற்குப் போய், மீந்ததை முன்போலவே கட்டி வைத்துவிட்டு, கன்னி மூலையில் உட்கார்ந்து கொண்டு சுருவத்தால் நெய்ப் பாத்திரத்திலிருந்து நெய்யை யெடுத்து, ' अथाश्चाग्नेऽस्यनभिशस्तीश्च ' என்பது முதலிய மந்திரத்தால் ' ஸ்வாஹா ' என்று ஆகவனீயத் தீயில் ஹோமஞ் செய்தல் வேண்டும். வேள்வித்தலைவன், ' அயஸே அக்னயே இதம் ந மம ' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

ஹோதா, முன்போலிருந்து கொண்டு சுருவத்தால் நெய்யெடுத்து, ' अतो-देवा अवन्तु ' என்பது முதலிய மந்திரத்தாலும், ' इदं विष्णुर्विचक्रमे ' என்பது முதலிய மந்திரத்தாலும், ' ஸ்வாஹா ' என்று இரண்டு ஹோமங்களைச் செய்தல் வேண்டும். வேள்வித்தலைவன் முறையே, ' தேவேப்ய இதம் ந மம ' எனவும், ' விஷ்ணவே இதம் ந மம எனவும் ' தியாகஞ் செய்தல் வேண்டும்.

ஹோதா, முன்போல் உட்கார்ந்துகொண்டு, சுருவத்தால் நெய்யை யெடுத்து, भूः स्वाहा—(பூ: ஸ்வாஹா) என்றும், भुवः स्वाहा—(புவ: ஸ்வாஹா) என்றும், स्वः स्वाहा—(ஸ்வ: ஸ்வாஹா) என்றும், ஆகவனீயத் தீயில் மூன்று ஹோமங்களைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், முறையே, அக்னயே இதம் ந மம, என்றும், வாயவே இதம் ந மம, என்றும், சூர்யாய இதம் ந மம, என்றும் தியாகஞ் செய்தல் வேண்டும்.

ஹோதா, முன்போலிருந்துகொண்டு நெய்யை யெடுத்து 'भूर्भुवः स्वः स्वाहा' (பூர்புவ: ஸ்வ: ஸ்வாஹா) என்று ஆகவனீயத் தீயில் ஹோமஞ் செய்தல் வேண்டும். வேட்போன், 'ப்ராஜாபதயே இதம் ந மம' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

ஹோதா அவ்விடத்திலேயே நின்று கொண்டு 'ओंचमे स्वरश्च' என்பது முதலிய மந்திரத்தால் அதைப் போற்றிவிட்டு, வந்தவாறே சென்றுவிடல் வேண்டும்.

வேட்போன், நெய்ப் பாத்திரத்திலிருந்து, சுருவினாலேனும், சுருவத்தாலேனும் நெய்யை யெடுத்துக்கொண்டு, தனது வலது தொடை தரையிற் படுமாறு உட்கார்ந்துகொண்டு, மேல்வரும் மந்திரங்களால் ஆகவனீயத் தீயில் எல்லாப் பிராயச்சித்த ஹோமங்களையுஞ் செய்தல் வேண்டும்.

அவற்றுள்,

**ब्रह्मप्रतिष्ठा मनसो ब्रह्म, आश्रावित मत्याश्रावितं, यद्वो देवा अतिपादयानि, ततं म आपस्तदु, उद्वयं तमसस्परि, उदुत्यं जातवेदसं, चित्रं देवानामुदगादनीकं, इमं मे वरुण, तत्वायामि ब्रह्मण, त्वं नो अग्ने, सत्वं नो अग्ने, त्वमग्ने अयासि प्रजापते नत्वदेतान् ॥** பி. 3-7-8

என்பது முதலிய மந்திரங்களை ஸ்வாஹா, என்று ஈற்றிற் கூட்டிக் கொண்டு கூறி ஓமங்களைச் செய்தல் வேண்டும்.

முறையே மேற்கண்டபடி வேட்போன் ஹோமஞ் செய்யும்போது, வேள்வித்தலைவன்,

**ब्रह्मण इदं न मम, यज्ञायेदं न मम, मरुद्भ्य इदं न मम, ऋभुभ्य इदं न मम, सूर्यायेदं न मम, सूर्यायेदं न मम, सूर्यायेदं न मम, वरुणायेदं न मम, वरुणायेदं न मम, वरुणायेदं न मम, अग्नीवरुणाभ्यामिदं न मम, अग्नीवरुणाभ्यां इदं न मम, अग्नये अयस इदं न मम** அல்லது **अग्नये इदं न मम, प्रजापतये इदं न मम ॥**

என்று, தியாகங்களைச் செய்தல் வேண்டும்.

மற்றும் வேட்போன்,

**इष्टेभ्यः स्वाहा, वषडनुष्टेभ्यो स्वाहा, भेषजं दुरिष्ट्यै स्वाहा, निष्कृत्यै स्वाहा, दौराध्यै स्वाहा, दैवीभ्यस्तनुभ्यः स्वाहा, ऋध्यै स्वाहा, समृद्ध्यै स्वाहा ॥**

என்பவைகளால், எட்டு ஹோமங்களைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

इष्टेभ्य इदं न मम, अनिष्ट य इदं न मम, दुरिष्ट्या इदं न मम, निष्कृत्या इदं न मम, दौराध्यां इदं न मम, दैवीभ्यस्तनूभ्य इदं न मम, ऋध्या इदं न मम, समृद्ध्या इदं न मम ॥

என்னுஞ் சொற்களால் தியாகங்களைச் செய்தல் வேண்டும்.

மற்றும் வேட்போன்,

अयाश्चाग्नेऽस्यनभिशस्तीश्च, यदस्मिन् यज्ञेऽन्तरगामं, आज्ञातमनाज्ञात मवतं, यदकर्म यन्नाकर्म, यदस्य कर्मणः, यत इन्द्र भयामहे, स्वस्तिदा विशस्पतिः, आभिर्गीर्भियदतो नः, अनाज्ञातं यदाज्ञातं, पुरुषसंमितो यज्ञो यज्ञः, यत्पाकत्रा मनसा, यद्विद्वाँ्सो यदविद्वाँ्सः, अयाडग्निर्जातवेदाः, ये ते शतं वरुण, यो भूतानामधिपती, उद्बुद्ध्य स्वाग्ने प्रति, उदुत्तमं वरुण ॥

என்பவைகளை முதலாகக் கொண்டவைகளும், ஸ்வாஹா, என்னுஞ் சொல்லை ஈறாக வுடையவைகளுமான மந்திரங்களால் ஓமங்களைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

अग्नये इदं न मम, देवेभ्य इदं न मम, अग्नये जातवेदस इदं न मम, अग्नये स्विष्टकृत इदं न मम, अग्नये स्विष्टकृत इदं न मम, इन्द्राय मघवत इदं न मम, इन्द्राय वृत्रघ्न इदं न मम, इन्द्राय हरिवत इदं न मम, अग्नये इदं न मम, अग्नये इदं न मम, अग्नये इदं न मम, अग्नये श्रद्धाये देव्या इदं न मम, अग्नये जातवेदस इदं न मम, वरुणेन्द्र सवितृ विष्णु विश्वेदेवा मरुभ्य इदं न मम, भूतानामधिपतये इदं न मम, अग्नये इदं न मम ॥

என்னுஞ் சொற்களால் தியாகங்களைச் செய்தல் வேண்டும்.

மற்றும் வேட்போன்,

भूः (பூ:) ஸ்வாஹா
भुवः (புவ:) ஸ்வாஹா
सुवः (சுவ:) ஸ்வாஹா
भूर्भुवः (सुवः) स्वाहा (பூர்புவ: சுவ: ஸ்வாஹா)

என்று ஓமங்களைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'अग्नये इदं न मम'
'वायवे इदं न मम'

'सूर्यायेदं न मम'
'प्रजापतये इदं न मम'

என்று, தியாகங்களைச் செய்தல் வேண்டும். இவ்வாறு அமாவாசை பௌர்ணமி யாகங்களில் எல்லாப் பிராயச்சித்தங்களின் பொருட்டும் 42, ஓமங்களைச் செய்ய வேண்டுமென சூத்திரக்காரர்கள் சூத்திரங்களிற் கூறியுள்ளார்கள்.

இனி, பிராயச்சித்த ஹோமங்களாகவே இந்த நாற்பத்திரண்டு ஹோமங்களையுஞ் செய்யினுஞ் செய்யலாம். அல்லது, 'இஷ்டேப்யஸ்வாஹா' என்பது முதலியதும், 'சம்ருத்யை ஸ்வாஹா' என்பதை ஈருகவு முடையதுமான எட்டு ஹோமங்களைச் செய்யினும் போதுமானது எனவுங் கூறியுள்ளார்கள்.

பிறகு வேள்வித்தலைவன், 'ருக்தோ யக்ஞப்ரேஷ ப்ராயச்சித்தம் கரிஷ்யே' என்று சங்கற்பஞ் செய்து கொள்ளல் வேண்டும்.

பிரமன், காருகபத்தியத் தீக்கு மேல்புறத்தில் வலது தொடையை எடுத்து உட்கார்ந்திருத்தல் போன்றிருந்து கொண்டு சுருவத்தால் நெய்ப்பாத்திரத்திலிருந்து நெய்யை யெடுத்து, 'भूः स्वाहा' (பூ: ஸ்வாஹா) என்று காருகபத்தியத் தீயில் ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'அக்னயே இதம் ந மம' என்று, தியாகஞ் செய்துவிட்டு, 'यजुष्टो यज्ञभ्रेष प्रायश्चित्तं करिष्ये' என்று, சங்கற்பித்துக் கொள்ளல் வேண்டும்.

பிரமன், தக்ஷிணாக்கினிக்கு மேற்கில் முன்போன்று உட்கார்ந்துகொண்டு, சுருவத்தால் நெய் யெடுத்துக் கொண்டு, 'भुवः स्वाहा' (புவ: ஸ்வாஹா) என்று தக்ஷிணாக்கினியில் ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித் தலைவன், 'வாயவ இதம் ந மம' என்று, தியாகஞ் செய்துவிட்டு, 'सर्वतो यज्ञभ्रेष प्रायश्चित्तं करिष्ये' என்று சங்கற்பித்துக் கொள்ளல் வேண்டும்.

பிரமன், ஆகவனீயத் தீக்கு மேல்புறத்தில் முன்போன்று உட்கார்ந்து கொண்டு சுருவத்தால் நெய்யை யெடுத்து, 'भूर्भुवः स्वाहा' (பூர்புவ: ஸ்வாஹா) என்று ஆகவனீயத் தீயில் ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'प्रजापतय इदं न मम' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

ஆபஸ்தம்ப சூத்திரத்தைத் தழுவிய வேள்வித்தலைவனெனின்? இம்மூன்று ஹோமங்களையும் வேட்போனே செய்தல் வேண்டும்.

*பிறகு வேட்போன், மந்திர மோதாமல் நெய்ப்பாத்திரத்திலிருந்து, சுருவத்தால் நெய்யை யெடுத்து, 'आप्यायतां ध्रुवा घृतेन' என்பது முதலிய மந்திரத்தால் துருவாவில் விடுவதுடன் அந்தர் வேதிகையிலுள்ள தருப்பைகளனைத்தையும் எடுத்துக் கொண்டு அந்தர் வேதிகையின் மேல் நின்று தருப்பையின் மீது 'துருவா' என்னும் அந் நெய்ப்பாத்திரத்தை வைத்தல் வேண்டும்.*

---

### இருபதாம் விநியோகம்.

தேவர்களைக் களிப்புடன், போய் வரும்படி போற்றிச் செய்கின்ற சமிஷ்ட யசுர் வேள்வியைச் செய்தல்.

மந்திரம் :

**देवागातुविदो गातुं वित्वा गातुमित मनसस्पत इमं नो देवदेवेषु यज्ञꣳ स्वाहा, वाचि स्वाहा, वाते धाः स्वाहा ।**

*என்பது.*

### பதவுரை.

| | |
|---|---|
| **गातुविदः** | *மார்க்கத்தை யுணர்ந்த* |
| **देवाः !** | *தேவர்களே ! நீவிர்* |
| **गातुं** | *முன்னர் எம்மார்க்கத்தை* |
| **वित्वा** | *பற்றிக்கொண்டு வந்தீர்களோ,* |
| **गातुं** | *அம் மார்க்கத்தைப் பற்றிக்கொண்டு செல்வீர்களாக.* |
| **मनसस्पते !** | *மனதிற்கிறையாகிய* |
| **देव !** | *தேவதையே! நீ* |
| **(उक्तेषु)** | *(கூறிய)* |
| **देवेषु** | *தேவர்களிடத்தில்* |
| **नः** | *எமது* |
| **इमं यज्ञं** | *இவ் வேள்வியை (ஆகுதியை)* |
| **धाः** | *சேர்த்து விடுவாயாக.* |
| **स्वाहा** | *நெய் ஆகுதி செய்யப்படுகின்றது.* |
| **वाचि वाते** | *அனைத்தையுஞ் செலுத்துகின்ற வாயு தேவதையினிடத்தில்* |
| **धाः** | *சேர்ப்பிப்பாயாக.* |
| **स्वाहा** | *நெய் ஆகுதி செய்யப்படுகின்றது.* |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் தருப்பையைத் தீயில் போட்டு விட்டு, துருவாவினுல் 'சமிஷ்டயசுர்' என்னும் இந்த ஆகுதியைச் செய்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு: 'யக்ஞும் ஸ்வாஹா' என்று தருப்பைகளை யெரித்து விட்ட பிறகும், வாதேதா: ஸ்வாஹா, என்று ஒரு ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதையு முணர்க. எந்தத் தேவதையைக் கொண்டு வேள்வி தொடங்கப் படுகின்றதோ, அந்தத் தேவதையைக் கொண்டே அவ் வேள்வியை முடிப்பவனே சிறந்த வேட்போன் எனப் பிரமவாதிகள் கூறுகின்றனர். ஈண்டு, வாயுதேவதையைத் தொடக்கத்தில் எடுத்து, முடிவிலும் வாயு தேவதையைக் கொண்டு முடித்தலின் வேட்போன் சிறப்புடையான் எனப் போற்றப்பட்டனன் என்க.

வேள்வித்தலைவன், 'देवेभ्यो गातुविद्भ्यो ब्रह्मण इदं न मम' என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

(போ-சூ.) வலது காலால் வேதியை மிதித்துக் கொண்டு சமிஷ்ட யஜுர் ஹோமஞ் செய்ய வேண்டு மென்பது. 20

பதின்மூன்றும் அநுவாகம் முடிந்தது.

---

பரிசேடம்.

வேள்வித்தலைவன் வெளியே சென்றிருப்பனேல், வேட்போன், வேள்வித்தலைவனுடைய பாகத்தை, 'प्रजापते विभान्नाम' என்பது முதலிய மந்திரத்தால் துருவாவில் வைத்துக்கொண்டு, 'देवा गातुविद:' என்பது முதலிய மந்திரத்தால் முன்போன்று ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'वसुर्यज्ञो वसुमान्' என்பது முதலிய மந்திரத்தால், செய்யப்பட்ட 'சமிஷ்ட யசுர்' ஹோமத்தைப் போற்றி, 'सं यज्ञपतिराशिषा' என்று தனது புரோடாச பாகத்தை அருந்தி விட்டு ஆசமனஞ் செய்து கொண்டு, 'दधिक्राव्णो अकारिषं' என்பது முதலிய மந்திரத்தால் தயிரையும் அருந்திவிட்டு ஆசமனம் பண்ணிக்கொண்டு, 'इदं हवि: प्रजननं मे अस्तु' என்பது முதலிய மந்திரத்தால், அல்லது, 'இதம் ஹவி:' என்பதால், பாலையும் அருந்தி விட்டு ஆசமனம் பண்ணிக் கொள்ளல் வேண்டும். பௌர்ணமியிலும் சோம யாகம் பண்ணுதவனுக்கு அமாவாசையிலும் பால் தயிர் அருந்தல் இல்லை.

பிறகு வேட்போன்,

अभिस्तृणीहि । பிராமணம் 3-7-5-25

என்பது முதலிய மந்திரத்தால், ஹோதாவின் ஆசனமாயிருந்த தருப்பைகளை அந்தர் வேதியில் பரப்பிவிட்டு, மந்திர மோதாமல், அந்தர் வேதியில்

பிரணீதாவை எடுத்து வைத்து, அதாவது நீருள்ள மரப்பாத்திரத்தை வைத்து, அதில் 'कोवोयोक्षीत् सवो विमुचतु' என்னும் மந்திரத்தை ஓதி இடைவிடாது நீரைத் தாரையாய் விடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'सदसि सन्मे भूयः' என்பது முதலிய மந்திரத்தை அக்கால் செபஞ்செய்வதுடன் 'प्राच्यां दिशि देवाः ऋत्विजो मार्जयन्तां' என்பது முதலிய மந்திரத்தை யோதி, அவ்வத் திசைச்சொல் வருங்கால் அவ்வம் மந்திரத்தால் மேலே நீரையிறைத்து, 'समुद्रं वः प्रहिणोमि' என்பது முதலிய மந்திரத்தால் நீர்ப் பாத்திரத்தில் மீந்திருந்த நீரை அந்தர் வேதிகையிற் கொட்டிவிட்டு, 'यदप्सु ते सरस्वति' என்பது முதலிய மந்திரத்தால் முகத்தைத் துடைத்துக் கொள்ளல் வேண்டும்.

இதுவே, பௌர்ணமி அமாவாசை வேள்விகளின் 'அவபிருதம்' எனப் படும். பிறகு வேட்போன், 'ये देवा मनुष्येषूपवेषमधारयन्' என்பது முதலிய மந்திரத்தால், தணலைத் தள்ளிவிட்ட உபவேஷம் என்னும் தடியை, உத்கர மென்னும் தருப்பை முதலிய குப்பை போடுமிடத்தின் கிழக்குப் பாகத்தில் மேற்கு நுனியாய் அடி வெளியே தெரியாதிருக்குமாறு செருகி விடல் வேண்டும். மற்றும், 'यानि घर्मे कपालानि उपचिन्वन्ति' என்பது முதலிய மந்திரத்தால் குவித்துக் கிடக்கும் அகல்களை எண்ணி எண்ணி எடுத்தெறிய வேண்டும்.

வேள்வித்தலைவன், 'यानि घर्मे कपालानि' என்பது முதலிய மந்திரத்தையே வேட்போனுடன் செபித்தல் வேண்டும்.

(பௌர்ணமியில், மந்திரத்தை மறித்தும் மறித்தும் ஓதிக்கொண்டு கபாலங்களை யெறிதல் வேண்டும். அமாவாசையில் சோமயாகம் பண்ணாதவனும், இந்திரன், அக்கினி என்பவர்களின் கபாலங்களையும் இவ்வாறே செய்தல் வேண்டும்.)

பிரமன், ஆபத்தம்ப சூத்திரத்தைத் தழுவியனா யிருக்கில், 'दिवो भागोऽसि' என்று, தனது பாகத்தை அருந்தி விட்டு ஆசமனம் பண்ணிக்கொண்டு, 'अया-ऽग्निर्जातवेदाः' என்பது முதலிய மந்திரத்தால் ஆகவனீயத் தீயைப் போற்றுவதுடன் முன்வந்தது போன்று செல்லல் வேண்டும். ஆசுவலாயன சூத்திரத்தைத் தழுவியவனெனின், மந்திரம் ஓதாமல் தனது பாகத்தை யருந்திவிட்டு ஆசமனம் பண்ணிக்கொண்டு, ஆகவனீயத் தீக்குக் கன்னி மூலையில் உட்கார்ந்து சுருவத்தால் நெய்ப் பாத்திரத்திலிருந்து நெய் யெடுத்துக்கொண்டு, ஆக்னீத்ரன் தொட்டுக்கொண்டு நிற்கும்படி 'अयाश्चाग्नेऽस्यनभि' என்பது முதலிய மந்திரத்தால் ஆகவனீயத் தீயில் ஹோமஞ் செய்தல் வேண்டும். வேள்வித்தலைவன், 'अयसे-ऽग्नये इदं न मम' என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிரமன், முன்போல் உட்கார்ந்து கொண்டு, 'अतो देवा अवन्तु' என்பது முதலிய மந்திரத்தாலும், 'इदं विष्णु विचक्रमे' என்பது முதலிய மந்திரத்தாலும், ஆகவனீயத் தீயில் ஹோமங்களைச் செய்தல் வேண்டும். வேள்வித்தலைவன், 'देवेभ्य इदं न मम' என்றும், 'विष्णव इदं न मम' என்றும் தியாகங்கள் செய்தல் வேண்டும்.

மற்றும், பிரமன், முன்போல் உட்கார்ந்து கொண்டு சுருவத்தால் நெய்யை யெடுத்து, 'भूः स्वाहा' (பூ: ஸ்வாஹா) 'भुवः स्वाहा' (புவ: ஸ்வாஹா) 'स्वः स्वाहा' (ஸ்வ: ஸ்வாஹா) 'भूर्भुवः स्वः स्वाहा' (பூர்புவ: ஸ்வ: ஸ்வாஹா) என்று ஹோமங்களைச் செய்தல் வேண்டும்.

வேட்போன், அக்னயே இதம் ந மம, வாயவே இதம் ந மம, சூர்யாய இதம் ந மம, பிரஜாபதயே இதம் ந மம, என்று தியாகங்கள் செய்தல் வேண்டும். பிறகு, பிரமனும் ஆக்னீத்ரனும், 'ओंचमे स्वरश्चमे' என்பது முதலிய மந்திரத்தால் ஆகவனீயத்தைப் போற்றிவிட்டு முன்னர் வந்தவாறே செல்லல் வேண்டும்.

வேள்வித்தலைவன்,

विष्णोः क्रमोऽस्यभिमातिहा । சங். கா-1, பிர-6, அநு-5.

என்பது முதலிய மந்திரத்தை ஓதி, வேதியின் தென்கோடியில் வலது பாதத்தை முன்னிழுக்காமல் வைத்து இடது பாதத்தை மேன் மேலும் எடுத்து வைத்து மூன்று அடிகள் நடந்து அங்கேயே நின்று கொண்டு, நான்காவதடியை மந்திரமின்றி யெடுத்து வைத்து, அல்லது உட்கார்ந்து கொண்டு, 'विष्णोः क्रमोऽसि' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்து விட்டு, அங்கேயே நின்று கொண்டு, 'अग्निना देवेन पृतना' என்பது முதலிய விஷ்ணு அதிக்ரமணத்தைச் செபித்து, பிறகும் அங்கேயே நின்று கொண்டு, 'ये देवा यज्ञहनः' என்பது முதலிய அதிமோக்ஷ மென்னும் மந்திரங்களைச் செபித்து விட்டு சிறிது தெற்கிற் சென்று,

अगन्म सुवः सुवरगन्म । சங். கா-1, பிர-6, அநு-6.

என்பது முதலிய மந்திரத்தால் ஆதித்தனைப் போற்றுவதுடன் 'ऐन्द्रीमावृत मन्वावर्ते' என்று பிரதக்ஷிணமாகச் சுற்றிக்கொண்டு, ஆகவனீயத்திற்கு முன்னர்ச் சென்று அதன் கன்னி மூலையி லுட்கார்ந்துகொண்டு,

समिद्धो अग्ने मे । சங். கா-1, பிர-6, அநு-6.

என்பது முதலிய மந்திரத்தை ஓதி, சமித்துக்களால் ஆகவனீயத் தீயை நன்கு வளர்த்து விட்டு, எழுந்து, 'वसुमान्यज्ञो वसीयान्' என்பது முதலிய மந்திரத்தை ஓதி, ஆகவனீயத் தீயைப் போற்றிக்கொண்டு, காருகபத்தியத் தீக்குப்

பின்புறத்தில் உட்கார்ந்து, மந்திரமோதாது சமித்துக்களால் காருகபத்தியத் தீயை நன்றாக வளர்த்து விட்டு எழுந்து, 'अग्न आयूंषि पवस' என்பது முதலிய மந்திரத்தால் காருகபத்தியத் தீயைப் போற்றிக் கொண்டு, அங்கேயே நின்று, தனது புத்திரன் ஒருவன் எனின், அவனுடைய பெயரைக் கூறி விட்டு, பலர் எனின், ஒவ்வொரு புத்திரரின் பெயரையுங் கூறி விட்டு, 'ज्योतिष्मतीं' என்பது ஈறாகிய எசுர் மந்திரத்தை மறித்தும் மறித்து ஓதி, 'ज्योतिषे तन्तवे' என்பது முதலிய மந்திரத்தால் பிரியமான புத்திரனது பெயரைக் கூறி, அவர் பலர் எனின், அவர்கள் பெயரைக்கூறி, 'मानुषात्' என்பது ஈறாக எசுர் மந்திரத்தை மறித்தும் மறித்தும் ஓதிக்கொண்டும், (பிரிய புத்திரன் இன்றெனின் எசுர் ஓதல் இல்லை.) தக்ஷிணாக்கினிக்கு மேற்கில் உட்கார்ந்து, மந்திரமின்றி, சமித்துக்களால் தக்ஷிணத்தீயை நன்றாய் வளர்த்து விட்டு எழுந்து, 'अग्ने वह्नेः स्वदितं' என்பது முதலிய மந்திரத்தால் தட்சிணத்தீயைப் போற்றிக்கொண்டு, பிரிய புத்திரன் முதலானவர்களை முன்போன்று மறித்தும் மறித்தும் சொல்லி, 'ज्योतिषे तन्तवेत्वा' என்று, அந்தர்வேதிகையில் உட்கார்ந்து. 'ज्योतिरसि तन्तवे' என்று செபித்தல் வேண்டும். புத்திரனின்றேல் இச்செபம் இல்லை. புத்திரர் பலரெனின் மீண்டும் மீண்டும் இதையே ஓதற்பாலது. வேதத்தின் பாக்கியை யெடுத்துக்கொண்டு, அந்தர்வேதியில் உட்கார்ந்து, 'ये देवा यज्ञहनः पृथिव्या मध्यासते' என்பது முதலிய அதிமோக்ஷ மந்திரத்தை (விடுதலையை)ச் செபித்து, தெற்கிற் சென்று, 'कस्त्वायुनक्ति सत्वाविमुञ्चतु' என்று வேள்வியை விட்டு விட்டு, 'अग्ने व्रतपते' என்பது முதலிய மந்திரத்தால், விரதத்தையும் விட்டு விட்டு, 'यज्ञो बभूव स आ बभूव' என்பது முதலிய மந்திரத்தால் மீண்டும் வேள்வியைப் பெறல் வேண்டு மென்று செபித்துவிட்டு, கிழக்கிற் போய், 'गोमांं अग्नेऽविमां' என்பது முதலிய மந்திரத்தைச் செபிப்பதுடன், 'यज्ञ शंच म उप' என்பது முதலிய மந்திரத்தையுஞ் செபித்து, காருகபத்தியத் தீய்க்கு மேற்கில் உட்கார்ந்து, 'वृष्टिरसि वृश्चमे' என்பது முதலிய மந்திரத்தால் நீரைத் தொட்டுக்கொண்டு, தனது உதவிச் செயலாளரை, பிராமணர்களுக்கு 'நீவிர் அன்னம் இனிது அருத்துவீர்களாக' என்று ஏவிக்கொண்டு, இந்த அமாவாசை வேள்வியாலும் (பௌர்ணமி வேள்வியாலும்) பகவான் தீ வடிவாகிய பரமேசுரான் களிப்படைவானாக, என்று கூறி, வேள்விச்சாலைக்கு வெளியில் வந்து இருமுறை ஆச்மனஞ் செய்து கொள்ளல் வேண்டும்.

வேள்வித்தலைவன் மற்றொரு தேசஞ் சென்றிருக்கின் தீயை யுண்டாக்குந் தினத்திலும், வேட்குந்தினத்திலும் யாகசாலையை நோக்கி, வேள்வித்தலைவன், வேள்வித் தலைவனுக்குரிய காண்டங்களிற் கூறிய எல்லா மந்திரங்களையுஞ் செபித்தல் வேண்டும்.

தரிசபூரண்மாசம் முடிந்தது.

## பதினான்காம் அநுவாகம்.

---

விடயச் சுருக்கம்.

अन्यानुवाके याज्यानुवाक्याः काम्येष्टिसंगताः ।
काण्डस्यतु द्वितीयस्य द्वितीये प्रश्नइष्टयः ॥ १ ॥
उभैन्द्राग्नत्रये युग्ममिन्द्रैन्द्राग्नत्रये तथा ।
वयं पोष्णे चरौ क्षेत्र क्षैत्रपत्यचरौ तथा ॥ २ ॥
अग्ने पाथिकृते यद्वा व्रातपत्ये द्वियुग्मकम् ।
विकल्पेनेति मन्त्राः स्युरनुवाके चतुर्दश ॥ ३ ॥

காண்டம்-2, பிரபாடகம்-2, அநுவாகம்-1, ல் கூறியுள்ள, புத்திரப் பேற்றின்பொருட்டுச் செய்யும் இஷ்டி, போரில் வெற்றியின் பொருட்டுச் செய்யும் இஷ்டியின் முக்கிய தேவதைகளான இந்திராக்கினிகட்குச் செய்யும் புரோடாச ஹோமம், இரண்டாவதாகிய பூஷாவிற்கும், மூன்றாவதாகிய க்ஷேத்திர பதிக்குஞ் செய்யும் சரு ஹோமங்கள், இரண்டாம் அநுவாகங் கூறுங்காலங்களை விட்டுச் செய்யும், அமாவாசை பௌர்ணமி யாகங்களின் குற்றத்தை நீக்குமாறு செய்யும் பதிகிருதேட்டியின் முக்கிய தேவதையாகிய, 'அக்கினி பாதி கிருத், என்பதற்குச் செய்யும் புரோடாச ஹோமத்திற்கும், விரதந் தவறிவிடில், அக்குற்றம் நீங்குமாறு செய்யும், விராதபத்யேஷ்டியின் முக்கிய தேவதையாகிய விரதபதியாகிய அக்கினிக்குச் செய்யும் புரோடாச ஹோமம் என்பவைகட்கும், ஹோதா, (இருக்கோதுவோன்) சொல்ல வேண்டிய புரோநுவாக்கியங்களும், யாஜ்ஜியை வாக்கியங்களும் இவ் வநுவாகத்திற் கூறப்படுகின்றன.

---

### முதற் காண்டம் - முதற் பிரபாடகம்.

### பதினான்காம் அநுவாகம்.

இது, நான்கு பஞ்சாதிகளுக்கு மேல் 23—பதங்களைக் கொண்டது.

---

தரிசபூரணமாத விகுருதியாகிய காமிய இஷ்டிகளின்
யாஜ்ய புரோநுவாக்கிய மந்திரங்கள்.

उभा वामिन्द्राग्नी आहुवध्यां उभा राधंसः सह मांदयध्यै ।
उभा दातारांविषाꣳ रयीणामुभा वाजंस्य सातयं हुवेवाम् । अश्र्वꣳ

हि भूरिदावत्तरा वां विजामातुरुत वाघा स्यालात्। अथा सोमस्य प्रयती युवभ्यामिन्द्राग्नीस्तोमं जनयामि नव्यम् । इन्द्राग्नी नवतिं पुरो दासपत्नीरधूनुतम् । साकमेकेन कर्मणा । शुचिं नु स्तोमं नवजातमद्येन्द्राग्नी वृत्रहणा जुषेथाम् ॥ १ ॥

उभा हि वाꣳ सुहवा जोहवीमि ता वाजꣳ सद्य उशते धेष्ठा । वयमुत्वा पथस्पते रथं न वाजसातये । धिये पूषन्नयुज्महि । पथस्पथः परिपतिं वचस्या कामेन कृतो अभ्यानडर्कम् । सनो रासच्छुरुधश्चन्द्राग्रा धियं धियꣳ सीषधाति प्रपूषा । क्षेत्रस्य पतिना वयꣳ हितेनेव जयामसि। गामश्वं पोषयित्न्वास नः ॥ २ ॥

मृडातीदृशे । क्षेत्रस्य पते मधुमन्तमूर्मिं धेनुरिव पयो अस्मासु धुक्ष्व । मधुश्चुतं घृतमिव सुपूतमृतस्य नः पतयो मृडयन्तु । अग्ने नय सुपथा राये अस्मान्विश्वानि देव वयुनानि विद्वान् । युयोध्यस्मज्जुहुराणमेनो भूयिष्ठां ते नम उक्तिं विधेम। आ देवानामपि पन्थामगन्म यच्छक्नवाम तदनुप्रवोढुम् । अग्नि-र्विद्वान्त्स यजात् ॥ ३ ॥

सेदु होता सो अध्वरान्त्स ऋतून्कल्पयाति । यद्वाहिष्ठं तदग्नये बृहदर्च विभावसो । महिषीवत्वद्रयिस्त्वद्वाजा उदीरते । अग्ने त्वं पारया नव्यो अस्मान्त्स्वस्तिभिरति दुर्गाणि विश्वा । पूश्च पृथ्वी बहुला न उर्वी भवा तोकाय तनयाय शं योः । त्वमग्ने व्रतपा असि देव आ मर्त्येष्वा । त्वं यज्ञेष्वीडचः । यद्वो वयं

प्रमिनाम व्रतानि विदुषां देवा अविदुष्टरासः । अग्निष्टद्विश्व मापृणाति विद्वान्येभिर्देवाꣳ ऋतुभिः कल्पयाति ॥ ४ ॥

---

இப்பிரபாடக அநுவாகங்களின் தலைச் சொல் எண்கள்.

इषे त्वा यज्ञस्य शुन्धध्वं कर्मणे देवोऽवधूतं धृष्टिः सं वपाम्यादद्दे प्रत्युष्टं कृष्णोऽसि भुवनमसि वाजस्योभा वां चतुर्दश ॥ १४ ॥

பஞ்சாதிகளின் தலைச்சொற்கள் எண்.

इषे दृꣳह भुवनमष्टाविꣳशतिः ॥ २८ ॥

கிருஷ்ண எசுர்வேதீயத் தைத்திரீய சங்கிதையில்
முதலஷ்டக (காண்ட) த்தின் முதலாவது பிரபாடகம்
முற்றிற்று.

---

சாயணபாடியத் தொடக்கம்.

*முற்கூறிய பதின்மூன்றும் அநுவாகத்தில் தரிசபூரணமாத வேள்வி மந்திரங்கள் முடிவுற்றன. இனி, அதன் விகிருதி (தரிசபூரணமாதத்தின் அங்கமாகிய வேள்வி) களின் மந்திரங்கள் கூறற்பாலன. அவற்றுள்ளும், அத்வர்யு (வேள்வியைச் செய்வோ) னுடைய மந்திரங்களோ, அதிதேசத்தில் விதியினின்றும் அடையப்பட்டன வாதலின் ஹோதாவினாலேயே (இருக்கோதுவோனால்) அவை சொல்லற்பாலன. ஆதலின், இந்தப் பிரபாடகத்தின் முடிவிலுள்ள அநுவாகங்களில் காமிய வேள்விப் பகுதிகளின் யாஜ்ய வாக்கியங்களும், புரோநுவாக்கியங்களுங் கூறப்படுகின்றன. அவ்விஷ்டிகள், இரண்டாங் காண்டத்தின் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது பிரபாடகங்களில் முறையாய்க் கூறப்பட்டிருக்கின்றன.*

*அவற்றுள்ளும், இவ் வநுவாகத்திலோ, இரண்டாங் காண்டத்திலுள்ள இரண்டாவது பிரபாடகத்தின் ஒன்றரை அநுவாகத்திற் கூறிய காமிய இஷ்டிகளின் யாஜ்ய புரோநுவாக்கியங்கள் கூறப்படுகின்றன. காமியா, யாஜ்யா என்னும் வேட்போர்களின் காரணப் பெயரின் வலியால், இஷ்டி காண்டத்திற்கும் யாஜ்ய காண்டத்திற்கும் (பெரிய யாகங்களைக் கூறுங் காண்டத்திற்கும் சிறிய அங்க வேள்விகளை கூறும் காண்டத்திற்கும்) ஒன்றற்கொன்று சம்பந்தம் உண்டு.*

இஷ்டிகளின் விசேட மந்திரங்களும் விசேடமான சம்பந்தங்களும் இலிங்கம் (சொல்லாற்றல்) முறைமைகளால் அறிந்து கொள்ளற்பாலன. ஒவ்வொரு மந்திரமும் தனது தனது தேவதையைத் தெரிவிப்பதாமாயினும், தர்வி (அகப்பை) ஹோமம், என்பவற்றை நீக்குதற் பொருட்டு ஒவ்வொரு இஷ்டியிலும் இரண்டு மந்திரங்கள் பிரயோகிக்கப் படுவனவாம். இதற்கு எடுத்துக் காட்டு வாஸ்தோஷ்பதீய ஹோமத்தைக் கூறப் புகுந்த விடத்துச் சொல்லப்படுகின்றது. அது வருமாறு:—

ஆண்டு,

यदेकया जुहुयाद्दर्विहोमं कुर्यात् ।
पुरोनुवाक्या मनूच्य याज्यया जुहोति सदेव त्वाया ॥

என்பது மந்திரம்.

இதன் இலக்கணம், ஆஜ்யபாகப் பிராமணத்தில்,

पुरस्ताल्लक्ष्मा पुरोनुवाक्या भवति, जातानेव भ्रातृव्यान् प्रणुदते ।
उपरिष्टाल्लक्ष्मा याज्या जनिष्यमाणानेव प्रतिनुदते ॥

என்று மேற்கூறப்படும்.

அதாவது முன்னர்க் குறிப்பாகச் சொல்வாயாக என்று, தேவதையைப் போற்றுவது புரோநுவாக்கியம், பிறகு வேட்பாயாக என்றதன் சொல்லப்படுவது யாஜ்ய வாக்கியம் முற்பாதியில் தேவதையின் குறியையுடைய மந்திரம் புரோநுவாக்கியமாம், பிற்பாதியில் தேவதையைக் குறிக்குஞ் சொல்லிருக்குமாகின் அது யாஜ்யமாம் என்னுமிடத்து அது பிறழுமா மென்பதையு முணர்க. ஆதலின் இஷ்டிக்கிரமத்தையும் மந்திரக் கிரமத்தையும் நன்கு பரீக்ஷித்து ஒவ்வொரு இஷ்டியிலும் இருமைப்பட்ட ஒவ்வொரு மந்திரத்தையும் பிரயோகஞ் செய்தல் வேண்டும்.

எங்கே, இரண்டுபட்ட மந்திரத்திற்கு மேல் அதிக மிருக்கின்றதோ, அதுவும் இரண்டுபட்ட மந்திரத்திற்குச் சமான சொல்லாற்றல் (இலிங்கம்) உடையதாமோ, அங்கு, முறைமையைத் தழுவி பின்வரும் இஷ்டியில் மந்திரத்தை விநியோகப்படுத்தில் இலிங்கம் கெடும். முன்னுள்ள இஷ்டியில் மந்திரத்தை உபயோகப்படுத்தினும் முறைமை கெடும் எனின்? அற்றன்று அது கேடுறுக. என்னை? இதன் முறைமை வலி குறைந்ததா மாதலினென்க. முன்னுள்ள இஷ்டியில் மூன்றுவது மந்திரத்திற்கு தனித்தொரு பயன் இருக்குமேல் அங்கு யாஜ்ய வாக்கியம் விகல்பமாகுக. யாண்டு, மற்றொரு இருமைப்

பட்ட மந்திரம் இருமைப்பட்ட முதலாவது மந்திரத்துடன் சமமாகிய சொல் லாற்றலுடையதாமோ, அங்கு, யாஜ்ய புரோநுவாக்கிய மிரண்டுமே விகல்பப் படுக. இஷ்டி ஒன்றாயிருக்கு மிடத்து, கூடியுள்ள மந்திரம் அதிகப்படின் கூட்டு மந்திரம் விகல்பப்படுமோ, அதைப்போன்று, அவ்விஷ்டிகளும் விகல்பமடைவன வாகும். அதை, ஈண்டுத் தொடங்கிய இம்மந்திரத்தின் கண்ணேயே எடுத்துக் காட்டுவாம்.

'उभा वा मिन्द्राग्नी' (உபாவாம் இந்திராக்னீ) என்பது முதலான, இந்தி ரன், அக்கினி என்பவர்களின் குறிப்புகளைக் கொண்ட நான்கு மந்திரங்கள் ஐந்திர, (இந்திர சம்பந்தமான) ஆக்னேய (அக்கினி சம்பந்தமான) இஷ்டி கள் (அங்க வேள்விகள்) ஆறுவகை கூறப்பட்டிருக்கின்றன. இவற்றுள் முத லாவது மந்திரக் கூட்டுறவில் (இருமையில்) முதலாவது மூன்று இஷ்டிகள் விகற்பப்படுகின்றன. அம்மூன்றனுள் முதலாவது இஷ்டியை விதிப்பதன் பொருட்டு இனிது போற்றுகின்றது. மற்றும்,

प्रजापतिः प्रजा असृज ताः सृष्टा इन्द्राग्नी अपागूहताꣳ सोऽचायत् प्रजापति रिन्द्राग्नी वेमे प्रजा अपाघुक्षतामिति स एतमैन्द्राग्नमेकादश कपालमपश्यत्तं निरवपत्ता वस्मैप्रजाः प्रसाधयताम् ॥

என்று, தைத்திரீய சங்கிதை இரண்டாங் காண்டம் இரண்டாம் பிரபாட கம் முதலநுவாக மந்திரங் கூறுகின்றது. அதாவது, 'பிரசாபதியானவர் பிர சைகளை யுண்டாக்கினர். அவை, இந்திராக்கினிகளை மறந்து விட்டன. பிரசா பதி பிரசைகளை யுண்டாக்குமாறு இந்திராக்கினிகளை நினைத்துப் பதினொரு கபா லப் புரோடாசங்கள் கண்டு பிடித்துச் செய்ய அவருக்கு இந்திராக்கினி பிரசை களை யுண்டாக்கினார்கள்' என்பதாம். அதன் பிறகு, தொடங்கிய இஷ்டியை, 'इन्द्राग्नी वा एतस्य प्रजामुदगूहतः' என்றற் றொடக்கத்து, காண்டம்-2, பிரபாட கம்-2, அநுவாகம்-1, வது மந்திரம் விதிக்கின்றது. அதாவது, புத்திரனை யுண்டாக்க வல்லுநனாயினும் புத்திரப் பேறில்லாதவன் எவனோ, அவன், புத் திரப் பேற்றிற்குத் தடையாகிய இந்திரனையும் அக்கினியையும், புரோடாச பாகத் தால் வழிபடுகின்றான் என்பதாம்.

அங்ஙனமே,

ऐन्द्राग्नमेकादशकपालं निर्वपेत्स्पर्धमानः ।

என்பது முதலிய, சங்கிதை, காண்டம்-2, பிரபாடகம்-2, அநுவாகம்-1, வது மந்திரம் இரண்டாவது இஷ்டியையும் விதிக்கின்றது. அதாவது, சுற்றத் தார்களையும், காணி, பணியாளர் முதலானவற்றையும் இந்திராக்கினிகள் உண் டாக்குகின்றனர். 'பகைவரின் வன்மையை யொழிக்கின்றார்கள், தாமும் சத் துருவுடன் பகைத்து வெற்றியையும் அடைகின்றார்கள்' என்பதாம்.

அவ்வாறே,

अपवा एतस्मादिन्द्रियं वीर्यं क्रामति । சங். கா-2, பிர-2, அநு-1.

என்பது முதலிய இம்மந்திரம் மூன்றாவது இஷ்டியை விதிக்கின்றது. அதாவது, "போரின் பொருட்டு பிறருடைய படைகளுக் கருகிற் சென்ற ஒருவனுக்குப் பயத்தால் கை கால் முதலாயின வலியற்றன வாகின்றன வன்றோ, அவனுக்கு இந்திரனும் அக்கினியும் வலியை யுண்டாக்குகின்றனர்" என்பதாம்.

இம் மூன்று இஷ்டிகளுக்கும் மேல்வரு மந்திரம் புரோநுவாக்கியமாகக் கூறப்படுகின்றது.

---

மந்திரம் :

उभावामिन्द्राग्नी आहुवध्या उभाराधसः सहमादयध्यै ।
उभादातारावि‍षा२ँ रयीणामुभा वाजस्य सातये हुवे वाम् ॥

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे इन्द्राग्नी ! | இந்திரன், அக்கினி என்பவர்காள் ! |
| वां उभा | உங்களிருவரையும் |
| आहुवध्यै | இனிது வேள்வியாற் போற்றுதற் பொருட்டு |
| हुवे | அழைக்கின்றேன். எதற்கெனின் ? |
| राधसः सह | அன்னங்களைக் கொள்வதுடன் |
| उभा | உங்களிருவரையும் |
| मादयध्यै | களிப்படைவித்தற் பொருட்டென்க. |
| उभा | நீவிரிருவரும் |
| इषां | உணவுப் பொருள்களையும் |
| रयीणां | தனங்களையும் |
| दातारौ | கொடுக்கின்றவர்கள். (எதற்கு அழைத்தலெனின்?) |
| उभा वां | நீவிரிருவரும் |
| | உணவுப் பொருளையும் தனத்தையும் அளிக்கின்றவராதலின் என்க. (அதாவது) |
| वाजस्य | உணவுப் பொருளின் |
| सातये | இலாபத்தின் பொருட்டென்பதாம், |

சாயணபாடியம்.

இந்திரன் அக்கினி என்னுமிருவரும், உணவுப் பொருளையும் தனத்தையும் அளிக்கின்றவராதலின் அன்னத்தால் (அவியால்) அவர்களைக் களிப்படைவித்தற் பொருட்டும், எனக்கு உணவுப் பொருள் இலாபமாதற் பொருட்டும், அவர்களை இனிது வழிபடவேண்டி அழைக்கின்றேன் என்பதாம். ஈண்டு 'ராத:' என்றது அன்னமாம். ஆதலின், அசுவமேதம் புருடமேதம் முதலான வேள்விகளில் அசுவம் (குதிரை) முதலியவைகளைப் போன்றதாம் என்னற்க. அன்னம் என்பதால் புரோடாசம் என்பது பெற்றும். उभौ என்பதின் ஔகாரம் சுரமாகிய இனவெழுத்துடன் ஒன்றுய் விட்டது. 1



அவற்றின் யாஜ்ய வாக்கியங் கூறப்படுகின்றது.

மந்திரம் :

**अश्रव॑ हि भूरिदावत्तरा वां विजामातुरुत वाघा स्यालात् ।**
**अथा सोमस्य प्रयती युवभ्या मिन्द्राग्नी स्तोमं जनयामि नव्यम् ॥**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे इन्द्राग्नी !** | இந்திரன் அக்கினி என்பவர்களே ! |
| **वां** | உங்களை |
| **विजामातुः** | மருமகனைப் பார்க்கிலும் |
| **उतवाघा स्यालात्** | அல்லது, மைத்துனனைப் பார்க்கிலும் |
| **भूरिदावत्तरौ** | மிகுந்த கொடையாளர்களென்று சொல்வதைக் |
| **अश्रवं हि** | கேட்டிருக்கின்றேன். |
| **अथा** | ஆதலின் |
| **युवाभ्यां** | உங்களிருவருக்கும் |
| **सोमस्य** | சோமத்திற்கு |
| **प्रयती** | ஒப்பாகிய புரோடாசத்தை யளித்தலால் |
| **नव्यं स्तोमं** | மனதில் புதிய களிப்பாலாய மிகுந்த எண்ணங்களை |
| **जनयामि** | உண்டாக்குகின்றேன். |

சாயணபாடியம்.

உலகில், தனது புத்திரிக்குப் பிரியனுகிய மருகன், பேத்தி முதலான மக்கள் என்னும் பிரசைகளை மிகுதியாய்க் கொடுக்கின்றனன். மைத்துனனும்,

சகோதரியின் வாஞ்சையால், பணியாளன் பணியாளி முதலான பிரசைகளை மிகுதியாகக் கொடுக்கின்றனன் என்பது வெளிப்படையாம்.

இந்திராக்கினிகளே உங்களிருவரையும் அத்தகைய மருமகன், மைத்துனன் என்னும் இருவரினும் மிகுந்த கொடையாளிகளென்று உணர்கின்றேன். ஆதலின், உங்களுக்கு, சோமத்தைப்போன்ற இனிய புரோடாசத்தைக் கொடுத்தலால் உங்கள் மனதில் இன்பப் பெருக்காலெழும் எண்ணங்கள் உண்டாமாறு செய்கின்றேன்.

ஈண்டு, எடுத்துக் காட்டிய மந்திரங்களிரண்டனுள் முதலாவது மந்திரம் புரோநுவாக்கியமாம். என்னை ? வேள்வி செய்வதன் முன்னர் தேவதைகளையழைப்பதன் பொருட்டு வேள்வியாளன் ஏவிய பிறகு ஹோதா (இருக்கோதுவோன்) கூறுகின்றுளுதலின் என்க.

அத்துவர்யு (வேள்விக்கிரியையாளன்) இந்திராக்கினிகளின் பொருட்டு மந்திரத்தை யோதுவாயாக என்பது ப்ரைஷ:, (ஏவலாம்).

இரண்டாவது மந்திரம் யாஜ்ய வாக்கியம், இம்மந்திரத்தால் யஜ (வேட்பாயாக) என்னுஞ் சொல்லைக் கொண்டதும், வேட்போன் கூறுகின்றதும், வேள்விக்கிரியைக்குக் காரணமாயுள்ளதுமாகிய இம்மந்திரப் பகுதியால் வேட்கப்படுகின்றது ஆதலின் யாஜ்யம் என விரிதலில் யாஜ்ய வாக்கியமாம் என்பது உணரற்பாலது. 2

மற்றும்,

विवा एष इन्द्रियेण वीर्येणर्ध्यते यः सङ्ग्रामं जयत्यैन्द्राग्नमेकादश कपालं निर्वपेत्संग्रामं जित्वैन्द्राग्नी एवस्वेन भागधेयेनोपधावति तावेवास्मिन्निन्द्रियं वीर्यं धत्तो नेन्द्रियेण वीर्येण व्यृध्यते ॥

என்னும், சங்கிதை இரண்டாங் காண்டம் இரண்டாம் பிரபாடகம் முதலநுவாக மந்திரம் பின்னுள்ள மூன்று இஷ்டிகளுள் முதலாவது இஷ்டியை விதிக்கின்றது. இது போரிட்ட களைப்பால் இந்திரியத்தின் வலி யொழியுமிடத்து அவ்வலியை வளர்க்கின்றது.

அவ்வாறே,

अपवा एतस्मादिन्द्रियं वीर्यं क्रामति स एति जनता मैन्द्राग्नमेकादशकपालं निर्वपेज्जनतामेष्यन्निन्द्राग्नी एव स्वेन भागधेयेनोपधावति तावेवास्मिन्निन्द्रियं वीर्यं धत्तः सहेन्द्रियेण जनतामेति ॥

என்று, சங்கிதை இரண்டாங் காண்டம் இரண்டாம் பிரபாடகம் முதலா மநுவாக மந்திரமானது, மக்களின் கூட்டத்தின் இலாபத்தை விதிக்கின்றது. வெற்றிக்குரிய வாதமிடுங் கதைகளிருக்குமிடத்து, அல்லது, தனது வித்தையை வெளிப்படுத்து மிடத்து, அறிஞரின் அவைக்களத்தை யடைந்தவனுக்கு தைரியம் இழத்தலாகிய வன்மை குன்று மன்றோ, அவ்வன்மையைக் கொடுக்கின்றது என்பதாம். மூன்றுவதாகிய ஐந்திராக்கினி இஷ்டி: பௌஷ்ண சரு, (பொங்கல்) க்ஷைத்ரபத்ய சரு, (பொங்கல்) என்னும் இரண்டாலும் மேல் விதிக்கப்படுகின்றது.

---

அம்மூன்றிற்குள் இந்திராக்கினியின் புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது.

மந்திரம்:

**इन्द्राग्नी नवतिं पुरो दासपत्नी रधूनुतम् । साकमेकेन कर्मणा ॥**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे इन्द्राग्नी !** | இந்திரன் அக்கினி என்பவர்காள்! நீவிர் |
| **दासपत्नीः** | கள்வர்கட்குத் தலைவர்கள் வாழுகின்ற |
| **नवतीं पुरः** | தொண்ணூறு ஊர்களை |
| **एकेन कर्मणा साकं** | கொல்லுந் தொழில் ஒன்றனேயே |
| **अधूनुतं** | நாசமாக்கினீர்கள். |

சாயணபாடியம்.

கள்வருக்குத் தலைவர்கள் வாழும் தொண்ணூறு ஊர்களை இந்திரனும் அக்கினியும் முழுதும் நாசஞ் செய்து விட்டனர் என்பதாம். 3

---

அவற்றிற்கு யாஜ்ய வாக்கியம்.

மந்திரம்:

**शुचिं नु स्तोमं नवजातमद्येन्द्राग्नी वृत्रहणा जुषेथाम् ।**
**उभा हि वाँ᳚ सुहवा जोहवीमि ता वाजँ᳚ सद्य उशते धेष्ठा ॥**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **वृत्रहणा** | விருத்திரனைக் கொன்ற |
| **इन्द्राग्नी !** | இந்திர அக்கினிகளே! நீவிர் |

| | |
|---|---|
| शुचिं | புனிதமானதும் |
| नवजातं | புதிதா யுண்டாயதுமாகிய |
| स्तोमं | தோத்திர மஞ்சரியை |
| नु अद्य | இப்போது |
| जुषेथां | ஏற்றுக் கொள்ளுவீர்களாக. |
| सुहवा | இனிது பூசிக்கத்தக்க |
| वां उभा | உங்களிருவரையும் |
| जोहवीमि | அழைக்கின்றேன். |
| हि | ஆகலின் |
| ता | உங்களை |
| उशते | விரும்புகின்ற வேள்வித்தலைவனுக்கு |
| सद्य | உடனே |
| वाजं | உணவுப் பொருளைக் |
| धेष्ठा | கொடுப்பீர்களாக. |

### சாயணபாடியம்.

விருத்திரனைக் கொன்ற இந்திராக்கினிகளே! உங்கட்கு, பவித்திர மான தும், புதிய அன்ன விசேடங்களை முன்னிட்டுத் தோன்றியதுமாகிய துதிமஞ் சரி உரியதாகுக. கருவம் முனிவு முதலானவைகளின்றி இனிது ஆராதிக்கத் தக்க உங்களை யழைக்கின்றேனாதலின் உங்களை விரும்புகின்ற வேள்வித்தலைவ னுக்கு உணவுப் பொருளை யளிப்பீர்களாக. இதன் பிற்பாதியிற் கூறிய அன்ன மானது துதியன்று என்பதை யுணர்க. 4

---

### அவற்றின் புரோநுவாக்கியம்.

மந்திரம் :

**वयमुत्वा पथस्पते रथं न वाजसातये । धिये पूषन्न युज्महि ॥**

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| पथस्पते ! | நன்மார்க்கத்திற்கு இறைவ ! |
| पूषन् ! | பூஷனே ! (சூரியனே !) |

| | |
|---|---|
| त्वां | உன்னை |
| रथं न | இரதத்தி லமர்த்துவது போன்று |
| वाजसातये | உணவுப் பொருளைக் கொடுக்கும் |
| धिये | கருமத்தில் |
| वयम् | யாம் |
| उ युज्महि | நன்கு அமர்த்துகின்றோம். |

சாயணபாடியம்.

பூஷா தேவ! உன்னை, இரதத்தி லெழுந்தருளச் செய்வது போல உணவுப் பொருளைக் கொடுக்கத்தக்க கருமத்தில் யாம் மேம்பாடாய் அமர்த்துகின்றோம் என்பதாம். 5

---

யாஜ்ய வாக்கியம்.

மந்திரம்:

पथस्पथः परिपतिं वचस्या कामेन कृतो अभ्यानडर्कम् ।
सनो रासच्छुरुधश्चन्द्राग्रा धियं धियꣳ सीषधाति प्रपूषा ॥

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| कामेन | பயனை யடையும் விருப்பால் |
| कृतः | ஏவப்பட்ட யான் |
| पथस्पथः | அவ்வம் மார்க்கங்களைப் |
| परिपतिं | பரிபாலிக்கின்ற |
| अर्कं | பூஷா என்னுஞ் சூரியனை |
| वचस्या | துதியால் |
| अभ्यानट् | நன்கு பற்றிக்கொண்டுள்ளேன். (ஆதலின்) |
| सः | அச் சூரியன் |
| नः | எமக்கு |
| सुरुधः | களைப்பைப் போக்கும் |
| चन्द्राग्रा | மதியம் போன்ற கொழுந்துகளையுடைய கொடி செடிகளை |
| रासत् | கொடுப்பானாக. |
| पूषा | மற்றும், அத்தகைய பூஷன் |
| धियं धियं | அதை அதை யுணரும் புத்தியையும் |
| प्रसीषधाति | இனிது கொடுப்பானாக. |

சாயணபாடியம்.

வேண்டிய பலனைத் தரும் அவ்வம் மார்க்கங்களை இனி காப்பாற்றும் பூஷன் என்னுஞ் சூரியனை துதியால் நன்கு பெற்றுள்ளேன். ஆதலின் அவன், களிப்பைக் கொடுக்கும் மதிபோன்ற தண்ணிய கொழுந்துகளையுடைய கொடி செடிகளையுங் கொடுத்து அதனதன் உணர்வையுங் கொடுப்பானாக என்பதாம்.

வேறு இஷ்டி விதானம்.

क्षैत्रपत्यं चरुं निर्वपेज्जनतामागत्येयं वै क्षेत्रस्य पतिरस्यामेव प्रतितिष्ठति ॥

என்பது, சங்கிதை இரண்டாங் காண்டம் இரண்டாம் பிரபாடகம் முதலநுவாக மந்திரம். இது பூமியின் இலாபத்தை விதிப்பது. வயல்கள் பூமியின் பகுதிகளா மாதலின் பூமியானது வயல்களுக்குத் தலைமையாகும். கீர்த்தியை விரும்புகின்றவன் இதற்கு அதிகாரியாவன்.

---

இதன் புரோநுவாக்கியம்.

மந்திரம் :

क्षेत्रस्य पतिना वयꣳ हितेनेव जयामसि ।
गामश्वं पोषयित्न्वासनो मृडातीदृशे ॥

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हितेन इव | இனிய புத்திரன் முதலானோர்களால், பசு குதிரைகளை வெற்றி பெறல் போன்று |
| क्षेत्रस्य | வயலின் |
| पतिना | தலைமையாகிய பூமியால் |
| वयं | யாம் |
| गां अश्वं | பசு குதிரை முதலானவற்றையும் |
| पोषयित्नु | பாதுகாப்பாற்றும் உணவுப் பொருள் முதலானவற்றையும் |
| जयामसि | வெற்றி பெற்றுக் கொள்ளுவோமாக. |
| आ सः | அப் பூமி |
| नः | எம்மை |
| ईदृशे | இத்தகைய பசு முதலானவைகளில் |
| मृडात् | சுகப்படுத்துவதாகுக. |

சாயணபாடியம்.

• புத்திரன் முதலியோர்களால், பசு குதிரை முதலானவற்றை இனிது மேய்த்துப் பாதுகாத்துக் கொள்ளுமாறு, வயல்கட்குத் தலைமை பூண்ட பூமி

யால், யாம், பசு, குதிரை, உணவுப் பொருள் முதலானவற்றை வளர்த்துக் கொள்ளுவோமாக. பூமியானது எமக்கு இத்தகைய பசு முதலான பொருள் களில் இன்புறச் செய்வதாகுக என்பதாம். 7

யாஜ்ய வாக்கியம்.

மந்திரம் :

**क्षेत्रस्य पते मधुमन्त मूर्मिं धेनुरिवपयो अस्मासु धुक्ष्व ।**
**मधुश्चुतं घृतमिव सुपूतमृतस्य नः पतयो मृडयन्तु ॥**

என்பது

பதவுரை.

| | |
|---|---|
| **क्षेत्रस्य** | வயலினது |
| **पते !** | இறையே ! (பூமியே !) நீ, |
| **धेनु** | பாற் பசுவானது |
| **पयः इव** | பாலைக் கறப்பது போன்று |
| **अस्मासु** | எங்களிடத்து |
| **मधुमन्तं** | சுவை மிகுந்ததும் |
| **ऊर्मिं** | நுரைகளெழுவதும் |
| **सुपूतं** | மிகப் புனித முடையதுமாகிய |
| **ऋतस्य** | இரசப் பெருக்கை |
| **धुक्ष्व** | பொழிவாயாக. |
| **पतयः** | வேள்விக்கு இறைவரானவர்கள் |
| **नः** | எங்களைச் |
| **मृडयन्तु** | சுகப்படுத்துவார்களாக. |

சாயணபாடியம்.

வயல்களுக்கெல்லாம் தலைமை பூண்ட பூமி தேவியே ! நீ, இன்சுவை வாய்ந்ததும், நுரை போல் மீண்டும் மீண்டும் சுழல்வதும், வேறு பண்டங்களி லும் தனது சுவையை ஒழுகச் செய்வதும், நெய் போன்று தோஷமின்மை யின் புனித முடையதுமாகிய, தேங்காய், கரும்பு, வெல்லம் முதலான உண் ணவுப் பொருள்களை நிறையக் கொடுப்பாயாக என்பதாம். 8

இந்திரன் சம்பந்தமுடையதும் அக்கினி சம்பந்த முடையதுமாகிய எஞ் சிய இஷ்டியை,

ऐन्द्राग्नमेकादश कपाल मुपरिष्टान्निर्वपेदस्यामेव प्रतिष्ठायेन्द्रियं वीर्यमुपरिष्टा-
दात्मन्धत्ते ।

என்னும், சங்கிதை இரண்டாங் காண்டம் இரண்டாவது பிரபாடகம் முதலநுவாக மந்திரம் விதிக்கின்றது.

இந்த இஷ்டியானது க்ஷேத்திரபதியின் சரு (பொங்கலு) க்கு முந்திய தாம். இதற்கு, வீரியத்தை விரும்பியவன் அதிகாரியாவன். க்ஷேத்திரபதியின் காலத்திற்கு முந்தியகாலம் இதன் காலம். இதனுடைய, யாஜ்ய புரோநுவாக்கியங்கள் முன்னரே கூறப்பட்டுள்ளன.

மற்றும்,

अग्नये पथिकृते पुरोडाश मष्टाकपालं निर्वपेत् ।

என்பது முதலியதால் சங்கிதை, இரண்டாங் காண்டம், இரண்டாவது பிரபாடகம் இரண்டாவது அநுவாக மந்திரம் மற்றொரு இஷ்டியை விதிக்கின்றது.

ஒவ்வொரு பருவத்திலும் தரிசபூரணமாத இஷ்டிகளை மறவாமல் செயல் வேண்டுமெனல் வழியாம். சிலவற்றை மறந்துவிடில் வழியாகாது. இதில் பிராயச்சித்தத்தின் பொருட்டு இவ்விஷ்டியாம். இடபம் பாரத்தைத் தாங்கிச் செல்லுதலால் செல்வத்தின் பொருட்டாகும்.

---

அதன் புரோநுவாக்கியம்.

மந்திரம் :

**अग्ने नय सुपथा राये अस्मान्विश्वानि देव वयुनानि विद्वान् ।**
**युयोध्यस्मज्जुहुराणमेनो भूयिष्ठां ते नम उक्तिं विधेम ॥**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **अग्ने !** | அக்கினியே! நீ |
| **राये** | தரிசபூரணமாத வேள்வியின் பயனாகிய தனத்தின் பொருட்டு |
| **सुपथा** | நல்ல வழியாக |
| **अस्मान्** | எங்களைக் |
| **नय** | கொண்டு போவாயாக. |
| **देव !** | பிரகாசமுடையோய்! நீ |
| **विश्वानि** | எல்லா |
| **वयुनानि** | மார்க்கங்களையும் |
| **विद्वान्** | அறிந்தோனுவை. (ஆதலின்) |
| **जुहुराणं** | நரகங்கட்கு |
| **एनः** | காரணமாகிய அதிபாதகத்தை |
| **अस्मत्** | எம்மிலிருந்து |
| **युयोधि** | நீக்கி விடுவாயாக. |
| **ते** | உனக்கு |

| | |
|---|---|
| भूयिष्ठां | அளவில்லாத |
| नम उक्तिं | வணக்கங்களைச் |
| विधेम | செய்கின்றோம். |

சாயணபாடியம்.

*அக்கினியே! நீ, தரிசபூரணமாத இஷ்டியின் பயனாகிய தனத்தை யடைவதற்கு, அதிபாதகமாகிய தோடமற்ற நன்னெறிக்கண் எம்மைக் கொண்டு செல்வாயாக. தேவனே! நீ, எல்லா மார்க்கங்களையும் உணருகின்றவன் ஆதலின், நரகத்திற்குக் காரணமாகிய வஞ்சக முதலிய அதிபாதக மென்னும் பாவத்தை எம்மிலிருந்து ஒதுக்கி விடுவாயாக என்பதாம்.* 9

---

அதன் யாஜ்ய வாக்கியம்.

மந்திரம் :

**आदेवानामपि पन्थामगन्म यच्छक्रवामतदनुप्रवोढुम् ।**
**अग्निर्विद्वानूत्स यजात्से दुहोता सो अध्वरान्त्स ऋतून् कल्पयाति ॥**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| देवानां | தேவர்களின் பொருட்டு |
| आ पन्थानमपि | முன் தவறிய வழியையும் |
| अगन्म | இப்போது அடைந்தனம். (எதன் பொருட்டெனின்?) |
| यत् | எக் கருமத்தை |
| शक्नवाम | யாம் முறையாய்ச் செய்ய வல்லோமோ, |
| तत् | அதைத் |
| अनुप्रवोढुं | தவறுமற் செய்வதற்கு என்க. |
| सः अग्निः | அவ் வக்கினி |
| विद्वान् | பிழையைச் சீர்படுத்த இனிது அறியும். |
| सः इत् तु | மற்றும், அவ்வக்கினியே |
| यजात् | என் பொருட்டு வேட்கின்றதும் |
| होता | தேவர்களை யழைக்கிறதுமாம். (ஆதலின்) |
| सः | அவ் வக்கினியே |
| अध्वरान् | வேள்விகளையும் |
| ऋतून् | காலங்களையும் |
| कल्पयाति | கற்பித்துக் கொள்ளுகின்றது. |

சாயணபாடியம்.

*முன்னர்த் தவறிவிட்ட தேவ வழிகளையும் இப்போது அடைந்துள்ளேன். எதன் பொருட்டெனின்? எக்கருமத்தை யான் செய்யத்தக்கதோ, அக்கரு*

மத்தை இடையில் தவறுமற் செய்து முடித்தற் பொருட்டென்க. யான் இவற்றை யறியேன் ஆயினும் மார்க்கத்தைச் செய்யும் இவ்வக்கினி முடிப்ப தற்கு அறியும். ஆதலின், அவ்வக்கினி என் பொருட்டாக வேட்கின்றது. அதுவே தேவர்களை யழைப்பதுமாம். அதுவே உரிய வேள்விகளையும், வேட் போர்களையும் காலத்தையுங் கற்பித்துக் கொள்ளுவதாகின்றது என்பதாம். 10

ஈண்டு,

अग्नये व्रतपतये पुरोडाश मष्टाकपालं निर्वपेत् ।

என்பது முதலிய, சங்கிதையின், இரண்டாங் காண்டம், இரண்டாம் பிர பாடகம், இரண்டாம் அநுவாக மந்திரம், மற்றொரு இஷ்டியை (சிறு வேள் வியை) விதிக்கின்றது.

இதில், விரதத்திற்கு விரோதியான பொய் கூறல் முதலானவற்றைக் குறித்து விரத ஆசரணையை அக்கினியே அடைவிக்கின்றது. இங்ஙனம் ஆச ரிக்கின் மேல் விரதத்தை யொழுக உரிமை யுண்டு. முன்னர் அக்கினியே மார்க் கத்தைச் செய்கின்ற தென்னும் குறியுடைய மந்திரம் காட்டப்பட்டது. இப்போது அக்கினியின் விரதத்திற்குரிய குறிப்புடைய மந்திரம் எடுத்துக் காட்டப்படும். இடையிலுள்ள கூட்டு மந்திரத்தில் விசேடமாகிய குறி இன் மையதாமாயினும் இரண்டிற்கு மொத்த குறிகளைக் காட்டலின் முன்னர் விகற் பம் என்பர் சிலர். மற்றுஞ் சிலர் பிறகு பிறகு விகற்பம் என்பர். நமது ஆசிரி யரோ, ஸ்விஷ்டகிருத், என்னும் யாகமும், சம்யாஜமும் முந்தியவைகள் என்று கொள்ளுகின்றனர்.

---

இதன் புரோநுவாக்கியம்.

மந்திரம் :

यद्वाहिष्ठं तदग्नये बृहदर्च विभावसो ।
महिषीव त्वद्रयिस्त्वद्वाजा उदीरते ॥

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे विभावसो ! | அக்கினியே ! நீ |
| महिषी वत् | எருமை பால் கொடுப்பது போன்று (பயனை யளித்து) |
| अर्च | எம்மாற் போற்றப் பெறுவாயாக. |
| अग्नये | அக்கினியின் பொருட்டு |
| यद्वाहिष्टं | யாதொரு பிராயணீய அவியுண்டோ |
| तत् | அது |
| अग्नये | அக்கினியின் பொருட்டு |
| बृहत् | வளருக. (அங்ஙனமாயின்) |

| | |
|---|---|
| त्वत् | நினது அருளால் |
| रयिः | தனமும் |
| त्वत् | மற்றும் நினது அருளால் |
| वाजा | உணவுப் பொருளும் |
| उदीरते | கிடைக்கின்றன. |

சாயணபாடியம்.

*பிராயணீய அவியானது அக்கினியின் பொருட்டு நன்கு பெருகுக. அக்னியே! நீயும், பருத்தி விதை, பிண்டி முதலானவற்றையுண்டு எருமை, பால் மிகுதியாகக் கொடுத்துப் போற்றப் பெறுவதைப் போன்று பலத்தைக் கொடுப்பதால் எம்மாற் பூசிக்கப்படுவாயாக. அங்ஙனமாகுமேல், நினது கிருபையால், தனமும் உணவுப் பொருளும் அடையப்படும் என்பதாம்.* 11

---

யாஜ்ய வாக்கியம்.

மந்திரம் :

**अग्ने त्वं पारया नव्यो अस्मान्त्स्वस्तिभिरति दुर्गाणि विश्वा ।**
**पूश्च पृथ्वी बहुला न उर्वी भवा तोकाय तनयाय शंयोः ॥**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे अग्ने ! | அக்கினியே ! |
| नव्यः | புதியோனாகிய |
| त्वं | நீ |
| अस्मान् | எம்மை |
| पारया | பயன் வரை கருமத்தின் கரையை யடைவிப்பாயாக. (எவ்வாற்றாலெனின்? |
| स्वस्तिभिः | நூன்முறையாகச் செய்யும் கருமாநுட்டானங்களாலும் |
| विश्वादुर्गाणि | மிகுந்த பாவதோஷங்களை |
| अति | தாண்டுமாற்றாலுமென்க. |
| नः | மற்றும், எமது |
| पूश्च | ஊர்களும் |
| पृथ्वी | பூமிகளும் |
| उर्वी बहुला | பலவகைகளாய் மிகுந்து வளர்வன |
| भवा | ஆகுக. (நீயும்) |
| तोकाय | எமது புத்திரனுக்கும் |
| तनयाय | பௌத்திரனுக்கும் |
| शंयोः | சுகத்தைக் கொடுப்போனாக ஆகுதி. |

சாயணபாடியம்.

புகியோனுகிய அக்கினியே ! நீ, யான் எமது பிழைகளைப் போக்கிக்கொள்ளுவதற்கு முன் வந்துள்ளோனுதலின், சாத்திர முறைப்படி ஒழுகுகின்ற நற்கருமங்களால் விரதத்திற்கு மாறுன பாதகங்களையும், பாவங்களையும் தாண்டி, பயன்வரையுள்ள கருமங்களின் கரையைச் சேர்விப்பாயாக. மற்றும், எனது வாழ்க்கைக் கிடமாகிய நகர்களையும், பூமிகளையும் இனிது பெருகச் செய்வாயாக. அஃதன்றியும், எமது புத்திர பௌத்திரர்களுக்குஞ் சுகங் கொடுப்பாயாக என்பதாம்.

இனி, விரதபதியின் சம்பந்தமாகிய யாகத்திற்கு பொதுவாய்க் கூடியுள்ள மந்திரத்தில் புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது. 12

மந்திரம் :

**त्वमग्ने व्रतपा असि देव आमर्त्येष्वा । त्वं यज्ञेष्वीड्यः ॥**

என்பது.



பதவுரை.

| | |
|---|---|
| अग्ने ! | அக்கினியே ! |
| त्वं | நீ |
| आमर्त्येषु | மக்களுக்குள்ளே |
| व्रतपा | விரதங்களைப் பாதுகாக்கின்ற |
| देवः | தேவனுக |
| असि | இருக்கின்றுய். |
| त्वं | மற்றும், நீ |
| आ यज्ञेषु | எல்லா வேள்விகளிலும் |
| ईड्यः | போற்றத் தக்கோனுயும் |
| (असि) | (இருக்கின்றுய்.) |

சாயணபாடியம்.

அக்கினியே ! நீ, எல்லா மக்களுள்ளும் விரதத்தைப் பரிபாலிக்கின்ற தேவனுயிருக்கின்றனை. மற்றும் வேள்விகளெங்கும் பூசித்தற் குரியோனுயு மிருக்கின்றுய் என்பதாம். 13

யாஜ்ய வாக்கியம்.

மந்திரம் :

**यद्वो वयं प्रमिनाम व्रतानि विदुषां देवा अविदुष्टरासः ।**
**अग्निष्टद्विश्वमापृणाति विद्वान्येभिर्देवा ॅ ऋतुभिः कल्पयाति ॥**

*என்பது.*

பதவுரை.

| | |
|---|---|
| **हे देवाः !** | *தேவர்களே !* |
| **विदुषां वः** | *அறிஞர்களான உங்களைக் குறித்து* |
| **व्रतानि** | *விரதங்களை,* |
| **अविदुष्टरासः** | *அறியாதவர்களான* |
| **वयं** | *யாம்* |
| **प्रमिनाम** | *முழுதும் கெடுத்து விடுவோம். ஆதலின்* |
| **विद्वान्** | *அறிந்த* |
| **अग्निः** | *அக்கினி* |
| **येभिः** | *எந்த* |
| **ऋतुभिः** | *இருது காலங்களால்* |
| **देवान्** | *தேவர்களை அவி யுண்ணுமாறு* |
| **कल्पयति** | *கற்பிக்கின்றதோ* |
| **आ पृणाति** | **(அக்காலங்களில்)** *அவ்விரதத்தை நிறைவேற்றுக.* |

சாயணபாடியம்.

*தேவர்களே ! உங்கள் சம்பந்தமான விரதங்களை, யாம் அறிஞராகாமையின் கெடுத்து விடுவோம். ஆதலின், அனைத்தையுமுணர்ந்த அக்கினி, தேவர்கள் அவியை யுண்ணுதற்குரிய காலத்தைக் கற்பிக்கும்போது விரதத்தையும் முடிவு செய்து கொள்ளும் என்பதாம்.* 14

*வித்தியா தீர்த்த மகேசுரர், வேதப் பொருளை விளக்குவதால் உள்ளத் திருளை யொதுக்கிப் புருடார்த்தங்கள் நான்கையுங் கொடுப்பாராக.*

வீரபுக் மன்னன் ஆணையைப் பரிபாலித்த மாதவாசாரியராற் செய்த
வேதார்த்தப் பிரகாச பாடியக் கருத்தும் முற்றிற்று.

---

முதற் காண்டம் முதற் பிரபாடகம்
முடிந்தது.

---

சுப்ரமண்யோம். சுப்ரமண்யோம். சுப்ரமண்யோம்.